உ

திருச்செந்திலாண்டவன் துணை

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

### சேனாவரையர் உரை

(விளக்கவுரையுடன்)



பதிப்பாசிரியர்
பண்டித வித்துவான் சைவப்புலவர்
சித்தாந்தநன்மணி
கு. சுந்தரமூர்த்தி
தமிழ்ப் பேராசிரியர்
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

முதற் பதிப்பு
1966

25-2

உ
சிவ சிவ

HIS HOLINESS SILASRI
KASIVASI ARULNANDI TAMBIRAN AVL.,
KASI MUTT

TIRUPANANDAL
(TANJORE DT.)
Dated 24—5—1966

## ஆசியுரை

இன்றைக்கிருக்கும் இலக்கண நூல்களில் பழமை வாய்ந்தது தொல்காப்பியம் ஆகும். அதனை விளக்க எழுந்த உரைகள் பல. காலப் போக்கில் அவ்வுரைகளுக்கும் விளக்கம் தேவையாயிற்று. அதிலும் சேனாவரையர் உரையோ இரும்புக்கடலை போன்றது. அதற்கு இன்றியமையாது விளக்கம் தேவை. அத்தேவையை நிறைவேற்ற எழுந்தது இப்பதிப்பு எனலாம்.

இதற்கு முன்னர்த் தொல்காப்பிய உரைகளைத் தக்க விளக்கங்களுடன் வெளியிட்டிருப்பதைப் போன்றே இந்நூலும் நன்கு வெளியிடப்பட்டுள்ளது.

இதனை அச்சிடுவித்து வெளியிட்டவர், நம் செந்தமிழ்க் கல்லூரியில் தமிழ் வித்துவான் வகுப்புக்களில் பயின்றவரும், முதல் தரத்தில் வித்துவான் தேர்வில் தேர்ச்சி பெற்றவரும், சைவசித்தாந்த சாத்திரம் பயின்றவரும், இலக்கிய இலக்கண நூல்களில் நல்ல அறிவு உடையவரும், நம் செந்தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராக விளங்குபவரும் ஆன திரு. கு. சுந்தரமூர்த்தி ஆவர்.

மாணாக்கர், அன்னாருடைய இலக்கண ஆய்வுரைகளைக் கற்றுப் பழுத்த தமிழ்ப் புலமை பாலிக்கப் பெறுவாராகுக!

செந்திலாண்டவன் திருவருள் துணை செய்க.

சிவ சிவ

25-2



## பதிப்புரை

'என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே
யிருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை
முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும் பாடியும்
வழிபடும் அதனாலே'

**முன்னுரை :**

இற்றைக்குக் கிடைத்திருக்கும் தமிழ் இலக்கண நூல்களில் தொன்மை வாய்ந்தது தொல்காப்பியமாகும். இதனை முன்னூலாகக் கொண்டே, பிற்காலத்தில் இலக்கண நூல்கள் பலவும் தோன்றின. இந்நூல் தோன்றி எத்துணையோ நூற்றாண்டுகள் கழிந்துவிட்டன. எனினும் இந்நூலின் துணைகொண்டு பண்டைத் தமிழர்தம் வாழ்வியல் வளர்ச்சியையும், மொழியியல் வளர்ச்சியையும் நன்கறிய முடிகின்றது.

**உரைகள் :**

இவ்வரிய நூலுக்குப் பல்வேறறிஞர்கள் உரை எழுதியிருப்பினும், இற்றைக்குக் கிடைக்கும் உரைகள் எழுவர் உரைகளேயாம். எழுத்ததிகாரத்திற்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்; சொல்லதிகாரத்திற்கு இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், பழைய உரையாசிரியர் ஆகிய அறுவரும்; பொருளதிகாரம் முழுமைக்கும் இளம்பூரணரும், முதல் ஐந்து இயல்களுக்கும் செய்யுளியலுக்கும் நச்சினார்க்கினியரும், இறுதி நான்கு இயல்களுக்கும் பேராசிரியரும் உரையெழுதியுள்ளனர். இவற்றுள் எழுத்ததிகார நச்சினார்க்கினியர் உரையை 1965-இல் வெளியிட்டேன். சொல்லதிகாரத்திற்குள்ள உரைகளில் சேனாவரையர் உரையைத்தவிர ஏனைய யாவும் என்னுடைய விளக்கவுரையுடன் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகவழி வெளிவந்துள்ளன. இதுபோழ்து சேனாவரையர் உரை என்னுடைய பதிப்பாக வெளிவருகின்றது.

**பதிப்புக்கள் :**

இச்சேனாவரையர் உரை முதன்முதல் திரு. சினிவாச சடகோப முதலியார் அவர்களின் வேண்டுகோளின்படி, கோமளபுரம் திரு. இராசகோபால் பிள்ளை யவர்களால் திருத்தம் செய்யப்பட்டு, திரு. பு. கந்தசாமி முதலியார் அவர்களால் 1868-இல் பதிப்பிக்கப்பட்டது. பின்பு யாழ்ப்பாணத்து நல்லூர் திரு. ஆறுமுக நாவலர் அவர்களால் திருத்தம் செய்யப்பட்டு, திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களால் 1886-இல் பதிப்பிக்கப்பட்டது. பின்பு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் 1923-இல் பதிப்பிக்கப்பட்டது. அதனை யடுத்துப் புன்னாலைக்கட்டுவன் திரு. சி. கணேசையர் அவர்கள் குறிப்புரையுடன், திரு. நா. பொன்னையா அவர்களால் 1938-இல் பதிப்பிக்கப்பட்டது.

இப்பதிப்புக்களுள் திரு. இராசகோபால் பிள்ளையவர்கள் பதிப்பு நீங்கலாக ஏனைய பதிப்புக்கள் எங்கள் கல்லூரி நூல் நிலையத்திலேயே

இருந்தன. அப்பதிப்பு மட்டும் எங்கும் காண்டற்குஅரிதாக இருந்தது. முதன்முதலாக வெளிவந்த அப்பதிப்பைக் காணவேண்டும் என்ற பேரார்வத்தால் மூன்று திங்கள் அதற்காகப் பெரிதும் முயன்றேன். அதற்கென மேற்கொள்ளப்பட்ட முயற்சியும், பொருட் செலவும் மிகவும் அதிகமாகும். 'சிவன் எவ்விடத்தான் எவர் கண்டனர் என்று ஓடிற்றி லேன்' என்னுமாப்போல, இப்பதிப்பையும் எவ்விடத்தது? எவர் கண்டனர்? என்று ஓடித் திரிந்தேன். திருவருளால் அம்முயற்சிக்குப் பயன் கிடைத்தது. என்னுடைய அன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவர்களும், பதிப்புத்துறை, சமயத்துறை இரண்டிலும் நல்ல பயிற்சியுடையவர்களுமான திருச்சிற்றம்பலம் உயர்திரு மு. அருணாசலம் பிள்ளை M. A. அவர்கள் இயல்பாக ஒருநாள் எனதில்லத்திற்கு வந்தார்கள். அவர்களிடம் இப்பதிப்புப்பற்றிக் கேட்டதும் அப்பதிப்புத் தம்மிடம் இருப்பதாகக் கூறியதுடன் அப்பதிப்பாசிரியரைப்பற்றிச் சில குறிப்புக்களும் கூறினார்கள். திரு. இராசகோபால் பிள்ளையவர்கள் மறந்தும் புறந் தொழாத வைணவர் என்றும், அதனால் தாம் இருந்த 'கோமளீஸ்வர புரம்' என்ற ஊரின் பெயரைக்கூட 'கோமளபுரம்' என மாற்றிச் சொல்லிக்கொண்டனர் என்றும், நல்ல தமிழ்ப் புலமையுடையவர் என்றும் கூறினார்கள். அதன்பின் தமது இல்லம் சென்ற மறுநாள் காலையிலேயே அப்பதிப்பைத் தக்கவர்மூலம் கொடுத்தனுப்பினார்கள். அவர்களின் பேரன்பிற்கு என்றும் நன்றியுடையேன்.

இப்பதிப்பு, உரைகளையோ அன்றி நூற்பாக்களையோகூடப் பிரித்துப் பதிப்பிக்காமல், நெடுங்கணக்காகவே பதிப்பிக்கப்பட்டிருந்தது. எனினும் மூல பாடங்களை ஒப்பிட்டுப்பார்க்கவும், சில நல்ல திருத்தங்கள் பெறவும் இப்பதிப்பே காரணமாக இருந்தது. அன்றியும் ஏட்டிலிருந்து முதன் முதலாக அச்சுக்கு வந்த பெருமை இப்பதிப்பிற்கே யமைந்த தன்றோ? அப்பதிப்பாசிரியருக்கு என்னுடைய நன்றி உரியதாகும். அடுத்துவந்த திரு. தாமோதரம் பிள்ளையவர்கள் பதிப்பே நூற்பாக்களை நூற்பா வடிவிலும், உரைகளைப் பொருண்மை கருதிப் பத்தி பத்தியாகப் பிரித்தும் செம்மையாகப் பதிப்பிக்கப்பட்டதாகும். இப்பதிப்பை யடியொட்டியே பின்னர் கழகப் பதிப்பும், அதன் பின்னர் திரு. கணேசையர் பதிப்பும் வெளிவரலாயின. இங்ஙனம் ஒருவர்பின் ஒருவராகப் பதிப்பித்துதவிய சான்றோர்களனைவருக்கும் தமிழகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டதாகும்.

இப்பதிப்பின் செம்மை :

இப்பதிப்புக்கள் ஒவ்வொன்றும் முன்னைய பதிப்புக்களினின்றும் திருத்தம் பெற்றிருப்பினும், மேலும் பல இடங்கள் திருத்தம்பெற வேண்டியிருந்தன. அப்பதிப்புக்கள் அனைத்தையும் ஒப்பிட்டு இப் பதிப்பைத் திருத்தமாக வெளியிட்டுள்ளேன். சில இடங்களில் பொருள் விளக்கத்தோடு எடுத்துக்காட்டும் சேர்ந்திருந்தன. சில இடங்களில் பொருள் விளக்கங்கள் முன் பின்னாக மாறிக்கிடந்தன. இன்னும் சில இடங்களில் பொருளுணர்ச்சி கருதாது பாராக்கள் பிரிக்கப்பட்டும் பாரா பிரிக்கப்பட வேண்டிய இடங்கள் சேர்க்கப்பட்டும் இருந்தன. இன்னும் சில இடங்களில் சில தொடர்கள், சொற்கள் விடுபட்டும் சேர்க்கப்பட்டும் இருந்தன. இவையனைத்தும் இப்பதிப்பில் திருத்தம் பெற்றுள்ளன. நூற்பாவிலும் உரையிலும் கண்ட பாட வேறுபாடுகளையும், சில சொற்பொருள்களுக்குரிய, பொருள்களையும் அவ்வவ்

விடங்களில் அடிக்குறிப்பாகக் காட்டியுள்ளேன். இந்நூலுரையை விளங்கிக் கொள்ளவும், பிறவுரைகளோடு ஒப்பிட்டு மகிழவும் வாய்ப்பாகுமாறு விளக்கவுரையொன்றும் எழுதிச் சேர்த்துள்ளேன். அதன்கண் விரிவஞ்சி பிற உரையாசிரியர்களின் கருத்துக்கள் மாறுபடும் இடங்களை மட்டுமே தந்துள்ளேன். அக்கருத்துக்களை விளக்கவோ ஆராயவோ முற்படவில்லை. மாணக்கர்களுக்குப் பயன்படும் வண்ணம் சென்னை, அண்ணமலைப் பல்கலைக்கழகத்திலும், பிறண்டும் கேட்கப்பட்ட வினக்களைத் தொகுத்து இறுதியில் சேர்த்துள்ளேன். இவ்வதிகாரம் பற்றியும் சேனவரையர் உரைபற்றியும் அறியத்தக்க இன்றியமையாத கருத்துக்களை ஆராய்ச்சி முன்னுரையில் தந்துள்ளேன். 'சொல்லதிகார விளக்கக்கட்டுரை' என்ற தலைப்பில் ஒவ்வொரு இயலிலும் கூறப்பட்டுள்ள கருத்துக்களைச் சேனவரையர் கருத்தின் வழிநின்று, தொகுத்துத் தந்துள்ளேன். அறிஞர் உலகிற்கும் மாணக்கருலகிறகும் இப்பதிப்புப் பெரிதும் பயன்படும் என்னும் துணிவுடையேன்.

எனினும், இப்பதிப்பில் என்னுடைய சோர்வானும், மறதியானும் நேர்ந்திருக்கும் பிழைகள் இருப்பின், அவற்றை அறிஞர்கள் அறிவித்தருளின் மிகவும் நன்றியறிதலுடன் ஏற்றுத் திருத்திக் கொள்வேன்.

நன்றியுரை :

இப்பதிப்பைத் திருக்கண் சார்த்தியருளி ஆசியுரை வழங்கியவர்கள், எங்கள் காசித் திருமடத்து அதிபர்களாக எழுந்தருளியிருந்து அருட்செங்கோல் ஓச்சி வருபவர்களும், எளியேனுக்கு உண்டியும், உறையுளும் வழங்கி இக்கல்லூரியில் தமிழ்க் கல்வியை ஊட்டியும், பின்னர் ஆசிரியப்பணி புரியுமாறு ஆட்கொண்டருளி அக்கல்வியை வளர்த்தும் ஆதரித்தருளுகின்றவர்களுமான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆவார்கள். அவர்கள் காசித்திருமடத்து அருளாட்சியை ஏற்றது முதல் இதுகாறும் ஆற்றி வரும் அறப்பணிகளையும், அறக்கட்டளைகளையும் அங்கணர்தம் புவனத்தில், அறியாதார் யாருளரே! அவர்களின் திருவடி நீழலில் வாழும்பேறே இத்தகைய பணிகளுககெல்லாம் ஆளாகுமாறு செய்தது. அவர்கட்கு எளியேனுடைய வணக்கத்தையும் நன்றியையும் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அவர்களின் அருள்வழி நின்றெழுகுபவர்களும் எளியேனுடைய பணிகளுக்கெல்லாம் ஊக்கமளித்து ஆசி வழங்கியருளுபவர்களும் ஆன ஸ்ரீகாசிமடம் இளவரசு வித்துவான், ஸ்ரீமத். முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கும் எளியேனுடைய வணக்கத்தையும் நன்றியறிதலையும் தெரிவித்துக்கொள்கின்றேன்.

இந்நூல் வெளிவருவதற்கு உதவி செய்தவர் எனதருமை மாணக்கரும், வாழப்பாடி கழக உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியருமான புலவர். திரு. மா. விசுவநாதன் என்பார். இதற்கு முன் வெளிவந்த நூல்கட்கும் காரணமாக இருந்தவர் அவ்வருமையன்பரே யாவர். அவர்தம் அயரா உழைப்பினலும், எழுச்சியினலுமே இந்நூல் இத்துணை விரைவில் வெளிவருவதாயிற்று. கங்குல் பகல் ஒன்றும்

மற்ருென்றும் காணுது உழைத்துப் பணிபுரிந்த அவ்வுத்தம சீலருக்கு என் அன்பு கனிந்த நன்றியும் பாராட்டும் என்றும் உரியன. நல்லாரை நன்மையறியும் இறைவன் அவருக்கு எல்லா நலன்களை யும் அருளி நல்வாழ்வளித்திட என்றும் இறைஞ்சுகின்றேன்.

இந்நூல் வெளிவருங்கால் அண்மையிலிருந்து படியெடுத்தும், ஊக்கமளித்தும் உதவிய பனசைச் செந்தமிழ்க் கல்லூரி மாணுக்கர்கள் அனைவருக்கும் என் நன்றியறிதலும் பாராட்டும் என்றும் உரியன.

இதனை அன்புடன் ஏற்றுச் செவ்விதாக அச்சிட்டுதவியவர் புதுக்கோட்டை மதராஸ் ரிப்பன் பிரஸ் மானேஜரான திரு. M. S. M. மெய்யப்பன் அவர்கள் ஆவர். அவர்களுக்கும் அவ்வச்சகத்தில் பணி யாற்றி வரும் அன்பர்களுக்கும் என்னுடைய இதயங்கனிந்த நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூல் சென்னை, அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்புலவர் தேர்விற்கும், M. A. தேர்விற்கும் தொடர்ந்து பாடமாக வைக்கப் பட்டுள்ளது. தமிழறிஞர்களும், மாணுக்கர்களும் இதனை வாங்கி என்னை இப்பணியில் ஊக்குவிக்குமாறு வேண்டிக்கொள்கின்றேன்.

இச்சிறிய பணிக்கு ஆளாகும் வண்ணம் ஆட்கொண்டருளிய திருவருளை எஞ்ஞான்றும் வாழ்த்தி வணங்குகின்றேன்.

'வளமொடு செந்தமிழ் உரைசெய அன்பர்கள்
மகிழ வரங்களும் அருள்வாயே'

இங்ஙனம்

திருப்பனந்தாள்
25.5.1966

கு. சுந்தரமூர்த்தி
பதிப்பாசிரியன்

# ஆராய்ச்சி முன்னுரை

## அ) இரு கண்மணிகள் :

உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்றாகிய நம் செந்தமிழ் மொழிக்கு இருகண்களாக விளங்குவன தொல்காப்பியமும் திருக்குறளுமாகும். இன்றுள்ள இலக்கிய, சமய, நீதிநூல்களுக்குத் திருக்குறள் தாய்மை நூலாக இருத்தல் போல, தொல்காப்பியமும் இன்றுள்ள இலக்கண நூல்களுக்குத் தாய்மை நூலாக விளங்கும் பெருமை பெற்றதாகும். திருக்குறளுக்கு இதுகாறும் பல உரைகள் எழுந்திருந்தும் இன்னும் பல உரைகள் எழுந்தவண்ணம் உள்ளன. அதுபோலவே தொல்காப்பியத்திற்கும் பல்வேறுரைகள் இதுகாறும் எழுந்திருந்தும்கூட இன்றும் பல்வேறுரைகள் எழுந்தவண்ணம் உள்ளன. இங்ஙனம் பல பேரறிஞர்களின் கவனத்தை ஒருங்கு ஈர்த்துப் படித்துச் சுவைப்போர் பலருக்கும் உரைகாணும் அளவிற்கு வேட்கையைச் செய்யும் இவ்விரு பெரு நூல்களையும் தமிழின் இருகண்கள் என்று கூறுதல்கூடப் போதாது; 'தமிழின் இருகண்மணிகள்' என்றே கூறவேண்டும்.

## ஆ) தொல்காப்பியர் :

இவ்வருமை நூலைச் செய்தருளியவர் தொல்காப்பியராவர். இளம்பூரணரும் சேனாவரையரும் இப்பெயர் இயற்பெயரென்பர். நச்சினார்க்கினியர் இது குடிப்பெயர் என்றும், இவர் ஜமதக்கினி முனிவரின் புதல்வர் என்றும், இவர் இயற்பெயர் திரணதூமாக்கினி என்றும் கூறுவர். இவர் கூற்றிற்குத்தக்க சான்றுகள் இன்மையானும், காப்பியாற்றுக்காப்பியன், பல்காப்பியன், வெள்ளூர்க்காப்பியன எனப்பல பெயர்கள் இருத்தலை நோக்க இத்தொல்காப்பியர் என்னும் பெயரும் இயற்பெயராகவே இருத்தல் பொருத்தம் உடைமையானும் இயற்பெயர் என்றலே பொருந்துவதாகும்.

### (i) கல்வி வாழ்க்கை :

தொல்காப்பியரின் ஆசிரியர் அகத்தியனார் என்பர். இவருடன் அகத்தியரிடத்துக் கல்வி பயின்றோர் அதங்கோட்டாசான், துராலிங்கன், செம்பூட்சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம்பாரன், கழாரம்பன், அவிநயன், காக்கைபாடினியன், நற்றத்தன், வாமனன் ஆகிய பதினொருவர் என்பர். அவர்களுள் இவரே தலைமாணாக்கர் என்பர். இவை வழிவழிச் செய்தியே: தொல்காப்பியத்திலோ, பனம்பாரனார் பாயிரத்திலோ இவற்றிற்குச் சான்றில்லை. எனினும் பின்வந்த நூலாசிரியர்கள், உரையாசிரியர்கள் அனைவரும் இச்செய்தியைத் தவறாமல் கூறுகின்றனர். சேனாவரையரும் ௨௪௯-ஆம் நூற்பாவில் 'யாபன்னிருவர் மாணாக்கருளர் அகத்தியனார்க்கு' என எடுத்துக்காட்டுவதன் மூலம் இக்கருத்தினரே யாதல் தெளியலாம்.

### (ii) நச்சினார்க்கினியர் கூறும் கதை :

அகத்தியனாரின் மனைவியாரை அவர் ஆணையின் வண்ணம் தொல்காப்பியர் அழைத்துச் சென்றார் என்றும், அப்பொழுது நடந்த நிகழ்ச்சியால் அகத்தியரும், தொல்காப்பியனாரும் ஒருவரையொருவர் சபித்துக் கொண்டனர் என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். இறந்தமைந்த

சால்புடையரான இவர்கள் இவ்வாறு நடந்துகொண்டனர் என்றல் சிறிதும் பொருந்துவதன்றாம். இவரைப்பற்றிய வாழ்க்கை வரலாறு வேறொன்றும் தெரிந்திலது.

(iii) சமயம் :

இறைவனைப் 'பால்வரை தெய்வம்' கடவுள்,கந்தழி, 'வினையின் நீங்கி விளங்கிய அறிவன்' என்ற சொற்களால் குறித்திருப்பதாலும், வினையையும் அதன் பயனையும் 'காலம் உலகம்', 'மிக்கதன் மருங்கின்' என்ற நூற்பாக்களால் கூறிச் செல்வதாலும் இவரைச் சைவசமயத்தினர் என்றறியலாம். இதுபற்றி யான் பதிப்பித்துள்ள தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினியர் உரையுள்ளும் விளக்கியுள்ளேன். ஆண்டும் காண்க.

(iv) காலம் :

இவருடைய காலத்தை ஆராய்ச்சியாளர்கள் கிறித்துவுக்கு முற்பட்டது எனப்பலரும், கிறித்துவுக்குப் பிற்பட்டது எனச்சிலரும் கூறுவர். எனினும் திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள். இவர் தம் காலம் கி. மு. 5320 எனத்தக்க சான்றுகளுடன் நிறுவியிருத்தலின் அதுவே பொருத்தமாதல் தெளியலாம்.

(v) இவர் இயற்றிய நூல் :

இவர் இயற்றிய நூல் தொல்காப்பியம் ஒன்றுமே என்பர் இளம்பூரணர் முதலியோர். பன்னிருபடலத்துள் வெட்சிப் படலமும் இவரால் செய்யப்பட்டது என்பர் ஐயனாரிதனார் முதலியோர். தொல்காப்பியரையும், அவரியற்றிய தொல்காப்பியத்தையும் பின்வந்த சான்றோர்கள் தலை மேற்கொண்டு போற்றுகின்றனர். அவரால் இவ்வெட்சிப் படலமும் செய்யப்பட்டிருப்பின் பின்னுள்ளோர் பலரும் எடுத்துக் காட்டியும் போற்றியுமிருப்பர். அங்ஙனம் இன்மையானும், தொல்காப்பியத்திற்கும், பன்னிரு படலத்துள் கூறப்பட்ட வெட்சிப் படலத்திற்கும் உரிய வேறுபாட்டைத் தக்க சான்றுகளால் இளம்பூரணர் காட்டியிருத்தலானும் தொல்காப்பியம் ஒன்று மட்டுமே இவரால் செய்யப்பட்டதெனத் துணிய முடிகின்றது. எனினும் சிவஞான முனிவர் பன்னிரு படலத்துள் வெட்சிப் படலமும் இவரால் செய்யப்பட்டதென்பர்.

## இ) தொல்காப்பியத்தின் சிறப்பும் பகுப்பும் :

அகத்தியத்தின் வழியே தொல்காப்பியம் தோன்றிற்று என்பர். ஆயினும் தொல்காப்பியம் வழக்காற்றிற்கு வந்தபின் அகத்தியம் பயிற்சி குன்றிவிட்டது. ஏன்? நூலே மறைந்துவிட்டது. ஆனால் இத்தொல்காப்பியத்தின்வழி எத்துணையோ இலக்கண நூல்கள் தோன்றினும் தொல்காப்பியத்தின் சிறப்பும், பயிற்சியும் சிறிதும் குன்றவில்லை. நன்னூலாரை மிகவும் பாராட்டிக்கூறும் இலக்கணக் கொத்து ஆசிரியரும், தொல்காப்பியத்தோடு நன்னூலை ஒப்பிட்டுக் கூற இயலாதவராகி 'முன்னூல் ஒழிய' எனஇதனை விலக்கி, ஏனைய நூலாசிரியர்களில் 'நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோ என்னும் துணிவே மன்னுக' எனக் கூறுவதொன்றே இதன் சிறப்புக்குப் போதிய சான்றாகும்.

இந்நூல் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று பகுப்புடையது. 1612 நூற்பாக்களையுடையது. ஒவ்வொரு அதிகாரமும் ஒன்பது ஒன்பது இயல்களையுடையது. அவற்றுள் சொல்லதி

கார நூற்பாக்களைச் சேனாவரையர் 463 ஆகவும், இளம்பூரணார் 456 ஆகவும், தெய்வச்சிலையார் 453 ஆகவும் கொள்வர். உரையாசிரியர்கள் ஒவ்வொருவரும் நூற்பாக்களைச் சேர்ப்பதிலும், பிரிப்பதிலும் கருத்து வேறுபடுவதால, இவ்வேறுபாடு உளதாயிற்று.

ஆசிரியர் இந்நூலைச் செய்திருக்கும் திறம் அறிந்து இன்புறத் தக்கதாகும். ஒரே நூற்பாவைப் பல இடங்களில் கூறினும் அவ்வவ் விடத்திற்கேற்ப அந்நூற்பாவின் பொருள் அமையச் செய்தலும், அத்தொடர் பலநூற்பாக்களில் வருமாறு செய்தலும், அன்றி அத் தொடர் தனித்த ஒரு நூற்பாவாகவே' வருமாறு செய்தலும், மாட்டேறுபெற நூற்பாக்களைச் செய்தலும், வழக்குச், செய்யுள் என்ற இரண்டிற்கும் பொதுவாக விதி கூறுதலன்றிச் செய்யுட்குரிய விதியை விதந்து கூறுதலும் இவர்தம் வழக்கமாகும்.

(i) ஒரே நூற்பா பலவிடங்களில் வருதல் :

(1) 'அளபெடைப் பெயரே அளபெடையியல' (கடூரு) என்னும் நூற்பா, கசக, கசகூ ஆம் நூற்பாக்களாகவும் ; (2) 'கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும், கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே' (கசுஎ) என்னும் நூற்பா, உகூகூ ஆம் நூற்பாவாகவும்; (3) 'பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே' (கடூச) என்னும் நூற்பா, கச௦ ஆம் நூற்பா வாகவும் ; (4) அன்ன பிறவு முயர்திணை மருங்கின், பன்மையுமொருமையும் பாலறி வந்த, என்ன பெயரு மத்திணை யவ்வே' (ககூகூ) என்னும் நூற்பா, கஎ௦ ஆம் நூற்பாவாகவும் வருதல் காண்க. (5) 'அஆவ என வரூஉம் இறுதி, அப்பால் மூன்றே பலவறி சொல்லே' எனவரும் கூ ஆம் நூற்பா, சிறிது வேறுபட உககூ ஆம் நூற்பாவாக வருதலும் ; (6) 'பன்மையு மொருமையும் பாலறி வந்த, அன்னமரபிற் குறிப்பொடு வரூஉங், காலக் கிளவி யுயர்திணை மருங்கின், மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே' என்னும் உகரு ஆம் நூற்பா சிறிது வேறுபட உஉக ஆம் நூற்பாவாக வருதலும் ; (7) 'ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே' என்னும் கஅக ஆம் நூற்பாவில் உள்ள இரண்டாவது வரி கஅரு ஆம் நூற்பாவில் இரண்டாவது வரியாக வருதலும் காண்க.

(ii) மாட்டேறு பெற்ற நூற்பாக்கள் :

ஆசிரியர் தொல்காப்பியருக்கு மாட்டேறு பெற நூற்பா யாப்பதில் பெரு விருப்பம் உண்டு. இங்ஙனம் கூறுவதால் சொற்சுருக்கமும், மாணக்கர்க்கு நினைவாற்றலும் ஏற்படுகிறது. எழுத்ததிகாரத்தினும், இவ்வதிகாரத்தில் இவ்வகையில் வரும் நூற்பாக்கள் சுருங்கியனவே. கடூச, கச௦, கசஉ, கசரு, கசஎ, கசஅ, ரு௦௦ ஆம் நூற்பாக்கள் மாட்டேறுபெற அமைந்துள்ளமை காண்க.

(iii) செய்யுட்கே உரிய விதிகள் :

வழக்கும், செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்தும் சொல்லும், பொருளும் நாடிச் செந்தமிழ் இயற்கைச் சிவணிய நிலத்தில் முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி இவ் விலக்கணத்தைச் செய்தவர் தொல் காப்பியர் ஆதலின், வழக்குச் செய்யுள் ஆகிய இரண்டிற்கும் உரிய பொதுவிலக்கணங்களைக் கூறுதலன்றி, வழக்கிற்கே உரியதாகவும், செய்யுளுக்கே உரியதாகவும் விதந்தும் விதிகளைக் கூறியுள்ளார். கஅ, உஉ, உகூ, ருக, க௦அ, ககரு, ககூகூ, உகக, உஅக, உகூஉ, ருகூஎ முதல்

௪௦௯ வரையுள்ளன, ௪௫௩, ௪௫௪ ௪௯௨, ஆகிய நூற்பாக்கள் செய்யுட்கே உரிய இலக்கணமாதல் காண்க.

**ஈ) உரைச் செல்வம் :**

தொல்காப்பியத்திலுள்ள மூன்றதிகாரங்களில் இச்சொல்லதிகாரமொன்றே உரைபல பெற்ற பெருமையுடையதாகும். தொல்காப்பிய உரையாசிரியர் எழுவருள் அறுவரின் கவனத்தை ஒருங்கு ஈர்த்த பெருமையுடையது இவ்வதிகாரமேயாகும். அவ்வறுவரிலும் சேனாவரையர், தெய்வச்சிலையார், கல்லாடர், பழைய உரையாசிரியர் ஆகிய நால்வரும் இவ்வதிகாரம் ஒன்றற்கே உரையெழுதியவர்களாவர். இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் நூல் முழுமைக்கும் உரையெழுதியவர்களாவர். பேராசிரியரின் உரையும் இதற்கு அமைந்திருப்பின் இன்னும் பல அரிய கருத்துக்கள் நமக்குக் கிடைத்திருக்கும். அது வாயாது போயிற்று. இவ்வதிகாரத்திற்குக் கிடைத்திருக்கும் உரைச் செல்வங்களில் சிறப்பாகவும், குறிப்பாகவும் சொல்லுதற்குரிய உரையைப் படைத்துக் கொடுத்தவர் சேனாவரையரே யாவர்.

**உ) சேனாவரையர் :**

**(i) நாப்புலவர் சொன்மாலை :**

சேனாவரையர் இவ்வதிகாரத்திற்கு மட்டும் உரை எழுதியிருப்பினும்கூட இவர்தம் மதி நுட்பத்தை வியக்காதவர் எவரும் இலர். 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்' ஆதலின் இவ்வுரை யொன்றுமே இவர்தம் பெருமையை நிலைநாட்ட உரைகல்லாயிற்று. இவரைப்பற்றி இருபெரு இலக்கண ஆசிரியர்கள் வாயாரப் புகழ்ந்துள்ளனர். அப்புகழுரைகள் வருமாறு:- (1) ஈசான தேசிகர்: அறிவானமைந்த சான்றோர் பலரும் சேனாவரையத்தைப் படிப்பின், மேன்மேலும் படிக்க வேண்டும் என்னும் வேட்கையை உண்டாக்குதலின் 'ஆனா இயல்பிற் சேனாவரையரும்' என அவர் இவரைப் பாராட்டுவாராயினர். (2) சிவஞான முனிவர்: 'வடநூற்கடலை நிலைகண்டறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற்குரை செய்தாராயின், இன்னோரன்ன பொருளனைத்தும் தோன்ற ஆசிரியர் கருத்துணர்ந்து உரைப்பர். அவர் சொல்லதிகாரம் போலப் பெரும் பயன் படாமை கருதி எழுத்ததிகாரத்திற்குரை செய்யாதொழிந்தார்.'

**(ii) படைத்தலைவர்:**

தொல்காப்பியரின் வாழ்க்கை வரலாறு எங்ஙனம் அறிய இயலாது இருண்டுள்ளதோ அங்ஙனமே, அவர்தம் நூலுக்குரை வழங்கிய உரையாசிரியர்களின் வரலாறுகளும் அறிய இயலாது இருண்டே கிடக்கின்றன. நன்னூலில் 'கிளையெண் குழூஉ' என்று தொடங்கும் நூற்பா உரையில் மயிலைநாதர் சிறப்பாற்பெறும் பெயருக்கு ஆசிரியன், படைத்தலைவன், சேனாவரையர் என்பவற்றை எடுத்துக் காட்டுகின்றார். சேனாவரையர் என்பதற்குப் படைத்தலைவர் என்பது பொருள். பண்டைக் காலத்தில் தானைத் தலைவர்களாக விளங்கியவர்களுக்கு அரசர்கள் வழங்கிய சிறப்புப்பெயர்களில் இதுவும் ஒன்றெனமேற்காட்டிய மயிலைநாதர் உரையால் அறிய முடிகின்றது. இவற்றை நோக்குழி நம் சேனாவரையரும் படைத்தலைவர்களுள் ஒருவராய் இருந்தமையால் இப்பெயர் பெற்றவராதல் வேண்டும் எனத் தெரிகிறது.

(iii) ஊரும் பேரும்:

சேனாவரையர் என்ற பெயர் கல்வெட்டுக்களில் பல இடங்களில் வருகின்றன. அவற்றுள் ஆறு இடங்கள் குறிப்பிடத்தக்கன. அவை வருமாறு:-

(1) 'திருவழுதிவளநாட்டுத் திருவள்ளூர்ச் சேனாவரையனாயின தத்தன்' (T. A. S. vol. iii. P. 75)
(2) 'புவனேக சுந்தர நல்லூர் அரையன் ஆண்டானான சேனா வரையன்' (S. I. I. V. P. 154)
(3) 'மிழலைக் கூற்றத்துப் புதுக்குடி யூரினரான சேனாவரையர்' (M. E. R. 457 of 1929-30)
(4) 'ஆற்றூர்ச் சேனாவரையன்' (465 of 1929-30)
(5) 'மிழலைக் கூற்றத்து நடுவிற்கூறு பராந்தகநல்லூர்ப் புதுக் குடியினரான சேனாவரையர்' (467 of 1929-30)
(5) 'பராந்தக நல்லூர்ச் சேனாவரையர் ஆயின அழகப்பிரான் இடைக்கரையாழ்வான்'.

இவற்றுள் பின்னைய மூன்று கல்வெட்டுத் தொடர்களும் நம் உரையாசிரியராகிய சேனாவரையரையே குறிப்பன வென்பது அறிஞர் களின் முடிபு. மேற்குறித்தவற்றுள் ஆறுவது தொடரால் சேனா வரையரின் இயற்பெயர் அழகப்பிரான் இடைக்கரையாழ்வான் என்பதும், ஐந்தாவது தொடரால் இவர்தம் முன்னோர்கள் மிழலைக் கூற்றத்துப் பாராந்தக நல்லூரில் வாழ்ந்து வந்தனர் என்பதும், நான்கா வது தொடரால் இவர் படைத்தலைமை யேற்றுப் பணிபுரிந்து வாழ்ந்த ஊர் ஆற்றூர் என்பதும் அறியக் கிடக்கின்றன. ஆற்றூர் என்பது தென் பாண்டி நாட்டின் பழைய துறைமுகமான கொற்கைப் பக்கத்து தாமிரபரணியின் அக்கரையில் உள்ளதாகும். நான்காவது தொடரில் கண்ட ஆற்றூர்ச் சேனாவரையரே, நமது உரையாசிரியராகிய சேனா வரையர் என்பதற்குக் கல்வெட்டாராய்ச்சியாளர் எவரும் சான்று காட்டி நிறுவினரல்லர். ஆனால் தமிழறிஞரான திரு. ராவ்சாகிப் மு. இராகவ அய்யங்கார் அவர்களே சான்றுடன் இக்கருத்தை நிறுவி யுள்ளார். அவர் காட்டிய சான்றுகள் வருமாறு:—

(1) பெயரியல் ௧௦ ஆம் நூற்பாவில் 'பெண்மை யடுத்த மகன் என் கிளவி' என்றொரு தொடர் காணப்படுகின்றது. இது பெண்மகன் என்பதைக் குறிக்கும். இது பெண்பாலைக் குறிக்கும் எனினும், பெண் பருவத்தில் எப்பருவத்தைக் குறிக்கும் என நூலாசிரியர் கூறவில்லை. இதற்கு இளம்பூரணர் 'புறத்துப் போய் விளையாடும் பேதைப் பருவத் துப் பெண் பாலாரைப் 'பெண்மகன்' என்று வழங்குப' என்றனர். தெய்வச்சிலையார் 'விளையாடும் பருவத்துப் பெண்மகளைப் பெண்மகன் என்றல் பண்டையோர் வழக்கு' என்றனர். இவர்கள் இருவரும் இவ்வளவே கூறச் சேனாவரையர் மட்டும், இவ்வழக்கு எந்நாட்டில் உள்ளது என்பதைத் தெளிய உணர்த்துவாராகப், 'புறத்துப்போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளை மாறோக்கத்தார் இக் காலத்தும் பெண்மகன் என்று வழங்குப' என்றனர். மாறோக்கம் என்பது கொற்கை சூழ்ந்த தென்பாண்டி நாடாகும்.

(2) திசைச் சொல்லிற்கு இளம்பூரணர், தெய்வச்சிலையார் ஆகிய உரையாசிரியர்கள் எல்லாம் வடுகு, பூழி முதலிய நாட்டுச் சொற்களை எடுத்துக்காட்டச், சேனாவரையர் மட்டும் தென்பாண்டிநாட்டு வழக்கை எடுத்துரைக்கின்றார்.

இங்ஙனம் தென்பாண்டி வழக்கை இவர் எடுத்துக்காட்டுவதிலிருந்து இவரும் அந்நாட்டவராயிருத்தல் வேண்டும் எனத்துணிய இடந்தருகின்றது. இனி அந்நாட்டிலுள்ள ஆற்றூரே இவர்தம் ஊர் என்பது அவ்வூர்க் கல்வெட்டுக்களிலிருந்து அறியப்படும் செய்தியாகும்.

(iv) சமயம் :

கல்வெட்டுத் தொடர்களாக மேற்குறித்த ஆறனுள், இறுதியிரண்டும் ஆற்றூர்த் திருமால் கோவிலில் உள்ளவையாகும். அவை குலசேகர பாண்டியனது 13-ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பெற்றவை. அவற்றில் சேனாவரையர் என்பவர், தமக்கு முன்னோர்களின் வழிவழியாகவுள்ள புலமை நலத்தால் தமக்குக் கிடைத்த நிலம் மனைகளை அவ்வூர்ச் சோமநாத சுவாமிக்குப் பஞ்சகவ்வியப் புறமாக அவ்வூர்ச் சபையாரிடத்துக் கொடுத்தார் என்றும், அவர்களும் ஏற்றுக்கொண்டு அவற்றிற்கு இறையிலி அளித்தனர் என்றும் கூறப்பட்டுள்ளது. ஆதலின் இவர் பழுத்த சைவ சமயத்தவர் என அறியலாம். அன்றியும் இவர் கணபதி, அம்மையப்பர், நாமகள், அகத்தியர் ஆகியவர்க்கு வணக்கம் செலுத்தித் தமதுரையைத் தொடங்குவதாலும் இவர் சமயம், சைவ சமயமே என நன்கறியக் கிடக்கின்றது.

(v) காலம் :

மாறவர்மன் அரிகேசரி காலத்தில், இவர் சோமநாத சுவாமிக்கு நிலம், மனைகள் அளித்துள்ளமை ஆற்றூர்க் கல்வெட்டால் அறிதலானும், அவ்வரசனது காலம் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனத் தெரிதலானும், இவரது காலம் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியென நன்கறியலாம். அன்றியும் நேமிநாத ஆசிரியரான குணவீரபண்டிதரும், நன்னூலாசிரியரான பவணந்தி முனிவரும் இவருடைய கருத்துக்களில் ஒன்றையேனும் எடுத்தாளாது, உரையாசிரியராகிய இளம்பூரணரின் உரைக் கருத்துக்களையே எடுத்தாளுதலான், அவ்விருவர்க்கும் பிற்பட்டவராய்ச் சேனாவரையர் வாழ்ந்தவராதல் வேண்டும். அவ்விருவரும் மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் (1178 to 1216) வாழ்ந்தவர் எனத் தெரிதலால் இவர்தம் காலம் 13-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி யென்பது உறுதியாகின்றது.

ஊ) உரைநலம் :

சேனாவரையர் படைத் தலைமை யேற்றிருந்தும் சமய நலமும், புலமை நலமும் குன்றாதிருந்தமை பெரிதும் போற்றுதற்குரியதாகும். இவ்விரண்டும் இவருக்கு வழிவழி வாய்த்த அருஞ்செல்வமாய் யிருந்தமையின், இவை இவரிடத்துக் குன்றின்மேல் இட்ட விளக்கென நின்று நிலைபெறுவனவாயின. தமிழ், வடமொழி இரண்டிலும் இவருக்கு இருந்த ஆழ்புலமையை வியவாதவர் எவரும் இலர். இவர்தம் நடை பெருமிடுக்குடையதும் அன்று; எளிய நடையுமன்று. பரிமேலழகரின் நடைபோன்று நடுத்தரமான நடையுடையது, அழகிய இனிய நடையது. சென்று செவியளக்கும் செம்மையதாய்ச் சிந்தையுள்ளே நின்றளவில் இன்பம் நிறைக்கவல்லது. நூற்பாக்களுக்கு உரை வகுக்குங்கால் இந்நூற்பா இன்னது நுதலிற்று எனக் கூறுதலும், பதப்பொருள் உரைத்தலும் இவர்தம் பழக்கமன்று. பொழிப்புரையாகத் தந்து அதற்குத்தக எடுத்துக்காட்டுத் தருவதும், தாமே வினா எழுப்பிக்கொண்டு அதற்கு விடையிறுத்தலும், தக்க இலக்கிய மேற்கோள் காட்டுமிடங்களில் அவற்றிற்குத்தக இலக்கியநயம்பட உரை

எழுதிச் செல்லுதலும், தருக்க நூற்புலமையுடன் உரை கூறிச் செல்லுதலும், ஆசிரியர் கூறிய இலக்கணங்களில் தம் காலத்து வழக்கு ஒழிந்திருப்பின் அவையிவையெனக் கூறிச் செல்லுதலும், சிற்சில நூற்பாக்களுக்கும், தொடர்களுக்கும் பயன் இதுவென உரைத்தலும், முறைவைப்புக் கூறுதலும், உவமை காட்டி விளக்குதலும், பிறர் கருத்திற்கு விளக்கம் தருதலேயன்றி, அவர் அங்ஙனம் கொள்ளுதற்குரிய காரணத்தைக் கூறுதலும், அவற்றை மறுப்புழி அவர் மனம் நோகாதவாறு மறுத்தலும், சொற்பொருள் உரைத்தலும், வேறுபாடு கூறிச் செல்லுதலும், சில இடங்களில் தாமே நூற்பா படைத்து மொழிதலும், ஒரு நூற்பாவிற்கு ஓர் உரையேயன்றி இரண்டும், இரண்டிற்கு மேற்பட்ட உரை கூறுதலும் இவர்தம் பழக்கமாகும்.

(க) தாமே வினா எழுப்பி விடையிறுத்தல் :

கூ, கங, கசா, ஙக, ஙங, சாசா, சாஎ, சாஅ, எக, எச, அஉ, அச, கூக, கூஉ, கூங, க00, க0சா, கக0, ககஉ, ககச, ககரு, கககூ, கருரு, கருஎ, கஎங, கஅஉ, உ0ச உ0அ, உகங, உகச, உஉச, உஉசா, உஉஅ, உங0, உஙஉ, உஙரு, உஙசா, உசஉ, ஙகூகூ, சக0, சகச, சகசா, சகஎ, சகஅ, சஉகூ, சருக ஆகிய நூற்பாக்களுக்கு இந்நிலையில் உரை வகுத்துள்ளமை காண்க.

(உ) இலக்கிய நயம்பட உரை கூறல் :

சேனாவரையர் இலக்கண நூலுக்கு உரையெழுதும் வல்லமையோடு இலக்கிய நயம்பட உரை வகுப்பதிலும் மிகச் சிறந்தவர் என்பதை நன்கறியலாம். அவை வருமாறு :—

(1) 'அரிய கானஞ் சென்றோர்க், கெளியவாகிய தடமென்றோளே' (குறு-எஎ) எனவும், 'நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவும், நல்லவாஞ் செல்வஞ் செயற்கு' (குறள்-ஙoரு) எனவும், செயற்கைப் பொருள் செய்யுளுள் காரணமின்றி வந்தனவாலெனின்:— களவுக் காலத்தரியன இக்காலத்து எளியவாயின என்பது கருத்தாகலான், இக்காலங் காரணமென்பது பெறப்படுதலானும், ஊழாலென்பது அதிகாரத்தான் வருமாகலானும், அவை காரணமின்றி வந்தன எனப்படாவென்பது.

(2) அஃதேல், 'ஊன் துவை கறிசோறுண்டு வருந்து தொழில் அல்லது' (புறம்-கச) என்புழி, உண்டென்பது ஒன்றற்கே உரிய வினையாகலின் வழுவாம் பிறவெனின் :— உண்டலென்பது உண்பன தின்பன எனப்பிரித்துக் கூறும் வழிச் சிறப்பு வினையாம்; பசிப்பிணிதீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாகலின் பொது வினையுமாம்; அதனானது வழுவன்றென்பது. கறியொழித்து ஏனையவற்றிற்கெல்லாம் உண்டற்றொழில் உரித்தாகலின் பன்மைபற்றிக் கூறினார் எனினும் அமையும்.

(3) 'தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரும், எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க' (சிலப்-கானல்) எனவும், 'யானுந் தோழியும் ஆயமும் ஆடுந்துறைநண்ணித், தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்' எனவும் இவையெவ்வாறு வந்தனவோவெனின் :— அவை தலைமைப்பொருளையும், தலைமையில் பொருளையும் விராய் எண்ணித் தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமையில் பொருளும் முடிந்தனவாவதோர் முறைமைபற்றி வந்தன, சண்டைக்கெய்தா என்பது.

(4) 'ஒல்லேங் குவளைப்புலாஅல் மகன்மார்பிற் புல்லெருக்கங் கண்ணி நறிது' என்புழிக்குவளை புலால் நாறுதற்கும் எருக்கங்கண்ணி நறிதாதற்கும் காரணங் கூறாமையின் வழுவாம் பிறவெனின்:- புதல்வற் பயந்த பூங்குழன் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிழவனொடு புலந்துரைக்கின்றாளாகலின் குவளை புலால் நாறுதற்கு அவன் தவற்றோடு கூடிய அவள் காதல் காரணமென்பதூஉம், எருக்கங்கண்ணி நறிதாதற்கு மகிழ்நன் செய்த துனிகூர் வெப்பம் முகிழ் நகை முகத்தால் தணிக்கும் புதல்வன்மேல் ஒருகாலைக் கொருகால் பெருகுமன்பு காரணமென்பதூஉம் பெறப்படுதலின், வழுவாகாதென்பது.

(5) 'இளைதாக முண்மரங் கொல்க களையுநர் கைகொல்லுங் காழ்த்த விடத்து' (குறள்-அ௭௯) என்னுந் தொடர்மொழியான், நிலை பெற்றபின் களையலுறிற் களையலுற்றாரை அவர்தாங் கொல்வர், அதனாற் றியாரை அவர் நிலைபெறுக்காலத்தே களைக என்னும் பொருள் விளங்குதலுங் குறிப்பிற்றோன்றலாம்.

(6) அஃதேல், 'பைம்புதல் வேங்கையு மொள்ளிணர் விரிந்தன நெடுவெண் டிங்களுமூர் கொண்டன்றே' (அகம்-௨) எனவினை வேறுபட்டுழியுந் தம்முளியைந்தனவாலெனின்:— இணர் விரிதலும் ஊர் கோடலும் இரண்டும் மணஞ்செய் காலம் இதுவென்றுணர்த்துதலாகிய ஒருபொருள் குறித்து நின்றமையான், அவை ஒருவினைப்பாற் படுமென்பது. பிறவும் இவ்வாறு வருவனவறிந்து ஒருவினைப்பாற் படுக்க.

(7) 'வையைக்கிழவன் வயங்குதார் மாணகலந், தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற், கூடலார் கோவோடு நீயும் படுதியே, நாடறியக் கௌவை யொருங்கு' என்புழி, வையைக் கிழவன், கூடலார்கோ என்பன ஒரு பொருளை வரைந்துணர்த்தலாற் பிரிவிலவாகலின் வரையப்படா வென்றும், 'கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ் சேந்தன், வைகலு மேறும் வயக்களிறே - கைதொழுவல், காலேக வண்ணனைக் கண்ணுறக் காணவெஞ், சாலேகஞ் சார நட' என்புழிக் காலேகவண்ணன் என்பது அச்சாந்து பூசினாரெல்லார்க்கும் பொதுவாய்க் கூத்தப்பெருஞ்சேந்தனையே வரைந்துணர்த்தாமையின், அவை பிரிவுடையவாமென்றும், உரையாசிரியர் உரைத்தாராலெனின்:— அற்றன்று; 'நாணி நின்றோ ணிலைகண் டியானும், பேணினெ னல்லனோ மகிழ்ந வானத், தணங்கருங் கடவுளன் னோளின், மகன்றா யாதல் புரைவதாங் கெனவே' (அகம்-௧௬) என்புழி வானத்தணங் கருங் கடவுளன்னோள் என்பது மகளிர்க்கெல்லாம் பொதுவாய், நாணி நின்றோளை வரைந்துணர்த்தாதாயினும் சொல்லுவான் குறிப்பான் அவளையே உணர்த்தினாற்போலக், காலேகவண்ணன் என்பதூஉம் பொதுவாயினுஞ் சொல்லுவான் குறிப்பாற் கூத்தப் பெருஞ் சேந்தனையே உணர்த்திப் பிரிவிலவாய் நிற்றலான், அவர்க்கது கருத்தன்றெனக.

(௩) தருக்கநூற் புலமை:

சேனாவரையருக்கு இலக்கியப் புலமையேயன்றித் தருக்க நூற் புலமையும் மிக்கு இருந்ததெனத் தெரிகிறது. அவற்றைப் பின்வரும் சான்றுகளால் அறியலாம். (1) இந்நங்கை முலையின் இந்நங்கை கண் நல்ல என்னுந் தொடக்கத்தன மயக்கம் இன்மையின் இலக்கண வழக்காம் பிறவெனின்:— அற்றன்று; ஒத்த பண்பு பற்றியன்றே பொருவுவது; கண்ணொடு முலைக்கு ஒத்த பண்பின்மையால் பொருவுதல்.

யாண்டையது! ஒத்த பண்பு பற்றிய பொருவுதற் கண்ணது இவ் வாராய்ச்சி என்பது. (2) பெருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என இல்குணம் அடுத்து வழக்கின்கண்ணும் இனஞ்சுட்டாது வருதலின் செய்யுளாறென்றல் நிரம்பாதெனின்:— அவை இனஞ் சுட்டாமை யின் வழுவாயின அல்ல, இல்குணம் அடுத்தலின் வழுவாயின. இனஞ் சுட்டலாவது இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படுதல். வெண்மை முதலாயின விசேடித்தலாவது அக்குணமில்லா இனப் பொருளின் நீக்கி அக்குணமுடையதனை வரைந்து சுட்டுவித்தலன்றே; சுட்டப்படுவதன்கண் அக்குணமில்லையாயின் வரைந்து சுட்டுவிக்கு மாறு என்னை? அதனால் விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதன் ருசலின் ஈண்டைக்கு எய்தா; 'வழக்கின் ஆகிய உயர் சொற்கிளவி' (சொல்-உஎ) என்புழி ஒன்றெனை முடித்தல் என்பதனால் அமைக்கப் படும்.

(ச) பண்டையவழக்குகள் :

ஆசிரியர் காலத்திலிருந்து, தம் காலத்து வழக்கு ஒழிந்த செய்தி களிருப்பின், அவற்றைக் குறித்துச் செல்லுதலும் சிலவற்றைக் குறியாது உய்த்துணர வைத்தலும் இவர் தம் மரபு ஆகும். அவை வருமாறு:—

(1) தருசொல், வருசொல் ஆகிய இரண்டும் தன்மை முன்னிலைகளுக் கும், செலவுச் சொல், கொடைச் சொல் ஆகிய இரண்டும் படர்க்கை இடத்திற்கும் உரிய என்பது தொல்காப்பியர் தரும் வரையறை. ஆனால் இவை சேனாவரையர் காலத்திலேயே பிறழ்ந்து வருவனவாயின.

(2) இயற்பெயரும், சிறப்புப் பெயரும் வருங்கால் சிறப்புப் பெயரை முன்னும், இயற்பெயரைப் பின்னும் அடக்கி வரையறுத்து மொழிவர் தொல்காப்பியர். ஆனால் இம்மரபு சேனாவரையர் காலத் திற்கு முன்னமேயே மாறிவிட்டதென்பது தெரிகிறது.

(3) பெண் மகளைப் பெண்டாட்டி என்றலும், அம்மாட்டான், இம்மாட்டான், உம்மாட்டான் என ஆனீற்றுச் சொற்களாக வருத லும் சேனாவரையர் காலத்திலேயே வழக்கொழிந்தனவாம்.

(4) கருமமல்லாச் சார்பிற்கேயன்றிக் கருமச் சார்பிற்கும் ஏழ னுருபு வருதல் சேனாவரையர் காலத்து வழக்குப் பெற்றிருந்தது.

(5) 'ஒருவினையொடுச் சொல் உயர்பின் வழித்தே' என்ற வரை யறை மாறிவிட்டது.

(6) 'எல்லாம்' என்னும் சொல் உயர்திணைத் தன்மைப் பன்மை யாக வருமென்பர் தொல்காப்பியர். ஆனால் உரையாசிரியர்கள் காலத் திற்கு முன்னமேயே எல்லாம் என்ற சொல் உயர்திணையில் மூவிடத்திற் கும் வந்துவிட்டது. நன்னூலாரும் இந்நிலை நோக்கியே 'எல்லாம் எனல் பொது' என்றனர்.

(7) எண்ணிடைச் சொற்களாய என்று, என, ஒடு, என்பன சொற்றொறும் வருதலே மரபு எனத் தொல்காப்பியர் கூறுகின்றார். ஆனால் அவை சொற்றொறும் வருதல் இக்காலத்து அரிய என்றனர் சேனாவரையர்.

(8) வினைச்சொற்களுள் கேட்டை, நின்றை, காத்தை, கண்டை என்பன முன்னிலை உணர்த்தாது அசைநிலையாகியும் வரும் என்றனர் தொல்காப்பியர். ஆனால் அவை இக்காலத்து அரிய என்றனர் சேனா வரையர்.

(9) ஈ, தா, கொடு, என்பன இழிந்தோன், ஒப்போன், உயர்ந் தோன் கூறும் சொற்களாய் விருவன என்பர் தொல்காப்பியர். ஆனால்

அவை இன்று அம்முறை மாறியும் வருகின்றன.

(ரு) இதனால் பயன் இதுவெனல் :

நூற்பாக்கள் உணர்த்த வந்த கருத்துக்களை விளக்குதலன்றி, சிற் சில நூற்பாக்களுக்குப் பயன் இதுவென உணர்த்துதலும் இவர்தம் பழக்கமாகும். ககஉ, ககங, கருசு, உ0அ, உகஅ ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(சு) நூற்பாக்களின் இன்றியமையாமை :

சில நூற்பாக்களின் கருத்துக்கள் வேறு சில நூற்பாக்களாலும் உய்த்துணர முடியுமாறு இருக்கும். அங்ஙனம் உய்த்துணரத்தக்கவை களை ஆசிரியர் எடுத்தாளுவது மிகையாகும் எனக் கருதுவார்க்குச் சேனாவரையர், அதன் இன்றியமையாமையை உரைத்துச் செல்வர். இவ்வருமை இவர்பால் பெரிதும் காணத்தக்கதாகும். உஅ, சஉ, ருஉ, சுஎ, கஉச, கஎகூ, உ0அ, உஙக, உகூக, சஙஉ, சசஉ, சசச, சருகூ, சகூஉ ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(எ) சொற்கள், சொற்றொடர்களின் இன்றியமையாமை :

நூற்பாக்களின் இன்றியமையாமையை உணர்த்துவதுடன், நூற் பாக்களிலுள்ள சில சொற்களும், சொற்றொடர்களும் இன்றியமையா தனவே என்று காட்டிச் செல்லுவதும் இவர்தம் வழக்கமாகும். இத்தகைய விளக்கங்களால் ஆசிரியர் தொல்காப்பியர், நூற்பாக் களையோ அன்றி நூற்பாக்களில் உள்ள சொற்கள், சொற்றொடர் களையோ வெற்றெனத் தொடுத்தலின்றி, இன்றியமையாத கருத்தை விளக்கவே அமைத்துள்ளார் என்பது நன்கு விளங்கும். ச, கக, +அ, உஎ, ஙஎ, ஙஅ, சுஎ, எக, கஎங, ககூஅ, உஙஉ, உஅக, சககூ, சகஅ ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(அ) நூற்பாக்களின் அமைப்பு விளக்கம் :

நூற்பாக்களிற் சில, உரிய இடங்களில் இன்றி வேறுபட உள்ளன என்பதை நூலை ஒருமுறை ஊன்றிப்படிப்பினும் நன்குணரலாம். அவற்றுள் சிலவற்றைக் காரணம் கருதியே தொல்காப்பியர் இட மாற்றி அமைத்திருக்கலாம்; சில காரணமின்றிப் பின்னுள்ளோர் ஏடு பெயர்த்து எழுதும்போது ஏற்பட்ட பிழையால் இடம் மாறியு மிருக்கலாம். இவற்றை யான் கழகவழிப் பதிப்பித்துள்ள தெய்வச் சிலையார் உரை விளக்கத்திலும், இந்நூலின் உரை விளக்கத்திலும் ஆங்காங்குக் குறித்துள்ளேன். எனினும் சேனாவரையர் சில நூற்பாக் கள் இடம் மாறியிருத்தற்குரிய காரணத்தை விளக்கிக்காட்டுவர். கஉ, சுஎ, அங, கூங, கூச, கக0, ககச, க்ருச, கருரு. கஎக, ககூங, உகஎ, உங0, உஎஉ, உஅகூ, உகூ0, சங0, சஉங, சஉச சஉஎ, சஉஅ, சஉகூ, சசஉ, சசகூ, சருக, சருஉ, சருரு, சருசு, சருஎ, சருஅ, சருகூ, சகூ0, சகூஉ ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(கூ) முறைவைப்புக் கூறல் :

நூற்பாக்களை ஆசிரியர் முறையாக அமைத்ததுடன், நூற்பாக் களிலுள்ள செய்திகளையும் முறையாகவே அமைத்துக் கூறியுள்ளார் என்பது சேனாவரையரையரின் கருத்தாகும். இக்கருத்தை ஆங்காங் குள்ள நூற்பாக்களின் கருத்துக்களுக்கு முறைவைப்புக் கூறிச் செல்வதால் நன்கறிய முடிகின்றது. அ, க0அ, உஉஉ, உரு0 ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(க0) பாட பேதமும் நூற்பா அமைப்பும் :

நூற்பாக்களில் சில சொற்கள், சொற்றொடர்களைப் பாடங்கொள்வதில் உரையாசிரியர்களிடையே கருத்து வேற்றுமை காணப்படுகின்றது. அடிக்குறிப்பில் அவரவரும் கொள்கின்ற பாடம் இதுவெனக் குறிக்கப்பட்டுள்ளது. சொல்லதிகார உரையாசிரியர்கள் அறுவரில், சேனாவரையர் மட்டும் தனித்துப் பாடங்கொள்கின்ற இடம் ஒன்றேயாகும். உஉஉஆம் நூற்பாவில் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் 'பிரிவு வேறுபடூஉம்' என்றும், தெய்வச்சிலையாரும் கல்லாடரும் 'பிரிபு வேறுபடூஉம்' என்றும் பாடங்கொள்ள, இவர் மட்டும் 'திரிபு வேறு படூஉம்' எனப் பாடங்கொள்கின்றார்.

இங்ஙனமே நூற்பா அமைப்பு முறையிலும் இவர் பிறரினும் வேறுபடும் இடம் ஒன்றேயாகும். ருசஆம் நூற்பாவில் உள்ள 'ஒன்று வினை மருங்கின் ஒன்றித்தோன்றும்' என்ற முதல் வரியை பிற உரையாசிரியர்கள் அனைவரும் தனி நூற்பாவாகக் கொள்ள, இவர்மட்டும் அதனை அந்நூற்பாவின் பகுதியாகக் கொள்கின்றார்.

(கக) உவமை நலம் :

சேனாவரையர் தாம் எடுத்துக்கூறும் கருத்துக்களை அவ்வக்கருத்துக்களுக்கு ஏற்ப உவமை காட்டி விளக்கும் திறனுடையர். அவ்வுவமைகள் வழக்குச் செய்யுள் ஆகிய இரண்டிலும் இவருக்கிருந்த பயிற்சித் திறனையும், இசைநூற் புலமையையும் எடுத்துக்காட்டவல்லன. அவ்வுவமைகள் வருமாறு:—

(i) வழக்கில் வரும் உவமைகள் :

(1) 'நொய்யும் நுறுங்கும் களைந்து அரிசி அமைத்தாரை அரிசி ஆக்கினார் என்பவாகலின்'

(2) 'அறமாவது அழுக்காறு இன்மை என்றாற்போல'

(3) 'மக்களிரட்டை விலங்கிரட்டை போல வேற்றுமையுடையன வற்றையன்றி இலையிரட்டையும் பூவிரட்டையும் போல'

(4) 'ஆ தீண்டு குற்றி என்பது போல'

(5) 'இவ்வாடையும் அந்நூலான் இயன்றது என்றாற்போல'

(6) 'ஊரானோர் தேவகுலம் என்றாற்போல'

(ii) இசைநூற் பயிற்சியான் வரும் உவமை :

'பாணியும் தாளமும் ஒருபொருளவாயினும் இசை நூலார் தாளத்துள் ஒருசாரனவற்றிற்குப் பாணி யென்னும் பெயர் கொடுத்தாற் போல'

(iii) இலக்கணத்திற்கு இலக்கணமாகவே உவமை காட்டல் :

(1) 'செயற்கு என்னும் வினையெச்சம், உருபேற்று நின்ற தொழிற் பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும், உருபும் பெயரும் ஒன்றாகாது பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான், அதனின் வேறாயினாற்போல'

(2) பிரிநிலையேகாரம் முதலாகிய இடைச் சொல்லும் ஒருசார் வினைச்சொல்லும் முன்னோதப்பட்டனவேனும், எச்சமாதல் ஒப்புமையான் எச்சவாராய்ச்சிக்கண் அவை தம்மையே 'பிரிநிலை வினையே..... சொல்லே' (சொல்-சகூ0) எனப் பின்னும் கூறினாற்போல'

(3) 'தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணும் ஆகுபெயர் போல', 'ஒப்பில்வழியாற் பிறிது பொருள் சுட்டும் ஆகுபெயர்போல'

(4) 'எச்சவியலுட் கூறப்பட்டவாயினும் வினையெச்சம் முதலாயின வினைச்சொல்லாதலும் இடைச்சொல்லாதலும் உடைமையால் அவற்றை வினையியலுள்ளும் இடையியலுள்ளும் கூறியவாறு போல'

(5) 'வெற்புச் சேர்ப்பு என்னும் பெயரிறுதி இதனையுடையான் என்னும் பொருள் தோன்ற அன் என்பதோர் இடைச்சொல் வந்து வெற்பன் சேர்ப்பன் என நின்றாற்போல'

(6) 'வந்தனன் எனத் தெரிநிலைவினை தொழின்மை மேற்படத் தொழிலுடைப்பொருள் கீழ்ப்பட முற்றாய் நின்றுணர்த்தியவாறு போல'

(7) 'இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி' (சொல்-உஎ०) அப் பெயரோடு ஒற்றுமைப் பட்டு நின்றாற்போல'

(8) 'இயற்சொல்லுள் ஒரு சாரனவற்றை இயற்பெயர் என்றாற் போல'

(iv) செய்யுள் உவமை :

'பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறையென்றார்; ஒருவன் வினையும் பயனும் இன்றியமையாமையின், 'வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு' (குறள்-கூகஉ), 'பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே' (புறம்-கஅஅ) என்றாற்போல'

(v) ஒரே உவமையால் பல இடங்களில் பல கருத்துக்களை விளக்கல்:-

'வழிபோயினாரெல்லாம் கூறைகோட்பட்டார் என்றவழிக்கூறை கோட்படுதல் கடவுளரை யொழித்து ஏனையோர்க்கே ஆயினவாறு போல' என்னும் உவமை க०க, கஎஉ, உசரு, ருகரு ஆகிய நூற்பாக்களில் வருதல் காண்க.

(கஉ) சொற்பொருள் விரித்தல் :

சேனாவரையர் நூற்பாவிற்குப் பொருள்கூறி விளக்குவதுடன் ஆங்காங்கே இடைப்படும் பல சொற்களுக்கும் பொருள்கூறிச் செல்லும் பண்பினர். அப்பொருள் வரையறையானதாய்ப் படிப்போர் மனத்தில் நன்கு பதியவல்லது. அவை வருமாறு :-

(1) சொல்லாவது எழுத்தொடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது.

(2) அதிகாரம் என்றது ஒரு பொருள் நுதலிவரும் பல ஓத்தினது தொகுதியை.

(3) குறித்த பொருளை அதற்குரிய சொல்லாற் சொல்லுக என்றல் வழுவறக என்றலாம்.

(4) குறித்த பொருட்குரிய சொல்லன்றாயினும் ஒருவாற்றான் அப்பொருள் விளக்குதலின் அமைக என்றல் வழுவமைத்தலாம்.

(5) செப்பு என்பது வினாய பொருளை அறிவுறுப்பது.

(6) வினாவாவது அறியலுறவினை வெளிப்படுப்பது.

(7) தகுதி யென்பது அப்பொருட்குரிய சொல்லாற் சொல்லுதல் நீர்மை அன்று என்று அதுகளைந்து தக்கதோர் வாய்பாட்டால் கூறுதல்.

(8) வழக்கு என்பது காரணமின்றி வழங்கற்பாடே பற்றி வருவது.

(9) இனஞ்சுட்டலாவது, இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படுதல்.

(10) இயல்பாவது பொருட்குப்பின் தோன்றாது உடன் நிகழுந் தன்மை.

(11) ஐயப்பொருளாவது சிறப்பியல்பாற்றேன்றாது பொதுவியல் பாற்றேன்றிய பொருள்.

(12) பசிப்பிணி தீர நுகரப்படும் பொருள் எல்லாம் உணவு.

(13) ஆகுபெயராவது யாதானுமோரியைபுபற்றி ஒன்றன் பெயர்

ஒன்றற் காவதாம்.

(14) வினைமுதலாவது கருவி முதலாயின காரணங்களைத் தொழிற் படுத்துவது.

(15) கருவியாவது வினை முதற்றொழிற் பயனைச் செயப்படு பொருட்கண் உய்ப்பது.

(16) முறையாவது பிறவியான் ஒருவனோடு ஒருவற்கு வரு மியைபு.

(17) குணமாவது பொருட்கட் கிடந்து தனக்கோர் குண மின்றித் தொழிலின் வேறாயது.

(18) பொருணிலையாவது தம்மெச்சமாகிய பெயரையும் வினையை யும் கொண்டல்லது அமையாத நிலைமை.

(19) குறிப்பு மனத்தாற் குறித்துணரப்படுவது.

(20) பண்பு பொறியான் உணரப்படுங்குணம்.

(21) முன்தேற்று புறத்திலன்றித் தெய்வம் முதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல்.

(22) அன்மொழியாவது தொக்க சொல் அல்லாத மொழி.

(23) பொருணிற்றலாவது வினையோடியையுமாற்றான் மேற் பட்டுத்தோன்றுதல்.

(கக) வேறுபாடு கூறல் :

சொற்களுக்குப் பொருள் கூறுவதுடன், வேறுபாடுகாட்டி விளக் குதலிலும் சேனாவரையர் திறனுடையர். அவர் காட்டும் வேறு பாடுகள் வருமாறு :—

1) உண்ப
பலரறி சொல்லாயின் பகர இறுதியாம்.

உண்ப
பலவறி சொல்லாயின் அகர இறுதியாம்.

2) அறியான் வினா
பொதுவகையால் அறியப் பட்டுச் சிறப்பு வகையால் அறியப் படாததை வினவுவது.

அறிபொருள்வினா
அறியப்பட்ட பொருளையே ஒருபயன் நோக்கி வினவுவது.

3) உறழ் பொருள்
ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது.

துணைப்பொருள்
ஒப்புமை கூறப்படுவது.

4) அடுக்கு
சொல் முழுதும் இருமுறை அடுக்கி வருவது.

இரட்டைக்கிளவி
சொல் முழுதும் வாராது முன்னது குறைச்சொல்லாய்ப்பின் னதுமுழுச் சொல்லாய் வருவது.

5) இனம்
ஒருசாதிக்கண் அணைந்த சாதி இனம்.

சார்பு
அணைந்த சாதியன்றி ஒரு வாற்றான் இயைபுடையது சார்பு.

6) குறைத்தல்
சுருக்குதலும் சிறிது இழக்கச் சிதைத்தலுமாம்.

அறுத்தல்
சிறிது இழவாமல் சினையை யாயினும் முதலையாயினும் இரு கூறு செய்தல்.

7) செயற்கை
காரணம்பற்றி ஒருபொருட் கண் தோன்றும் வேறுபாடு.

முதுமை
பிறிதோர் காரணம் பற்றாது காலம் பற்றி ஒருதலையாக அப் பொருட்கண் தோன்றும் பருவம்.

8) பொருள்மயக்கம்
தன்பொருளிற்றீராது பிறி தொன்றன் பொருட்கண் சேறல்.

உருபு மயக்கம்
தன்பொருளிற்றீர்ந்து சேறல்.

9) கருமச் சார்பு
தூணைச்சார்ந்தான் என ஒன்றனை ஒன்று மெய்யுறுதலாய் வருவது.

கரும மல்லாச்சார்பு
மெய்யுறுதலின்றி அரசனைச் சார்ந்தான் என வருவது.

10) நோக்கிய நோக்கம்
கண்ணால் நோக்குதல்.

நோக்கல் நோக்கம்
மனத்தால் நோக்குதல்.

11) குழுவின் பெயர்
ஒருதுறைக்கண் உரிமைபூண்ட பல்லோர்மேல் எக்காலத்தும் நிகழ்வது.

கூடிவரு வழக்கின் ஆடியற் பெயர்
ஆடல் குறித்து இளையார் பகுதிபடக் கூடியவழி அக்காலத்து மட்டும் தமக்குள்ளே இட்டுக்கொள்ளுவது.

12) முற்று
பிறிதோர் சொல்லோடு இயையாது தாமே தொடராதற்கு ஏற்கும் வினைச்சொல் முற்றும்.

எச்சம்
பிறிதோர் சொற்பற்றியல்லது நிற்றலாற்ரு வினைச்சொல் எச்சமாம்.

13) இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
ஒருமைப் பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆர் வந்து பலரறி சொல்லான் முடிவது.

ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி
ஒருமைப்பெயர் முன் ஒருமை சிதைந்து ஆர்வந்து சேர்ந்து முடிவது.

14) தகுதி
ஒரு சொல்லைத் தகுதி நோக்கி வேறுசொல்லாலும் சொல்லலாம்; உரிய சொல்லாலும் சொல்லாம்.

அவையல் கிளவி
உரிய சொல்லால் அன்றி, மறைத்த வாய்பாட்டாலேயே சொல்ல வேண்டும்.

15) குறைச்சொல்
ஒரு சொல்லில் சிறிது நிற்பச் சிறிது கெட்டு நிற்பது.

தொகுக்கும் வழித்தொகுத்தல்
ஒருசொல் முழுவதும் கெட்டு நிற்பது.

(கச) தாமே நூற்பாக்களைப் படைத்துக் கூறல் :

நூற்பாக்களின் அமைப்பையும் அழகையும் நன்கு கவனித்துச் செல்லும் பான்மையர் சேனாவரையர். ஆதலின் சிற்சில இடங்களில் நூற்பாக்களை இங்ஙனமன்றி, இங்ஙனமும் செய்திருக்கலாமே எனத் தாமே வினவிக்கொண்டு, அதற்குத்தக அமைதியும் உரைத்துச் செல்வர். ஆசிரியர் கூறிய அமைப்பிலன்றி இங்ஙனமும் நூற்பா இருக்கலாமே எனக் கூறுமிடத்து நூற்பாவைத் தாமே அமைத்துச் செல்வர். அங்ஙனம் உள்ள இடங்கள் வருமாறு :-

(1) 'இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கமும்
ஓம்படைக் கிளவியும் ஏதுவுமாகும்' (கூஎ)

(2) 'புள்ளி யிறுதி ஏயொடு வருமே' (கஉ0)

(கரு) எழுத்து, பொருள் அதிகாரங்களிலிருந்து எடுத்தாண்ட நூற்பாக்கள் :

ஆசிரியர் சேனாவரையர் சொல்லதிகாரத்திற்கு மட்டும் உரை கண்டாராயினும், ஆங்காங்கு இயைபுபடும் இடங்களில் ஏனைய அதிகார நூற்பாக்களை எடுத்தாண்டும், இன்றியமையாமை ஏற்பட்டவிடத்துச் சிற்சில நூற்பாக்களுக்கு உரை வகுத்தும் செல்வர். அவ்






வருமை நினைந்து இன்புறுதற்குரியதாகும். அவை வருமாறு :-

(i) எழுத்ததிகார நூற்பாக்களைக் கையாண்ட இடங்கள் :

(1) 'சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்' (க)

(2) 'புள்ளி இறுதியும் உயிரிறு கிளவியும்' (ககரு)

(3) 'உயர்திணையாயின் நம்மிடை வருமே' (கஅஎ)

(4) 'ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்' (உஉகூ)

(5) 'புணரியல் நிலையிடை உணரத் தோன்று' (உரும)

(6) 'கண்ணிமை நொடியென' (உகூச)

(7) 'செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்யொருங் கியலும் தொழிற்பெறு மொழியும்' (சகரு)

(8) 'பெயரும் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்' (சஉ0)

(9) 'சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔவெனும் மூன்றலங் கடையே' (சருஉ)

எழுத்ததிகார நூற்பாவின் கருத்தை எடுத்தாண்ட இடம் :- நீயி ரென்பதனை நும்மெனத் திரியாது நும்மென்பதனை நீயிரெனத் திரிப்பினும் இழுக்காதென்னும் கருத்தான் எழுத்தோத்தினுள் நும் மென நிறுத்தித்திரித்தார் (கசங). மேற்கூறிய நூற்பாக்களில் இரண் டாவதும் எட்டாவதுமாகக் குறிக்கப்பட்ட நூற்பாக்களுக்கு இவர் உரையும் கூறுவர். அவற்றை விளக்கவுரையில் விளக்கியுள்ளேன். ஆண்டுக்காண்க

(ii) பொருளதிகார நூற்பாக்களைக் கையாண்ட இடங்கள் ;

(1) 'சிறப்பே நலனே காதல் வலியொடு
அந்நாற் பண்பும் நிலைக்கள மென்ப' (கக0)

(2) 'ஒருபாற் கிளவி ஏனைப்பாற் கண்ணும்
வருவன தானே வழக்கென மொழிப' (ககூக)

(3) 'மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்
அவையும் அன்ன அப்பா லான'
'குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை'
'குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை
கிழவ அல்ல மக்கட் கண்ணே' (கஎச)

(4) 'அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப' (உரும)

இவற்றுள் இரண்டாவதாகக் குறிக்கப்பட்ட நூற்பாவிற்கு இவர் உரையும் கூறுவர்.

(கூ) வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்தமை:

இத்தொடர் சிவஞான முனிவருடையதாகும். தமிழ், வடமொழி இரண்டிலும் துறைபோய புலமை பெற்ற முனிவர் பெருமானால், சேனாவரையர் இங்ஙனம் பாராட்டப் பெறுவாராயின், அவர் தம் வட மொழிப் புலமை அளவிட்டுரைக்கப்போமோ! வடமொழியைப் பயின்ற வர், அல்லது கற்றவர், அல்லது புலமை பெற்றவர் என்னாது, நிலை கண்டுணர்ந்தவர் என்றமையான், அம்மொழியில் இவருக்கு அளப்பரிய பேராற்றல் இருந்தமை புலனாகின்றது.

'வாக்கிய தீபத்துள்ளும், கையடத்துள்ளும், நிர்வர்த்தியம், விகாரியம், பிராப்பியம் எனக் கூறிய வண்ணம், சேனாவரையர் முதலாயினர் இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப்படுவதும்

எனச் செயப்படு பொருளை மூன்றாக்குவர். வாக்கிய தீபம், அரி பீடிகை, ஏலாராசியம் முதலாயின வழங்கும் காலத்து அவ்வுரை நோக்கிச் சேனாவரையர் முதலாயினர் தொல்காப்பியத்திற்குரை யெழுதினர் என்க' என்ற பிரயோக விவேக உரையும் இவ்வுண்மையை நன்கு வலி யுறுத்தும். இவரது வடமொழிப் புலமை வெளிப்படும் இடங்கள் வருமாறு :—

(1) வட நூலாரும் ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடு சென்றியைதலையும் ஒன்றனதிலக்கணம் பற்றி வரும் பல சூத்திரத் தொகுதியையும் அதிகாரமென்ப. (முதல் நூற்பா)

(2) ணகாரமும் ளகாரமும் ரகாரமும் மாரும் இறுதி நின்றுணர்த் துமென்பதற்கு 'ஈற்றினின் றிசைக்கும் பதினோரெழுத்தும்' என்பது ஞாபகமாயிற்று. அல்லனவற்றிற்கு அநுவாத மாத்திரமென்றார். (க௦)

(3) செப்பென்பது உத்தரமென்பதனோ டொருபொருட்கிளவி. (கரு)

(4) பொருள் விளக்குதற்குரிய சொற்களைக் குறியாது விடுத்தலை வடநூலார் நேயம் என்பர். (ருரு)

(5) வடநூலுள் உலகம் என்பது இருபொருட்கும் உரித்தாக ஓதப்படும். (ருஎ)

(6) வடநூலுள் பொருள் வேற்றுமையானல்லது உருபு வேற்று மையான் ஒரு வேற்றுமையாக ஓதப்படாது. விளிவேற்றுமையை எழு வாய் வேற்றுமைக்கண் அடக்கல் ஆண்டு (வடமொழி வல்லார்) எல் லார்க்கும் ஒப்ப முடிந்ததன்று. (எச)

(7) அன்மொழித் தொகையிற் சொற்பெய்து விரித்தல் யாண் டுப் பெற்றாமெனின், அதுவும் அநுவாதமுகத்தான் ஈண்டே பெற்றா மென்க. (அரு)

(8) காரணமெனினும் காரகமெனினும் ஒக்கும். (ககஉ)

(9) இயைபின்மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலும் என விசேடித்தல் இருவகைத்து. (கஅஉ)

(10) குமரி யென்பது, வடமொழிச் சிதைவாய் வட மொழிப் பொருளே உணர்த்தலின், விரவுப் பெயராம். (ககசு)

(11) செயப்படு பொருளைக் கருத்தாவாகக் கூறுதலைக் கரும கருத்தன் என்ப. (உசசு)

(12) வடசொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட்குரியவாய் வாரா. (ருகஎ)

(13) நீர் என்பது ஆரியச் சிதைவாயினும் அப்பொருட்கு அதுவே சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ் நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லாயிற்று. (ருகஅ)

(14) ஒரு சொல்லாய வழித்தமிழ்ச்சொல் வட பாடைக்கட் செல்லாமையானும், வட சொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாக லானும், இவை வட சொல்லாய் ஈண்டு வழங்கப்பட்டனவெனல் வேண்டும். (ச௦க)

(15) வினைச்சொற்கும் வினைப்பெயர்க்கும் முதனிலையாய், உண், தின், செல், கொல் என வினைமாத்திரமுணர்த்தி நிற்பன வற்றை வடநூலார் 'தாது' வென்பர். (சகரு)

(16) வட நூலாரும் பிரியாத்தொகையும் பிற சொல்லான் விரிக்கப்படும் என்றார். (சககசு)

(கஎ) அணியிலக்கண உடன்பாடு :

ஆசிரியர் தொல்காப்பியர் காலத்து ஐந்திலக்கணப் பாகுபாடு இல்லை. எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று பாகுபாடே இருந்தது. பொருளதிகாரத்தில் உள்ள செய்யுளியலால் யாப்பும், உவம இயலால் அணியிலக்கணமும் அடங்கும் என்பர் ஒரு சாரார். பிறிதொரு சாரார் உவமை பொருளைவிளக்கும் கருவியே யன்றி, அணி யாகாதென்பர். இவ்விரண்டனுள் சேனாவரையர் முன்னைய கருத் தினர். பேராசிரியர் பின்னைய கருத்தினர். பேராசிரியர் உவம இயலை அணியியல் எனக்கருதும் கருத்துப் பொருத்தமற்றது என்பதோடு, அணியிலக்கணம் எனப் பாகுபடுத்துவதே பொருத்தமற்றதென்பர். ஆனால் சேனாவரையர் உவம இயலை அணியியல் என்றும், அணியிலக் கணம் எனப்பாகுபடுத்துவது பொருத்தமுடையது என்றும் கூறுவர்.

உவம இயலை அணியியலென்றல் கசு, சச, சஎ ஆகிய நூற்பாக் களின் உரைகளானும், அணியிலக்கணம் உடன் பாடாதலை கஅ, உசு, ருடு, கருஎ, சoரு, சசரு ஆகிய நூறபாக்களின் உரைகளானும் அறியலாம்.

(கஅ) ஒன்றற்கு மேற்பட்ட உரை கூறல் :

ஒரு நூற்பாவிற்கு ஒருரை தருதலன்றிச் சில நூற்பாக்களுக்கு ஈருரை, மூவுரை தருதலும் உண்டு. உசகூ, சஉஅ, சசகூ, சகூரு ஆகிய நூற்பாக்களுக்கு ஈருரைகளும், சருஉ ஆம் நூற்பாவிற்கு மூவுரை களும் தருதல் காண்க.

(ககூ) சேனாவரையர் உரையால் இளம்பூரணர் உரைப்பதிப்புத்திருத்தம் பெற்ற இடங்கள் :

தற்பொழுது கிடைத்துள்ள தொல்காப்பிய உரையாசிரியர்களில் இளம்பூரணரே முன்னவராவர். அவரையடுத்து உரை எழுதியவர் சேனாவரையராவர். ஆதலின் இளம்பூரணர் உரையை ஏற்குமிடங் களில் தழுவியும், ஏலாத இடங்களில் மறுத்தும் உரை செய்தனர் சேனாவரையர். அவர் மறுத்த இடங்களில் பல தற்பொழுதுள்ள இளம் பூரணர் உரையில் இல்லை. சேனாவரையர் உரையே இளம்பூரணர் உரையாக உள்ளது. இங்ஙனம் ஏற்பட்டமைக்குரிய காரணத்தையும், இதுகொண்டு இளம்பூரணரும் உரையாசிரியரும் வேறுவர் என்றல் பொருந்தாது என்பதையும் யான் கழக வழிப் பதிப்பித்துள்ள இளம்பூர ணர் உரையில் விளக்கியுள்ளேன். ஆண்டுக் காண்க.

இளம்பூரணரையடுத்து வந்தவர் சேனாவரையர் ஆதலானும், இவர் இளம்பூரணர் கருத்தாக எடுத்து மறுத்துள்ள இடங்களில், இவ ரால் மறுக்கப்பட்ட கருத்துக்களே அவ்வுரையில் இருத்தல் பொருத்த மாதலானும், இவர் உரையால் அப்பதிப்பைச் செப்பம் செய்து கொள்ளுதல் தவறாகாது. * கூகூ, ககo, கருஅ, கஎக, கஅச, ககூகூ, உஅகூ, சசச ஆகிய நூற்பாக்களின் உரைகள் இவருரையால் விளக்கம் பெற்றனவாகும்.

(உo) மறுக்கும் திறன் :

பிறர் கருத்தை மறுக்குங்கால் தன் கருத்தில் நின்றே பிறரை மறுக்காது, பிறர் கருத்தையே முதற்கண் கூறி அங்ஙனம் கூறுவதால் வரும் ஏதத்தை அவரே யுணருமாறு செய்துவிட்டுப், பின்னரே தன்

* இவ்வெண்கள் இளம்பூரணர் உரையில் உள்ள நூற்பா எண்களைக் குறிக்கும்.

கருத்தினை நிலைநாட்டுவர், வழக்குரைஞர்களும், பட்டிமன்றம் ஏறுவோரும் இவர் மறுப்புக்களைப் படிப்பின் பெரிதும் சுவைப்பர்; தாமும் பின்பற்றவிழைவர். பிறர் கருத்தை மறுக்குங்கால் அவர் மனம் நோகாதவாறு மறுக்கும் திறன் இவர் மாட்டுண்டு. சிவஞான முனிவர் இதற்கு மறுதலையானவர். இவருக்குமுன் உரை வகுத்தவர் உரையாசிரியராதலின் அவர் கருத்தே பல இடங்களில் இவரால் மறுக்கப்படுகின்றன. அவர் பெயரை வெளிப்படக் கூறியும், கூறாதும் மறுப்பர். சில இடங்களில் பெயர் கூறாது மறுத்த கருத்துக்கள் உரையாசிரியர் கருத்தாக இல்லாதிருக்கின்றன. இவ்விடங்களை நோக்குமிடத்து இவருக்கு முன் உரையாசிரியர் உரையையன்றி வேறுரையும் இருந்திருக்கலாமெனத் தெரிகிறது. பெயர் கூறி மறுக்கும் இடங்களிலெல்லாம் இளம்பூரணர் என்று பெயர் கூறாது உரையாசிரியர் என்றே கூறிச் செல்வதால், இவர் காலத்தில் இளம்பூரணர் உரையே பெரிதும் வழக்கிலிருந்ததென்றும், உரையாசிரியர் எனில், அது இளம்பூரணரையே குறிக்கும் என்ற அளவிற்கு அவர் பெயர் வழங்கிற்று என்றும் அறியலாம். இவர் மறுப்புரை வழங்கி, முடிவு கூறும நிலையை நான்கு வகையாகப் பிரிக்கலாம். அவை வருமாறு:-

(1) அவருரை போலியுரை என்க:- க, டு, கங, உச, ஙடு, சO ருக, ருச, கூO, கூஅ, எச, கஉச, கஎச, கஅஎ, உகூ, சOக, சஉஅ, சசஅ ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(2) அவர்க்கது கருத்தன்றென்க:- க, ௬, கஎ, உக, உகூ, சரு, ருO, கூஉ, கூஎ, அஉ, கOஉ, ககச, ககடு, கஉO, ககூக, உஎஉ, ஙஅஅ, சOஅ, சகடு, சககூ, சஉஉ, சஉகூ, சஉஎ, சஙக, சசO, சருO, சருஎ, சகூO ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(3) பிறர்மதம் மேற்கொண்டு கூறினார் என்க:- கங, கஎ, உகூ ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(4) நூலாசிரியருக்குக் கருத்தன்மையான் உரையாசிரியருக்கும் அது கருத்தன்றென்க:- ககச, சகடு, சருO ஆகிய நூற்பாக்களைக் காண்க.

இவர் யாண்டும் வன்மையாக மறுப்பது இல்லை என்பது முன்னர்க் கூறப்பட்டது. எனினும் ஓரிடத்து மட்டும் அந்நிலை மாறிக் காணப்படுகின்றது. அம்மறுப்பு வருமாறு:— 'யானை தேர் குதிரை காலாளெறிந்தார் என உம்மையும் உருபும் உடன்றொக்கவழி உம்மைத் தொகை யென்னாது உருபு தொகையென்க வென்பது இச்சூத்திரத்திற்குக் கருத்தாக உரைத்தாரால் உரையாசிரியரெனின்:— அஃது உம்மைத்தொகை யாதலின் ஒருசொன்னடைத்தாய் உருபேற்றானும் பயனிலைகொண்டானும் நிற்கும்; அத்தொகையிடை உருபின்மை சிற்றறிவினோர்க்கும் புலனாம்; அதனான் அஃதவர்க்குக் கருத்தன்மை சொலல வேண்டுமோ வென்பது.' (உகூக ஆம் நூற்பா)

பிறர் கருத்தைக் கூறுங்கால், அக்கருத்தை மறுக்குமுன், அவர் அங்ஙனம் கொள்ளுதற்குரிய காரணத்தை முதற்கண் ஆய்ந்து அதற்கு மறுப்புத்தந்து, பின் அவர் கருத்திற்கு மறுப்புரை வழங்கலும் உண்டு. கூஎ, கஅஎ சசO ஆகிய நூற்பாக்களைக் காண்க.

(உக) ஆசிரியர் தொல்காப்பியரைப்பற்றியும் பிற புலவர்களைப் பற்றியுமுள்ள குறிப்புக்கள்:

சேனாவரையர் உரையால் ஆசிரியர் தொல்காப்பியனாரைப் பற்றி ஓரிரு குறிப்புக்களே அறிய முடிகின்றது. அவை வருமாறு:—

(1) ஆசிரியர் தொல்காப்பியனார் வடநூற் கருத்தையும் தழுவியே நூல் செய்தார் (எச). (2) தொல்காப்பியரால் செய்யப் பட்டது தொல்காப்பியம். ஒரு மொழியிலக்கணம் ஆசிரியரால் ஈண்டுக் கூறப்படவில்லை. (கஈச)

பிற புலவர்கள் :— (1) சீத்தலைச் சாத்தனார்: சினை முதற் பெயருக்கு இப்பெயரை எடுத்துக்காட்டுவர். இதனால் இப்பெயர் பற்றிய பழங்கதையை இவர் அறியவர் எனத் தெரியலாம் (களச). (2) கபிலர்: இவரால் செய்யப்பட்டது கபிலம் (சஈச). கபில பரண நக்கீரர்: இவர்களைப் பல்பெயர் உம்மைத்தொகைக்கு எடுத் துக்காட்டுவர் (சஉக). (3) மாமூல பெருந்தலைச் சாத்தர்: இவர் களை இருபெயர் உம்மைத்தொகைக்கு எடுத்துக்காட்டுவர் (சஉக). (4) அகத்தியர், திருவள்ளுவர்: இவர்கள் முறையே முனிவன், தெய்வப் புலவன் என்ற சிறப்பைப் பெற்றவர்கள் (சக). அகத்தியனார் பன்னிருமாணாக்கர்களைப் பெற்றவர் (உஎக).

(உஉ) ஆசிரியர் கூற்றில் உறுதிப்பாடு உடைமை:

தொல்காப்பியனார் கூறிய இலக்கணங்களிற் சில பிற்காலத்து வேறுபடினும், அன்றி அவர் கருத்து மாறுபாடுடையதாகத் தோன்றி னும் ஆசிரியர் கருத்தைமறுப்பதோ, அன்றி அவரை யிகழ்வதோ இவர் பாலில்லை. இதனை இவர் உரைகொண்டு நன்கு அறியலாம்.

(1) கருமமல்லாச் சார்பென் கிளவிக்கே ஏழாம் வேற்றுமையும் உரித்தென்றார் தொல்காப்பியர். ஆனால் கருமச்சார்பிற்கும் ஏழனுருபு உரித்தென்றால் என்னை? என்னும் வினாவிற்கு விடையளிப்பதாக உள்ள உரை இவ்வுண்மையை நன்கு விளக்கும். அது வருமாறு:— தூணின் கட் சார்ந்தான் எனக் கருமச்சார்ச்சிக்கண் ஏழாவது சென்றாற்படுமி ழக் கென்னையெனின்:— அன்னதோர் வழக்கின்மையே பிறிதில்லையென்க. இக்காலத்து அவ்வாறு வழங்குபவாலெனின் கருமமல்லாச் சார்ச்சிக் கண் வருமுருபைச் சார்தலொப்புமையாற் கருமச்சார்ச்சிக்கண்ணுங் கொடுத்து உலகத்தார் இடைத்தெரிவின்றி வழங்குகின்றாரெனவே படும்; ஆசிரியர் கருமமல்லாச் சார்பென்கிளவியென விதந்து கூறின மையானென்பது'. (அச)

(2) ஒடுவெனுருபினை உயர்ந்த பொருளிலேயே வைத்து வழங்க வேண்டும் என்பது தொல்காப்பியர் கூறும் இலக்கணம். அதற்கு மாறாக 'நாயொடு நம்பி வந்தான்' என்ற வழக்கும் உள்ளதைக் கண்டு அதற்கு விளக்கம் தருகின்றார் சேனாவரையர். இவ்விடத்தும் இவர் ஆசிரியர் மாட்டுக் கொண்ட உறுதிப்பாடு நன்கு விளங்கும். 'நாயொடு நம்பி வந்தான்' என இழிபெயர்க்கண்ணும் ஒருவினையொடுச் சொல் வந்ததாலெனின்:— யாதானுமோராற்றான் அதற்குயர்புண்டாயி னல்லது அவ்வாறு கூறார்; கூறுபவாயின், அஃது ஒரு வினையொடுச் சொலெனப்படாது, கைப்பொருளொடு வந்தான் என்பது போல அது தன்க்குண்டாக வந்தானெனப் பிறிது பொருள்படுவதோர் ஒடு வுருபாமென்க. (கூக)

(3) 'எல்' என்பதை இடைச்சொல் என்றார் தொல்காப்பியர். ஆனால் அது உரிச்சொல்லாக இருப்பதைக் கண்ட சேனாவரையர் பின்வருமாறு கூறி, ஆசிரியர் கூற்றே வலியுடைத்து என்கிறார். 'எல்லென்பது உரிச்சொல் நீர்மைத்தாயினும், ஆசிரியர் இடைச் சொல்லாக ஓதினமையான், இடைச்சொல்லென்று கோடும்' (உகக)

(௨௩) தெரியுங்கால் இன்மை யரிதே வெளிறு:

எத்துணை நுண்ணறிவாளருக்கும் ஒரோவழி மயங்குதல் இயல்பாகலானும், சேனாவரையரும் அதற்கு விலக்காகாமையானும், இவருரையிலும் சில இடங்களில் பொருத்தமற்றதாய் உள்ளன. ௧௧, ௨௬, ௩௫, ௫௫, ௫௭, ௭௪, ௧௦௪, ௩௩௮, ௩௪௨, ௪௦௧ ஆகிய நூற்பாக்களுக்கு இவர் வகுத்துள்ள உரை அத்துணைப் பொருத்தம் உடையன வல்ல. இவற்றை விளக்கவுரையில் அவ்வந் நூற்பாக்களில் விளக்கியுள்ளேன். ஆண்டுக் காண்க.

எ) முடிவுரை:

இங்ஙனம் இவர்தம் உரை தொட்டனைத்தூறும் மணற்கேணி போல, மாந்தர்க்குக் கற்றனைத்தூறும் அறிவுப் பேராறாய் விளங்குதல் பற்றியே, பின்னுள்ளோரும் 'ஆனா இயல்பிற் சேனாவரையரும்' என அகமகிழ்ந்து போற்றுவா ராயினர். இவ்வருமையுரையைப் பன்முறையும் படித்துச் சுவைத்து இன்புறுவதன்றி அப்பேராசியருக்கு நாம் செய்யும் கைம்மாறு வேறுயாதுளது?

'சிலநாட் பழகிற் சிலவும் பலியா
பலநாட் பழகிற் பலிக்கு மென்க
விரைவாற் பார்க்கிற் றெரியா தொன்றும்
விரையா தேற்கிற் கருகா தென்க
வருவதிற் கருத்தினை மட்டுப் படுத்தி
வந்ததிற் சிந்தையைச் சிந்தா திறக்குக'



# சொல்லதிகார விளக்கக் கட்டுரைகள்.

## க. கிளவியாக்கம்

### 1. பெயர்க்காரணம் :

கிளவி—சொல், ஆக்கம்—ஆகிவருதல் எனப்பொருள் கொண்டு இன்னின்ன சொற்கள் இன்ன பொருள்மேல் ஆகி வருவனவாம் என்பதை இவ்வியலில் உணர்த்துதலின் 'கிளவியாக்க மாயிற்று' என்பர் ஒருசாரார். இனி, கிளவி—சொல், ஆக்கம் — அமைத்துக் கொள்ளுதல் எனப் பொருள் கொண்டு, சொற்களில் வழுவுடையன இவை, வழுவற்றன இவை எனத் தெரிந்து வழுவற்ற சொற்களை அமைத்துக் கொள்ளுதலின் இவ்வியல் 'கிளவி யாக்க மாயிற்று' என்பர் இன்னொரு சாரார். சேனாவரையர் இவ்விரு கொள்கைகளையும் ஏற்பர்.

### 2. இருதிணை ஐம்பாற் சொற்கள் :

திணை:- மக்கள் என்று நன்கு மதிக்கப்படும் பொருளை உயர்திணை என்பர். அவரல்லாத பிற பொருள்களை அஃறிணை என்பர் ஆசிரியர். பேடியும், தெய்வமும் உயர்திணையுளடங்கும்.

பால்:- ஆண், பெண், பலர், என உயர்திணை மூவகைப்படும். ஒன்று பல என அஃறிணை இருவகைப்படும். னகர ஒற்று ஆண்பாலை யும், ளகர ஒற்றுப் பெண்பாலையும், ரகர ஒற்று, பகர விறுதி, மார் ஆகிய மூன்றும் பலர் பாலையும் குறிக்கும். து, று, டு என்பன ஒன்றன் பாலையும், அ, ஆ, வ என்பன பலவின் பாலையும் குறிக்கும். இப்பதினோரெழுத்துக் களும், வினைச்சொற்களின் இறுதியில் நிற்கும் பொழுதே திணை, பால்களை நன்றிய முடியும். பெயர்ச் சொற்களின் இறுதியில் நிற்கும் பொழுது தெளிவாக அறிய முடியாது.

### 3. வழுவும் அமைதியும் :

'அவன் வந்தது' என ஒரு திணைச்சொல், ஏனைத் திணைச் சொல் லோடு முடியும் திணை வழுவும், 'அவள் வந்தான்' என ஒருபாற் சொல் அத்திணைக்கண் ஏனைப் பாற்சொல்லோடு முடியும் பால் வழுவும், எப்பொருளை, எச்சொல்லால் உயர்ந்தோர்கள் செப்பி வந்தார்களோ, அப்படி யின்றி மாறிக் கூறும் மரபு வழுவும், 'கருவூர்க்குச் செல்லாயோ' எனக் கேட்பின், 'என்னிடமிருக்கும் பருநூல் பன்னிரு தொடி எடை யுடையது' எனக் கூறுதல் போன்ற செப்பு வழுவும், ஒரு பொருள் சுட்டி 'இது சிறிதோ பெரிதோ' எனக் கேட்கும் வினா வழுவும், 'யான் வந்தாய்' என ஓரிடச் சொல் ஏனையிடச் சொல்லோடு முடியும் இட வழுவும், 'நேற்று வருவேன்' என ஒரு காலத்திற்குரிய சொல் ஏனைக் காலத்தோடு முடியும் கால வழுவும் என வழு ஏழு வகைப்படும்.

'வழுவற்க' என்றலும், 'வழுவமைத்தலும்' என வழுக்காத்தல் இரு வகைப்படும். குறித்த பொருளை அதற்குரிய சொல்லால் சொல்லுக என்றல் வழுவற்க என்றலாம். குறித்த பொருட்குரிய சொல் அல்ல வாயினும் ஒருவாறு அப்பொருளை விளக்குதலின் அமைத்துக் கொள்ளுக என்றல் வழுவமைத்தலாம். இவ்வியல் இவ்விரு திறத்தானும் வழுக் காக்கின்றது. 'திணையே பாலிடம் பொழுதே வினாஇறை, மரபாம் ஏழும் மயங்கினும் வழுவே' என்ற நன்னூற் சூத்திரம் இவ்வழுக்களை முறைப்படிக் கூறியுள்ளமை காண்க. அம்முறையே இவ்வியலை விளக்குவாம்.

(i) திணை வழுவமைதி :

தன்மைச் சொல்லாகிய உயர்திணைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும் எண்ணுகின்ற பொழுது விரவி வரும். அங்ஙனம் விரவி வரினும் குற்றமில்லை. வியங்கோளொடு தொடரப்பெறும் எண்ணுப் பெயரும் எண்ணுதற்கண் விரவப் பெறும்; ஆயினும் வழுவில்லை. திணை விரவி எண்ணப்பட்ட பெயர்கள் செய்யுளில் வரும் பொழுது பெரும் பான்மை அஃறிணையைக் கொண்டும், சிறுபான்மை உயர்திணையைக் கொண்டும் முடியும்.

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, விருந்து, குழு, பெண்மை, அரசு, மகவு, குழவி, அலி, குருடு ஆகியனவும், காதல் பற்றி வரும் யானை, பாவை முதலியனவும், கண்போலச் சிறந்தானைக் கண் என்றல் முதலியனவும், கோபத்தைப் புலப்படுக்கும் பொறியனை முதலியனவும், வெற்றியைப் புலப்படுக்கும் அருந்திறல் முதலியனவும் உயர்திணைப் பொருளை உணர்த்துவனவாயினும் அஃறிணை முடிபு கொள்ளும். ஒரோவழி உயர்திணை முடிபுங்கொள்ளும். காலம், உலகம், உயிர், உடம்பு, அறத்தெய்வம், வினை, பூதம், ஞாயிறு, திங்கள், நாமகளாகிய தெய்வம் ஆகிய இச்சொற்களோ ஈறு திரிந்தவழி உயர்திணை முடிபுகொள்ளும்; ஈறு திரியாதவழி அஃறிணை முடிபு கொள்ளும்.

திணையோடு கூடிய பால்வழு : கண், தோள் முதலியன பன்மை குறித்த சினைச்சொற்களாம். சினைச்சொற்கள் எல்லாம் அஃறிணை எனப்படும். எனவே இவை அஃறிணை முடிபு கொள்ளின் வழுவில்லை. அங்ஙனமின்றி உயர்திணை முடிபு கொள்ளினும் அமைக என வழு வமைத்த வாறும்.

(ii) பால் வழுவமைதி :

(1) பேடி :- பேடி என்னுஞ் சொல் 'பேடிவந்தாள்' எனப் பெண்பாலேயே இசைக்கும். இது வழுவற்க என்பதாம்.

(2) திணை துணிந்து பால் துணியாத பெயர்கள் அமையுமாறு :- திணை துணிந்து பால் துணியாத ஐயத்திற்குரிய பொருளை அவ்வத் திணைப் பன்மையாற் கூறுக என்பதாம். எனவே ஆணோ பெண்ணோ என ஐயுற்றுழித் தோன்றுவான் என்றோ தோன்றுவாள் என்றோ கூறாது தோன்றுவார் என உயர்திணைப் பலர்பாலாய்க் கூறவேண்டு மென்பது கருத்து. இங்ஙனமே அஃறிணைக்கண்ணும் ஒன்றோ பலவோ என ஐயுற்றவழி செய்புக்கன எனப் பன்மையாற் கூறவேண்டும். இது வழுவற்க என்பதாம். இங்ஙனமன்றி உயர்திணை, அஃறிணை யில் பால் ஐயந்தோன்றியவழியும், திணையையம் தோன்றிய வழி யும் 'உருபு' என்ற சொல்லைப் பயன்படுத்தினும், அஃறிணையில் பால் ஐயந் தோன்றியவழி அஃறிணைப் பொதுப் பெயராகிய 'பெற்றம்' போன்ற சொற்களைப் பயன்படுத்தினும் இழுக்கில்லை என்பதாம். இது வழுவமைதியாம்.

(3) திணையையம் :- குற்றியோ, மகனோ என ஐயம் நிகழ்ந்த விடத்துக் குற்றியென்று துணிந்தவழி அன்மைத் தன்மையைக் குறிக்கும் சொல்லைத், துணிந்து தழுவிக் கொள்ளப்பட்ட பொருளுக்கு (குற்றிக்கு) வேறான பொருளிடத்து (மகன் என்னும் சொல்லிடத்து) வைத்துச் சொல்ல வேண்டும் என்பதாம். இதுவழுவற்க என்பதாம்.

(4) வழக்கினுகிய உயர்சொற்கிளவி :- ஒருவன் ஒருத்தியைக் கூறும் பன்மைச் சொல்லும், ஒன்றன்பாலிற் கூற வேண்டியதைப் பல வின் பாலிற் கூறும் பன்மைச் சொல்லும் இலக்கண நெறியல்லவாயி

னும், உயர்த்துக் கூறு முகத்தான் கூறப்படுதலின் வழக்கு நெறியில் அமைவுடையன என்றே கருதப்படும். இதுவழுவமைதி.

(5) ஒருமை எண்ணின் பொதுப்பிரிபாற் சொல:— 'ஒருவர்' என்னுஞ் சொல் ஆண் பெண் இருவர்க்கும் ஏற்றலின் ஆடவர், பெண்டிர் என்ற இருசாரார்க்கும் பொதுவான சொல்லாம். இப் பொதுமையினின்றும் பிரிக்க வேண்டின் ஒருவன், ஒருத்தி என்று வழங்கவேண்டும். இவை பொதுப்பிரிபாற்சொல்லாம். ஆண், பெண் என்ற பொதுத் தன்மையினின்றும் பிரிந்து ஒருவன் என்பது ஆண் பாலையும், ஒருத்தி என்பது பெண்பாலையும் குறித்தலின் பொதுப்பிரி பாற் சொல்லாயிற்று. ஒருவன், ஒருத்தி என வழங்குதலன்றி இருவன், இருத்தி என எண்ணப்பட்டு வழங்குமாறில்லை. இது வழுவற்க என்பதாம்.

(iii) இடவழுவமைதி :

செலவு, வரவு, தரவு, கொடை ஆகிய நான்கு சொற்களும், தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றிடத்திற்கும் உரியவாம். இந்நான்கு சொற்களையும் 'இடங் குறிக்கும் முதனிலைகள்' என்பர். இவற்றுள் தருதல், வருதல் ஆகிய இருசொற்களும் தன்மை, முன்னிலைக்கண்ணும், செலவு, கொடை ஆகிய இருசொற்களும் படர்க்கைக் கண்ணும் வருவனவாம். இது வழுவற்க எனபதாம்.

(iv) கால வழுவமைதி :

இதுபற்றி இவ்வியலில் தனித்து ஒன்றும் கூறப்படவில்லை. 'வினையின் தோன்றும் பாலறி கிளவியும், பெயரின் தோன்றும் பாலறி கிளவியும், மயங்கல் கூடா தம்மர பினவே' — என்னும் பொதுச் சூத்திரத்துள் காலவழு கடிதற்குரியது என்னும் கருத்தினை உரையாசிரியர்கள் அடக்கிக் கூறியுள்ளனர். எனினும் இக்கால வழுவமைதி பற்றி வினையியற்கண் உ௬௧, முதல் உ௪௫ வரையுள்ள நூற்பாக்களாலும், உ௪௭, உ௪௮ ஆகிய நூற்பாக்களாலும் விரிவாகக் கூறியுள்ளார். இவை பற்றிய விளக்கங்களை அவ்வியலிற் காண்க. வினைச்சொல் காலமொடு வருதலை இலக்கணமாக உடைமையின் இவ்வழுவமைதியினை ஆண்டுக் கூறினர்.

(v) செப்பு வழுவமைதி:

வினவிய பொருளுக்கு விடை சொல்லுவது செப்பு ஆகும். அது செவ்வன் இறை, இறைபயப்பது என இருவகைப்படும். செவ்வனிறை என்பது நேரிதாகச் சொல்லும் விடை. செப்பு, இறை என்பன ஒரு பொருளன. உயிர் எத்தன்மைத்து? எனக் கேட்பின், 'உணர்தல் தன்மைத்து' எனக் கூறின் அது செவ்வனிறையாம். இறைபயப்பது என்பது நேரிதாக விடை சொல்லாது குறிப்பாகப் பெறுமாறு விடை கூறுவது. 'உண்டியோ' எனக்கேட்டவழி, 'வயிறு வலிக்கின்றது' என்று கூறுதல் முதலாயின இறைபயப்பதாம். 'வயிறு வலிக்கின்றது' என்பதால் உண்ணவில்லை என்பது கருத்து. இதனை நேரடியாகச் சொல்லாமையான் இறைபயப்ப தென்பர்.

(1) செப்பாற் சொற் சுருக்கம்:— ஒருவன் ஒரு பொருளைக் கேட்பின், அது தன்னிடத்து இல்லையாயின் இல்லை எனக் கூறலாம். அங்ஙனமின்றி 'அல்லதில்' என்னும் வாய்பாட்டை வைத்து இல்லை எனக் கூற விரும்பின், அப்பொருளல்லாத பிறிது பொருளில்வைத்துக் கூறவேண்டும். பிறிது பொருள் கூறுது கேட்பார் கேட்கும் பொருளிலேயே வைத்துக் கூற வேண்டின், 'இப்பயறல்லதில்லை' எனச் சுட்டிக்

கூறல்வேண்டும். இது வழுவற்க என்பதாம்.

(2) சுட்டு:- பொருளொடு புணர்ந்த சுட்டும், பொருளொடு புணராச் சுட்டும் எனச் சுட்டு இருவகைப்படும். சுட்டுக்கள் எவற்றை யும் சுட்டலாம். ஆனால் இப்பயறு, இப்புத்தகம் என ஒரு பொருளொடு அச்சுட்டினைக் கூட்டிச் சொல்லப்படுமாயின் அது பொருளொடு புணர்ந்த சுட்டாம். இது, இவை என வரும் சுட்டுக்கள் ஒன்றனையும் வரையறைப்படுத்தி உணர்த்தா; சொல்லுவான் கருத்தின் வழி நின்று எவற்றையும் உணர்த்தவல்லன. ஆகலின் இவை பொருளொடு புணராச்சுட்டாம். 'உழுந்துண்டோ' என வினவின் அவ்வுழுந்து தன் பாலிருப்பின் 'இவ்வுழுந்தல்லதில்லை' எனக் கூறலாம் அவ்வுழுந் தினைத் தன்கையாற் காட்டி 'இதுவல்லதில்லை' எனவும் கூறலாம். இதுவல்லதில்லை என்புழி, 'இது' என்பது பொருளொடு புணராச் சுட்டாயினும், அவ்வுழுந்தினைக் காட்டிக் கூறுதலின் பொருளொடு புணர்ந்த சுட்டுப் போலவே கருதப்படும். இதுவும் செப்பு வழுவா தலின் ஈண்டுக் கூறப்பட்டது. இது வழுவமைதியாம்.

(vi) வினா வழுவமைதி :

வினாவாவது அறிய வேண்டுவதை வெளிப்படுத்துவதாகும். அது அறியான் வினா, ஐய வினா, அறிபொருள் வினா என மூவகைப்படும். ஒரு பொருளைப்பற்றிப் பொதுவாகத் தெரிந்து கொண்ட ஒருவன் அதன் சிறப்பியல்புகளையும் அறிய வினவுவானாயின், அது அறியான் வினாவாகும். அஃதாவது உயிர் உண்டென்று பொதுவகையான் தெரிந்த ஒருவன், அதன் சிறப்பியல்புகள் எவ்வியல்பின? என வினவு வதாம். ஐயவினா என்பது ஒரு பொருளைப் பற்றி ஐயமேற்பட்டுழி வினவுவதாகும். குற்றியோ? மகனோ? என்பது அதற்கு உதாரணமாகும். அறிபொருள் வினா என்பது அறியப்பட்ட பொருளையே ஒருபயனோக்கி வினவுவதாகும். ஆசிரியர் மாணாக்கனை நோக்கி இந்நூற்பாவிற்குப் பொருள் யாது? என வினவுவது அத்தன்மைத்தாகும். வினாப்பொரு ளில் வரும் யாது, எவன் என்ற இரு சொற்களும் அறியாத பொருளை வினவும் பொழுதும், ஒரோவழி அறிந்த பொருளை ஐயந்தீர்தற்காக வினவும் பொழுதும் பயன்படுவனவாம்.

செப்பும் வினாவும் வழுவற்க என்றல்: ஒரு பொருளொடு ஒரு பொருளை உவமிக்கினும், உறழ்ந்து கூறினும் முதற் சொற்களுக்கு முதற்சொற்களேயாய்ச், சினைச் சொற்களுக்குச் சினைச்சொற்களே யாய்க் கூறப்பட வேண்டும்.

(vii) மரபு வழுவமைதி :

(1) தகுதியும் வழக்கும்:- சொற்களில் சில தனக்குரிய பொருளை உணர்த்தாது, பொருந்தியதொரு பொருளை உணர்த்தி வருவனவும் சிலவுள. அவை தகுதிபற்றி வருவனவும், வழக்குப்பற்றி வருவனவும் என இருவகைப்படும். தகுதிச் சொல்லாவது ஒரு பொருளைக் குறித் தற்கு ஒருசொல் இருப்பினும், அச்சொல் சொல்லுதற்கு தகுதி யுடையதாய் இல்லாதிருப்பின் அதனை நீக்கி வேறொரு சொல்லாற் சொல்லுவதாகும். (எ-டு) ஒருவர் இறந்துபோயின் 'செத்தார்' என்றும் சொல்லலாம். அங்ஙனமன்றி அது தகுதி அன்றென்று கருதி 'துஞ்சினார்' என்றும் சொல்லலாம். வழக்குச் சொல்லாவது, ஒரு காரணமுமின்றி இதுகாறும் மக்கள் வழங்கிய வழக்காற்றினையே நெறியாகக்கொண்டு கூறப்படுவதாம். (எ-டு) 'வெள்யாடு' என்புழி அடைமொழி வெண் மையை புணர்த்தினும், வழக்காற்றில், அவ்வெண்மையைக் கருதாது

ஆட்டினங்களில் ஒருவகை இனத்தையே உணர்த்தி நிற்றலின் இது வழக்காறுகும். இது வழுவமைதியாம்.

(2) இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர் :- ஒரு பொருளைக் குறித்து வரும் அடைமொழிகளுள் இனமுடையனவுமுள, இனமில்லா தனவுமுள. (எ-டு) 'சில் தாழிசைக் கொச்சகக்கலிப்பா' என்றவிடத்துச் சில என்னும் அடைமொழியால், 'பல் தாழிசைக் கொச்சகக்கலிப்பா' என ஒன்று உளது எனத்தெரிகிறது. எனவே சில என்பது இனஞ் சுட்டுவதாம். 'செஞ்ஞாயிறு' என்றவிடத்து ஞாயிறு ஒன்றேயாத லால் இதன்கண்ணுள்ள செம்மை என்னும் அடைமொழி இனங் குறிக்காது வந்ததாம். இங்ஙனம் இனங்குறியாது வருகின்ற அடை மொழி வழக்காற்றின்கண் வாராது செய்யுட்கே வருதல் மரபாம்.

(3) இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் :- உலகத்துப் பொருள்களெல்லாம் இயற்கைப் பொருள், செயற்கைப் பொருள் என இருவகையான் அடங்கும். இயற்கைப் பொருளாகிய ஐம்பெரும் பூதங்களின் இயல்பைச் சொல்லுங்கால் ஆக்கங்கொடுத்துச் சொல லற்க; நிலம் வலிது, நீர் தண்ணிது என இயல்பாகவே சொல்லுக. 'ஆயிற்று' என்னும் ஆக்கச்சொல் கொடுத்து நீர் தண்ணிது ஆயிற்று எனக்கூறின், நீருக்குத்தண்மை (குளிர்ச்சி) உடன் தோன்ருது, பின் தோன்றியது என்னுங்கருத்துப் பெறுதலின், ஆக்கச் சொல் வேண்டா தாயிற்று. செயற்கைப் பொருளாயின் ஆக்கங்கொடுத்துச் சொல்லுக என்பது மரபு. அவ்வாக்கச் சொல்லிற்கு முன்னே காரணங் கொடுத் துச் சொல்லப்படுதலுமுண்டு; காரணம் சொல்லாதிருத்தலு முண்டு.

(4) வண்ணச் சினைச்சொல் :- பண்பைக் குறிக்கின்ற சொல், உறுப்பைக் குறிக்கின்ற சொல் ஆகிய இவ்விரண்டும் அவற்றிற் குரிய முதற் சொல்லொடு சேர்ந்துவரின், அது வண்ணச்சினைச்சொல் எனப் பெயர்பெறும். இம்மூன்றும் சேர்ந்து வருங்கால் வழக்கின்கண் இம்முறையே வருதல் வேண்டும். செய்யுளாயின்மயங்கியும் வரலாம்.

(5) இனைத்தென அறிந்த சினைமுதற்கிளவி :- கேட்போரால் இத்துணையென்று வரையறுக்கப்பட்ட சினைச்சொல்லையும் முதற்சொல் லையும் வினைப்படுத்திச் சொல்லுமிடத்து உம்மை கொடுத்துச்சொல்ல வேண்டுமென்பது மரபு. இது வழுவற்க என்பதாம்.

(6) மன்னுப் பொருள் :- இல்லாத பொருளை இடம், காலம், பொருள் ஆகிய இவற்ருேடியைத்து இன்மை கூறின் உம்மை கொடுத் துச் சொல்லுதல் மரபு. இன்றேல் வழுவாம். இதுவும் வழுவற்க என்ப தாகும்.

(7) இயற்பெயரும் சுட்டுப்பெயரும் :- இயற்பெயரும், சுட்டுப் பெயரும் ஒருங்கு வந்து, இவ்விரு பெயரும் ஒன்று ஒன்றற்கு முடிபா காது, இரண்டும் சேர்ந்து, வேறுவினை கொள்ளுமாயின், இயற்பெயரை முன்னரும். சுட்டுப் பெயரைப் பின்னரும் சொல்லுக என்பது மரபு. இவ்விரு பெயரும் செய்யுட்கண் வருமாயின் சுட்டுப் பெயர் முன்னர்க் கூறவும் படும்.

(8) சுட்டு முதலாகிய காரணக்கிளவி :- சுட்டெழுத்தினை முன் னேயுடையதாய்க் காரணத்தையுணர்த்தி வரும் சொல்லைச் 'சுட்டு முத லாகிய காரணக் கிளவி' யென்பர். இச்சொல்லும் மேலைச் சுட்டுப் பெயர் போலவே, வழக்காயின் தொடர்மொழிப் பொருளுக்குப் பின் னரும், செய்யுளாயின் தொடர்மொழிப் பொருளுக்கு முன்னரும் வரும்.

(9) இயற்பெயரும் சிறப்புப்பெயரும்:- இயற் பெயரும், சிறப்புப்

புப் பெயரும் ஒருங்கு வருவழிச் சிறப்புப் பெயரை முன்னரும், இயற் பெயரைப் பின்னரும் சொல்லுக என்பது மரபு. புலவர், பண்டிதம், வித்துவான் முதலிய சிறப்புப் பெயர்களைப் (பட்டங்களைப்) பெறின் இயற்பெயர்க்கு முன்னே சொல்வதை இன்றும் காண்க. ஆங்கிலப் பட்டங்களாயின் இம்முறை மாறி நிற்கும்.

(10) ஒருபொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி :- ஒரு பொரு ளைக் குறித்துப் பல பெயர்கள் வருமாயின் பெயர்தோறும் வினைமுடிபு கொடுக்காமல், இறுதியில் ஒருவினை முடிபே கொடுத்தல் மரபு. அங்ஙன மின்றிப் பெயர்தோறும் வினைமுடிபு கொடுப்பின், அவையனைத்தும், ஒரு பொருளைக் குறிக்கும் பலபெயர்களாக இல்லாமல், வெவ்வேறு பெயர்களாகக் கருதப்பட்டு விடும். இது வழுவற்க என்பதாம்.

(11) வேறுவினைப் பொதுச்சொல் :- வேறுவேறு வினையை யுடையவாய் நின்ற சொற்களை ஒரு வினையாற் சொல்லாது பொது வினையினாலேயே சொல்லுதல் மரபு. இங்ஙனம் பல்வேறு வினைகளுக் கும் பொதுவாகிய பொருள்களைப் பிரித்து எண்ணிய வழியும் பொது வினை கொடுத்தலே மரபு. இது வழுவற்க என்பதாம்.

(12) இரட்டைக் கிளவி :- இரட்டித்துச் சொல்லப்படும் சொற் கள், அவ்விரட்டித்தலினின்றும் பிரித்துச் சொல்லப்படா. இது வழுவற்க என்பதாம்.

(13) ஒருபெயர்ப் பொதுச்சொல் :- பல பொருட்கும் பொது வாகியதொரு இடத்தையோ அன்றிப் பொருளையோ அப்பொதுமையி னின்றும் நீக்கிச் சிறப்புச் சொல்லாற் கூறின், அது ஒரு பெயர்ப் பொதுச்சொல் எனப்படும். அத்தகைய சிறப்புச்சொல் தலைமை பற் றியோ அன்றிப் பன்மை பற்றியோ அமையும். இந்நெறி இருதிணைக் கும் ஒக்கும். இது வழுவமைதியாம்.

(14) ஒன்றொழி பொதுச்சொல்:- உயர்திணை அஃறிணை ஆகிய இருதிணையின்கண்ணும் ஆண் பெண் இருபாற்கும் உரிய பொதுச் சொற்கள் தத்தம் பாற்பொதுமையினின்றும் நீங்கிச் சிறப்பாக ஒவ் வொரு பாலுக்கே உரியதாய் வருதலும் உண்டு. இதனை அத்தொட ரின்கண் வரும் பெயரோ அல்லது வினையோ குறிப்பாக விளக்கி நிற்கும். இதனையே நன்னூலார் 'ஒன்றொழி பொதுச் சொல்' என்பர். இது வழுமமைதியாம்.

(15) பலபொருளொரு சொல் :- 'வினைவேறுபடூஉம் பலபொரு ளொரு சொல்' என்றும், 'வினைவேறு படாஅப் பலபொருளொரு சொல்' என்றும் பலபொருளொருசொல் இருவகைப்படும். 'மா' என்னுஞ் சொல் வண்டு, மரம், குதிரை என்னும் பலபொருட்கும் உரியதாயிருத் தலின் பலபொருளொருசொல்லாம். இது இன்ன பொருளில் வந்த தென்பதைத் தனித்து நிற்புழி அறிய இயலாது. இதனோ டியைந்த வினையைக் கொண்டோ, இனத்தைக் கொண்டோ, சார்பைக் கொண்டோதான் பொருள் விளங்க இயலும். எனவே இதனை வினை வேறுபடூஉம் பலபொருளொரு சொல் என்பர். இங்ஙனம் வினை, இனம், சார்பு என்ற மூன்றும் கொண்டு பலபொருளொரு சொற்களை இன்ன தென விளங்கிக் கொள்ளலாமேனும், சில வினை கொடுக்குமிடத்து அவையே பொருள் விளங்காமல் போதலு முண்டு. அவற்றை வினை வேறுபடாஅப் பலபொருளொருசொல் என்பர். விளங்க முடியாத பல பொருளொரு சொல்லை எங்ஙனம் விளக்கிச் சொல்லின் விளங்குமோ, அங்ஙனமே விளக்கிச் சொல்லவேண்டும்.' இது வழுவற்க என்பதாம்.

(16) தெரிந்து மொழி கிளவி :- ஒருவன் ஒரு பொருளின் வேறுபாட்டைச் சொல்லுங்கால் அவ்வேறுபாட்டினை இயற்கையாகவே பிறன் உணர்ந்து கொள்ளுவானாயின், அப்பொருள் வேறுபாட்டிற்குக் காரணம் சொல்ல வேண்டுவதில்லை. இயற்கையாக விளங்காதாயின் அவ்வேறுபாட்டிற்குரிய காரணத்தை விளங்கச் சொல்லுதல் வேண்டும். இது வழுவற்க என்பதாம்.

(17) எடுத்த மொழி இனஞ்செப்பல் :- இனமாகிய பலபொருட்கண் ஒன்றை மட்டும் எடுத்துக்கூறின், அச்சொல் தன் பொருளுக்கு இனமாகிய பிற பொருளைக் குறிப்பால் உணர்த்துதலுமுண்டு; அன்றிக் குறிப்பா லுணர்த்தாமையும் உண்டு. இது வழுவமைதியாம்.

## உ. வேற்றுமை யியல்

### 1. வேற்றுமையாவது யாது ?

வேற்றுமையாவது உருபும், அது கொள்ளும் பெயரும், அது கொண்டு முடியும் வினைச்சொல்லும் சேர்ந்ததாகும். பெயர்ப் பொருளை செயப்படுபொருள் முதலாக வேற்றுமை செய்தலின் வேற்றுமை என்பது காரணக்குறியாம்.

### 2. வேற்றுமையின் வகையும் பெயரும் :

வேற்றுமை ஏழென்பர் பிறர். தொல்காப்பியர் விளியையும் கூட்டி எட்டென்பர். அவையாவன : 1. பெயர் 2. ஐ 3. ஒடு 4. கு 5. இன் 6. அது 7. கண் 8. விளி என்பனவாம்.

(i) முதல் வேற்றுமை :

உருபினையும் விளியினையும் ஏற்காது, பிறசொல்லோடு சேராது தனித்து நிற்கும் பெயரே எழுவாய் வேற்றுமையாகும். அது ஒரு பொருளினது உண்மைத் தன்மையைக் குறித்து வரும் சொல்லையும், ஏவலைக் குறிக்கும் சொல்லையும், அதனது தொழிலைக் குறிக்கும் சொல்லையும், வினாவிற்குப் பொருந்திவரும் சொல்லையும், பொருளினைக் குறிக்கும் சொல்லையும், பெயரைக் குறிக்கும் சொல்லையும் பயனிலையாகக் கொண்டு முடியும். பெயர், பயனிலையாய் வரின் அதனைப் 'பெயர்ப்பயனிலை' என்பர்.

பெயரோடு பெயரும், பெயரோடு வினையும் சேர்ந்து ஒருமொழி போல் வருமாயின் அவற்றைத் 'தொகை' என்பர். அவற்றுள் பெயரோடு பெயர் சேர்ந்த தொகைச் சொல்லும் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொண்டு முடியும். பெயர், பயனிலை கொண்டு முடியும் போது அப்பெயர் வெளிப்பட்டும் நிற்கும்; வெளிப்படாதும் நிற்கும். பெயர் வெளிப்படாது நிற்றலைத் 'தோன்றா எழுவாய்' என்பர். பெயர்கள் உருபினை ஏற்குங்கால் அவ்வுருபுகள் பெயரது இறுதியிலேயே வரும். பெயர்களுள் வினையாலணையும் பெயர்கள் நீங்கலாக, ஏனைய காலங்காட்டா.

(ii) இரண்டாம் வேற்றுமை:

இதன் உருபு 'ஐ' ஆகும். அது தெரிநிலைவினை, குறிப்புவினை ஆகிய இரண்டின் காரணமாக வரும் செயப்படுபொருளைப் பொருளாகக் கொண்டு வரும். செயப்படுபொருள் இயற்றப்படுவதும், வேறுபடுக்கப் படுவதும், எய்தப்படுவதும் என மூவகைப்படும். இம்மூன்றற்கும் பொதுவாகவே வாய்பாடுகள் கூறப்பட்டுள்ளன. எனினும் அவற்றை வகைப்படுத்திக் காட்டுவர் சேனாவரையர். (1) இயற்றப்படுதல்- முன் இல்லதனை உண்டாக்குதல். இதற்குரிய வாய்பாடு இழைத்தல்

ஒன்றுமே. (2) வேறுபடுத்தல் - முன்னுள்ளதை வேறுபடுத்தல். இதற்குரிய வாய்பாடுகள் :— ஒப்புதல், இழத்தல், அறுத்தல், குறைத்தல், தொகுத்தல், பிரித்தல், ஆக்கல், சிதைத்தல் என எண் வகைப்படும். (3) எய்தப்படுதல் — இயற்றுதலும் வேறுபடுத்தலுமின்றித் தொழில் பயன்படும் முறையில் நிற்றல். இதற்குரிய வாய்பாடுகள் :— காத்தல், ஒத்தல், ஊர்தல், புகழ்தல், பழித்தல், பெறல், காதல், வெகுளல், செறல், உவத்தல், கற்றல், நிறுத்தல், அளத்தல், எண்ணல், சார்தல் செலல், கன்றல், நோக்கல், அஞ்சல் எனப் பத்தொன்பது வகைப்படும்.

(iii) மூன்றும் வேற்றுமை :

இதன் உருபு 'ஒடு' என்பதாகும். சேனுவரையர் கருத்தின்படி 'ஆன்' என்பதும் இதற்கு உருபாம். இது வினைமுதலும் கருவியுமாகிய இருபொருளை உடையது. வினைமுதலாவது கருவி முதலாகிய காரணங்களைச் செயல்படுத்துவதாகும். கருவியாவது வினைமுதலின் தொழிற் பயனைச் செயப்படு பொருளிலே செலுத்துவதாகும்.

இதனுல் இது இயன்றது என்னும் பொருளிலும், இதனுல் இது தகும் என்னும் பொருளிலும், இதனுல் இது தொழிற்படும் என்னும் பொருளிலும், இதனுல் இது ஆயிற்று என்னும் பொருளிலும் இதனுல் இது கொள்ளப்பட்டது என்னும் பொருளிலும், இதனெடு இது மயங்கிற்று என்னும் பொருளிலும், இதனெடு இது இயைந்த வினையாயிற்று என்னும் பொருளிலும், இதனெடு இது இயைந்து ஒப்பல்லாத ஒப்பாயிற்று என்னும் பொருளிலும், 'இன்' னும் 'ஆனும்' ஏதுவாக வரும் பொருளிலும் இவ்வேற்றுமை வரும்.

(iv) நான்காம் வேற்றுமை :

இதன் உருபு 'கு' என்பதாகும். இது கோடற் பொருளில் வரும். இது, ஒன்றற்கு ஒன்று பயன்படுதல், ஒன்றற்கு ஒரு பொருளை இனிக் கொடுப்பதாக உடன்படுதல், ஒன்றற்கு உரிமையுடையவாய பொதுவாகிய பொருளைக் கூறு இடப்படுதல், ஒன்று ஒன்றுகத் திரிந்து வருதல், ஒன்றற்கு ஒன்று பொருத்தமுடைத்தாதல், ஒரு பொருளினை இனிப்பெறுதல் காரணமாக ஒரு தொழில் நிகழ்தல், ஒன்றற்கு ஒன்று நட்பாதல், ஒன்றற்கு ஒன்று பகையாதல், ஒன்றற்கு ஒன்று காதல் உடைத்தாதல், ஒன்றற்கு ஒன்று சிறத்தல் என்று சொல்லப்பட்ட பொருள்களில் வரும்.

(v) ஐந்தாம் வேற்றுமை :

இதன் உருபு 'இன்' என்பதாகும். இது இப்பொருளை நோக்க இப்பொருள் இத்தன்மைத்தாக இருக்கும் என்னும் பொருளில் வரும். இப்பொருள் 1. நீங்கல் 2. ஒப்பு 3. எல்லை 4. ஏது என நான்கு வகைப்படும். (1) நீங்கற் பொருட்குத் தீர்தல், பற்று விடுதல் என்ற இரண்டு வாய்பாடும் உரியன. (2) ஒப்புப் பொருள் (பொருவு) ஒன்றையொன்று உவமித்தலாகிய உவமப் பொருளிலும், ஒன்றைக் காட்டிலும் ஒன்று உயர்ந்தோ அன்றித் தாழ்ந்தோ வரும் உறழ் பொருளிலும் வரும். (3) எல்லைப் பொருட்கும், மேற்கூறிய ஒப்புப் பொருட்கும் வண்ணம், வடிவு, அளவு, சுவை, தண்மை, வெம்மை, நன்மை, தீமை, சிறுமை, பெருமை, வன்மை, மென்மை, கடுமை, முதுமை, இளமை, சிறத்தல், இழித்தல், புதுமை, பழமை, இன்மை, உடைமை, நாற்றம், பன்மை, சின்மை என்னும் இருபத்து நான்கு வாய்பாடுகளும் உரியன. (4) ஏதுப்பொருள் ஞாபக ஏதுவும், காரக ஏதுவும் என இருவகைப்படும். இவற்றுள் ஞாபக ஏது 'இன்னுன் ஏது' என மூன்

ரும் வேற்றுமையில் கூறப்பட்டது. ஈண்டுக் கூறப்படும் காரக ஏது விற்கு அச்சம், ஆக்கம் என்னும் இரண்டு வாய்பாடும் உரியன.

(vi) ஆறும் வேற்றுமை :

இதன் உருபு 'அது' என்பதாகும். சேனாவரையர் கருத்தின்படி அகரமும் உருபாம். இது தன்னோடு ஒற்றுமையுடைய பொருளாகிய தற்கிழமைப் பொருளிலும், தன்னின் வேறாம் பொருளாகிய பிறிதின் கிழமைப் பொருளிலும் வரும். தற்கிழமை ஒன்று பல குழீஇயது, வேறு பல குழீஇயது, ஒன்றியற் கிழமை, உறுப்பின் கிழமை, மெய்திரிந்தாய கிழமை என ஐந்து வகைப்படும். பிறிதின்கிழமை பொருளின்கிழமை, நிலத்தின் கிழமை, காலத்தின் கிழமை என மூவகைப்படும். இவற்றிற் குரிய வாய்பாடுகள் வருமாறு :—

தற்கிழமை - 5

| | | | |
|---|---|---|---|
| (1) | ஒன்று பல குழீஇயது | — | குழூஉ |
| (2) | வேறு பல குழீஇயது | — | குழூஉ |
| (3) | ஒன்றியற்கிழமை | — | இயற்கை, நிலை |
| (4) | உறுப்பின் கிழமை | — | உறுப்பு |
| (5) | மெய்திரிந்தாய கிழமை | — | செயற்கை, முதுமை, வினை |

பிறிதின் கிழமை - 3

| | | | |
|---|---|---|---|
| (1) | பொருளின் கிழமை | — | உடைமை, முறைமை, கருவி, துணை, கலம், முதல், தெரிந்து மொழிச் செய்தி (செய்யுட் கிழமை) |
| (2) | நிலத்தின் கிழமை | — | கிழமைக் கிழமை, வாழ்ச்சிக் கிழமை |
| (3) | காலத்தின் கிழமை | — | கிழமைக் கிழமை |

(vii) ஏழாம் வேற்றுமை :

இதன் உருபு கண் என்பதாகும். இது தொழில் நிகழ்கின்ற இடம், நிலமாகிய இடம், காலமாகிய இடம் ஆகிய மூவகைப் பொருளிலும் வரும். இவ்விடப் பொருள் பற்றி வரும் பிற சொற்களாவன :- கண், கால், புறம், அகம், உள், உழை, கீழ், மேல், பின், சார், அயல், புடை, தேவகை, முன், இடை, கடை, தலை, வலம், இடம் என்பன.

### 3. வேற்றுமைத் தொகை விரியுங்கால்படும் இயல்பு :

அன்மொழித் தொகை விரியுங்கால் அதன் இறுதிக்கண் சில சொற்கள் விரிதல் போல, வேற்றுமைத் தொகையை விரிக்கின்ற பொழுதும் இடையில் சில சொற்கள் நின்று விரியும்.

## ௬. வேற்றுமை மயங்கியல்

### 1. பெயர்க் காரணம் :

பொருள் மயக்கம், உருபு மயக்கம் என்னும் இருவகை மயக்கமும் இவ்வியலில் உணர்த்துதலின் 'வேற்றுமை மயங்கியல்' எனப் பெயர் பெற்றது. இவ்வியலில் வேறுபிற செய்திகளும் உணர்த்தப்படுமாயி னும் தலைமைபற்றி இப்பெயர் பெற்றது.

### 2. நுவலப்படும் பொருள் :

இவ்வியலில் உணர்த்தப்படுவனவற்றை நான்கு வகையாகப் பிரித்து விளக்குவர் சேனாவரையர். அவையாவன: (1) பொருள் மயக்கம் (2) உருபு மயக்கம் (3) வேற்றுமைக்கோதிய இலக்கணத்தில் பிறழ்ந்து வழீஇ அமைவன (4) பிறவும் இயைபுடையன என்பன. இம் முறைப்படியே இவ்வியலை ஆராய்வோம்.

(அ) பொருள் மயக்கம்:

ஒரு வேற்றுமை தன் பொருளை விடாது பிறிதொரு வேற்றுமைப் பொருளிலும் சென்று இயைந்து பொருள் தருமேல், அது 'பொருள் மயக்கம்' எனப்படும். இதனையே 'தன்பொருளில் திராது பிறிதொன் றன் பொருட்கண் சேறல்' என்பர் சேனாவரையர். இங்ஙனமன்றி ஒரு பொருளில் ஈருருபு சென்று இயையினும் அதுவும் பொருள் மயக்கம் எனப்படும்.

(i) இரண்டாவது பிறபொருளில் மயங்குதல்:

(1) சார்பு:— இது இரண்டாம் வேற்றுமைக்குரியது. இது கருமச் சார்பு, கரும மல்லாச் சார்பு என இருவகைப்படும். ஒன்றனையொன்று உடம்பால் சார்தல் கருமச் சார்பாம். உடம்பால் சார்தலின்றி, மனத் தால் சார்தல் கருமமல்லாச் சார்பாம். தூணைச் சார்ந்தான், அரசரைச் சார்ந்தான் என்பன முறையே அவற்றிற்கு எடுத்துக்காட்டாகும். கருமமல்லாச் சார்பிற்கு இரண்டாம் வேற்றுமை வருதலேயன்றி ஏழாம் வேற்றுமையும் வரும்.

(2) கன்றல் செலவு என்பன:— இரண்டாம் வேற்றுமைக்கு உரிய இவை, அவ்விரண்டாம் வேற்றுமைக்கேயன்றி ஏழாம் வேற்று மைக்கண்ணும் வரும்.

(3) நோக்கப்பொருள்:— இரண்டாம் வேற்றுமைக்குரிய 'நோக் கப் பொருள்' நோக்கிய நோக்கமென்றும், நோக்கல் நோக்கம் என்றும் இருவகைப்படும். கண்ணால் நோக்கும் நோக்கத்தை நோக்கிய நோக் கம்' என்றும் மனத்தால் நோக்கும் நோக்கத்தை 'நோக்கல் நோக்கம்' என்றும் கூறுவர். இந்நோக்கல் நோக்கப் பொருண்மை, இரண்டாம் வேற்றுமையில் வருதலேயன்றி மூன்றாவதற்கும் ஐந்தாவற்கும் உரிய ஏதுப் பொருளிலும் வரும்.

(4) ஓம்படைச் சொல்:— பாதுகாத்தல் என்னும் பொருளையு டைய 'ஓம்படைச்சொல் இரண்டாம் வேற்றுமைக்குரியது. இது இரண் டாம் வேற்றுமைக்கேயன்றி மூன்றும் வேற்றுமைக்கண்ணும் வரும்.

(ii) நான்காவது பிற பொருளில் மயங்குதல்:

(1) கொடையெதிர்கிளவி:— கொடையெதிர்கிளவி என்பது கொடையினை ஏற்றுக்கொள்ளும் சொல் எனப் பொருள்படும். இதில் 'கு'வ் வென்னும் நான்கனுருபு தொக்கு வருமாயின் 'குத்தொக வருஉங் கொடையெதிர் கிளவி' எனப்படும். இக்கிளவிக்கண் நான்கனுருபை விரித்தலேயன்றி ஆறனுருபையும் விரிக்கலாம்.

(2) பிற நான்கனுருபில் மயங்கல்:— இப்பொருளினுடையது இப் பொருள், அதுதான் இததன்மைத்து என வரும் ஆறாவதன் பொருளும், ஒன்றனையொன்று கொள்ளும் இரண்டாவதன் பொருளும், ஒன்றனால் ஒன்று தொழிற்படற்கு ஏற்கும் மூன்றாவதன் பொருளும், முறைப் பொருளைக் கொண்டு நின்ற பெயர்ச் சொல்லினது ஆறாவதன் பொரு ளும், நிலத்தை வரைந்து கூறுவதும், பண்பு பற்றி ஒப்புமைக் கூறப் படுவதுமாகிய ஐந்தாவதன் பொருளும், காலத்தின்கண் அறியப்படும் ஏழாவதன் பொருளும், பற்று விடுதலும் தீர்தலுமாகிய ஐந்தாவதன் பொருளும், அவை போன்ற பிறபொருளும் நான்காவதன் உருபில் வைத்துச் சொல்லப்படும். மேற் கூறப்பட்ட நான்கனுருபேயன்றி, பிற உருபுகளும் பிற பிற உருபுகளோடு மயங்கும்.

(iii) ஆறாவது பிற பொருளில் மயங்குதல்:

ஒரு இடத்தின்கண் ஒரு பொருள் வாழும்பொழுது அவ்விடத்

தோடு அப் பொருளுக்குரிய உரிமையை 'வாழ்ச்சிக்கிழமை' என்பர். இது ஆறும் வேற்றுமைக்கு உரியதாகும். இப்பொருள் ஆறும் வேற்று மைக்கேயன்றி ஏழாம் வேற்றுமைக்கும் வரும்.

(iv) மூன்று, ஐந்து, ஏழு ஆகியன பிற பொருளில் மயங்குதல்:

இம்மூன்று வேற்றுமைகளும் பிற பொருளில் மயங்குதலாக நூலில் ஒன்றும் தனித்துக் கூறப்படவில்லை. 'அன்னபிறவும்' என்ற புற னடை நூற்பாவாலும், இதனது இது இற்றென்னும்' என்ற பொது நூற் பாவாலுமே இவைபற்றி அறியக்கிடக்கின்றது.

(v) ஒரு பொருளில் ஈருருபு மயங்குதல்:

(1 ஏதுப் பொருள்:— இது 'அதன் வினைப்படுதல் அதனினுதல்' (வேற்-கூ) என்னுமிடத்து 'அதனினுதல்' என்பதனுல் மூன்றும் வேற் றுமைக்கும், 'புதுமை பழமை ஆக்கமென்று' (வேற்-கஎ) என்னுமிடத்து 'ஆக்கம்' என்பதனுல் ஐந்தாம் வேற்றுமைக்கும் உரியதென வேற்றுமை யியலில் கூறப்பட்டது. அதனையே மயக்கமாதல் பற்றி ஈண்டும் கூறு கிறுர். ஆக்கத்தோடு கூடிய ஏதுப் பொருளில் மூன்றும் வேற்றுமை யும், ஐந்தாம் வேற்றுமையும் சென்று மயங்கும் என்பதாம்.

(2) அச்சப்பொருள்:— இது 'நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்று' (வேற்-கக) என்னுமிடத்து 'அஞ்சல்' என்பதனுல் இரண் டாம் வேற்றுமைக்கும், 'தண்மை வெம்மை அச்சம் என்று' (வேற்-கஎ) என்னுமிடத்து 'அச்சம்' என்பதனுல் ஐந்தாம் வேற்றுமைக் கும் உரியதென வேற்றுமையியலில் கூறப்பட்டது. அதனையே மயக்க மாதல் பற்றி ஈண்டும் கூறுகிறுர். அச்சப் பொருளில் இரண்டாம் வேற்றுமையும், ஐந்தாம் வேற்றுமையும், சென்று மயங்கும் என்பதாம்.

(3) தடுமாறு தொழிற்பெயர்: முன்னும் பின்னும் பெயர்ச் சொல்லும், இடையில் ஒரு தொழிற் சொல்லும் இருந்து, அத்தொழிற் சொல் முன்னும் பின்னுமுள்ள இரு பெயரொடும் இயைதற்கு ஏற்கு மேல் அது தடுமாறு தொழிற் சொல்லாம். அத்தடுமாறு சொல் லொடு இயைந்த பெயரை 'தடுமாறு தொழிற்பெயர்' என்பர். இத் தொடரில் இரண்டனுருபும் மூன்றனுருபும் சென்று மயங்கும். மெய்யறிபனுவல்:- 'புலிகொல் யானை' என்ற தடுமாறு தொழிற் பெயரை இரண்டனுருபிலோ அன்றி மூன்றனுருபிலோ வைத்து விரித் தாலன்றிப் பொருள் விளங்காது. இந்நிலையில் வினைமுதல் எது? செயப்படுபொருள் எது? எனத் தெரிதற்கு அத்தொடரின் இறுதியில் பிறிதொரு சொல் வரும். இச்சொல்லை 'மெய்யறிபனுவல்' என்பர்.

(4) சினைச்சொல்:— உறுப்பினைக் குறிப்பதாகிய சினைச்சொல் லில் இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் சென்று மயங்கும்.

(5) முதற்சினைக் கிளவி:— முதற்பொருளோடு கூடிய சினைச் சொல்லில், முதற் சொல்லில் 'அது' உருபு வந்தால், சினைச்சொல்லில் 'ஐ' உருபு வரும. அன்றி முதற்சொல்லில் 'ஐ' உருபு வந்தால், சினைச்சொல்லில் 'கண்' உருபு வரும். சிறுபான்மை ஈரிடத்தும் ஐயுருபு வருதலும் உண்டு.

இதுகாறும் கூறிய முதற், சினைப்பொருள்களை இவை முதல், இவை சினையென வரையறுத்தற்கில்லை. ஒரு பொருளே தனது ஏகதேச மாகிய உறுப்பை நோக்கச் சினையாயும், அவ்வுறுப்பே அதனினும் ஏக தேசமாகிய உறுப்பை நோக்க முதலாயும் வருதலின், சொல்லுவான் குறிப்பினுலேயே முதற், சினைப் பொருள்கள் வரையறுக்கப்படும்

என்பதாம்.

(6) பிண்டப் பெயர்:— பல பொருள்கள் சேர்ந்த தொகுதியைப் பிண்டமென்பர். இப்பெயரும் முதற்சினைப் பொருளுக்குரிய வேற்றுமை யிலக்கணத்தில் பிழையாது வரும். எனவே பிண்டப் பெயருக்கு 'ஆறுவது'வரின், பிண்டித்தபொருட்கு 'இரண்டாவது' வரும். பிண்டப் பொருட்கு 'இரண்டாவது' வரின் பிண்டித்த பொருளின்கண் 'ஏழாவது' வரும். இங்ஙனமன்றிச் சிறுபான்மை ஈரிடத்தும் 'இரண்டாவது' வருதலும் உண்டு.

இதுகாறும் தன் பொருளில் திராது பிறிதொன்றன் பொருட்கண் சேறலும், ஒரு பொருளில் ஈருருபு சென்று சேறலும் ஆகிய பொருள் மயக்கம் கூறப்பட்டது.

(7) ஒருவினை ஒடுச்சொல்:— ஒன்றனொடு ஒன்றியைந்து தொழிற்படுதற்கண் வரும் உருபு 'ஒடு' உருபாம். அது உயர்ந்த பொருளை உணர்த்தும் பெயரினிடமாகவே தோன்றும்.

இக்கருத்து பொருள் மயக்கம் அதிகாரப்பட்ட இவ்விடத்துக் கூறுதற்கு யாதொரு இயைபுமின்று. சேனாவரையரும் இன்ன பொருட்கண் இன்ன வேற்றுமை இன்னவாறாகும் என்னும் சிறப்பிலக்கணம் வேற்றுமையியலில் கூறுதற்கு இயைபில்லையாதலின், மூன்றும் வேற்றுமைக்குரிய சிறப்பிலக்கணமாகிய இதனை ஈண்டுக் கூறினர் என்பர். அவர் கருத்தின்படியும் இந்நூற்பாவின் கருத்துச் சிறப்பிலக்கணமாகுமேயன்றி மயக்கமாதற்கு ஏலாமை அறிக.

புறனடை:- இதுகாறும் கூறப்பட்ட பொருள் மயக்கமேயன்றி வேறு பிற வருமாயினும், அவ்வவற்றின் உண்மைநிலையை ஓர்ந்து ஏற்றுக்கொள்க என்பதாம்.

(ஆ) உருபு மயக்கம்:-

ஒரு உருபு நிற்கவேண்டிய இடத்தில் பிறிதோர் உருபு இயைபின்றி நிற்குமாயின் அது உருபு மயக்கமாம். இதனையே 'தன்பொருளில் தீர்ந்து பிறிதொன்றன் பொருட்கண்சேறல்'என்பர் சேனாவரையர். ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமை உருபால் கூறப்பட்டதாயினும், அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்ற வழியே பொருள் செல்லாது, பொருள் சென்ற வழியே உருபு செல்லும்.

ஆறும் வேற்றுமையது உருபு அஃறிணைக்கே உரியதாம். அதனை உயர்திணையிடத்து விரிக்கநேரின் நான்கனுருபிலேயே விரிக்கவேண்டும். இதனைப் 'பொருள் மயக்கம்' என்பர் சேனாவரையர். எனினும் இது 'உருபு மயக்கமே'யாகும்.

(இ) வேற்றுமைக்கு ஓதிய இலக்கணத்தில் பிறழ்ந்து வழீஇ அமைவன:

(1) உருபு தொடர்ந்தடுக்கல்: பல உருபும் தம்முள் தொடர்ந்து அடுக்கி ஒரு சொல்லால் முடியினும் அப்பொருள் வேறுபடாதிருக்குமாயின் அங்ஙனம் முடிதலில் இழுக்கில்லை. ஒவ்வொரு உருபும் தனித்தனி முடிக்குஞ் சொல்லால் முற்றுப் பெறுவதே முறை. அங்ஙனமன்றி உருபுகள் பல தொடர்ந்து ஒரு முடிக்குஞ் சொல்லால் முற்றுப் பெறுதல வழுவாயினும் வழுவமைதியாகக் கொள்க.

(2) உருபுகள் விரிந்து நிற்கும் இடம்:- ஆறு உருபுகளும் அவ்வத் தொடர்க்கண் இறுதியிலும், இடையிலும் விரிந்து நிற்கும். அவை விரிந்து நிற்றலேயன்றி அவ்வத் தொடர் இடையில் மறைந்தும் வரும். இறுதியில் மறைந்து வருங்கால் ஐயுங் கண்ணுமே மறைந்துவரும். ஆறும் வேற்றுமை உருபு தன்னையொழிந்த பிற உருபுகளை ஏற்று

வரும். சிறுபான்மை தன்னையும் ஏற்றுவரும். உருபுகள் விரிந்து நின்று தம் பொருள் உணர்த்துவதும், பெயர் உருபேற்பதுமே முறை. அங்ஙன மன்றி உருபுகள் மறைந்து நின்று தம் பொருள் உணர்த்துவதும்; ஓர் உருபு பிற உருபுகளை ஏற்பதும் வழுவே. ஆயினும் இவற்றை வழு வமைதியாகக் கொள்க.

(3) உருபுகள் உடன் பாட்டுச் சொல்லில் வரும்பொழுதே தத்தம் பொருள்களைத் திரிபின்றி இனிது விளக்கும். ஆனால் எதிர்மறைச் சொல்லில் வரும்பொழுது தம் பொருளை இனிது விளக்கா. ஆயினும் அவற்றை பொருள்நிலை திரியா என ஏற்றுக்கொள்க.

(4) உருபுகள் செய்யுட்கண் திரியுமாறு :- உயர்திணை, அஃறிணை, ஆகிய இருபெயர்க்கண்ணும் 'ஆன்' என்னும் உருபு 'அகர'மாகத் திரிந்து வரும். 'குவ்'வும், 'ஐயும்' ஆகிய உருபுகள் உயர்திணைக்கண் மட்டுமே 'அகர'மாகத் திரிந்துவரும். உருபுகள் திரியாமலேயே தம் பொருள் உணர்த்தற்பாலன. அங்ஙனமன்றிச் செய்யுட்கண் திரிந்து வரினும் வழுவமைதியாகக் கொள்க.

(ஈ) பிறவும் இயைபுடையன :

(1) வேற்றுமைப் பொருள்கள் தோன்றுதற்கு இடம் :— வினை, செய்வது, செயப்படுபொருள், நிலம், காலம், கருவி, இன்னதற்கு, இதுபயன் என்னும் எட்டினையும் நிலைக்களனாகக்கொண்டே எத் தொழில்களும் பிறக்கும். இவை காரியத்திற்கு முன்னிற்றலின் 'தொழில் முதனிலை' எனப்படும். காரியம் பிறத்தற்குக் காரணமாய இவ்வெட்டனுள், செயப்படுபொருளும், ஏற்பதும், பயனும் ஆகிய மூன்றும் குன்றினும் இழுக்கில்லை. இவ்வெட்டும் காரணமாகப் பிறக் கும் வினைச்சொற்களை இடனாகக் கொண்டே வேற்றுமையுருபுகள் தோன்றும்.

(2) ஆகுபெயர் :— ஆகுபெயராவது யாதானுமொரு இயைபு பற்றி ஒன்றன்பெயர் ஒன்றற்கு ஆகிவருவதாம். அது, முதற்பொரு ளின் பெயர் சினைப்பெயர்க்காகும் முதலாகு பெயரும், சினைப்பொரு ளின் பெயர் முதற்பொருளுக்காகும் சினையாகு பெயரும், ஓரிடத்தின் பெயர் அவ்விடத்தில் பிறந்த பொருளுக்காகும் இடவாகு பெயரும், பண்பின் பெயர் அப்பண்புடையதற்காகும் பண்பாகு பெயரும், ஒன் றற்கு முதற்காரணமான பெயர் அக்காரணத்தாலியன்ற காரியத்தைக் குறிக்கும் காரணவாகுபெயரும், இருபெயரொட்டு ஆகுபெயரும், செய்தான்பெயர் அவனால் செய்யப்பட்ட பொருள்மேல் வரும் கருத் தாவாகுபெயரும், நிறுத்து எடையிடும் எண்ணின் பெயர் அந்நிறுக்கப் பட்ட பொருள்மேல் வரும் எண்ணலளவை ஆகுபெயரும் எனப் பல வகைப்படும். அவ்வாகுபெயர், தம் பொருளின் வேறல்லாத பொரு ளில் இயைந்துநின்று ஆகுபெயராதலும், தம் பொருளின் வேறான பிற பொருளில் இயைந்து நின்று ஆகுபெயராதலும் உண்டு. சினையாகு பெயர், முதலாகு பெயர் போல்வன முன்னையதைச் சாரும். இடவாகு பெயர்போல்வன பின்னையதைச் சாரும். மேற்கூறப்பட்ட ஆகுபெயர் களே யன்றிப் பிறவாறு ஆகுபெயர்கள் வரினும் ஏற்றுக்கொள்க.

## ச. விளிமரபு

### 1. விளிவேற்றுமை :

பெயரது விகாரமே விளியாதலின், இவ்வேற்றுமை ஏனை

வேற்றுமை போல அத்துணைச் சிறப்புடைத்தன்று. இச்சிறப்பின்மை கருதியே ஆசிரியர் முதற்கண் எழுவகை வேற்றுமையும், அவற்றது மயக்கமும் உணர்த்தி, இதனை இறுதிக்கண் வைப்பாராயினர். ஒன்றன் பெயரை விளித்தற்கண் இவ்வேற்றுமை தோன்றுதலின், இது 'விளி வேற்றுமை'யாயிற்று. படர்க்கைப் பெயரைத் தனக்கு முன்னிலைப் பெயராக ஆக்குவதே இதன் பயனும். இதனையே 'எதிர்முக வேற்றுமை' என அகத்தியனாரும். 'படர்க்கையோரைத் தன்முகமாகத் தானழைப் பதுவே' என நன்னூலாரும் விளக்குவர்.

## 2. நுவலப்படும் பொருள் :

விளிவேற்றுமை என்பது தன்னையேற்கும் பெயரினிடமாகவிளங்கத் தோன்றும் இயல்பினது. அது இயல்பாகியும், ஈறு திரிந்தும், ஈற்றயல் நீண்டும், பிறிது வந்தடைந்தும் விளியேற்கும். அங்ஙனம் விளியேற்கும் பெயர்கள் இவை, விளியேலாப் பெயர்கள் இவை என இவ்வியலில் எடுத்துச் சொல்லப்படும்.

## 3. விளியேற்கும் பெயர்கள் :

விளியேற்கும் பெயர்களை உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர், விரவுப் பெயர் என மூன்று திணையிலும் பாகுபடுத்திக் கூறுவர் இளம்பூரணர். உயர்திணைப்பெயர், உயர்திணை விரவுப்பெயர், அஃறிணைப் பெயர், அஃறிணை விரவுப்பெயர் என நான்காகப் பாகு படுத்திக் கூறுவர் சேனாவரையர். விரவுப்பெயர் ஒரே சமயத்தில் இரு திணைக்கும் வருமாறில்லை. விரவுப் பெயர் உயர்திணையாய் இசைக்கும் பொழுது 'உயர்திணை விரவுப் பெயர்' என்றும், அஃறிணையாய் இசைக் கும் பொழுது 'அஃறிணைப் விரவுப் பெயர்' என்றும் வழங்கப்படும் என்பது அவர் கருத்து. தொல்காப்பியனார் 'அஃறிணை விரவுப் பெயர்' என எடுத்து விதந்தாற்போல, 'உயர்திணை விரவுப்பெயர்' எனத் தனியே எடுத்து விதவாராயினும், உயர்திணை விரவுப்பெயரென ஒன் றுண்டு என்றும், அதனை உயர்திணை அதிகாரத்து அடக்கிக்கூறும் கருத் தினரென்றும் அவர் கருதுவர்

(1) உயர்திணைப் பெயர்கள் விளியேற்குமாறு:

உயர்திணைப்பெயரில் இ, உ, ஐ ஒ என்னும் நான்கு உயிரீறுகளும், ன, ர, ல, ள என்னும் நான்கு புள்ளியீறுகளும் விளி ஏற்பனவாம்.

(1) உயிரீறுகள் விளியேற்குமாறு :- 'இகர' ஈற்றுப் பெயர் 'ஈகார' மாயும், 'ஐகார' ஈற்றுப் பெயர் 'ஆய்' ஆயும் திரிந்து விளியேற்கும். 'ஒகார' ஈற்றுப் பெயர் 'ஏகார' ஈறாயும், 'உகர' ஈற்றுப் பெயர் 'ஏகார' மாயும் விளியேற்கும். ஈண்டுக் கூறப்பட்ட உகரம் குற்றியலுகரமாகும். சிறுபான்மை முற்றியலுகரமும் விளியேற்கும். தன் அளவின் மிக்கு ஒலிக்கும் இகர ஈற்று அளபெடைப் பெயர் 'இ ஈயாகும்' என்னும் விதிப்படி ஈயாகாது, இயல்பாய் விளியேற்கும் . இ, உ, ஐ, ஒ என்னும் நான்கு ஈற்றுச் சொற்களும் அண்மைக்கண் விளியேற்கும்போது இயல் பாய் விளியேற்கும்.

(2) புள்ளியீறுகள் விளியேற்குமாறு :- ன, ர, ல, ள, என்னும் நான்கு ஈற்றுப் புள்ளியீறுகளும் விளியேற்கும். அவற்றுள் 'அன்' ஈறு 'ஆ'வாய் விளி ஏற்கும். இவ் அன்னீறு அண்மை விளியாக வருகிற போது அகரமாகும். 'ஆன்' ஈற்றுப் பெயரும் இயல்பாய் விளியேற் கும். வினைச்சொல்லில் வரும் ஆன் ஈறும், பண்புப் பெயரில் வரும் ஆன் ஈறும் 'ஆயாய்' விளியேற்கும். தன் அளவில் மிக்கு ஒலிக்கும் ஆன்

ஈற்று அளபெடைப் பெயர் இயல்பாய் விளியேற்கும். 'அர், ஆர்' என்னும் இரண்டீற்றுப் பெயரும் 'ஈர்' ஆகத் திரிந்து விளியேற்கும். வினையாலணையும் பெயரிலும், பண்புப் பெயரிலும் வரும் அர், ஆர் என்னும் இரண்டீறுகளும் 'ஈர்' என்பதனோடு ஏகாரம் பெற்று விளியேற்கும். தன் அளவில் மிக்கு ஒலிக்கும் ரகார ஈற்று அளபெடைப் பெயர் இயல்பாய் விளியேற்கும். 'லகர ளகார' ஈற்றுப் பெயர்கள் ஈற்றயல் நீண்டு விளியேற்கும் அவ்வீறுகளின் அயலெழுத்து நெட்டெழுத்தாயின் இயல்பாய் விளியேற்கும். வினையாலணையும் பெயர்க்கண்ணும் பண்புப் பெயர்க்கண்ணும் வரும் 'ஆள்' ஈற்றுப் பெயர் இயல்பாகாது 'ஆயாய்' விளி ஏற்கும். தன்அளவில் மிக்கு ஒலிக்கும் லகர ளகார ஈற்று அளபெடைப் பெயர் இயல்பாய் விளியேற்கும்.

(ii) உயர்திணை விரவுப் பெயர்கள் விளியேற்குமாறு:

ஐகார ஈற்று உயர்திணை விரவுப்பெயர் 'ஆய்' என்றும், 'ஆ' வென்றும் திரிந்து விளியேற்கும். 'னகர ளகார' ஈற்று முறைப் பெயர்கள் 'ஏகாரம்' பெற்று விளியேற்கும்.

(iii) அஃறிணைப் பெயர்கள் விளியேற்குமாறு:

புள்ளியீறும் உயிரீறுமாக உள்ள அஃறிணைப் பெயர்களெல்லாம் விளிகொள்ளும் காலம் தோன்றின் ஏகாரம் பெற்று விளியேற்கும்.

(iv) அஃறிணை விரவுப் பெயர்கள் விளியேற்குமாறு:

அஃறிணை விரவுப் பெயரில் இ, உ, ஐ, ஒ என்னும் நான்கு உயிரீறும் ன, ர, ல, ள என்னும் நான்கு புள்ளியீறும் விளியேற்பனவாம். இவ்வெட்டு ஈறுகளையும் உடைய உயர்திணைப் பெயர்கள் எவ்வாறு விளியேற்றனவோ, அவ்வாறே இவையும் விளி ஏற்கும்.

## 4. விளியேலாப் பெயர்கள்:

(i) உயர்திணைப் பெயர்களில் இ, உ, ஐ, ஒ என்னும் நான்கு உயிரீறுகளும், ன, ர, ல, ள என்னும் நான்கு புள்ளியீறுகளும் தவிர ஏனைய விளியேலா. னகர ஈற்றுள் அவன், இவன், உவன், யான், யாவன் என்பன விளியேலா. ரகர ஈற்றுள் அவர், இவர், உவர் என்பன விளியேலா. ளகர ஈற்றுள் அவள், இவள், உவள், யாவள் என்பன விளியேலா. த, ந, நு, எ என்பனவற்றை முதலாகவும், ன, ர, ள என்பனவற்றை இறுதியாகவும் உடைய தமன், தமர், தமள்; நமன், நமர், நமள்; நுமன், நுமர், நுமள்; எமன், எமர், எமள்; தம்மான், தம்மார், தம்மாள்; நம்மான், நம்மார், நம்மாள்; நும்மான், நும்மார், நும்மாள்; எம்மான், எம்மார், எம்மாள் என்பன போன்ற பெயர்களும், மற்றையான், மற்றையாள்; பிறன், பிறர், பிறள் என்ற பெயர்களும் விளியேலா.

(ii) உயர்திணை விரவுப் பெயர்களில் தான் நீயிர் என்பன விளியேலா.

(iii) அஃறிணைப் பெயர்களில் விளியேலாதன இவையென வரையறுக்கப்படவில்லை. எனினும் அது, இது, உது; அஃது, இஃது, உஃது; அவை, இவை, உவை; அவ், இவ், உவ்; யாது, யா, யாவை என்பன போல்வன விளியேலா.

(iv) அஃறிணை விரவுப் பெயர்களில் இ, உ, ஐ, ஒ என்னும் நான்கு உயிரீறுகளும், ன, ர, ல, ள என்னும் நான்கு புள்ளியீறுகளும் தவிர ஏனைய விளியேலா.

5. புறனடை:

'அம்ம' என்னும் அசைச்சொல் விளிகொள்ளும் பெயரோடு தோன்றாது. இடைச்சொற்களோடு தோன்றினும் 'அம்மசாத்தா' என வருதலின் அதனையும் விளியெனவே கொள்வர். உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் விளி ஏற்பனவாகக் கூறப்பட்ட எல்லாப் பெயர்களும் சேய்மைக்கண் விளிக்குங்கால் அளபிறந்தும், அண்மைக்கண் விளிக்குங்கால் இயல்பாயும் விளியேற்கும்.

## ரு. பெயரியல்

1. முறைவைப்பு:

அல்வழி யிலக்கணத்தைக் கிளவியாக்கத்தும், வேற்றுமை யிலக்கணத்தை அதனையடுத்த மூன்று இயல்களிலும் கூறிய ஆசிரியர், இனி அவ்விரு தொடர்மொழிகளுக்கும் உறுப்பாகிய பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கு சொற்களின் இலக்கணத்தை முறையே கூறத் தொடங்கி, அவற்றுள் முதற்கண்ணதாகிய பெயரிலக்கணத்தை இவ் வியலில் கூறத்தொடங்குகின்றார்.

2. நால்வகைச் சொற்களின் பொது இலக்கணம்:

எல்லாச் சொற்களும் பொருள் குறித்தே வரும். அச்சொற்கள் தம்மையும் உணர்த்தும்; பொருளையும் உணர்த்தும். அங்ஙனம் பொருள் உணர்த்துங்கால் வெளிப்படையாகவும் உணர்த்தும்; குறிப்பாகவும் உணர்த்தும். இவ்விலக்கணங்களையுடைய சொற்கள் நான்கு வகைப்படும். அவை பெயர், வினை, இடை, உரி என்பன.

3. பெயர்ச் சொற்களின் வகையும், அவைபாலுணர்த்துமாறும்:

உயர்திணைப் பெயர், அஃறிணைப் பெயர், விரவுப் பெயர் எனப் பெயர் மூன்று வகைப்படும். 'னஃகான் ஒற்றே ஆடூஉ வறிசொல்' என வினைச்சொல்லின் ஈறுகள் இன்னின்னவை இன்ன பாலுணர்த்தும் என வரையறுத்தாற்போல, பெயர்ச் சொற்களின் ஈறுகளைக்கொண்டு இன்னின்னவை இன்னபாலுணர்த்தும் என வரையறுத்து உணர்த்தற் கியலாது.

(அ) உயர்திணைப் பெயர்கள்:

அவன், இவன், உவன் என்ற ஆண்பாற் பெயர்களும்; அவள், இவள், உவள் என்ற பெண்பாற் பெயர்களும்; அவர், இவர், உவர் என்ற பலர்பாற் பெயர்களும்; யான், யாம், நாம், யாவன், யாவள், யாவர் எனவரும் பெயர்களும் உயர்திணையில் இன்னபால் என விளங்க நிற்பனவாம். இவை வழக்கின்கண் பயின்றுவருதலான் முற்கூறப் பட்டன. ஆண்மகன், பெண்மகள், பெண்டாட்டி, நம்பி, நங்கை, மகன், மகள், ஆடூஉ, மகடூஉ, மாந்தர், மக்கள்; அவ்வாளன், இவ் வாளன், உவ்வாளன்; அம்மாட்டான், இம்மாட்டான், உம்மாட்டான்; அவ்வாட்டி, இவ்வாட்டி, உவ்வாட்டி; பொன்னன்னான், பொன்னன்னாள் என்ற பெயர்களும் உயர்திணையில் இன்னபால் என விளங்க நிற்பனவாம். எனினும் இவை முற்கூறப்பட்டன போல் வழக்கில் பயின்றுவாராமையின் அடுத்துக் கூறப்பட்டன. எல்லாரும், எல்லீரும், பெண்மகன் என்ற மூன்றும் மேற்கூறப்பட்டன போல பாலறிவந்த உயர்திணைப் பெயர்களாகும். இம்மூன்றனுள் முன்னைய இரண்டும் உம்மையடுத்து வருதலானும் பின்னையது 'பெண் மகள்' என்னும் பொருளுடைய பெண்பாற்சொல், 'பெண்மகன்' எனத்திரிந்து வருத

னானும் இவற்றை வேறு கூறினர். அருவாளன், சோழியன் போன்ற நிலப்பெயரும்; மலையமான், சேரமான் போன்ற குடிப்பெயரும்; அவையத்தார், அத்திகோசத்தார் போன்ற குழுவின் பெயரும்; வருவார், செல்வார் போன்ற வினைப்பெயரும்; அம்பர்கிழான், பேரூர் கிழான் போன்ற உடைமைப் பெயரும்; கரியான், செய்யான் போன்ற பண்புகொள் பெயரும்; தந்தையர், தாயர் போன்ற பல்லோர் குறித்த முறைநிலைப் பெயரும்; பெருங்காலர், பெருந்தோளர், போன்ற பல்லோர் குறித்த சினைநிலைப் பெயரும்; பட்டிபுத்திரர், கங்கைமாத்திரர் போன்ற கூடிவரு வழக்கின் ஆடியற் பெயரும்; ஒருவர், இருவர், முப்பத்து மூவர் என்னும் எண்ணியற் பெயரும் உயர்திணைப் பெயர்களாம். இப்பெயர்கள் அனைத்தும் காரணம் பற்றி வருதலின் முன்னையவற்றினின்றும் வேறுபடுத்தி இறுதியில் வைத்தார்.

புறனடை :- மேற் சொல்லப்பட்டனவேயன்றி ஏனாதி, காவிதி, எட்டி, வாயிலான், பூயிலான், வண்ணத்தான், சுண்ணத்தான், பிறன், பிறள், பிறர், மற்றையான், மற்றையாள், மற்றையார் என்பன போன்று வரும் பெயர்களும் உயர்திணைப் பெயர்களாம்.

(ஆ) அஃறிணைப் பெயர்கள் :

அது, இது, உது எனவரும் பெயர்களும்; அஃது, இஃது, உஃது என வரும் பெயர்களும்; அவை, இவை, உவை எனவரும் பெயர்களும்; அவ், இவ், உவ் எனவரும் பெயர்களும்; யாது, யா, யாவை எனவரும் வினாவின் பெயர்களும் அஃறிணையில் இன்னபால் என விளங்க நிற்பனவாம். இவை வழக்கின்கண் பயின்று வருதலான் முற்கூறப் பட்டன. பல்ல, பல, சில என்னும் பெயர்களும்; உள்ள, இல்ல என்னும் பெயர்களும்; வருவது, செல்வது போன்ற வினைப் பெயர்களும்; கரியது, செய்யது போன்ற பண்புகொள் பெயர்களும்; ஒன்று, பத்து, நூறு போன்ற இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப்பெயர் களும், பொன்னன்னது, பொன்னன்னவை என்பன போன்ற ஒப்பினாகிய பெயர்களும் அஃறிணையில் இன்னபால் என விளங்க நிற்பனவாம். இவை மேற்கூறப்பட்டனபோல வழக்கின்கண் பயின்று வாராமையின் அடுத்துக் கூறப்பட்டன. ஆ, நாய் போன்ற பெயர்கள் ஆக்கள், நாய்கள் எனக் 'கள்' விகுதி பெற்ற வழி, இவை பன்மை என நன்கு விளங்கும். இவையே 'கள்' விகுதி பெருது ஆ, நாய் எனவரின் அவை ஒருமை, பன்மை ஆகிய இருபாற்கும் உரியதாகலின் அவற்றைப் பின் வரும் வினைகளைக் கொண்டே நன்கறியலாம். பால்பகா அஃறிணைப் பெயர் எனக் கூறப்படுவன இவையே.

புறனடை : மேற்கூறிய அஃறிணைப் பெயர்களேயன்றிப் பிறிது, பிற, மற்றையது, மற்றையன; பல்லவை, சில்லவை; உள்ளது, இல்லது; உள்ளன இல்லன என்பன போல்வனவும் அஃறிணைப் பெயர்களேயாகும்.

(இ) விரவுப்பெயர்கள் :

உயர்திணைக்கும் அஃறிணைக்கும் பொதுவாகிய பெயர்களை விரவுப் பெயர் என்பர். இத்தகைய பெயர்களை, வினைகளைக்கொண்டு திணை அறிய இயலுமேயன்றி வினையில்வழி அவற்றை இன்னதிணையென அறிய இயலாதாம். நிகழ்காலம் பற்றி வருவதும், பல்லோர் படர்க்கை யொழிந்த நான்கு பால்களில் வருவதுமான 'செய்யு' மென்னும் முற்றுச் சொல்லைக்கொண்டு அவ்விரவுப்பெயர்கள் உயர் திணை ஒருமைப் பாற்குரியதென்பதை அறியலாம்.

அவற்றின் பாகுபாடு :- இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற் பெயர், முறைப்பெயர் ஆகியனவும், தாம், தான், எல்லாம், நீயிர், நீ என்பனவும் விரவுப்பெயர்களாம். இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயர் ஆகிய மூன்றும் நந்நான்கு வகையாகவும், முறைப் பெயர் இரண்டு வகையாகவும் பிரித்துக்கூறப்படும். ஏனைய ஐந்து பெயர்களுக்கும் தனித்தனி எடுத்து இலக்கணம் கூறப்படும்.

(1) இயற்பெயர் :- காரணம் கருதாது சாத்தன், கொற்றன் என ஒருவர்க்கு இயல்பாக இட்டு வழங்கும் பெயரே இயற்பெய ராகும். இது பெண்மை இயற்பெயர், ஆண்மை இயற்பெயர், பன்மை இயற்பெயர், ஒருமை இயற்பெயர் என நான்கு வகைப்படும்.

(2) சினைப்பெயர் :- உறுப்பினைக் குறிக்கும் பெயர் சினைப் பெயராகும். அது பெண்மைச் சினைப்பெயர், ஆண்மைச் சினைப்பெயர், பன்மைச் சினைப்பெயர், ஒருமைச் சினைப்பெயர் எனநான்கு வகைப் படும்.

(3) சினைமுதற்பெயர் :- உறுப்போடு கூடிய முதற்பெயரைச் சினைமுதற்பெயர் என்பர். அது பெண்மை சுட்டிய சினைமுதற் பெயர், ஆண்மை சுட்டிய சினைமுதற்பெயர், பன்மை சுட்டிய சினை முதற்பெயர், ஒருமை சுட்டிய சினைமுதற்பெயர் என நான்கு வகைப் படும்.

(4) முறைப்பெயர் :- ஒருவரோடு ஒருவர்க்குப் பிறப்பினால் உளதாகும் முறைமைபற்றி வரும்பெயர் முறைப் பெயராகும். அது ஆண்மை முறைப்பெயர், பெண்மை முறைப்பெயர் என இரு வகைப்படும்.

(i) பெண்மை சுட்டியபெயர் :- இது உயர்திணை, அஃறிணை ஆகிய இரு திணையிலும் வரும் பெண்மையை உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது. பெண்மை சுட்டிவரும் பெண்மை இயற்பெயர், பெண்மைச் சினைப்பெயர், பெண்மைச் சினைமுதற்பெயர், பெண்மை முறைப் பெயர் ஆகிய நான்கும் உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணையிலும் வரும் பெண்பாற்கு உரியவாம்.

(ii) ஆண்மை சுட்டியபெயர் :- இது உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணையிலும்வரும் ஆண்மையை உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது. ஆண்மை இயற்பெயர், ஆண்மைச்சினைப்பெயர், ஆண்மைச் சினைமுதற்பெயர், ஆண்மைமுறைப்பெயர் ஆகிய நான்கும் உயர்திணை, அஃறிணையாகிய இருதிணையிலும்வரும் ஆண்பாற்கு உரியவாம்.

(iii) பன்மை சுட்டியபெயர் :- இது உயர்திணை, அஃறிணையாகிய இருதிணையிலும் வரும் பன்மையை உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது. எனவே பன்மை இயற்பெயர், பன்மைச்சினைப்பெயர், பன்மைச்சினைமுதற்பெயர் ஆகிய மூன்றும் உயர்திணை, அஃறிணை யாகிய இருதிணையிலும் வரும் பன்மையைக்குறிக்கும். ஆனால் தொல்காப்பியர் பன்மை சுட்டியபெயர் அஃறிணையொருமை, பன்மை; உயர்திணை ஆண் ஒருமை, பெண் ஒருமை ஆகிய நான்குபால்களையும் குறிக்கும் என்பர்.

(iv) ஒருமை சுட்டிய பெயர் :— இது உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணையிலும் வரும் ஒருமையை உணர்த்துதலின் இப்பெயர் பெற்றது. ஒருமை சுட்டிவரும் ஒருமை இயற்பெயர், ஒருமைச் சினைப் பெயர், ஒருமைச் சினை முதற்பெயர் ஆகிய மூன்றும் உயர்திணை, அஃறிணை ஆகிய இருதிணையிலும் வரும் ஒருமைக்கு உரியவாய் வரும்.

(5) தாம் :- இது இரு திணையிலும் வரும் பன்மையை உணர்த்தும்.

(6) தான்:- இது இருதிணையிலும் வரும் ஒருமையைக்குறிக்கும்

(7) எல்லாம் :- இது இருதிணையிலும் வரும் பன்மையை உணர்த்தும். அது உயர்திணைக்கு வருகின்றபொழுது தன்மைப்பன்மைக்கல்லது, முன்னிலைப் பன்மைக்கும், படர்க்கைப் பன்மைக்கும் வாராது.

(8) நீயிர் (9) நீ :— இவற்றுள் நீ என்பது ஒருமையையும், நீயிர் என்பது பன்மையையும் குறிக்கும். இவற்றை இருதிணை ஐம்பாலுள் இன்ன பால் என அறிய வேண்டின் சொல்லுவான் கருத்தினையொட்டியே யறிதல் வேண்டும்.

### 4. ஒழிபு :

ஒருசார் உயர்திணைப் பெயர்க்கும், விரவுப் பெயர்க்கும் எஞ்சி நின்ற இலக்கணம் கூறுகின்றமையால் ஒழிபு எனப்பட்டது. ஒருவர் என்பது உயர்திணை இருபாலுக்கும் உரியதாய்ப் பலர் பாற்சொல்லொடு முடியும் இயல்புடையது.

பெண்மகன் என்னும் னகர ஈற்றுப் பெண்பாற்சொல், வினை கொள்ளுமிடத்து பெண்பாற்குரியவினையையே கொள்ளும். செய்யுளுள் ன், ள், ர், ய் என்பனவற்றை ஈறுக உடைய பெயர்களின் ஈற்றயலெழுத்திலுள்ள ஆகாரம், ஓகாரமாதலும் உடைத்து. வினையின் பாலும் இந்நிலை ஒக்கும்.

கடுவன், முதுமகன், குமரி என்பன போன்ற அஃறிணைச் சொற்கள் உயர்திணைக்குரிய ஈற்றவாய்க் காணப்படினும் செய்யுளில் கருப்பொருளைக் குறிக்குமிடத்து இவை அஃறிணையின் மேற்றேயாம். இவை ஈற்றான் உயர்திணை போன்றிருப்பினும், பொருளால் அஃறிணையைக் குறித்தலின் விரவுப் பெயராயின. காளை, விடலை போன்ற பெயர்கள் ஆகுபெயராய் உயர்திணையை உணர்த்துதலும் உண்டு. இவை சொல்லால் அஃறிணை போன்றிருப்பினும், ஆகுபெயராய வழிப்பொருளால் உயர்திணையையுணர்த்துதலின் விரவுப்பெயராயின

## ௲. வினையியல்

### 1. வினைச்சொல்லினது இலக்கணமும் அதனது பாகுபாடும் :

வினைச்சொல் வேற்றுமையுருபினை ஏலாது இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய மூன்று காலத்தையும் பொருந்திவரும். இது தெரிநிலைவினை, குறிப்பு வினையென இருவகைப்படும். காலத்தை வெளிப்படையாகக் காட்டுவது தெரிநிலை வினையாம்; அதனைக் குறிப்பாகக் காட்டுவது குறிப்பு வினையாம். அவ்வினைச்சொல் உயர்திணை, அஃறிணை, விரவு வினை என முத்திணையிலும் வரும்.

### 2. உயர்திணை :

(i) உயர்திணைக்குரிய தெரிநிலை வினை :

இத்திணைக்குரிய வினைகளைத் தன்மை வினை, படர்க்கை வினையென இருவகையாகப் பிரித்துக் கூறுவர். முன்னிலை வினை விரவுத்திணைக்கு உரியதாதலின் ஈண்டுக் கூறப்பட்டிலது.

(1) தன்மையொருமை வினைமுற்று :- கு, டு, து, று, என், ஏன், அல் ஆகிய ஏழு ஈறுகளும் இதற்கு உரியவாம். வினை முற்றுக்கள் பெயரையே கொண்டு முடியும். அங்ஙனமன்றி வினையைக் கொள்ளு

மேல் எச்சமாக நிற்கும். இதுவே எல்லா முற்றுக்களுக்கும் உரிய இயல்பாம். எனினும் இதற்கு விதிவிலக்காக மூன்று வினைமுற்றுக்கள் உள. அவை செய்கு, செய்கும், மார் என்பன. இவை வினையொடு முடியினும் முற்றென்றே பெயர் பெறும். இவற்றுள் மார் என்பது மட்டும் வினையொடு முடியுமேயன்றிப் பெயருடன் முடியாது.

(2) தன்மைப் பன்மை வினைமுற்று :- இது தனித்தன்மையும் பன்மைத் தன்மையுமென இரு வகைப்படும். தன்னை மட்டும் உணர்த்தி வருவது தனித்தன்மையாம். தன்னொடு பிறரையும் உளப்படுத்தி வருவது பன்மைத்தன்மையாம். இவற்றிற்குரிய ஈறுகள் :- அம், ஆம், எம், ஏம், கும், டும், தும், றும் என்பன. இவற்றுள் அம், ஆம், என் என்பன தன்னொடு முன்னிலை யாரையும், தமராய வழித்தன்னொடு படர்க்கையாரையும்; எம், ஏம் என்பன தன்னொடு படர்க்கையாரையும்; கும், டும், தும், றும் என்பன தன்னொடு முன்னிலையாரையும், அல்லது தன்னொடு படர்க்கையாரையும், அல்லது அவ்விரு திறத்தாரையும் ஒருங்கு உளப்படுத்தற்குரியவாம். தன்மைப் பன்மைச் சொல் உயர்திணைக்கேயுரியது. ஆயினும் அது எண்ணுமிடத்து அஃறிணையை உளப்படுத்தி வருதலும் உண்டு.

(3) படர்கை யொருமைக் குரியன :— அன், ஆன், அள், ஆள், என்பன.

(4) படர்க்கைப் பன்மைக்குரியன : அர், ஆர், ப, மார் என்பன. இவ்விருபத்து மூன்று ஈறுகளும் உயர்திணைக்குரியவாம்.

(ii) உயர்திணைக்குரிய குறிப்புவினை :

இதற்குரிய ஈறுகளைத் தொல்காப்பியர் விதந்துகூறவில்லை. இதுகாறும் கூறப்பட்ட தெரிநிலை வினைக்குரிய ஈறுகளே குறிப்பு வினைக்கும் ஈறாய் வரும் என்பர். தெரிநிலைவினை ஈறுகளுள் குறிப்பு வினைக்கும் ஏற்பன அம், ஆம், எம், ஏம், என், ஏன், அன், ஆன், அள், ஆள், அர், ஆர் என்பன. ஆறும் வேற்றுமைக்குரிய உடைமைப்பொருள் பற்றியும், ஏழாம் வேற்றுமைக்குரிய நிலப்பொருள்பற்றியும், ஒப்புப்பொருள்பற்றியும், பண்புப்பொருள் பற்றியும் வருவனவும், அன்மை, இன்மை, உண்மை, வன்மை எனச் சொல்பற்றி வருவனவும், உயர்திணை வினைக்குறிப்புக்களாய் வருவனவாம். வினைப்பொருளையுணர்த்தும் யார் என்னும் குறிப்புமுற்று உயர்திணை மூன்றுபாலுக்கும் உரியதாம். செய்யுளுள் ன், ள், ர், ய் என்பனவற்றை ஈறாக உடைய வினைகளின் ஈற்றயலெழுத்து ஓகாரமாதலும் உண்டு.

## 3. அஃறிணை:

(i) அஃறிணைக்குரிய தெரிநிலைவினை :

தன்மை, உயர்திணைக்கே உரியதாகலானும், முன்னிலை விரவு வினையாதலானும், ஈண்டுப்படர்க்கை வினைமுற்றொன்றுமே கூறப்படுகிறது.

(1) படர்க்கையொருமை வினைமுற்று :— து, று என்ற இரண்டுமாம்.

(2) படர்க்கைப்பன்மை வினைமுற்று :— அ, ஆ, வ ஆகிய மூன்றுமாம். இதுகாறும் கூறப்பட்ட து று, அ, ஆ, வ ஆகிய ஐந்தும், குறிப்பு வினைக்கண்கூற இருக்கும் 'டு' ஆகிய ஒன்றும், அஃறிணைப் படர்க்கைக் குரிய வினைமுற்றுக்களாம்.

(ii) அஃறிணைக்குரிய குறிப்பு வினை :

இதற்குரிய ஈறுகளைத் தொல்காப்பியர் விதந்துகூறவில்லை. இதுகாறும் கூறப்பட்ட தெரிநிலைவினைக்குரிய ஈறுகளே குறிப்பு வினைக்கும் ஈருய்ப் பாலுணர்த்தும் என்பர். தெரிநிலைவினை ஈறுகளுள் குறிப்பு வினைக்கும் ஏற்பன து, று, அஃஎன்பன. 'டு' என்னும் ஈறு குறிப்பு வினைக்கே உரியதாம். இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, உள என்பனவும், பண்புகொள் கிளவியும், பண்பினுகிய சினைமுதற் கிளவியும், ஒப்புப்பற்றி வருஞ் சொல்லும் ஆகிய இப்பத்தும் வினைக் குறிப்பிற் குரியனவாம். வினுப்பொருளையுடைய 'எவன்' என்னும் வினைக்குறிப்புச் சொல் அஃறிணை இருபாலுக்கும் ஒப்ப உரியதாம்.

## 4. விரவு வினை :

உயர்திணை அஃறிணையாகிய இரு திணைக்கும் உரிய வினைகளை விரவு வினை என்பர். இதனை ஆசிரியர் எண்வகையாகப் பிரித்து விளக்குவர். அவையாவன : (1) முன்னிலை வினைமுற்று (2) வியங்கோள் வினை முற்று (3) வினையெச்சம் (4) இல்லை என்னும் சொல் (5) வேறு என்னும் சொல் (6) செய்ம்மன என்னும் வாய்பாட்டு முற்று (7) செய்யு மென்னும் வாய்பாட்டுச் சொல் (8) செய்த என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் .

(1) முன்னிலைவினைமுற்று :— இ, ஐ, ஆய் ஆகிய மூன்று ஈறுகளும் உயர்திணை ஆணொருமை, பெண்ணொருமை, அஃறிணையொருமையாகிய முப்பாற்கும் உரியவாம். இர், ஈர், மின் ஆகிய மூன்று ஈறுகளும் உயர்திணைப் பலர்பால், அஃறிணைப் பலவின்பால் ஆகிய இரு பாலுக்கு முரியவாம்.

(2) வியங்கோள் வினைமுற்று:- இதற்குரிய ஈறுகளை ஆசிரியர் விதந்து கூறவில்லை. எனினும் சேனுவரையர் அ, அல், ஆல் என்பன இதற்குரிய ஈறுகளாம் என்பர். இவ்வியங்கோள் சிறுபான்மை தன்மை முன்னிலைக் கண்ணும். பெரும்பான்மை படர்க்கைக் கண்ணும் வரும். இது வாழ்த்துதற் பொருண்மைக் கண்ணும், வேண்டிக் கோடற் பொருண்மைக் கண்ணும் வரும்.

(3) வினையெச்சம் :- ஒரு வினையைத் தனக்குக் கொண்டு முடியும் சொல்லாகக் கொண்டு, தான் எச்சமாக நிற்கும் சொல்லிற்கு வினையெச்சம் என்று பெயர். அவ்வினையெச்சம் செய்து, செய்யூ, செய்பு, செய்தென, செய்யியர், செய்யிய, செயின், செய, செயற்கு ஆகிய ஒன்பது வாய்பாடுகளையுடையது. இவையன்றிப் பின், முன், கால், கடை, வழி, இடம் என்னும் ஈற்றவாய் வரும் சொற்களும் வினை யெச்சமாம்.

மேற்கூறிய ஒன்பது வாய்பாடுகளுள் செய்து, செய்யூ, செய்பு ஆகிய மூன்றும் தன்வினைமுதல் வினையான் முடியும். அம்மூன்று ஈறுகளையும் உடைய சினைவினை தம் சினைவினையொடும் முடியும்; முதல் வினையொடும் முடியும். இம் மூன்றுமல்லாத ஏனைய ஆறு வாய்பாடுகளும் தம் வினைமுதல் வினையையும், பிற வினையையும் கொண்டுமுடியும். வினையெச்சங்கள் ஒவ்வொன்றும் தனித்தனி வினைகொண்டு முடிதல் இயல்பு. அங்ஙனமன்றி வினையெச்சங்கள் பலவடுக்கி ஒரு வினையையே கொண்டு முடிதலும் உண்டு.

(4) இல்லை (5) வேறு (6) செய்ம்மன என்பன:- இவைபற்றித் தனித்து இலக்கணம் கூறப்படவில்லை. 'விரவு வினைகளுள் முன்னிலை வினை நீங்கலாக ஏனைய ஏழு சொற்களும் மூன்றிடத்திற்கும் ஐந்து

பாற்கும் உரியன' எனக்கூறப்பட்ட பொது விதியினால், இம்மூன்று சொற்களும் ஐம்பாற்கும் மூன்றிடத்திற்கும் உரியனவாம் எனத்தெரிகிறது.

(7) செய்யும் (8) செய்த என்னும் பெயரெச்சம்:- ஒரு பெயரைத் தனக்குக் கொண்டு முடியும் சொல்லாகக் கொண்டு, தான் எச்சமாக நிற்கும் சொல்லிற்குப் பெயரெச்சம் என்று பெயர். அது நிலம், பொருள், காலம், கருவி, வினைமுதல், வினை என்னும் அறுவகைப் பெயர்களையும் கொண்டு முடியும். அங்ஙனம் வரும் பெயரெச்சங்கள் செய்யும், செய்த என்னும் இரு வாய்பாடுகளாக வரும்.

செய்யுமென்னும் சொல் பல்லோர் படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகிய மூன்றிடத்தொடும் வரும்பொழுது பெயரெச்சமென்றும், இவற்றொடு வாராத பொழுது முற்றென்றும் பெயர் பெறும். செய்யுமென்னும் சொல் பெயரெச்சமாய் நிற்கும் பொழுது அதனது ஈற்றயலெழுத்தாகிய உகரம் தான் ஊர்ந்து நின்ற மெய்யொடும் கெடும்; மெய்யொழித்தும் கெடும். பெயரெச்ச வினையெச்சங்கள் எதிர் மறுத்துச் சொல்லினும் தத்தம் பொருள் நிலையில் வேறுபடா. இவ்விருவகையெச்சங்களும் தாம்தாம் கொண்டு முடிக்கும் சொற்களின் இடையே பொருந்துதற்கு இயன்ற வேறுபிற சொற்கள்வரின், அவற்றையும் ஏற்றுக்கொள்வர். இதனை 'இடைப்பிறவரல்' என்பர்.

## 5. கால வழுவமைதி:

எழுவகை வழுவமைதிகளுள் காலவழுவமைதி நீங்கலாக ஏனைய ஆறும் கிளவியாக்கத்துள் விரித்துக் கூறப்பட்டன. வினைச்சொல் காலமொடு வருதலை இலக்கணமாக உடையதாகலின் அதற்கு இயைபுடைய கால வழுவமைதியை ஈண்டு விரித்துக்கூறுகிறார்.

செய்தென்னும் வினையெச்சம் இறந்த காலத்திற்கு உரியதாகும். அது எதிர்காலத்தை உணர்த்தும் சொல்லோடு இயைதலும் உண்டு. மூன்று காலத்திற்கும் ஒத்து இயங்கும் இயல்பினையுடைய பொருள்களை நிகழ்காலத்திற்குரிய செய்யுமென்னும் சொல்லால் சொல்லுதல் மரபாம். நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும் சொல்ல வேண்டிய வினைச்சொற்களை விரைவு பற்றி இறந்த காலத்தாற் சொல்லுதலும் உண்டு. உலகத்தாரால் சிறந்ததென்று மதிக்கப்பட்டதொரு வினையது பயனைச் சொல்லுங்கால், ஒருவனைக்குறித்துச் சொல்லின், எதிர்காலத்திலோ அல்லது இறந்த காலத்திலோ சொல்லுதல் மரபு. அங்ஙனம் ஒருவனைக் குறித்துச் சொல்லாது அவ்வினையது பயனை மட்டும் சொல்லின், நிகழ்காலத்தால் சொல்லினும் வழுவில்லை என்பதாம். இங்ஙனம் சொல்லின், இங்ஙனம் ஆகும் என்னும் இயல்பைச் சொல்லுமிடத்தும், இது நிகழின், இது ஆகும் என நூலாலோ அல்லது பிறவற்றாலோ தெளிந்து ஒன்றனைச் சொல்லுமிடத்தும், இறந்தகாலச் சொல்லாலோ அல்லது நிகழ்காலச் சொல்லாலோ சொல்லப்படும். இறப்பும், எதிர்வுமாகிய இருகாலங்களும் தம்மில் ஒன்றற்கொன்று மயங்குதலுமுண்டு. எனவே இறப்பில் எதிர்வும், எதிர்வில் இறப்புமாக மயங்கு மென்பதாம்.

## 6. வினைச்சொல் பற்றிய மரபு:

இக்காரியத்தினைச் செயல் வேண்டும் என்று சொல்லப்படும் முற்றுச்சொல், அக்காரியத்தினைச் செய்வான் தன்னிடத்தும், அவன் செயலை வேண்டியிருப்பான் பிறனொருவனிடத்தும் நிலைபெறும். வற்புறுத்துதற்காக வருவதும் வினாவெழுத்தினை ஈற்றிலே கொண்டு

நிற்பதுமான வினைச்சொல் உடன்பாட்டினை உணர்த்தாது எதிர் மறுத்து உணர்த்துதலும் உண்டு. செயப்படுபொருளைச் செய்தது போலக் கூறலும் உண்டு.

## எ. இடையியல்

### 1. பெயர்க்காரணம்:

இடைச்சொல் மொழிக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பான்மையும் இடைவருதலின் இடைச் சொல்லாயிற்று.

### 2. இடைச்சொல்லின் இலக்கணம்:

இடைச்சொல் பெயரைச் சார்ந்து பெயர்ப்பொருளையும், வினையைச் சார்ந்து வினைப்பொருளையும் உணர்த்துவதல்லது, தமக் கெனப் பொருளுடையவல்ல. இவ்விடைச் சொற்கள் தம்மால் சாரப்படும் பெயர் வினை ஆகிய சொற்களுக்கு முன்னும், பின்னும் வருதலும், தத்தம் ஈறு திரிந்து வருதலும், ஓரிடைச் சொல்லுடன் பிறிதோரிடைச் சொல் சேர்ந்து வருதலும் ஆகிய இயல்பினையுடைய வாம்.

### 3. இடைச்சொல்லின் வகைகள்:

சொற்கள் ஒன்றோடொன்று புணர்கின்ற பொழுது அவற்றின் பொருள் நிலைக்கு உதவிசெய்து வருவனவாகிய சாரியைகளும், வினைச் சொற்களில் காலங்காட்டும் உறுப்பாய் வரும் இடைநிலைகளும், பால் காட்டுவனவாய் வரும் விகுதிகளும், வேற்றுமை உருபுகளும், தாம் சார்ந்த பொருளை வேறுபடுத்திவரும் அசை நிலைகளும், செய்யுட்களில் இசை நிறைத்தலே பொருளாக வரும் இசைநிறைச் சொற்களும், கூறுவார் தாம்தாம் குறித்த குறிப்பினாலே அவரவர் குறித்த பொருளை விளக்கி நிற்கும் குறிப்புச் சொற்களும், ஒப்புமையை உணர்த்துகின்ற உவம உருபுகளும் என இடைச்சொற்கள் ஏழுவகைப்படும். இவற்றுள் சாரியைகள் எழுத்ததிகாரத்துப் புணரியலில் கஉ௦-ஆம் நூற்பாவில் கூறப்பட்டன. கால இடை நிலைகளும், விகுதிகளும் வினையியலிற் கூறப் பட்டன. வேற்றுமை உருபுகள் வேற்றுமை இயலில் கூறப்பட்டன. உவம உருபுகள் உவம இயலிற் கூறப்படும். எஞ்சிய அசைநிலை இசைநிறை, தத்தம் குறிப்பிற் பொருள் செய்குவன ஆகிய மூன்றும் இவ்வியலிற் கூறப்படும். இம்மூன்றனுள்ளும் தத்தம் குறிப்பில் பொருள் செய்குவன பொருளுணர்த்துதற் சிறப்பும், மிகுதியும் உடைமையான் முதற்கண் கூறப்படும்.

(அ) தத்தம் குறிப்பில் பொருள் செய்குவன:

மன் என்பது கழிவு, ஆக்கம், ஒழியிசை ஆகிய மூன்று பொருளில் வரும். தில் என்பது விழைவு, காலம், ஒழியிசை ஆகிய மூன்று பொருளில் வரும். அது விழைவின்கண் வருகின்ற பொழுது தன்மை யிடத்திற்கே வரும். கொன் என்பது அச்சம், பயனின்மை, காலம், பெருமை ஆகிய நான்கு பொருளில் வரும். உம் என்பது எச்சம் சிறப்பு, ஐயம், எதிர்மறை, முற்று, எண், தெரிநிலை, ஆக்கம் ஆகிய எட்டுப் பொருளில் வரும். எச்சப் பொருளில் வரும் உம்மையும், எதிர் மறைப்பொருளில் வரும் உம்மையும் தம்முள் இயைந்து வாரா. எச்ச உம்மையொடு ஒருசொல் வரின் அதனால் தழுவப்படும் எஞ்சு பொருட்கிளவியும் அதனொடு ஒருங்கு வரும். அவ்விரு சொற்களில் எவை யேனும் ஒரு சொல் உம்மையின்றி வருமாயின் அவ்வும்மையில் சொல்லை

முன்னும், உம்மையுடைய சொல்லைப் பின்னும் கிளத்தல் மரபாம். உம்மையில்லாத சொல்லைச் செஞ்சொல் என்று குறிப்பர் ஆசிரியர். முற்றும்மைப் பொருளில் வருகின்ற உம்மை அம்முற்றுப் பொருளைத் தராது, எச்சப் பொருளையும் தரும்.

ஓகாரம் பிரிநிலை, வினா, எதிர்மறை, ஒழியிசை, தெரிநிலை, சிறப்பு ஆகிய ஆறு பொருளில் வரும். ஏகாரம் தேற்றம், வினா, பிரிநிலை, எண், ஈற்றசை ஆகிய ஐந்து பொருளில் வரும். செய்யுளின்கண் வருகின்ற ஈற்றசை ஏகாரம் தனக்குரிய இரு மாத்திரையினின்றும் குறுகி ஒரு மாத்திரையாய் வருதலும் உண்டு. மேற்கூறிய தெளிவின்கண் வருகின்ற ஏகாரமும், சிறப்பின்கண் வருகின்ற ஓகாரமும் அளபெடுத்தலும் உண்டு. என, என்று என்னும் சொற்கள் வினை, குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் ஆகிய ஆறு பொருளிலும் வரும்.

மற்று என்பது வினைமாற்று, அசைநிலை ஆகிய இரு பொருளிலும், எற்று என்பது கழிந்தது என்ற பொருளிலும், மற்றையது என்பது இனப் பொருளிலும், மன்ற என்பது தெளிவுப் பொருளிலும், தஞ்சம் என்பது எளிது என்ற பொருளிலும். அந்தில் என்பது ஆங்கு என்னும் இடப்பொருளிலும், கொல் என்பது ஐயப் பொருளிலும், எல் என்பது விளக்கப் பொருளிலும் வரும். ஔகாரம் மொழிக்கு ஈறுகாது. இரு மாத்திரை உடையது. இது பிரிவில் அசை நிலையாய் இரட்டித்து நிற்கு மிடத்தும், அங்ஙனம் இரட்டிக்காது அளபெடையாய் நிற்குமிடத்தும், அளபெடையின்றித் தானேயாய் வருமிடத்தும், சொல்லுவான் குறிப் பிற்கேற்ப மாறுபாட்டுப் பொருளையோ, அல்லது சிறப்புப் பொரு ளையோ தரும். இவ்வௌகாரத்தை இக்காலத்தார் ஓகாரமென்று வழங்குப. நன்றே, அன்றே என்பவற்றிலுள்ள ஏகாரமும், அந்தோ அன்னோ என்பவற்றிலுள்ள ஓகாரமும் சொல்லுவான் கருத்தின் வழி நின்று தத்தம் பொருளுணர்த்தும்.

(ஆ) அசைநிலைகள் :

யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது என்ற ஏழும் அசை நிலைச் சொற்களாம். மியா, இக, மோ, மதி, இகும், சின் என்ற ஆறும், முன்னிலைக்கண் வருகின்ற அசைச்சொற்களாம். அவற்றுள் இகும், சின் என்ற இரண்டும் தன்மையிலும், படர்க்கையிலும் வரும். மா என்னும் சொல் வியங்கோளில் வரும்பொழுது அசை நிலையாய் வரும். இயற்பெயர் முன்னர் வருகின்ற ஆர் என்னும் சொல் பலர்பால் வினை யைக் கொண்டு முடியும். அவ்'ஆர்' அசைநிலையாய் வருதலும் உண்டு. அந்தில் என்னும் சொல் தத்தம் குறிப்பில் பொருள் செய்யும் இடைச் சொல்லாய் ஆங்கு என்னும் பொருளில் வருவதன்றி, அசைநிலையாக வும் வரும். ஏ, குரை ஆகிய இரண்டும் அசைநிலையாய் வரும். அம்ம என்பது அசைநிலையாய்க் கேட்பாயாக என்னும் பொருளில் வரும். ஆங்க என்னும் இடைச் சொல்லும், ஒப்புமை உணர்த்தாத போலும் என்னும் இடைச் சொல்லும் 'உரையசை'களாக வரும். ஆக, ஆகல், என்பது ஆகிய மூன்றும் அசைநிலையாகின்ற பொழுது இரட்டித்து நிற் கும். அந்நிலையில் அவை 'பிரிவில் அசைநிலை' எனப்படும்.

(இ) இசை நிறையாய் வருவன :

ஏ, குரை ஆகிய இரண்டும் அசைநிலைகளாய் வருவதன்றி இசை நிறைத்தற்கும் வரும்.

## 4. எண்ணிடைச் சொற்கள் :

ஒன்றனெடு ஒன்றனை எண்ணுகின்றபொழுது, அவ்வெண்ணினைக்

குறித்தற்கு அவற்றினிடையே வரும் சொற்களை எண்ணிடைச் சொற்க ளென்பர். அவையாவன: (1) உம் (2) என (3) ஏ (4) எனு (5) என்று (6) செவ்வெண் (7) என்று (8) ஒடு என்பன.

(1) உம் என்பது :- இது எண்ணின்கண் வருகின்றபொழுது தொகை பெற்றும் பெறுதும் வரும். அங்ஙனம் வருகின்றபொழுது உருபுகள் இடையே மறைந்தும் வரும்.

(2) என என்பது :— இது எண்ணின்கண் வருகின்றபொழுது தொகை பெற்றும் பெறுதும் வரும். அங்ஙனம் வருகின்றபொழுது எண்ணுமிடத்தில் எல்லாம் வாராது, ஒரிடத்தில்மட்டும்நின்று பிறி தோரிடத்தில் சென்று ஒன்றுதலும் உண்டு..

(3) ஏ என்பது :- இது எண்ணின்கண் வருகின்ற பொழுது சொற் றொறும் வாராது இடையிட்டும் வரும். ஆயினும் அவ்வெண்ணி னைக் குறித்து வந்ததென்றே கருதப்படும். இது எவ்விடத்துவரினும் தொகை பெற்றே வரும்.

(4) எனு (5) என்று என்பன :- எனுவும், என்றுவும் என்பனவே, உம்மை தொக்கு எனு என்றும், என்று என்றும் நின்றன. இவை உம்மை யோடிருப்பின் உம்மைத் தொகையுள் அடங்கும். உம்மையின்றி இருப்பதால் இவற்றைப் பிரித்து வேறு கூறினர். இவை எண்ணிடைச் சொற்களாய் வரும் பொழுது தொகை பெற்றே வரும்.

(6) செவ்வெண் :— பெயர் வினைகளில் எண்ணிடைச் சொற்கள் தொக்கு நிற்பின் அது செவ்வெண்ணும். இது பெயரில் வரும்பொழுது தொகை பெற்றே வரும்.

(7) என்று (8) ஒடு என்பன :— இவை எண்ணின்கண் வருங்கால் ஓரிடத்தில் நின்று, பிறிதோரிடத்திலும் சென்று ஒன்றுதலையுடைய வாம்.

இவற்றுள் தொகை பெற்றே முடியும் எண்ணிடைச் சொற்கள் ஏகாரம், எனு, என்று, பெயர்ச் செவ்வெண் என்ற நான்குமாம். உம், என என்பன தொகை பெற்றும் பெறுதும் வரும். என்று, ஒடு என்பன பற்றித் தொல்காப்பியர் ஒன்றும் கூறவில்லை. எனினும் நன்னூலார் இவை தொகை பெற்றும் பெறுதும் வருமென்பர்.

மேற்கூறிய எண்ணிடைச் சொற்கள் வினையொடு வருகின்ற பொழுதும் தத்தம் நிலையினின்றும் திரியா; அவற்றவற்றிலக்கணங்களை ஆராய்ந்து தெளிதல் வேண்டும். செய்யுமென்னும் பெயரெச்சத்தின் இறுதியில் வருகின்ற 'உம்' என்பது 'உந்'தாகத்திரிதலும் உண்டு.

**5. புறனடை :**

இதுகாறும் கூறப்பட்ட இடைச் சொற்களில் இச்சொற்கு இப் பொருள் என வரையறுத்து ஓதப்பட்டதாயினும், அச்சொற்களின் முன்னும் பின்னும் நின்ற வினையொடும், பெயரொடும் இணைத்து நோக்க, அச்சொற்கள் முற்கூறிய பொருளிலன்றி வேறுபொருளிலும் வரலாம். அவற்றையும் ஏற்றுக் கொள்க. மேற்கூறப்பட்ட இடைச் சொற்களேயன்றி வேறுபிற இடைச்சொற்கள் வருமாயினும் அவற்றையும் ஏற்றுக் கொள்க.

## அ. உரியியல்

**1. பெயர்க்காரணம் :**

இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருட்குத் தாமே யுரியவாகலின் உரிச்சொல் எனப் பெயர் பெற்றது என்பர் சேனுவரையர். பெரும்

பான்மையும் செய்யுட்குரித்தாய் வருதலின் உரிச்சொல்லாயிற்று என்பர் நன்னூலார்.

## 2. உரிச்சொல்லின் இலக்கணம் :

இது செவியாலுணரப்படும் இசைபற்றியும், மனத்தால் குறித்துணரப்படும் குறிப்புப்பற்றியும், ஐம்பொறிகளால் உணரப்படும் பண்பு பற்றியும் வரும். இவை பெயரையும் வினையையும் சார்ந்து வரும். அங்ஙனம் வருங்கால் பெயர்ச்சொல் போன்றும், வினைச்சொல் போன்றும் வரும்; அவற்றிற்கு முதனிலையாகவும் வரும். அவை ஒரு சொல் பல பொருளுக்கு உரியதாயும், பல சொல் ஒருபொருளுக்கு உரியதாயும், ஒரு சொல் ஒரு பொருளுக்குரியதாயும் வரும். வழக்கில் பயிலாத உரிச்சொற்களுக்கு, வழக்கில் பயின்ற உரிச்சொற்களைக் கொண்டே பொருள் உணர்த்தப்படும்.

## 3. இவ்வியலில் நுவலப்படும் உரிச்சொற்கள் :

பொருள் எளிதில் விளங்கும் உரிச்சொற்களை எடுத்துக் கூறுவதால் பயனில்லை. ஆதலின் பொருள் எளிதில் விளங்காத உரிச்சொற்களே இவ்வியலிற் கூறப்படும்.

மேல் உரிச்சொற்கள் இசை, குறிப்பு, பண்பு பற்றி வருமென்றார். அவற்றுள் குறிப்புப்பற்றி வருவன மிகுதியாய் இருத்தலின் அதனையே முதற்கண் கூறுவாராயினர். இசை,குறிப்பு, பண்பு ஆகிய மூன்று வகையால் வரும் உரிச்சொற்களைப் பின்வருமாறு வகுத்துக் கொள்ளலாம். (1) ஒரு சொல் ஒரு பொருட்குரியது (2) ஒருசொல் பல பொருட்குரியது (3) பல சொல் ஒருபொருட்குரியன. இம்முறையில் உரிச்சொற்கள் வகுத்து உரைக்கப்படும்.

(அ) குறிப்புப்பற்றி வருவன :

(i) ஒருசொல் ஒருபொருட்குரியது :

1. உரு—உட்கு (அச்சம்)
2. புரை—உயர்பு
3. மல்லன்—வளன்
4. ஏ—பெற்று (பெருக்கம்)
5. உகப்பு—உயர்தல்
6. உவப்பு—உவகை
7. பயப்பு—பயன்
8. இயைபு - புணர்ச்சி
9. சீர்த்தி—மிகுபுகழ்
10. மாலை—இயல்பு
11. பழுது—பயனின்மை
12. முழுது—எஞ்சாமை
13. வம்பு—நிலையின்மை
14. மாதர்—காதல்
15. புலம்பு—தனிமை
16. துவன்று—நிறைவு
17. முரஞ்சல்—முதிர்வு
18. பொற்பு—பொலிவு
19. வறிது—சிறிது
20. எய்யாமை—அறியாமை
21. நன்று—பெரிது
22. தெவு—கொளல்
23. தெவ்வு—பகை
24. கமுமு—மயக்கம்
25. கருவி—தொகுதி
26. கமம்—நிறைவு
27. அரி—ஐம்மை (மென்மை)
28. கவவு—அகத்தீடு
29. இரங்கல்—கழிவு
30. கவர்வு—விருப்பு
31. சேர்—திரட்சி
32. வியல்—அகலம்
33. வய—வலி
34. துயவு—அறிவின் திரிபு
35. உயா—உயங்கல் (வருந்துதல்)
36. உசா—சூழ்ச்சி
37. வயா—வேட்கைப்பெருக்கம்
38. புனிறு—ஈன்றணிமை
39. யாணர்—புதிது
40. அமர்தல்—மேவல்
41. யாண்—கவின்
42. ஐ—வியப்பு

43. முனைவு — முனிவு
44. வை—கூர்மை
45. எறுழ்—வலி
46. நளி—செறிவு

(ii) ஒருசொல் பல பொருட்குரியது :

1. ஏற்றம்—துணிவு, நினைவு
2. பணை — பிழைத்தல், பெருப்பு
3. படர்—உள்ளல், செலவு
4. தா—வலி, வருத்தம்
5. விறப்பு — செறிவு, வெருவுதல்
6. அழுங்கல்—இரக்கம், கேடு
7. விழுமம்—சீர்மை, சிறப்பு, இடும்பை
8. நனவு—களன், அகலம்
9. மத—மடன், வலி, மிகுதி, வனப்பு
10. கடி—வரைவு, கூர்மை, காப்பு, புதுமை, விரைவு, விளக்கம், மிகுதி, சிறப்பு, அச்சம், ஐயம், முன்தேற்று

(iii) பலசொல் ஒரு பொருட்குரியன :

1. உறு, தவ, நனி — மிகுதி
2. செல்லல், இன்னல் — இன்னாமை
3. அலமரல், தெருமரல் — சுழற்சி
4. மழ, குழ — இளமை
5. கூர்ப்பு, கழிவு—சிறத்தல்
6. கதழ்வு, துனைவு—விரைவு
7. அதிர்வு, விதிர்ப்பு — நடுக்கம்
8. தீர்தல், தீர்த்தல்—விடுதல்
9. கெடவரல், பண்ணை — விளையாட்டு
10. நம்பு, மேவு—நசை
11. ஒய்தல், ஆய்தல், நிழத்தல் சாஅய் — உள்ளதன் நுணுக்கம்
12. பிணை, பேண்—பெட்பு (புறந்தருதல்)
13. பையுள், சிறுமை—நோய்
14. உறப்பு, வெறுப்பு—செறிவு
15. இலம்பாடு, ஒற்கம்—வறுமை
16. ஞெமிர்தல், பாய்தல்—பரத்தல்
17. பேம், நாம், உரும்—அச்சம்
18. கறுப்பு, சிவப்பு—வெகுளி
19. பரவு, பழிச்சு—வழுத்துதல்

(ஆ) பண்புபற்றி வருவன :

(i) ஒருசொல் ஒரு பொருட்குரியது :

1. பசப்பு—நிறம்
2. சாயல்—மென்மை
3. வெம்மை—வேண்டல்
4. வாள்—ஒளி
5. கடி—கரிப்பு

(ii) ஒருசொல் பல பொருட்குரியது :

1. வார்தல், போகல், ஒழுகல் — நேர்மை, நெடுமை
2. தட—பெருமை, கோட்டம்
3. கய—பெருமை, மென்மை
4. செழுமை—வளன், கொழுப்பு

(iii) பலசொல் ஒரு பொருட்குரியன :

1. குரு, கெழு—நிறம்
2. தட, கய, நளி—பெருமை
3. கறுப்பு, சிவப்பு—நிறம்
4. நொசிவு, நுழைவு, நுணங்கு—நுண்மை

(இ) இசைபற்றி வருவன :

(i) ஒருசொல் ஒரு பொருட்குரியது :

1. இசைப்பு—இசை

(ii) ஒருசொல் பல பொருட்குரியது :

உரியியலில் கூறப்படவில்லை.

(iii) பலசொல் ஒரு பொருட்குரியன:

1. கம்பலை, சும்மை, கலி, அழுங்கல்—அரவம் (ஒலி)
2. துவைத்தல், சிலைத்தல், இம்மபல், இரங்கல்—இசைத்தல்

### 4. உரிச்சொல் பொருள் உணருமாறு :

இதுகாறும் கூறப்பட்ட உரிச்சொற்களுக்கு இவையிவை பொருள் என ஆசிரியரால் கூறப்பட்டனவாயினும், அவ்வவ்வுரிச் சொற்களுக்கு முன்னும் பின்னும் இயைந்த சொற்களைக்கொண்டு அவற்றிற்குப் பொருந்தும் பொருளையே கொள்ளவேண்டும். அங்ஙனம் முன்னும் பின்னும் உள்ள சொற்களுக்கு ஏற்பப் பொருள் செய்யும்பொழுது, இதுகாறும் நூலாசிரியரால் கூறப்பட்ட பொருளேயன்றி வேறு பிற தோன்றினும் ஏற்றுக்கொள்க. இவ்வுரிச் சொற்களுக்கு இவையிவை பொருளென முன் கூறப்பட்டதேனும் அவ்வப்பொருட்கு அவையுரிவாதற்குக் காரணம் இவையென விளங்கத் தோன்று; அவை ஆசிரியருக்கே புலப்படும். இவ்வுரிச் சொற்களெல்லாம் குறைச் சொற்கள் என்பவாகலின், இவை முதனிலையும் இறுதி நிலையுமாகப் பிரித்துப் பொருள் உணர்த்துதல் இல்லை.

ஒருவன் உலகில் பயிலாத உரிச்சொற்களுக்குப் பொருள் கூறின் உலகில் பயின்ற சொற்களைக் கொண்டே பொருளுணர்த்த வேண்டும். அங்ஙனம் பொருள் உணர்த்த வந்த சொற்கும் பொருள் தெரியாது வினவுவானாயின், அவ்வினா எல்லையின்றிச் செல்லுமாதலால் பொருளுக்குப் பொருள் கூறல் தகாது. எத்தகைய நுண்பொருளையேனும் ஆசிரியருக்கு உணர்த்தும் திறன் இருப்பின் அதனை நன்கு உணர்த்தி விடலாம். அங்ஙனம் உணர்த்தும் திறமை ஆசிரியனுக்கு இருப்பினும் உணர்வோராகிய மாணக்கர்க்கும் அதனை யுணர்தற்கு ஓரளவேனும் எழுச்சியும் உணர்ச்சியும் இருந்தாலல்லது உணர இயலாதாம்.

### 5. புறனடை :

உலகத்திலுள்ள சொற்களையும், அவற்றிற்குரிய பொருள்களையும் இவையென அறிந்து வரையறுத்தற்கு இயலாமையின், இதுகாறும் கூறப்பட்ட உரிச்சொற்களேயன்றி வேறுபிற உரிச்சொற்கள் வருமாயினும் அவற்றையும் உரிச்சொற்கோதிய இலக்கணத்தான் ஆராய்ந்து ஏற்றுக்கொள்க.

## கூ. எச்சவியல்

### 1. பெயர்க்காரணம் :

கிளவியாக்கம் முதலாக உரியியல் ஈறாக உள்ள எட்டு இயல்களிலும் சொல்லுதற்கு இடனில்லாது எஞ்சி நின்ற இலக்கணங்களையெல்லாம் இவ்வியல் உணர்த்துதலின் எச்சவியல் எனப்பெயர் பெற்றது.

### 2. நுவலப்படும் பொருள் :

இவ்வியலில் கூறப்படும் பொருளை நான்கு வகையாகப் பிரித்து ஆராயலாம். அவை 1. செய்யுள் ஒழிபு 2. வழக்கிலக்கணத்தது ஒழிபு 3. மரபு ஒழிபு 4. புறனடை என்பன.

### 3. செய்யுள் ஒழிபு :

(அ) நால்வகைச் சொற்கள் :

இயற்சொல், திரிசொல், திசைச் சொல், வடசொல் ஆகிய நான்கு சொற்களும் செய்யுள் செய்தற்குரியனவாம். (1) இயற்சொல் : இச்சொல் செந்தமிழ் நிலத்து வழங்கி வருவதாகிப் பிற நிலத்தும் தயக்குரிய பொருளைத் திரியாமல் வழங்கும் இயல்பினதாகும். (2) திரிசொல் :

இயற்சொல்லினின்று திரிந்து வருவது திரிசொல்லாகும். அது ஒரு பொருள் குறித்த வேறு சொல்லாகியும், வேறுபொருள் குறித்த ஒருசொல்லாகியும் வரும். இயற்சொல்லைத் திரிக்குங்கால் தம் எழுத்துச் சிறிது நிற்பத் திரிப்பனவும், அவ்வியற்சொல்லையே பிற சொற்கொணர்ந்து முழுவதும் திரிப்பனவும் என இருவகைப்படும். **(3) திசைச்சொல் :** செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலங்களிலும் அவ்வந்நாட்டார் தாம்தாம் குறித்த பொருளை விளக்கும் சொற்கள், செந்தமிழ் நாட்டில் வந்து வழங்குமாயின் அவை திசைச்சொற்கள் எனப்படும். **(4) வடசொல் :** தமிழ் மொழி வடமொழி என்னும் இரு மொழிக்கும் பொதுவாகிய எழுத்துக்களாலாகிய சொற்களும், வடமொழிக்கே உரிய சிறப் பெழுத்துக்களினின்றும் திரிந்து வரும் சொற்களும் வட சொற்கள் எனப்படும். இவையும் செய்யுட்கண் ஏற்றுக்கொள்ளப்படும்.

**(ஆ) செய்யுள் விகாரம் :**

இந்நால்வகைச் சொற்களையும் ஏற்றுக்கொண்டு செய்யுள் செய்யும் பொழுது வலித்தல், மெலித்தல், விரித்தல், தொகுத்தல், நீட்டல், குறுக்கல் ஆகிய அறுவகை விகாரங்களும் ஒரோவழி வருதலும் உளவாம். நிறைச் சொற்களேயன்றிக் குறைச் சொற்களும் சிலவுள. அவை முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை என மூவகைப் படும். அவை குறைச்சொற்களாயினும் நிறைச்சொற்களென்றே கருதப்படும்.

**(இ) மொழிபுணரியல்பு :**

பலசொற்களால் பொருட்கிடக்கை உணர்வினில் வல்லோர் அழகுபடச் செய்வது செய்யுளாகும். இங்ஙனம் பல சொற்கள் சேர்ந்து செய்யுளாகும்பொழுது சொற்கள் நின்றாங்கு நிற்பப் பொருள் கொள்வதும் உண்டு; அங்ஙனமன்றிச் சொற்களை மாற்றியோ அல்லது அடிகளை மாற்றியோ பொருள் கொள்வதும் உண்டு. இவ்வாறு சொற்கள் ஒன்றோடொன்று இயைந்து பொருள்படும் இயல்பை விளக்குவதே பொருள் கோளாகும். இதனையே 'மொழிபுணர் இயல்பு' என்பர். இப்பொருள்கோள் நான்கு வகைப்படும். அவை நிரனிறைப் பொருள்கோள், சுண்ணப்பொருள்கோள், அடிமறி மாற்றுப் பொருள் கோள், மொழிமாற்றுப் பொருள்கோள் என்பன.

(1) **நிரல்நிறைப்பொருள்கோள் :-** இது முடிக்கும் சொல்லையும், முடிக்கப்படும் சொல்லையும் நிரல்பட வேறு வேறு நிறுத்திப் பொருள் கொள்வதாகும். இது வினைநிரல்நிறை, பெயர்நிரல் நிறை, அவ்விரண்டாலும் வரும் நிரல்நிறை, எதிர்நிரல்நிறை என நான்கு வகைப்படும்.

(2) **சுண்ணப் பொருள்கோள் :-** முடிக்கும் சொல்லும், முடிக்கப்படும் சொல்லும் எண்சீரிலும் சிதறிக்கிடக்க, இப்பொருள் கோள் அமைந்திருத்தலின் சுண்ணப்பொருள்கோள் ஆயிற்று. ஒவ்வொரு அடியிலும் நான்கு நான்கு சீராக ஈரடிக்கண் வரும் எண் சீர்களில் இப்பொருள்கோள் வரும்.

(3) **அடிமறிப்பொருள்கோள்:-** இது சீர்நிலையில் மாறுதலின்றி, அடிகள் ஒவ்வொன்றும் ஒன்று நிற்க வேண்டிய இடத்துப் பிற அடி நிற்பினும் பொருள் மாறாது வருவதாம். இப்பொருள்கோளில் ஈற்றடியது இறுதிச்சீர் ஈற்றயலடியில் சென்று திரிதலும் உண்டு.

(4) மொழி மாற்றுப்பொருள் கோள் :- இது, பாவின்கண் சொற்கள் நின்றவாறு நிற்பப்பொருள் கொள்ளாது, சொற்களை முன்னும் பின்னும் கூட்டிப்பொருள் இயைய அமைத்துக் கொள்வதாகும்.

4. வழக்கிலக்கணத்தது ஒழிபு :

(அ) கிளைநுதற் பெயர்கள் :

த, ந, நு, எ என்பனவற்றை முதலாக உடையதாய், ஒருவரோடு ஒருவர்க்குள்ள தொடர்பைக் குறிக்க வருகின்ற பெயர்கள் தொகைச்சொற்கள் போலப் பிரிப்புப் பிரியாதனவாம்.

(ஆ) தொகைச் சொற்கள் :

வேற்றுமை உருபு முதலிய ஆறு உருபுகளும் தொக்குவருதலின் தொகைச் சொல்லாயிற்று என்பர் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும். இரண்டும் பலவுமாகிய சொற்கள் ஒன்றுபோல் இயைந்து நிற்றலின் தொகைச்சொல்லாயிற்று என்பர் சேனாவரையரும், தெய்வச்சிலையாரும். இங்ஙனம் வரும் தொகைச்சொற்கள் அறுவகைப்படும். அவை 1. வேற்றுமைத் தொகை 2. உவமத் தொகை 3. வினைத் தொகை 4. பண்புத் தொகை 5. உம்மைத் தொகை 6. அன்மொழித் தொகை என்பன.

(1) வேற்றுமைத் தொகை :- முதல் வேற்றுமை பெயராதலானும், விளிவேற்றுமை பெயருமன்றி அதனின் வேறுமன்றி நிற்றலானும் அவ்விரண்டும் ஒழிய, இரண்டு முதல் ஏழாம் வேற்றுமை முடிய ஆறு உருபுகளும் தம் பொருள் ஒட்டிய சொல்லால் தோன்றத் தாம் ஆண்டுப்புலப்படாது நிற்கும் தொகைச் சொற்களை வேற்றுமைத் தொகை என்பர்.

(2) உவமத்தொகை :- போல, புரைய முதலிய உருபுகள் உவம உருபுகளாகும். இவ்வுருபுகள் வாராது மறைந்து நிற்க இயங்கும் சொற்கள் உவமத் தொகையாம்.

(3) வினைத்தொகை :- 'உண்டான்' என்ற வினைச்சொல்லிற்கும், 'உண்டல்' என்ற தொழிற்பெயருக்கும் முதனிலையாய் வரும் 'உண்' என்பது போன்ற தாதுக்கள், நிலம், இடம், காலம், கருவி, வினைமுதல் உரைக்குங்கிளவி, தொழில் ஆகிய அறுவகைப் பெயருடனும் சேருகின்ற பொழுது, மூன்று காலத்திற்கும் பொதுவாய்த் தோன்றும். இத்தகைய சொற்களை 'வினைத்தொகை' என்பர் சேனாவரையர்.

(4) பண்புத்தொகை :- நிறம், வடிவு, அளவு, சுவை முதலிய பண்புகளைக் குறிக்கும் சொல் முன்னரும், அப்பண்பினை உடைய பொருள் பின்னருமாக இயைந்து ஒன்றனையொன்று விசேடித்து (சிறப்பித்து) வருவது பண்புத் தொகையாம். இங்ஙனமன்றி ஒரு பொருளைக் குறிக்கின்ற இருபெயர்கள் கூடிப் பண்புத்தொகை எனப்பெயர் பெறுவனவுமுள. அவை 'இருபெயரொட்டுப் பண்புத் தொகை' எனப்படும்.

(5) உம்மைத்தொகை :- 'உம்' என்ற சொல் மறைந்து நிற்பது உம்மைத் தொகையாம். இது இருபெயர், பலபெயர், அளவுப் பெயர், எண்ணியற்பெயர், நிறைப்பெயர், எண்ணின் பெயர் ஆகிய அறுவகைப் பெயர்க்கண்ணும் வரும். இவ்வும்மைத் தொகை உயர் திணைக்கண் வருங்கால் பலர்பாலுக்குரிய ஈற்றைக்கொண்டே முடியும்.

(6) அன்மொழித்தொகை:- ஒருவன் கூறும் சொற்களில் அன்றிப் பின்னரும் வேறூர் சொல் தொக்கு நிற்கும் தொகை அன்மொழித் தொகையாம். அது பெரும்பான்மையும் பண்பு, உம்மை, வேற்றுமை ஆகிய மூன்று தொகைகளையும், சிறுபான்மை வினைத்தொகை, உவமத் தொகைகளையும் நிலைக்களனாகக் கொண்டு பிறக்கும்.

பொருள் சிறக்குமாறு:- இவ்வறுவகைத் தொகைச் சொற்களும் முன்மொழியில் பொருள் சிறப்பதும், பின்மொழியில் பொருள் சிறப்பதும், இருமொழியிலும் பொருள் சிறப்பதும், அவ்விரு மொழியிலுமன்றிப் பிறமொழிக்கண் பொருள் சிறப்பதும் ஆக நான்கு வகையாய்ப் பொருள் சிறக்கும். வேற்றுமைத் தொகையும், பண்புத்தொகையும் பெரும்பாலும் பின்மொழியிலும், சிறுபான்மை முன்மொழியிலும் பொருள் சிறந்து நிற்கும். உவமைத் தொகையும், வினைத்தொகையும், பின்மொழியிலேயே பொருள் சிறந்து நிற்கும். அன்மொழித் தொகை இருமொழியிலுமன்றிப் பிறமொழியில் பொருள் சிறந்து நிற்கும். மேற்கூறப்பட்ட அறுவகைத் தொகைச் சொற்களும் ஒரு சொல் போல் நடக்கும்.

(இ) அடுக்கு :

(i) ஒருசொல் அடுக்கு:- சொற்கள் ஒன்றேடொன்று அடுக்கி வரின் அது அடுக்காம். அது (1) இசைநிறை (2) அசைநிலை (3) பொருளொடு புணர்தல் என மூவகைப்படும்.

(1) இசைநிறை :- இது ஒரு செய்யுளின்கண் இசைநிறைப்பதற்காக வரும். இது நான்கு முறை அடுக்கி வருதலை எல்லையாக உடையது. எனவே இது மூன்று முறையும் இரண்டு முறையும் கூட அடுக்கி வரலாம். (2) அசைநிலை:- இது இசைநிறைத்தற்கன்றிச் செய்யுட்கண் இன்பம் குறித்தற்காக வரும். இது அடுக்கி வருதற்கு எல்லை கூறூராயினும் உரையாசிரியர்கள் இருமுறையே அடுக்கி வருமென்பர். (3) பொருளொடு புணர்தல்:- யாதானும் ஒரு பொருள் குறித்தற்காக அடுக்கி வருவதனைப் 'பொருளொடு புணர்தலின்கண்' வந்த அடுக்கு என்பர். இது விரைவு, துணிவு, உடன்பாடு, ஒருதொழில் பலகால் நிகழ்தல் ஆகிய பொருள் வேறுபாட்டின்கண் வரும் என்பர்.

(ii) அசைநிலை அடுக்கு:- கண்டீர், கொண்டீர், சென்றீர், போயிற்று என்ற சொற்கள் ஆ, ஒ என்னும் வினு எழுத்துக்களை ஈற்றில் கொண்டு நின்றவழி அவையும் அசைநிலை எனப் பெயர் பெறும். கேட்டை, நின்றை, காத்தை, கண்டை என்ற நான்கு சொற்களும் முன்னிலைப் பொருளை உணர்த்தி நில்லாதவழி அசைநிலையாம். இவ்விருசாரனவும் அடுக்கியும் அடுக்காதும் வரும். இவை இக்காலத்தில் வழக்கில் இல்லை.

(ஈ) வினைமுற்று:

பிறிதோர் சொல்லை நோக்காது தானே தொடராதற்கு ஏற்கும் சொல் வினைமுற்ருகும். அது இறப்பு, எதிர்வு, நிகழ்வு, ஆகிய முக்காலத்தினும் வரும்; தன்மை, முன்னிலை படர்க்கை ஆகிய மூவிடத்திலும் வரும்; உயர்திணை, அஃறிணை, பொதுத்திணை என முத்திணையினும் வரும். காலத்தைத் தெளிவாகத் தெரிவிக்கும் வினையினைத் தெரிநிலைவினை என்றும், காலத்தைக் குறிப்பாகக் காட்டும் வினையினைக் குறிப்பு வினை என்றும் கூறுவர். உயர்திணை. அஃறிணை, விரவுத்திணை ஆகிய முத்திணைகளினும் வரும் வினையை இவ்விரண்டிடத்தும் உறழ ஆரும். முன்னைய இடங்களோடும் காலங்களோடும் உறழப் பலவாம்.

மேற்கூறப்பட்ட இலக்கணவரையறையில் அடங்காது பிறவாறு வரும் வினைச்சொற்களும் முற்றென்றே பெயர் பெறும். முற்றுச்சொற்கள் பல தொடர்ந்து ஒரு பெயரையே முடிபாகக்கொள்ளினும் வழுவில்லை. எவ்வாற்றானும் முற்றுக்கள் பெயரைக்கொண்டே முடிய வேண்டும். வினையைக் கொண்டு முடியுமேல் எச்சமாம்.

உ) எச்சங்கள்:

தாமே தொடராதற்கு உரிய நிலையின்றிப் பிற சொற்களின் உதவியால் முற்றுப்பெற நிற்பன எச்சமாம். அவை பிரிநிலை யெச்சம், வினையெச்சம், பெயரெச்சம், ஒழியிசை எச்சம், எதிர்மறை யெச்சம், உம்மையெச்சம், எனவெனெச்சம், சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் எனப்பத்து வகைப்படும். அவை எச்சச் சொற்களைத் தாம் விரும்புவனவும், எச்சச் சொற்களாகத் தாம் நிற்பனவும் என இருபிரிவினவாம். எச்சச் சொற்களாக நிற்பன சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் ஆகிய மூன்றுமாம். எஞ்சிய ஏழு எச்சங்களும் எச்சச் சொற்களைத் தாம் விரும்புவனவாம். எனவே சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம் ஆகிய மூன்றும் தாமே முடிக்கும் சொல்லாவதல்லது தமக்கொரு முடிக்குஞ் சொல்லை வேண்டுவன அல்ல என்பதும், ஒழிந்த ஏழு எச்சங்களும் தமக்கொரு முடிக்குஞ் சொல்லை வேண்டி நின்று தாம் எஞ்சு பொருட்கிளவியாய் நிற்கும் என்பதும் பெற்றும்.

(1) பிரிநிலை யெச்சம் :- பல பொருளில் ஒன்று பிரிந்தவழி பிரிக்கப்பட்ட பொருண்மையும் தோன்ற நிற்பது பிரிநிலை யெச்சமாம். இது பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும் சொல்லோடு முடியும். இது ஏகாரப் பிரிநிலையும், ஓகாரப் பிரிநிலையும் என இருவகைப்படும்.

(2) வினையெச்சம்:- ஒரு சொல் தனக்கு முடிக்கும் சொல்லாகத் தெரிநிலை வினைச் சொல்லையோ, அன்றிக் குறிப்பு வினைச் சொல்லையோ கொண்டு நிற்பின் அது வினையெச்சமாம். வினை எச்சங்கள் வினையியலிற் கூறிய இலக்கணத்தனவன்றிப் பிறவாறும் வரும்.

(3) பெயரெச்சம்:- ஒரு சொல் தனக்கு முடிக்கும் சொல்லாகப் பெயரைக் கொண்டு நிற்பின் அது பெயரெச்சமாம். அது செய்யும், செய்த என்னும் வாய்பாட்டில் வரும்.

(4) ஒழியிசையெச்சம் :- சொல்லப்பட்ட பொருளையன்றி ஒழிந்து நின்ற பொருளை எச்சமாகக் கொண்டு நிற்பது ஒழியிசை யெச்சமாம். ஒழியிசை-ஒழிந்த சொல். அது மன்னை ஒழியிசை, தில்லை ஒழியிசை, ஓகார ஒழியிசை என மூன்று வகைப்படும்.

(5) எதிர்மறையெச்சம் :- ஒரு பொருளைக் கூறிய வழி அதற்கு மாறுபட்ட பொருளையும் அதனாலே உணர நிற்பது எதிர்மறையெச்சமாம். அது எதிர்மறையில் வரும் சொல்லைத் தமக்கு முடிபாகக் கொண்டு வரும். எதிர் மறை எச்சத்தை 'மாறுகொள் எச்சம்' என்றும் வழங்குப. அது ஏகார எதிர் மறை, ஓகார எதிர்மறை, உம்மை எதிர் மறை என மூவகைப்படும்.

(6) உம்மையெச்சம் :- உம்மை கொடுக்க வேண்டியவழி, அது எஞ்சி நிற்பின் உம்மையெச்சமாம். அங்ஙனம் ஒன்றற்கொன்று முடிவதும், முடிக்கப்படுவதுமாகிய உம்மையெச்சம் இரண்டனுள் ஓர் உம்மைக்குப் பொருந்திய வினையே மற்றொரு உம்மைக்கும் முடிபாய் வரும். உம்மை எச்சத்தின் முன்னர் இருக்கும் சொல் உம்மை இல்லாத சொல்லாயும், பின்னர் இருக்கும் சொல் உம்மை உடைய

தாயும் வரின், நிகழ்காலத்தோடு எதிர்காலமும், இறந்த காலத்தோடு எதிர் காலமுமாக மயங்கி வரினும் இழுக்கில்லை.

(7) எனவென் எச்சம் :- எனவென்னும் சொல் எஞ்சி நிற்பது எனவென் எச்சமாம். அது வினை, குறிப்பு, இசை, பண்பு, எண், பெயர் ஆகிய ஆறு பெயரோடு வரும். வினையெச்ச வாய்ப்பாடுகளுள் செய்தென என்பதும் ஒன்று. எனவே எனவென் எச்சம் ஏழு வகைப் படும். அவற்றுள் எண், பெயர் ஆகியவற்றோடு வரும் எனவென் எச்சம் வினைகொள்ளாவாம். செய்தென என்னும் வாய்பாட்டில் வரும் எனவென் எச்சம் வினையொடு முடிதல் வினையியலுள் கூறப் பட்டது. எனவே வினை, குறிப்பு, இசை, பண்பு என்னும் நான்கு சொற்களோடும் வரும் எனவென் எச்சம் வினையொடு முடிதலையே இவ்வியலில் கூறப்படுகின்றது.

(8) குறிப்பெச்சம் :- சொற்படு பொருளன்றிச் சொல்லுவான் குறித்த பொருள் எஞ்சி நிற்பது குறிப்பெச்சமாம். அதுதானே எச் சமாக நிற்பதன்றி தனக்கொரு முடிக்குஞ்சொல்லை வேண்டாததாம்.

(9) இசையெச்சம் :- முன்போலப் பல தொடர் மொழியன்றி ஒரு தொடர்மொழி எஞ்சி நிற்பது இசையெச்சமாம். அது தானே எச்சமாக நிற்பதன்றி, தனக்கொரு முடிக்குஞ் சொல்லை வேண்டாத தாம்.

(10) சொல்லெச்சம் :- முன்போல ஒரு தொடர் எஞ்சி நிற்ப தன்றி, யாதானுமொரு சொல் எஞ்சி நிற்பது சொல்லெச்சமாம். அதுதானே எச்சமாக நிற்பதன்றித் தனக்கொரு முடிக்குஞ்சொல்லை வேண்டாததாம்.

## 5. மரபு ஒழிபு :

(1) அவையல் கிளவி :- பெரியோர் அவைக்கண் வழங்கத்தகாத சொற்களை வழங்க வேண்டிய இன்றியமையாமை நேரின் அச்சொற் களை மறைத்துச் சொல்லுக. அங்ஙனம் மறைத்துச் சொல்லுங்கால் இதுவரை அறிஞர்கள் எங்ஙனம் மறைத்துச் சொன்னார்களோ, அங் ஙனமே மறைத்துச் சொல்லுக.

(2) இரத்தல் கிளவி :- ஒருவன் ஒரு பொருளை இரக்கும்பொ ழுது வழங்கும் சொற்களில் ஈ, தா, கொடு என்னும் மூன்றும் வரை யறுத்துச் சொல்லும் நெறியுடையன. இரக்கப்படுவோனின் இழிந் தோன் 'ஈ' என்ற சொல்லாலும், ஒப்போன் 'தா' என்ற சொல்லா லும், உயர்ந்தோன் 'கொடு' என்ற சொல்லாலும் சொல்லல் வேண் டும். கொடு என்பது படர்க்கைச் சொல்லாம். அது தன்னைப் பிறன் போற் கூறுமிடத்துத் தன்மை இடத்திற்குரியதாய் வருதலும் உண்டு.

(3) இலக்கண நெறியாலன்றி வழக்கு நெறியால் வருவன :- ஒரு திணைச்சொல்லை ஏனைத் திணைச்சொல்லால் வழங்குவனவும், திசைச் சொற்களில் வாய்பாடு திரிந்து வருவனவும், பழஞ் சொற்களில் வழக்கில் இயைபில்லாதன இயைந்து வருவனவும், பொருள் மயக் காகிய பிசிச் செய்யுட்கண் திணை முதலாயின திரிந்து வருவனவும், மந்திரச் சொற்களாய் வருவனவும், இலக்கண நெறிக்குப் பொருத்த மிலவேனும் வழக்கில் அவை கடியப்படாவாம்.

(4) குறிப்பு மொழி :- வாராதனவற்றை வருவனவாகக் கூறுவன வும், சொல்லாதனவற்றைச் சொல்லுவனவாகக் கூறுவனவும், வழு வாயினும் சொல்லுவான் கருத்து வகையான் வழுவற்றன என்று கருதப்படும்.

(5) முன்னிலைச் சொல் :-- உடன்பாட்டில் வரும் செய்யாய் என்னும் வாய்ப்பாட்டுச் சொல் ஆய் விகுதி குன்றிச் செய் என நிற்றலும் உண்டு. முன்னிலை வினைச் சொற்களில் வருகின்ற ஈ காரமும் ஏகாரமும் அம்முன்னிலை வினைச்சொற்கு ஏற்ற மெய்யெழுத்துப் பெற்றுவரும். ஈகாரம் எம்மெய்யெழுத்துக்களோடும் பொருந்தி வரும். ஏகாரம் மகர மெய்யோடு மட்டுமே வரும்.

(6) சிறப்பிக்கும் சொல்லும், சிறப்பிக்கப்படும் சொல்லும் :—சொல் சிறப்பிக்கும் சொல், சிறப்பிக்கப்படும் சொல் என இருவகைப்படும். 'கருங்குதிரை' என்புழி 'கரு' என்பது சிறப்பிக்கும் சொல்லாம். குதிரை என்பது சிறப்பிக்கப்படும் சொல்லாம். சிறப்பிக்கும் சொல்லை 'வேறுபடுக்கும் சொல்' என்றும், 'விசேடிக்கும் சொல்' என்றும் கூறுப. சிறப்பிக்கப்படும் சொல்லை 'வேறு படுக்கப்படும்' சொல் என்றும், 'விசேடிக்கப்படும்' சொல் என்றும் கூறுப. இடைச் சொற்கள் எல்லாம் சிறப்பிக்கும் சொல்லாகவே வரும். உரிச்சொற்களில் சிறப்பிக்கும் சொற்களாகவே வருவனவும் உள, சிறப்பிக்கப்படும் சொற்களாகவே வருவனவுமுள. இரண்டற்கும் பொதுவாய் வருவனவும் உள. உறு, தவ, நனி, ஏ என்பன போல்வன சிறப்பிக்கும் சொற்களாகவே வரும்; குரு, கேழ், செல்லல், இன்னல், என்பன போல்வன சிறப்பிக்கும் சொற்களாகவும் வரும்; சிறப்பிக்கப்படும் சொற்களாகவும் வரும்.

(7) உடனிலை போற்றல் :— வழக்கின்கண் ஒருங்கு நிற்றற்குத் தகுதி இல்லாத மாறுபாடுடைய சொற்கள் ஒருங்கு நிற்பினும் இழுக்கில்லை.

(8) குறிப்பில் தருமொழி :— செஞ்சொற்களானன்றிச் சொல்லுவான் குறிப்பினுல் பொருள் உணரப்படும் சொற்களும் பல உள. அவற்றை அறிந்து போற்றுக.

(9) ஒருபொருள் இருசொல் :— ஒரு பொருளைக் குறிக்கும் இரண்டு சொற்கள் பொருள் வேறுபாடின்றித் தொடர்ந்துவரின் அவற்றையும் ஏற்றுக் கொள்க.

(10) ஒருமை சுட்டியபெயர் :— ஒருமையைக் குறிக்கும் பெயர்ச் சொற்களில் சில பன்மைக்கும் உரியனவாம்.

(11) முன்னிலை சுட்டியபெயர் :— முன்னிலை குறித்த ஒருமைச் சொல் பன்மைச் சொல்லோடு முடிதலும் உண்டு. இந்நிலை ஆற்றுப் படைச் செய்யுளிடத்துக் காணப்படும்.

(12) மொழிக்குப் பாதுகாப்பு :— தொல்காப்பியர் காலத்துச் சொற்களேயன்றி அவ்வக்காலத்துப் புதிய சொற்கள் தோன்றி வழங்கப்படுமாயினும் அவையும் ஏற்றுக் கொளற்கு உரியனவாம்.

### 6. புறனடை :

இவ்வதிகாரத்து வழக்குச் செய்யுள் ஆகிய இரண்டிற்கும் கூறப்பட்ட சொற்கள் பலவுள. அவற்றுள் பல விரிவாகக் கூறப் பட்டுள்ளன. சில நுண்ணுணர்வுடையோர் உய்த்துணருமாறு கூறப் பட்டுள்ளன. அவற்றை அகத்தியம் போன்ற தொன்னூல்களின் துணைக்கொண்டு உரை கூறியும், சொற்களைப் பிரித்துக் காட்டியும் அமைத்துக் கொள்க.



# பொருளடக்கம்

# அடிக்குறிப்பில் எடுத்தாளப்பெற்ற சொற்களின் குறுக்க அட்டவணை



1. இளம் — இளம்பூரணர்
2. சேனு — சேனுவரையர்
3. நச் — நச்சினுர்க்கினியர்
4. தெய் — தெய்வச்சிலையார்
5. கல் — கல்லாடர்
6. ப. உ — பழைய உரையாசிரியர்
7. குறுந் — குறுந்தொகை
8. பதிற் — பதிற்றுப் பத்து
9. பரி — பரிபாடல்
10. கலி — கலித்தொகை
11. அகம் — அகநானூறு
12. சிந் — சிந்தாமணி
13. நன் — நன்னூல்
14. மயிலை — மயிலைநாதர்
15. பெரிய — பெரிய புராணம்



உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# தொல்காப்பியம்

## உ. சொல்லதிகாரம்

### சேனாவரையர் உரை

---

'தன்தோள் நான்கின் ஒன்றுகைம் மிகூஉங்
களிறுவளர் பெருங்கா டாயினும்
ஒளிபெரிது சிறந்தன்(று) அளியவென் நெஞ்சே.'

'ஆதியில் தமிழ்நூல் அகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே.'

'தவளத் தாமரைத் தாதார் கோயில்
அவனைப் போற்றுதும் அருந்தமிழ் குறித்தே.'

'சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிழ்ப்
பரமா சாரியன் பதங்கள்
சிரமேற் கொள்ளுதுந் திகழ்தரற் பொருட்டே.'

### க. கிளவியாக்கம்

261

க. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின்[1] இசைக்குமன சொல்லே.

நிறுத்த முறையானே சொல்லுணர்த்திய எடுத்துக்கொண்டார்; அதனால் இவ்வதிகாரம், சொல்லதிகார மென்னும் பெயர்த்தாயிற்று.

சொல்லாவது எழுத்தொடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது. உரையாசிரியரும் எழுத்தாதல் தன்மையொடு புணர்ந்து என்பார் 'எழுத்தொடு புணர்ந்து' என்றாராகலின், ஒருபுடை யொற்றுமையே கூறினார். தன்மையொடு புணர்ந்து என்னாக்கால், ஓரெழுத் தொருமொழிக்கு எழுத்தொடு புணர்தல் இன்மையின் சொல்லாதல் எய்தா தென்க.

பொருள் குறித்து வாராமையின் அசைநிலை சொல்லாகா எனின்; 'ஆவயின் ஆறும் முன்னிலை யசைச்சொல்' (சொல் - உஎச) என்றும், 'வியங்கோ ளசைச்சொல்' (சொல் - உஎஅ) என்றும் ஓதுதலான், அவையும் இடமுதலாகிய பொருள் குறித்து வந்தன என்க. 'யா கா பிற பிறக்கு' (சொல்-உஎக) என்னுந் தொடக்கத்தனவோ எனின்,

---

1. 'இசைக்குமன்' எனப்பாடம் கொள்வர் இளம். நச். ஆகியோர்.

அவையும் மூன்றிடத்திற்கும் உரியவாய்க் கட்டுரைச் சுவைபட வருத லின் பொருள் குறித்தனவேயாம். இக்கருத்தே பற்றியன்றே ஆசிரியர் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' (சொல்-கருரு) என்றோதுவாராயிற் றென்க.

சொற்றான் இரண்டு வகைப்படும், தனிமொழியும் தொடர்மொழி யும் என. அவற்றுள், தனிமொழியாவது, சமய ஆற்றலால் பொருள் விளக்குவது. தொடர்மொழியாவது, அவாய்நிலையானும் தகுதியானும் அண்மைநிலையானும் இயைந்து பொருள் விளக்குந் தனிமொழி ஈட்டம்.

பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும், இடைச்சொல்லும், உரிச் சொல்லு மெனத் 'தனிமொழி' நான்கு வகைப்படும். 'மரம்' என்பது பெயர்ச்சொல். 'உண்டான்' என்பது வினைச்சொல். 'மற்று' என்பது இடைச்சொல். 'நனி' என்பது உரிச்சொல்.

இருமொழித் தொடரும், பன்மொழித் தொடரும் எனத் 'தொடர் மொழி' இரண்டு வகைப்படும். 'சாத்தன் வந்தான்' என்பது இரு மொழித் தொடர். 'அறம் வேண்டி அரசன் உலகம் புரந்தான்' என்பது பன்மொழித் தொடர்.

'அதிகாரம்' என்னும் சொற்குப் பொருள் பல உளவேனும், ஈண்டு அதிகாரம் என்றது, ஒரு பொருள் நுதலி வரும் பல ஓத்தினது தொகு தியை என்க. வடநூலாரும் ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்க ளோடு சென்றியைதலையும், ஒன்றன் இலக்கணம் பற்றி வரும் பல சூத்திரத் தொகுதியையும் 'அதிகாரம்' என்ப. சொல்லதிகாரம், சொல்லை யுணர்த்திய அதிகாரம் என விரியும். அச்சொல்லை யாங்ஙனம் உணர்த்தினானோ எனின், தம்மையே எடுத்தோதியும், இலக்கணங் கூறியும் உணர்த்தினான் என்பது.

வழுக்களைந்து சொற்களை ஆக்கிக்கொண்டமையான், இவ்வோத் துக் 'கிளவியாக்க' மாயிற்று. ஆக்கம்—அமைத்துக் கோடல்; நொய்யும் நுறுங்கும் களைந்து அரிசி அமைத்தாரை, அரிசியாக்கினார் என்ப வாகலின். சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையால் 'கிளவியாக்க' மாயிற்று எனினும் அமையும்.

பொதுவகையாற் 'கிளவி' என்றமையால், தனிமொழியுந் தொடர்மொழியுங் கொள்ளப்படும். கிளவி, சொல், மொழி என்னுந் தொடக்கத்தனவெல்லாம் ஒருபொருட் கிளவி.

இதன் பொருள் : மக்களென்று கருதப்படும் பொருளை ஆசிரியர் உயர்திணையென்று சொல்லுவர்; மக்களென்று கருதப்படாத பிற பொருளை அஃறிணையென்று சொல்லுவர்; அவ்விரு திணைமேலும் சொற்கள் நிகழும் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எனச் சொல் இரண்டு என்றவாறும். மக்கட்சாதி சிறந்தமையான் 'உயர்திணை' என்றார்.

'என்மனார்' என்பது செய்யுள் முடிபெய்தி நின்றதோர் ஆர் ஈற்று எதிர்கால முற்றுச்சொல். என்றிசினோர், கண்டிசினோர் என்பன முதலாயின அவ்வாறு வந்த இறந்தகால முற்றுச் சொல்.

என்ப என்னும் முற்றுச் சொல்லினது பகரம் குறைத்து மன்னும் ஆரும் என இரண்டு இடைச்சொல் பெய்து விரித்தார் என்று உரையாசிரியர் கூறினாரால் எனின்:—'என்மனார்' என்பது இடர்ப் பட்டுழிச் சிறுபான்மை வாராது, [1]இந்நூலுள்ளுஞ் சான்றோர் செய்யு ளுள்ளும் பயின்று வருதலானும், 'இசைநிறை' என்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார், பின்னும் இசைநிறை என்றல் மேற்கோள் மலை வாதலானும், அவர்க்கது கருத்தன்றென்க. மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணர வைத்தல் அவர்க்கு இயல்பாகலான் செய்யுள் முடிபென்பது கூறாராயினார்.

என்மனார் ஆசிரியர் எனவே, உயர்திணை அஃறிணை என்பன தொல்லாசிரியர் குறியாம். ஆசிரியர் என்னும் பெயர் வெளிப்படாது நின்றது.

மக்களாகிய சுட்டு யாதன்கண் நிகழும், அது 'மக்கட்சுட்டு' எனப் பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஈண்டு மக்கள் என்றது, மக்கள் என்னும் உணர்வை. எனவே, மக்களேயா யினும், மக்களென்று சுட்டாது பொருளென்று சுட்டியவழி உயர்திணை எனப்படா என்பதாம்.

இனி 'அவரல' என்னாது 'பிற' என்றே விடின் யாதல்லாத பிற என்று அவாய் நிற்குமாகலின், 'அவரல' என்றார். 'மக்கட்சுட்டே' என்று மேல் நின்றமையின் மக்களல்லாத பிற என்று உணரலாம் எனின், ஆற்றல் முதலாயினவற்றாற் கொள்வது சொல் இல்வழி என மறுக்க. இனி 'அவரல' என்றே ஒழியின், அவற்றது பகுதி யெல்லாம் எஞ்சாமல் தழுவாமையின், எஞ்சாமல் தழுவுதற்கு 'அவரல பிற' என்றார்.

செய்யுளாகலான் 'ஆயிருதிணை' எனச் சுட்டு நீண்டது. வரையறை யின்மையின் ஈண்டு யகர உடம்படுமெய் ஆயிற்று.

சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாகலின், ஆயிருதிணையின் கண் என ஏழாவது விரிக்க. இன் சாரியை வேற்றுமையுருபு பற்றியும் பற்றாதும் நிற்கும் என்று உரையாசிரியர் இரண்டாவது விரித்தாரா லெனின் :—'சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும், சாரியை உள் வழித் தன் உருபு நிலையலும்' (எழு - கருஎ) என்று இரண்டாவதற்குத் திரிபு ஓதினமையானும், 'செலவினும் வரவினும் தரவினுங் கொடையி னும்' (சொல்-உஅ) என்புழியும் பிறாண்டுமெல்லாம் ஏழாவது விரித்தத் கேற்பப் பொருளுரைத்தமையானும், அவ்வுரை போலியுரை யென்க.

'ஆயிருதிணையினும்' என்னும் உம்மை விகாரவகையால் தொக்கு நின்றது. 'இசைக்கும்' என்பது செய்யும் என்னும் முற்றுச்சொல். 'மன்' என்னும் இடைச்சொல் மன என ஈறு திரிந்து நின்றது. 'மன்' என்று பாடம் ஓதுவாரு முளர். ஏகாரம் ஈற்றசை.

சொல் வரையறுத்தலே இச் சூத்திரத்திற்குக் கருத்தாயின், 'ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்' என்றாற்போல 'உயர்திணைச் சொல்', 'அஃறிணைச் சொல்' என அமையும், உயர்திணை மக்கள், அஃறிணை பிற எனல் வேண்டா எனின்:—உயர்திணை அஃறிணை என்பன தொல்லாசி ரியர் குறியாகலான், ஆடூஉ மகடூஉப்போல வழக்கொடு படுத்துப்

---

1. 'நூலுள்ளும்' என்பதும் பாடம்.

பொருள் உணரலாகாமையின், உயர்திணை மக்கள் அஃறிணை பிற எனல் வேண்டும் என்பது. இவ்வாறு ஒரு பொருள் நுதலிற்றாக உரையாக்கால், சூத்திரம் ஒன்றுமாறில்லை என்க. (க)

உ. ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.

இ - ள்: ஆடூஉ அறிசொல்லும் மகடூஉ அறிசொல்லும் பல்லோர் அறியுஞ் சொல்லொடு பொருந்தி, அம்மூன்று கூற்றுச் சொல்லும் உயர்திணையனவாம் எ - று.

ஆண்மகனை 'ஆடூஉ' என்றலும், பெண்டாட்டியை 'மகடூஉ' என்றலும் பண்டையார் வழக்கு.

அறிவு முதலாயினவற்றான் ஆண்மகன் சிறந்தமையின் 'ஆடூஉ அறிசொல்' முற்கூறப்பட்டது. பன்மை இருபாலும்பற்றி வருதலின் 'பல்லோரறிசொல்' பிற்கூறப்பட்டது.

இரண்டாம் வேற்றுமை உயர்திணைக்கண் சிறுபான்மை தொகப் பெறுதலின், தொக்கு நின்றது. திரிந்த புணர்ச்சி யன்மையின் [1]விகார வகையால் தொக்கதென்பாரும் உளர்.

'சிவணி' என்னும் வினையெச்சம், 'உயர்திணைய' என்னும் வினைக் குறிப்புக்கொண்டது, ஆறும் வேற்றுமை ஏற்று நின்ற சொல்பெயரா யும் வினைக்குறிப்பாயும் நிற்குமாகலான். உயர்திணையவாம் என்னும் முப்பாற் சொல்லின் வினை, 'ஆடூஉ அறிசொல்' 'மகடூஉ அறிசொல்' என்னும் இரண்டன் வினையாகிய சிவணி என்னுஞ் செய்தென் எச்சத் திற்கு வினைமுதல் வினையாயினவாறு என்னையெனின்:—உயர்திணைய வாதல், ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் என்பனவற்றிற்கும் எய்துதலான், வினைமுதல் வினையாம் என்க; 'முதனிலை மூன்றும் வினை முதன் முடிபின' (சொல் - உ௩௦) என்புழி, வினைமுதல் வினையென்னுந் துணையல்லது பிறிதொன்றற்குப் பொதுவாகாது வினைமுதற்கே வினையாதல் வேண்டும் என்னும் வரையறை யின்மையின். அல்லாக் கால், 'இவளும் இவனும் சிற்றிலிழைத்தும் சிறுபறை யறைந்தும் விளையாடுப' என்பன போல்வன அமையாவாம் என்க.

'ஆடூஉ அறிசொல்' முதலாயினவற்றை உணர்த்தியல்லது அவற்றது இலக்கணம் உணர்த்தலாகாமையின், 'பால் உணர்த்தும் எழுத்து வகுப்பவே அவைதாமும் பெறப்படும்; இச்சூத்திரம் வேண்டா' என்பது கடா அன்மை உணர்க.

உயர்திணைச் சொல் உணர்த்தி அதனது பாகுபாடு கூறுகின்றாராகலின், 'அம் முப்பாற்சொல் உயர்திணைய' என்றாராயினும், உயர்திணைச் சொல் மூன்று பாகுபாடு படும் என்பது கருத்தாகக் கொள்க. இக்கருத்தானன்றே, ஆசிரியர் அம்முப்பாற் சொல்லும் என 'இனைத்தென் அறிந்த பொருள் தொகுதிக்குக்' (சொல்-௩௩) கொடுக்கும் உம்மை [2]கொடாராயினதூஉம், உரையாசிரியரும் உயர்திணை யெனப்பட்ட பகுப்பை விரிப்புழி இத்துணையல்லது விரிபடாதென்பது ஈண்டுக்

1. 'விகார வகையால் தொக்கதென்பார்' யாரெனத் தெரிந்திலது.
2. 'கொடாராயினும்' என்பதும் பாடம்.

கூறியது[1] என்றுரைத்ததூஉம் என்க. ‘ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே’ (சொல் - ௩) என்பதற்கும் ஈதொக்கும். (௨)

௩. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே.

இ - ள்: ஒன்றனை அறியுஞ் சொல்லும், பலவற்றை அறியும் சொல்லும் என அவ்விரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணையனவாம் எ - று. (௩)

௪. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியும்அந் தம்தமக் கிலவே
உயர்திணை மருங்கின் பால்பிரிந் திசைக்கும்.

இ - ள்: உயர்திணையிடத்துப் பெண்மைத்தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச்சொல்லும், தெய்வத்தைக் குறித்த பெயர்ச் சொல்லும், இவையெனத் தம் பொருளை வேறு அறிய நிற்கும் ஈற் றெழுத்தினைத் தமக்குடைய அல்ல, உயர்திணையிடத்து அதற்குரிய பாலாய் வேறுபட்டு இசைக்கும் எ - று.

பால் வேறுபட்டு இசைத்தலாவது, தாம் உயர்திணைப் பெயராய் ஆடூஉ அறிசொல் முதலாயினவற்றிற்குரிய ஈற்றெழுத்தே தம் வினைக்கு ஈறாக இசைத்தல்.

எடுத்துக் காட்டு: பேடி வந்தாள், பேடர் வந்தார், பேடியர் வந்தார் எனவும்; தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவும் வரும்.

அலிப்பெயரின் நீக்குதற்குப் ‘பெண்மை சுட்டிய’ என்றும், மகடூஉப் பெயரின் நீக்குதற்கு ‘ஆண்மை திரிந்த’ என்றுங் கூறினர். ‘பெண்மை சுட்டிய’ எனவே பெண்மை சுட்டாப் பேடு என்பதும் ஒழிக்கப்பட்டதாம். பெண்மை திரிதலும் உண்டேனும் ஆண்மை திரிதல் பெரும்பான்மையாகலான் ‘ஆண்மை திரிந்த’ என்றார். பேடியர் பேடிமார் பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் ‘பேடியென்னும் பெயர்நிலைக்கிளவி’யென்னாது ‘பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவி’ என்றார். ‘பெண்மை சுட்டிய’ என்னும் பெய ரெச்சம் ‘பெயர்நிலைக் கிளவி’ என்னும் பெயர் கொண்டது. ‘ஆண்மை திரிந்த’ என்பது இடைநிலை. ‘தன்மை திரிபெயர்’ (சொல் - ருசு) என்றாற்போலச் சொல்லொடு பொருட்கு ஒற்றுமை கருதி ‘ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி’ என்றார்.

‘உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்’ எனவே தமக்கென வேறு ஈறு இன்மை பெறப்படுதலின், ‘இவ்வென அறியும் அந்தம் தமக் கிலவே’ எனல் வேண்டா எனின்:—[2] தமக்குரிய ஈற்றான் இசைப்பதன்றி யும், ஆடூஉ வறிசொல் முதலாயினவற்றிற்குரிய ஈற்றானும் இசைக்குங் கொல் என்னும் ஐயம் நீக்குதற்கு, ‘அந்தம் தமக்கிலவே’ எனல் வேண்டும் என்பது.

---

1. இவ்வாக்கியம் இளம்பூரணர் உரையில் இல்லை. 2. ‘தமக்கென வேறு ஈறு உடையவாய்’ என்பதும் பாடம்.

பாலுள் அடங்காத பேடியையும், திணையுள் அடங்காத தெய்வத்தையும், பாலுள்ளும் திணையுள்ளும் அடக்கியவாறு.

'சுட்டிய' என்பது செய்யிய என்னும் வினையெச்ச மென்றும், ஆண்மை திரிதல் சொற்கின்மையின் 'பெயர்நிலைக்கிளவி' என்பது ஆகுபெயராய்ப் பொருண்மேல் நின்றதென்றும் உரையாசிரியர் கூறினாராலெனின்:—ஆண்மை திரிதல் பெண்மைத்தன்மை எய்துதற் பொருட்டன்றிப் பேடிக்கு இயல்பாகலின் பெண்மை சுட்ட வேண்டி ஆண்மை திரிந்த என்றல் பொருந்தாமையானும், பொருளே கூறலுற்றாராயின் ஆசிரியர் பேடியும் தெய்வமும் என்று தாம் கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்கிய வாய்பாட்டாற் சூத்திரிப்பராகலானும், அவர்க்கது கருத்தன்மையான், உரையாசிரியர்க்கும் அது கருத்தன்றென்க. (௪)

௫. னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்.

இ - ள்: னஃகானாகிய ஒற்று ஆடூஉ அறிசொல்லாம் எ - று.

எ - டு: உண்டனன், உண்டான், உண்ணாநின்றனன், உண்ணாநின்றான், உண்பன், உண்பான், கரியன், கரியான் என வரும்.

ஆடூஉ அறிசொல்லாவது னகார ஈற்றுச் சொல்லாயினும், பால் உணர்த்துதற் சிறப்பு நோக்கி 'னஃகான் ஒற்றே' என்றார், 'அறமாவது அழுக்காறின்மை' என்றாற்போல. னஃகான் ஒற்று ஆடூஉவறிசொல் என்றாராயினும், ஆடூஉ அறிசொல்லாவது னஃகான் ஒற்றென்பது கருத்தாகக் கொள்க. 'ளஃகான் ஒற்று' முதலாயினவற்றிற்கும் இவை ஒக்கும்.

ஏகாரம் அசைநிலை. உரையாசிரியர் பிரிநிலை யென்றாராலெனின்:—பிரிநிலையாயின் ஆடூஉ வறிசொற்கு இலக்கணங் கூறுதலன்றிப் பிரித்து அதன் சிறப்புணர்த்துதலே கருத்தாமாகலின், அவ்வுரை போலியுரை என்க. (௫)

௬. ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்.

இ - ள்: ளஃகானாகிய ஒற்று மகடூஉ அறிசொல்லாம் எ - று.

எ - டு: உண்டனள், உண்டாள், உண்ணாநின்றனள், உண்ணாநின்றாள், உண்பள், உண்பாள், கரியள், கரியாள் என வரும். (௬)

௭. ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி[1] உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

இ - ள்: ரஃகானாகிய ஒற்றும் பகரமாகிய இறுதியும் மார் என்னும் இடைச்சொல்லும் இம்மூன்றும் பலரறி சொல்லாம் எ-று.

ஏ என்பது ஈற்றசை.

எ - டு: உண்டனர், உண்டார், உண்ணாநின்றனர், உண்ணாநின்றார், உண்பர், உண்பார், கரியர், கரியார் எனவும்; கூறுப, வருப எனவும்; கொண்மார், சென்மார் எனவும் வரும்.

'மார்' எதிர்காலம் பற்றிவந்த ஆரேயாம்; ரஃகான் ஒற்றென அடங்குமெனின்:—அற்றன்று, ஆரேயாயின் கொண்மார் என்புழி

1. 'உட்பட' எனப்பாடம் கொள்வர் ப. உ.

மகரம் காலம்பற்றி வந்ததோர் எழுத்தாகல் வேண்டும்; உண்பார் வருவார் எனக் காலம்பற்றி வரும் எழுத்து முதனிலைக் கேற்றவாற் ருன் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி உண்மார் வருமார் என எல்லா முதனிலை மேலும் மகரத்தோடு கூடி வருதலானும், வினை கொண்டு முடிதற்கேற்பதோர் பொருள் வேறுபாடுடைமையானும் ஆர் ஈறு அன்று வேறெனவே படும் என்பது.

மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதல் ஒப்புமை நோக்கி அர் ஆர் என்னும் இரண்டு ஈற்றையும் 'ரஃகான்' என அடக்கி ஓதினர். அன் ஆன் அள் ஆள் என்பனவற்றையும் இவ்வொப்புமை பற்றி 'னஃகான்' 'ளஃகான்' என அடக்கி ஓதினர்.

'ரகாரம்' மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றிப் பெருவழக் கிற்ருய் வருதலின் முன் வைத்தார். 'மார்' பகரவிறுதியிற் சிறு வழக்கிற்ருகலின் பின்வைத்தார்.

உண்கும், உண்டும், வருதும், சேறும் என்னுந் தொடக்கத்தனவும் பலரறி சொல்லாயினும், அவை 'எண்ணியல் மருங்கில் திரிதலின்' (சொல் - உ0கூ) நேரத்தோன்ருவாகலான், இவற்றை 'நேரத் தோன் றும் பலரறி சொல்' என்ருர்.

மூன்றும் பலரறிசொல் என்ருராயினும், பலரறி சொல்லாவது இம்மூன்றும் என்பது கருத்தாகக் கொள்க. (எ)

அ. ஒன்றறி கிளவி த ற ட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

இ - ள்: ஒன்றறி சொல்லாவது த ற ட என்னும் ஒற்றை ஊர்ந்த குற்றியலுகரத்தை இறுதியாகவுடைய சொல்லாம் எ - று.

எ - டு: வந்தது, வாராநின்றது, வருவது, கரிது எனவும்; கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று எனவும்; குண்டுகட்டு, கொடுந்தாட்டு, குறுந்தாட்டு எனவும் வரும்.

கிடக்கை முறையாற் கூருது 'த ற ட' எனச் சிறப்பு முறையாற் கூறினர்.

'குன்றியலுகரம்' என மெலிந்து நின்றது. தகர உகரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும்பற்றி வருதலும், றகர உகரம் இறந்த காலமும் வினைக்குறிப்பும்பற்றி வருதலும், டகர உகரம் வினைக்குறிப்பேபற்றி வருதலுமாகிய வேறுபாடுடைமையால், குற்றியலுகரமென ஒன்ருகாது மூன்ருயின. (அ)

கூ. அ ஆ வஎன வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே.

இ - ள்: பலவறி சொல்லாவன அ ஆ வ எனவரும் இறுதியை யுடைய அக்கூற்று மூன்று சொல்லாம் எ - று.

எ - டு: உண்டன, உண்ணுநின்றன, உண்பன, கரியன எனவும்; உண்ணு, தின்னு எனவும்; உண்குவ தின்குவ எனவும் வரும்.

உண்ட, உண்ணுநின்ற, உண்ப, கோட்ட என்னுந் தொடக்கத்தன வும் அகரவீற்றுப் பலவறிசொல்.

அவற்றுள் உண்ப என்பது பகர வீற்றுப் பலரறி சொல்லன்றே, அஃறிணைக் காயினவாறென்னையெனின்:—பகர இறுதியாயினன்றே உயர்திணைக்காவது. ஈண்டுக் காட்டப்பட்டது 'கானந் தகைப்ப செலவு' (கலி - ந.) 'சினையவுஞ் சுனையவும் நாடினர் கொயல் வேண்டா நயந்து தாங்கொடுப்ப போல்' (கலி - உஅ) என நின்றன போல எதிர்காலத்து வரும் பகர மூர்ந்து நின்ற அகர ஈறுதலின், அஃறிணைச் சொல்லேயா மென்பது. செய்யுளாகலின், தகைப்பன கொடுப்பன என்னுஞ் சொற்கள் தகைப்ப கொடுப்ப என விகாரவகை யான் அவ்வாறு நின்றனவாகலான், வழக்கு முடிவிற்கு அவை காட்டல் நிரம்பாதெனின்:—தகைத்தன, தகையா நின்றன; தகைத்த, தகையா நின்ற எனவும்; கொடுத்தன, கொடா நின்றன; கொடுத்த, கொடா நின்ற எனவும் இறந்தகாலத்தும் நிகழ்காலத்தும் அகர ஈறு முதனிலைக் கேற்றவாற்ருன் அவ்வக்காலத்திற்குரிய எழுத்துப்பெற்று அன்பெற்றும் பெருதும் முடியுமாறுபோல, எதிர்காலத்தும் முதனிலைக் கேற்றவாற் ருன் அக்காலத்திற்குரிய எழுத்துப் பெற்று அன் பெற்றும் பெருதும் முடியும். எதிர்காலத்திற்குரிய எழுத்தாவன பகரமும் வகரமுமாம். அவற்றுட் பகரம் பெற்று அன்பெற்றும் பெருதும் முடிவுழி; தகைப்பன தகைப்ப, கொடுப்பன கொடுப்ப எனவும்; வகரம் பெற்று அவ்வாறு முடிவுழி, வருவன வருவ; செல்வன செல்வ எனவும் இவ்வாறு முடியு மாகலின், தகைப்ப கொடுப்ப என்பன விகார மெனப்படா இயல்பே யாம் என்பது. கொடுப்பன யாவை அவைபோல, என உவமை கருதாது அவை தம்மையே சுட்டி நிற்றலின் கொடுப்ப என்பது பெயரன்மை யறிக.

அன்பெருது எதிர்காலத்து வரும் வகர ஒற்று ஊர்ந்து நின்ற அகர மாய் வகர ஈறு அடங்கும் எனின், வினை கொண்டு முடிதல் ஒழித்து மார் ஈற்றிற்கு உரைத்தது உரைக்க. அவ்வாறு உரைக்கவே, குகரம் பெற்ற வழி அன்பெறற்கு ஏலாமையின், உண்குவ, தின்குவ என்னுந் தொடக்கத்தன வகர ஈறேயாம். வருவ செல்வ எனக் குகரம் பெருத வழி வகர ஈறுதலும் அகர ஈறுதலும் என இரு நிலைமையும் உடைய வாம். என்னை? எல்லா வினைக்கண்ணும் சேறன்மாலைத்தாகிய வகர ஈறு ஆண்டு விலக்கப்படாமையானும், அத்தன்மைத்தாகிய அகர ஈறும் ஆண்டு வந்து அன் பெருதவழிக், கால வகரம் ஊர்ந்து அவ்வாறு நிற்றலுடைமையானும் என்பது.

'வரும்' என்னும் உகரம் விகாரவகையான் நீண்டு நின்றது. ஈற்று வகையான் மூன்ருகிய சொல் என்பார் 'அப்பால் மூன்று' என்ருர்.

(கூ)

க0. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
[1]ஈற்றில்நின் றிசைக்கும் பதினேரெழுத்தும்
தோற்றந் தாமே வினையொடு வருமே.

இ - ள்: உயர்திணை அஃறிணை யென்னும் இரண்டு திணைக்கண்ணும் உளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்து பாலும் அறிய அவ்வச் சொல்லின் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினேரெழுத்தும் புலப்படுதற்கண் வினைச்சொற்கு உறுப்பாய்ப் புலப்படும் எ - று.

1. 'ஈற்றுநின் றிசைக்கும்' எனப்பாடங்கொள்வர் இளம். தெய். ப. உ. ஆகியோர்.

திணை இரண்டே பால் ஐந்தே என வரையறுத்தற்கு 'இருதிணை மருங்கின் ஐம்பால்' என்றார்.

னகாரமும் ளகாரமும் ரகாரமும் மாரும் இறுதி நின்றுணர்த்தும் என்பதற்கு 'ஈற்றின் நின்றிசைக்கும் பதினோ ரெழுத்தும்' என்பது ஞாபக மாயிற்று; அல்லனவற்றிற்கு அநுவாத[1] மாயிற்றென்க.

'தாமே' என்பது கட்டுரைச் சுவைபட நின்றது. 'வினை' எனப் பொதுப்படக் கூறினாராயினும், ஏற்புழிக்கோடல் என்பதனாற் படர்க்கை வினை என்று கொள்ளப்படும்.

இவை பெயரொடு வருவழித் திரிபின்றிப் பால் விளக்காமையின் 'வினையொடு வரும்' என்றார். (கo)

கக. வினையின் தோன்றும் பால்அறி கிளவியும்
பெயரின் தோன்றும் பால்அறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே.

ஒரு திணைச்சொல் ஏனைத் திணைச்சொல்லொடு முடியுந் திணைவழூஉம், ஒருபாற்சொல் அத்திணைக்கண் ஏனைப் பாற் சொல்லொடு முடியும் பால்வழூஉம், பிறிதோர் காரணம் பற்றாது ஒரு பொருட்குரிய வழக்கு ஒரு பொருண்மேற் சென்ற தெனப்படும் மரபு வழூஉம், வினயதற் கிறையாகாச் செப்பு வழூஉம், வினவப்படாத பொருளைப்பற்றி வரும் வினு வழூஉம், ஓர் இடச்சொல் ஓர் இடச்சொல்லொடு முடியும் இட வழூஉம், காலக் கிளவி தன்னோடியையாக் காலமொடு புணருங் கால வழூஉம் என வழூஉ எழுவகைப்படும். 'வழுவற்க' என்றலும் 'வழூஉ வமைத்தலும்' என வழுக் காத்தல் இருவகைப்படும். குறித்த பொருளை அதற்குரிய சொல்லாற் சொல்லுக என்றல் வழுவற்க என்றலாம். குறித்த பொருட் குரிய சொல்லன்றாயினும் ஒருவாற்றான் அப்பொருள் விளக்குதலின் அமைக என்றல் வழுவமைத்தலாம்.

இச்சூத்திர முதலாக இவ்வோத்து வழுக்காக்கின்றது.

இ - ள்: கூறப்பட்ட பதினோரீற்றவாய் வினைபற்றி வரும் பால் அறி சொல்லும், அவன் இவன் உவன் என்பன முதலாகப் பெயர்பற்றி வரும் பால்அறி சொல்லும், தம்முள் தொடருங்கால், ஒரு பாற்சொல் ஏனைப் பாற்சொல்லொடு மயங்கா, தம்பாற் சொல்லொடு தொடரும் எ - று.

எனவே, பிற பாற்சொல்லொடு தொடர்வன வழூஉ என்பதாம்.

ஈண்டுப் பெயரென்றது பொருளை. திணையுணராக்கால் அதன் உட்பகுதியாகிய பால் உணர்தலாகாமையின், பால்அறி கிளவி எனவே திணையறிதலும் பெறப்படும்; படவே, மயங்கல்கூடா என்றது திணை யும் பாலும் மயங்கற்க என்றவாறும்.

இன்னும் 'மயங்கல்கூடா' என்றதனால், வினைப் பாலறிசொல்லும் பெயர்ப் பாலறிசொல்லும், பாலறி சொல்லுள் ஒரு சாரனவும் இடமுங் காலமும் உணர்த்துமாகலின், அவ்வாறு உணர்த்துவனவற்றானும் மயங்கற்க என்றவாறும்; ஆகவே, இடமும் காலமும் மயங்காது வருதலும் கூறப்பட்டதாம்.

---

1. 'மாத்திரம் என்றார்' என்பதும் பாடம்.

எ - டு: அவன் வந்தான், அவள் வந்தாள், அவர் வந்தார், அது வந்தது, அவை வந்தன எனவும்; நெருநல் வந்தான் எனவும் திணையும் பாலும் இடமும் காலமும் வழுவாது முடிந்தவாறு. அவ்வாறன்றி அவன் வந்தது, அவன் வந்தாள், யான் வந்தான், நாளை வந்தான் என மயங்கி வருவன வெல்லாம் வழுவாம்.

'சிறப்புடைப் பொருளைத் தான் இனிது கிளத்தல்' என்பதனால் ஐம்பால் உணர்த்துதற் சிறப்புடைய படர்க்கை வினைபற்றி ஓதினா ரேனும், 'தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி' (சொல் - சங) என்றும், 'முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி' (சொல் - சசஉ) என்னும் பெயர் வழுவமைப்பாராகலின் தன்மை முன்னிலைப் பாலறி கிளவி யும் மயங்கற்க என்பது ஈண்டைக் கொள்ளப்படும்.

எ - டு: யான் வந்தேன், யாம் வந்தேம் எனவும்; நீ வந்தாய் நீயிர் வந்திர் எனவும் வரும். யான் வந்தேம், நீயிர் வந்தாய் என்னுந் தொடக்கத்தன வழுவாம்.

'மயங்கல் கூடா' என்றது மயங்குதலைப் பொருந்தா என்றவாறு. 'மயங்கல்கூடா, தம்மரபினவே' என்பனவற்றுள் ஒன்றனது ஆற்றலான் ஏனையதன் பொருளும் உணரப்படுதலின் ஒன்றே அமையுமெனின், சொல் இல்வழியது உய்த்துணர்வ தென்க.

'தம் மரபினவே' என்பதனைப் பிரித்து வேறோர் தொடராக்கிச் சொற்கள் மரபு பிறழா தம் மரபினவே என மரபுவழுக் காத்ததாக உரைக்க. இது யோகவிபாகம் என்னும் நூற்புணர்ப்பு. [1] முன் இரு பொருள்பட உரைப்பன வெல்லாம் இந்நூற்புணர்ப்பாகக் கொள்க.

எ - டு: யானை மேய்ப்பானைப் பாகன் என்றலும், யாடு மேய்ப் பானை இடையன் என்றலும் மரபு. மேய்த்தல் ஒப்புமையான் யானை மேய்ப்பானை இடையன் என்றலும், யாடு மேய்ப்பானைப் பாகன் என்றலும் மரபுவழு.

செப்புவழா நிலையும், வினாவழாநிலையும், சிறப்பு வகையான் ஓதப் படும் இடவழாநிலையும், இவ்வாறு ஓதப்படும் மரபுவழா நிலையும் ஒழித்து, ஒழிந்தன இச்சூத்திரத்தாற் காத்தார். (கக)

கஉ. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
ஆண்மை அறிசொற்கு ஆகிடன் இன்றே.

இ - ள்: 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' (சொல் - ச) என்று மேற் கூறப்பட்ட ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவி ஆடூஉ வறி சொல்லோடு புணர்தற்குப் பொருந்தும் இடனுடைத்தன்று எ-று.

'ஆண்மையறி சொற்கு ஆகிடன் இன்று' என்ற விலக்கு ஆண்மை யறி சொல்லோடு புணர்த லெய்திநின்ற பேடிக்கல்லது ஏலாமையின், அலிமேற் செல்லாதென்க.

இச்சூத்திரத்தைப் 'பெண்மை சுட்டிய' என்னுஞ் சூத்திரத்தின் பின் வையாது ஈண்டு வைத்தார், இது வழுவற்க என்கின்ற தாகலான். (கஉ)

கங. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல்.

---

1. உடுo-ஆம் நூற்பா.

இ - ள் : செப்பினையும் வினுவினையும் வழுவாமற் போற்றுக எ-று.

செப்பென்பது வினுய பொருளை அறிவுறுப்பது. அஃது இரண்டு வகைப்படும், செவ்வன்இறையும் இறைபயப்பதும் என. உயிர் எத் தன்மைத்து என்று வினுயவழி உணர்தல் தன்மைத்து என்றல் செவ்வன் இறையாம். உண்டியோ என்று வினுய வழி வயிறு குத்திற்று என்றல், உண்ணேன் என்பது பயந்தமையின், இறை பயப்பதாம்.

கருவூர்க்குச் செல்லாயோ சாத்தா எனப் பருநூல் பன்னிருதொடி என்பது செப்புவழுவாம். சொல் எப்பொருள் உணர்த்தும் என்று வினுயவழிச் சொல் ஒரு பொருளும் உணர்த்தாது என்பதும் அது. வினுய பொருளை வினுவால் உணர்ந்து வினுய பொருளையன்றித் தான் குறித்த பொருளைச் செப்பால் உணர்த்துகிருனுகலின் என்பது.

வினு இன்றியும் செப்பு நிகழ்தலின், வினுய பொருளை யெனல் வேண்டா எனின், வினுய பொருளை யென்னுது அறிவுறுப்பது செப்பு எனின், அறியலுறவினை அறிவுறுத்தலின் வினுவும் செப்பாய் அடங்குத லானும் செப்பென்பது உத்தரமென்பதனேடு ஒருபொருட் கிளவியாக லானும், வினுய பொருளை யறிவுறுத்தலே இலக்கணமா மென்பது. குமரியாடிப் போந்தேன் சோறு தம்மின் என வினுவின்றி நிகழ்ந்த சொல் யாண்டடங்கு மெனின்:—அறியலுறுதலை யுணர்த்தாது ஒன்றனை அறிவுறுத்து நிற்றலிற் செப்பின்பாற்படும்.

வினுஎதிர்வினுதல், ஏவல், மறுத்தல், உற்றதுரைத்தல், உறுவது கூறல், உடம்படுதல் எனச் செப்பு அறுவகைப்படு மென்று உரையாசிரி யர் கூறினுராலெனின்:—உயிரெத்தன்மைத் தென்றவழி உணர்தற்றன் மைத்தென்றல் முதலாயின அவற்று ளடங்காமையானும், மறுத்த லும் உடம்படுதலும் வினுவப்பட்டார்கண்ணன்றி ஏவப்பட்டார் கண்ணுமாகலானும், அறுவகைப்படுமென்று பிறர்மத மேற்கொண்டு கூறினுரென்பது.

வினுவாவது அறியலுறவு வெளிப்படுப்பது. அது மூவகைப்படும். அறியான் வினுவும், ஐயவினுவும், அறிபொருள் வினுவு மென. அறியான் வினு உயிர் எத்தன்மைத் தென்பது. ஒருபுடையானும் அறியப்படாத பொருள் வினுவப் படாமையிற் பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்பு வகையான் அறியப்படாமை நோக்கி அறியான் வினுவாயிற்று. ஐயவினு குற்றியோ மகனே தோன்றுகின்ற உரு வென்பது. அறி பொருள் வினு அறியப்பட்ட பொருளையே ஒரு பயன் நோக்கி அவ் வாய்பாட்டி னென்ருன் வினுவுவது. பயன் வேறறிதலும் அறிவுறுத்தலு முதலாயின. கறக்கின்ற எருமை பாலோ சினையோ என்பது வினு வழுவாம். ஒரு பொருள் காட்டி இது நெடிதோ குறிதோ என்பதும் அது.

உரையாசிரியர் அறிபொருள் வினுவை அறிவொப்புக் காண்டலும், அவனறிவு தான் காண்டலும், மெய்யவற்குக் காட்டலும் என விரித்து ஏனைய கூட்டி ஐந்தென்ருர்.

இருவகைச் செப்பினும், மூவகை வினுவினும், செவ்வன் இறையும், அறியான் வினுவும், ஐயவினுவும் வழாநிலை யாகலின், 'வழாஅ லோம்பல்' என்பதனுற் கொள்ளப்படும். ஏனைய வழுவமைப்புழிக் காணப்படும்.

வினா வழிஇயினவிடத்து அமையாதென்று உரையாசிரியர் கூறினாராலெனின்[1]:—அற்றன்று; 'யாதென வரூஉம் வினாவின் கிளவி' (சொல் - ௩௨) எனவும், 'வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்' (சொல் - ௨௪௪) எனவும் முன்னர் வழுவமைப்பர் ஆகலான், அது போலியுரை யென்க. (௧௩)

௧௪. வினாவும் செப்பே வினாஎதிர் வரினே.

இ - ள்: வினாய பொருளை ஒருவாற்றான் அறிவுறுத்து வினாவிற்கு மறுமொழியாய் வரின், வினாவும் செப்பாம் எ - று.

எ - டு: சாத்தா உண்டியோ என்று வினாயவழி உண்ணேனோ என வரும்.

வினாவாய்பாட்டான் வந்ததாயினும், உண்பல் என்பது கருத்துப் பொருளாகலின் செப்பெனப்படும். உண்டியோ என்று வினாயவழி உண்பல் உண்ணேன் என்று இறுது தானொன்றை வினாவுவான் போலக் கூறலின், வழுவமைதியாயிற்று.

இது செப்புவழுவமைதியேல் 'செப்பே வழீஇயினும்' என்புழி யடங்குமெனின்:—ஒன்றன்செப்பு ஒன்றற்காவதன்றி வினாச் செப்பா யினமையின், வேறு கூறினார். (௧௪)

௧௫. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான.

இ - ள்: செவ்வனிறையாகாது செப்பு வழுவிவரினுங் கடியப் படாது, ஒருவாற்றான் வினாய பொருட்கு இயைபுபட்ட கிளவி யாதற்கண் எ - று.

எ - டு: சாத்தா உண்டியோ என்று வினாயவழி, நீ உண் என்றும், வயிறு குத்தும் என்றும், பசித்தேன் என்றும், பொழுதாயிற்று என்றும் வரும். இவை செவ்வன்இறை அல்லவேனும், வினாய பொருளை ஒரு வாற்றான் அறிவுறுத்தலின், அமைந்தவாறு கண்டுகொள்க.

அஃதேல், இவை 'தெரிபுவேறு நிலையலுங் குறிப்பின் தோன்றலும்' (சொல் - ௧௫௭) என்புழிக் குறிப்பின் தோன்றலாய் அடங்குமாகலின், ஈண்டுக் கூறல் வேண்டா எனின்:—அவ்வாறு அடங்கு மாயினும், 'செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்' (சொல் - ௧௩) என்றதனான் இவையெல்லாம் வழுவாதல் எய்திற்று, அதனான் அமைக்கல் வேண்டும் என்பது. (௧௫)

௧௬. செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்கு
அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.

இ - ள்: செப்பின் கண்ணும் வினாவின் கண்ணும் சினைக் கிளவிக் கும் முதற்கிளவிக்கும் உறழ்பொருளும் துணைப்பொருளும் அவ்வப் பொருளுக்கு அவ்வப்பொருளேயாம் எ - று.

எனவே, சினையும் முதலும் தம்முள் மயங்கி வருதல் வழு என் பதாம்.

உறழ்பொருளாவது ஒப்புமை கூறாது மாறுபடக் கூறப்படுவது. துணைப்பொருளாவது ஒப்புமை கூறப்படுவது.

---

1. தொல் - சொல் - இளம். கரு-ஆம் நூற்பாவைக் காண்க.

எ-டு: இவள் கண்ணின் இவள் கண்பெரிய, நும் அரசனின் எம் அரசன் முறை செய்யும் எனவும்; இவள் கண்ணின் இவள் கண் பெரியவோ, எம் அரசனின் நும் அரசன் முறை செய்யுமோ எனவும்; இவள் கண் ஒக்கும் இவள் கண், எம் அரசனை ஒக்கும் நும் அரசன் எனவும்; இவள் கண் ஒக்குமோ இவள் கண், எம் அரசனை ஒக்குமோ நும் அரசன் எனவும் வரும்.

'அவன் கோலினும் தண்ணிய தடமென் தோளே' (பட்டினப்-௩௦௦-க) எனவும், 'துளிதலைத் தலைஇய தளிரன் னோளே' (குறுந்-உஉஉ) எனவும் மயங்கி வந்தன வழுவாம் பிறவெனின்:—அவை செய்யுள் பற்றி வரும் உவம வழு ஆகலின் ஈண்டைக்கு எய்தா, அணியியலுள் பெறப்படும்.

இம்மகள் கண் நல்லவோ கயல் நல்லவோ என வழக்கின்கண்ணும் மயங்கி வருமாலெனின்:—உண்மை உணர்தற்கு வினயதன்றி ஐய வுவமை வாய்பாட்டாற் கண்ணைப் புனைந்துரைத்தல் கருத்தாகலின், அன்னவை யெல்லாம் உரை என்னுஞ் செய்யுளாம் என்பது. இந் நங்கை முலையின் இந்நங்கை கண் நல்ல என்னுந் தொடக்கத்தன மயக்கம் இன்மையின் இலக்கண வழக்காம் பிறவெனின்:—அற்றன்று; ஒத்த பண்பு பற்றியன்றே பொருவுவது; கண்ணொடு முலைக்கு ஒத்த பண்பின்மையால் பொருவுதல் யாண்டையது! ஒத்த பண்பு பற்றிய பொருவுதற் கண்ணது இவ்வாராய்ச்சி என்பது.

காக்கப்பட்டன செப்பு வழாநிலையும் வினா வழாநிலையும் என்பார் 'செப்பினும் வினாவினும்' என்றார். 'வழாஅலோம்பல்' (சொல்-கரு) என்புழி அடங்குமாயினும், நுண்ணுணர் வுடையார்க்கல்லது அதனால் உணர்தலாகாமையின், விரித்துக் கூறியவாறு.

தன்னினமுடித்தல் என்பதனால் 'பொன்னுந் துகிரும் முத்தும் மணியும்' (புறம்-உகஅ) என எண்ணுங்காலும் இனமாய பொருளே எண்ணப்படு மென்பது கொள்க. (கசு)

கஎ. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.

இ-ள்: தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் நடக்கும் இலக்கணத்திற் பக்கச் சொற் கடியப்படா எ-று.

தகுதி யென்பது, அப்பொருட்குரிய சொல்லாற் சொல்லுதல் நீர்மை அன்று என்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டால் கூறு தல். அது, செத்தாரைத் துஞ்சினார் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், கெட்டதனைப் பெருகிற்று என்றலும் என இத்தொடக்கத்தன.

வழக்கு என்பது, காரணமின்றி வழங்கற்பாடேபற்றி வருவது. பண்புகொள் பெயராயினும் பண்பு குறியாது சாதிப் பெயராய் வெள் யாடு வெண்களமர் கருங்களமர் என வருவனவும், குடத்துள்ளும் பிற கலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிதென்னாது சில என்றலும், அடுப்பின் கீழ்ப்புடையை மீயடுப்பு என்றலும், பிறவும் வழக்காறும்.

பொற்கொல்லர் பொன்னைப் பறிஎன்றலும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும் முதலாகிய குழுவின் வந்த குறிநிலை வழக்கும், கண் கழிஇ வருதும் கால்மேல் நீர்பெய்து வருதும் என்னுந் தொடக்கத்து இடக்கரடக்கும் தகுதி என்றும், மரூஉமுடிபை வழக்காறு என்றும், உரையாசிரியர் அமைத்தாரால் எனின் :—குழுவின் வந்த குறி நிலை வழக்குச் சான்றோர் வழக்கின் கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக்கப்படாவாகலானும், இடக்கரடக்கு 'அவையல் கிளவி' (சொல்-௪௪௨) எனவும், 'மறைக்குங்காலை' (சொல்-௪௪௩) எனவும், முன்னர் அமைக்கப்படுதலானும், மரூஉமுடிபு எழுத்ததிகாரத்துக் கூறப்பட்டமையானும், அவர்க்கது கருத்தன்றென்பது. கருமை முதலாயின ஒருநிகரன அன்மையிற் காக்கையொடு சார்த்திக் களம் பழத்தை விதந்த துணையல்லது காக்கைக்கு வெண்மை நேராமையிற் காக்கையிற் கரிது களம்பழம் என்புழிக் கரிது வெளிதாயிற்றன்று. ஆதலால் வழுவன்று. கிழக்கு மேற்கென்பன வரையறையின்றி ஒன்றனொடு சார்த்திப் பெறப்படுவனவாதலின், ஒன்றற்குக் கீழ்பாலதனைப் பிறிதொன்றற்கு மேல்பாலதென்றலும் வழுவன்று. சிறுவெள்வாயென்பது இடுகுறி. அதனால் இவை வழக்காறு என அமைக்கப்படாவாயினும், உரையாசிரியர் பிறர்மதம் உணர்த்திய கூறினர் என்பது.

தத்தமக்குரிய வாய்பாட்டானன்றிப் பிறவாய்பாட்டாற் கூறுதல் வழுவாயினும், அமைக என மரபுவழு அமைத்தவாறு. (௧௭)

௧௮. இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

இ - ள் : இனப் பொருளைச் சுட்டுதலின்றிப் பண்படுத்து வழங்கப்படும் பெயர் வழக்குநெறி யல்ல செய்யுள்நெறி எ-று.

எ - டு: 'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும், வெண்திங்களுள் வெயில் வேண்டினும்' (புறம்-௩௮) என வரும்.

பல பொருட்குப் பொதுவாகிய சொல்லன்றே ஒரு பொருட்குச் சிறந்த பண்பான் விசேடிக்கப்படுவது; ஞாயிறு திங்கள் என்பன பொதுச்சொல் அன்மையிற் செஞ்ஞாயிறு என்றும் வெண்திங்கள் என்றும் விசேடிக்கப்படாவாயினும், செய்யுட்கண் அணியாய் நிற்றலின், அமைக்க என்றார்.

பெருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என இல்குணம் அடுத்து வழக்கின் கண்ணும் இனஞ்சுட்டாது வருதலின் செய்யுளாறென்றல் நிரம்பாதெனின்:—அவை இனஞ்சுட்டாமையின் வழுவாயின அல்ல, இல்குணம் அடுத்தலின் வழுவாயின. இனஞ்சுட்டலாவது இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படுதல். வெண்மை முதலாயின விசேடித்தலாவது அக்குணமில்லா இனப்பொருளின் நீக்கி அக்குணமுடையதனை வரைந்து சுட்டுவித்தலன்றே; சுட்டப்படுவதன்கண் அக்குணமில்லையாயின் வரைந்து சுட்டுவிக்குமாறு என்னை? அதனால் விசேடிக்கற்பாலது விசேடியாது நின்றதன்றாகலின் ஈண்டைக்கு எய்தா; 'வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி' (சொல்-௨௭) என்புழி ஒன்றென முடித்தல் என்பதனால் அமைக்கப்படும்.

குறுஞ்சூலி, குறுந்தடி என்னுந் தொடக்கத்தன சூலி தடி யெனப் பிரிந்து நில்லாமையிற் பண்புகொள் பெயர் எனப்படா. பண்படாது,

வடவேங்கடந் தென்குமரி, முட்டாழை, கோட்சுறு எனத் திசையும் உறுப்புந் தொழிலும் முதலாய அடையடுத்து இனஞ்சுட்டாது வருவன ஒன்றென முடித்தல் என்பதனால் செய்யுளாறென அமைத்துக் கொள்ளப் படும்.

ஒன்றனதாற்றலான் ஒன்று பெறப்படுதலின், வழக்காறல்ல என்றானுஞ் செய்யுளாறென்றானும் கூற அமையுமெனின்:—உய்த்துணர்வது சொல்லில்வழி என மறுக்க.

பண்புகொள் பெயர் இனங்குறித்து வருதல் மரபு; அம்மரபு வழக்கின்கண் வழுவற்க என்றும், செய்யுட்கண் வழுவமைக்க என்றுங் காத்தவாறாயிற்று. (கஅ)

கசு. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்.

இ - ள்: தன்னியல்பில் திரியாது நின்ற பொருளை, அதனியல்பு கூறுங்கால் ஆக்கமும் காரணமும் கொடாது இற்றெனச் சொல்லுக எ - று.

இயல்பாவது, பொருட்குப் பின்தோன்றாது உடன் நிகழுந் தன்மை.

எ - டு: நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், உயிர் உணரும் என வரும்.

'இற்'றென்பது வினைக்குறிப்பு வாய்பாடாயினும், உளரும், உணரும் என்னுந் தெரிநிலை வினையும் இற்றென்னும் பொருள்பட நிற்றலின், இற்றெனக் கிளத்தலேயாம்.

நிலம் வலிதாயிற்று என இயற்கைப்பொருள் ஆக்கம்பெற்று வருமால் எனின்:—கல்லும் இட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப் பட்ட நிலத்தை வலிதாயிற்றெனின், அது செயற்கைப் பொருளே யாம். நீர் நிலமும் சேற்று நிலமும் முன் மிதித்துச் சென்று வன்னிலம் மிதித்தான், நிலம் வலிதாயிற்று என்றவழி, மெலிதாயது வலிதாய் வேறுபட்டதென ஆக்கம் வேறுபாடு குறித்து நிற்றலின் இயற்கைப் பொருள் ஆக்கமொடு வந்ததன்றாம். அல்லது நிலத்திற்கு வன்மை விகாரமென்று ஓர்ந்து நிலம் வலிதாயிற்று என்னுமாயின், திங்கள் கரிது என்பது போலப் பிறழ உணர்ந்தார் வழக்காய் ஆராயப்படா தென்க. (கசு)

உ0. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்.

இ - ள்: காரணத்தால் தன்மை திரிந்தபொருளை, அத்திரிபு கூறுங்கால், ஆக்கங் கொடுத்துச் சொல்லுக எ - று.

'ஆக்கமொடு கூறல்' என்பதனால், திரிபு கூறுதல் பெற்றாம். என்னை? அதன்கணல்லது வாராமையின்.

இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் என்பன, இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (உ0)

உக. ஆக்கந் தானே காரண முதற்றே.

இ - ள்: செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுங்கால், காரணத்தை முற்கூறி அதன்வழி ஆக்கங் கூறுக எ - று.

'தானே' என்பது செய்யுட்சுவை குறித்து நின்றது.

எ - டு: கடுக்கலந்த கைபிழியெண்ணெய் பெற்றமையான் மயிர் நல்லவாயின; எருப்பெய்து இளங்களை கட்டு நீர் கால் யாத்தமையான் பைங்கூழ் நல்லவாயின; நீர் கலத்தலால் நிலம் மெலிதாயிற்று; தீச்சார்தலால் நீர் வெய்தாயிற்று என வரும்.

மயிர் நல்ல, பயிர் நல்ல எனச் செயற்கைப் பொருள் ஆக்கம் பெறாது வந்தனவா லெனின்:—அந்நன்மை பொருட்குப் பின்தோன்றாது உடன் தோன்றிற்றேல் இயற்கையேயாம்; அவ்வாறன்றி, முன் தீயவாய்ப் பின் நல்ல வாயினவேனும், தீய நிலைமை காணாதான் மயிர் நல்ல, பயிர் நல்ல என்றால் படும் இழுக்கென்னை? அது செயற்கையாவது உணர்ந்தான் ஆக்கங்கொடாது சொல்லினன்றே வழுவாவதென்க.

செயற்கைப் பொருளை ஆக்கமுங் காரணமுங் கொடுத்துச் சொல்லுக என்பதே கருத்தாயின் சூத்திரம் ஒன்றாகற்பாற்றெனின்:— அவ்வாறாகின், ஆக்கமுங் காரணமுஞ் செயற்கைப் பொருட்கண் ஒத்தவாயின என்பது பட்டுக் 'காரணமின்றியும் போக்கின்று' (சொல்-௨௨) என்பதனோடு மாறுகோடலானும், காரணஞ் செயற்கைப் பொருளதோ ஆக்கத்ததோ என ஐயுறப்படுதலானும், 'ஆக்கந்தானே காரண முதற்றென'ப் பிரித்துக் கூறினாரென்பது.

இயற்கைப்பொருள் ஆக்கமுங் காரணமும் பெறாது வருதலும் செயற்கைப்பொருள் அவைபெற்று வருதலும் இலக்கண மெனவே, இவ்வாறன்றி வருவன மரபு வழு என்பதாம்.

நுண்ணுணர்வுடையார்க்குத் 'தம்மரபினவே' (சொல் - ௧௧) என அடங்குவ வாயினும், ஏனையுணர்வினார்க்கு இவ்வேறுபாடு உணரலாகாமையின் விரித்துக் கூறினார். (௨௧)

௨௨. ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.

இ - ள்: காரண முதற்றெனப்பட்ட ஆக்கச்சொல் காரண மின்றி வரினுங் குற்றமின்று வழக்கினுள் எ - று.

எ - டு: மயிர் நல்லவாயின, பயிர் நல்லவாயின என வரும்.

வழக்கினுட் காரணமின்றியும் வருமெனவே, செய்யுளுட் காரணம் பெற்றே வருமென்பதாம்.

எ - டு: 'பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் தாள்தோய் தடக்கை' (புறம்-௧௪)

எனவும்,

'தெரிகணை யெஃகம் திறந்தவா யெல்லாம்
குருதி படிந்துண்ட காகம்—உருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மால்
தப்பியா ரட்ட களத்து.' (களவழி நாற்பது-௫)

எனவும்,

'வருமழைய வாய்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி—திருநுதால்
இன்றென் குரற்கூந்தல் பெய்தமையால் பண்டைத்தன்
சாயல வாயின தோள்.'

எனவும், காரணம் பெற்று வந்தவாறு கண்டுகொள்க. குக்கிற்புறத்த, சிரல்வாய என ஆக்கமின்றி வந்தனவாலெனின்:—தொகுக்கும் வழித் தொகுத்தல் என்பதனுன் ஆண்டாக்கந் தொக்கு நின்றதென்பது.

'அரிய கானஞ் சென்றோர்க்
கெளிய வாகிய தடமென் றோளே' (குறுந்-எஎ)

எனவும்,

'நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு' (குறள்-ந0ரு)

எனவும், செயற்கைப் பொருள் செய்யுளுள் காரணமின்றி வந்தனவா லெனின்:—களவுக்காலத் தரியன இக்காலத்து எளியவாயின என்பது கருத்தாகலான், இக்காலங் காரணமென்பது பெறப்படுதலானும், ஊழாலென்பது அதிகாரத்தான் வருமாகலானும், அவை காரண மின்றி வந்தன எனப்படாவென்பது. (உஉ)

உந. பால்மயக் குற்ற ஐயக் கிளவி
தான்அறி பொருள்வயின் பன்மை கூறல்.

இ - ள்: திணை துணிந்து பால்துணியாத ஐயப்பொருளை அவ்வத் திணைப் பன்மையாற் கூறுக எ - று.

'கிளவி' என்றது ஈண்டுப் பொருளை. ஐயப்பொருளாவது சிறப் பியல்பால் தோன்றாது பொதுவியல்பால் தோன்றிய பொருள்.

எ - டு: 'ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ இஃதோ தோன்றுவார்' எனவும், 'ஒன்றோ பலவோ செய் புக்கன' எனவும் வரும்.

'திணைவயின்' என்னது 'தானறிபொருள்வயின்' எனப் பொதுப் படக் கூறியவதனுன், 'ஒருவன் கொல்லோ பலர்கொல்லோ கறவை யுய்த்த கள்வர்' எனவும், ஒருத்திகொல்லோ பலர்கொல்லோ இக் குருக்கத்தி நீழல் வண்டலயர்ந்தார்' எனவும், திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை யொருமைப்பாலையமுங் கொள்ளப்படும்.

ஒருமையாற்கூறின் வழுப்படுதல் நோக்கிப் 'பன்மை கூறல்' என வழாநிலைபோலக் கூறினரேனும், ஒருமையைப் பன்மையாற் கூறுத லும் வழுவாதலின், ஐயப்பொருள்மேல் சொல் நிகழுமாறு உணர்த்திய முகத்தால் பால்வழு அமைத்தவாறும். (உந)

உச. [1]உருபென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்று முரித்தே சுட்டுங் காலை.

இ - ள்: உருபெனச் சொல்லுமிடத்தும், ஒருமையும் பன்மையு மாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுச் சொற்கண்ணும், இவ்விரு கூற்றினும் ஐயப்புலப் பொதுச் சொல்லாதல் உரித்து எ - று.

எனவே, 'ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்று நின்ற உருபு' எனவும், 'ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய்புக்க உருபு' எனவும், 'குற்றிகொல்லோ மகன் கொல்லோ

1. 'உருவென' எனப்பாடங் கொள்வர் இளம். நச். கல். ப. உ. ஆகியோர்.

தோன்றுநின்ற உருபு' எனவும், 'ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய் புக்க பெற்றம்' எனவும் சொல்லுக என்பதாம்.

'ஐயக்கிளவி' (சொல்-உங) யென்பது அதிகாரத்தாற் பெற்றும்.

'உருபினும்' என்றது 'உருபென மொழியினும்' என்றதனன், உருபின் பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்டமென்னுந் தொடக்கத் தனவும் கொள்க.

பன்மை கூறல் உயர்திணைப்பாலையத்திற்கு உரித்தென்றும், உரு பென மொழிதல் திணையையத்திற்கு உரித்தென்றும், உரையாசிரியர் கூறினாரெனின் :—அவை அவற்றிற்கே உரியவாயின், அஃறிணைப் பிரிப்பு என்றாற் போல உயர்திணைப்பான் மயக்குற்ற என்றும், திணை யையத்து என்றும், விதந்தோதுவர் ஆசிரியர்; அவ்வாறு ஓதாமையா னும், நடையுள் அவை பொதுவாய் வருதலானும், அவை போலியுரை யென்க.

ஒருவன் கொல்லோ பலர்கொல்லோ என்றற் றொடக்கத்து உயர் திணைப் பன்மை யொருமைப்பால் ஐயத்திற்கு உருபு முதலாயின ஏலா மையும், திணையையத்திற்கும் ஏனைப்பாலையத்திற்கும் ஏற்புடைமை யும், சுட்டி யுணர்க என்பது போதரச் 'சுட்டுங்காலை' யென்றார். சுட்டுதல் - கருதுதல். (உச)

உரு. தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான.

இ - ள்: ஐயுற்றுத் துணியும்வழி அன்மைக் கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலு முரித்து என்று சொல்லுவர், துணிந்து தழீஇக் கொள்ளப்பட்ட பொருளின் வேறாய பொருளிடத்து எ - று.

என்றது, குற்றிகொல்லோ மகன்கொல்லோ என்றானும், ஒருவன் கொல்லோ ஒருத்திகொல்லோ என்றானும், ஒன்றுகொல்லோ பல கொல்லோ என்றானும், ஐயம் நிகழ்ந்தவழித் துணிதலுமுண்டுபிற; நடையுள் துணிந்தவழி மறுக்கப்படும் பொருண்மேல் அன்மைத் தன்மை யேற்றினும் அமையும் என்றவாறு.

எ - டு: மகனென்று துணிந்தவழிக் குற்றியன்று மகனெனவும், குற்றியென்று துணிந்தவழி மகனல்லன் குற்றியெனவும், ஆண்மக னென்று துணிந்தவழிப் பெண்டாட்டியல்லள் ஆண்மகனெனவும், பெண்டாட்டி யென்று துணிந்தவழி ஆண்மகனல்லன் பெண்டாட்டி யெனவும், ஒன்றென்று துணிந்தவழிப் பலவல்ல ஒன்றெனவும், பல வென்று துணிந்தவழி ஒன்றன்று பல எனவும் மறுக்கப்படும் பொருண் மேல் 'அன்மைக் கிளவி அன்மைத் தன்மையைச்' சுட்டி நின்றவாறு.

'உம்மை' எதிர்மறையாகலான், வேறிடத்துச் சுட்டாமையே பெரும்பான்மை யென்பதாம். ஆகவே, இவ்வுருபு குற்றியன்று மக னென ஐயப்புலமாகிய பொதுப்பொருண் மேலானும், குற்றியல்லன் மகனெனத் துணிபொருள் மேலானும், அன்மைக்கிளவி அன்மை சுட்டி நிற்றல் பெரும்பான்மை யென்பதாம்; என்னை? வேறிடத்துச் சுட்டாமையாவது ஈண்டுச் சுட்டலே யாகலான்.

குற்றியன்று மகன் என்றவழி மகனென்பது நின்று வற்றுமெனின்:— 'எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி அவ்வியல் நிலையல் செவ்வி

தென்ப' (சொல்-௩அ) என்பதனான் எழுவாய் வெளிப்படாது நிற்றலு முண்மையான், வெளிப்படாது நின்ற இவனென்னும் எழுவாய்க்கு அது பயனிலையாகலின், நின்றுவற்றுதல் யாண்டைய தென்க. அல்லன வற்றிற்கும் ஈது ஒக்கும்.

குற்றியல்லன் என்புழிக், குற்றியென்பது அல்லனென்னுஞ் சொல்லோடியைந்தவாறு என்னை யெனின்:—இவ்வுருபு குற்றியாம் என்றவழி ஆம் என்பதனோடு குற்றியென்பதூஉம் எழுவாயாய் நின்றே இயைந்தாற்போல, இவன் குற்றியல்லன் என்புழி ஆமென்பதன் எதிர் மறையாகிய அன்மைக் கிளவியோடும் குற்றியென்பது எழுவாயாய் நின்றே யியையு மென்பது. எழுவாயாய் இயைதலினன்றே யான் நீ யல்லன் என்புழி நீயென்பது வேற்றுமைக்கேற்ற செய்கை பெறாது நின்ற தென்க. (௨௫)

௨௬. அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.

இ-ள்: பண்புச்சொல்லும், சினைச்சொல்லும், முதற்சொல்லும் என மூன்றுங் கூறப்பட்ட முறை மயங்காமல், வழக்கைப் பொருந்தி நடக்கும், வண்ணச் சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லையுடைய முதற் சொல் எ-று.

வடிவு முதலாகிய பிற பண்பும் உளவேனும், வண்ணப் பண்பினது வழக்குப்பயிற்சி நோக்கி 'வண்ணச் சினைச் சொல்' என்றார்.

எ-டு: செங்கால் நாரை, பெருந்தலைச் சாத்தன் என வரும்.

கால் செந்நாரை, தலைபெருஞ் சாத்தன் என முறை மயங்கிவரின், மரபு வழுவா மென்க. வழக்கினுள் மயங்காது வருமெனவே,

'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவர
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' (புறம்-௨௩அ)

எனச் செய்யுளுள் மயங்கியும் வரப்பெறும் என்றவாறாம். செவிசெஞ் சேவல், வாய்வன் காக்கை என்பன, செஞ்செவிச் சேவல், வல்வாய்க் காக்கை என்னும் பொருள்பட நின்றமையின், வண்ணச் சினைச்சொல் மயக்கமாயின. அஃதேல், சினையடையாகிய செம்மையும் வன்மையும் முதலடை ஆயினவாறு என்னை யெனின்:—சினையொடு முதற்கு ஒற்றுமை யுண்மையான் அவை முதலொடும் இயைபுடைய வென்பது.

'பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கண் பேதை' என்புழி மூன்றும் வழி முதல் கிடவாது பின்னும் அடையுஞ் சினையும் புணர்த் தமையான் வண்ணச் சினைச்சொல் செய்யுளுள் மயங்கி வந்ததென்று உரையாசிரியர் கூறினாராலெனின்:—மூன்றும்வழிப் புணர்க்கப்படும் பேதை என்னும் முதற்சொல் பேரமர்க்கண் என்னுந் தொகையோடு வேற்றுமைப் பொருள்படத் தொக்கு, அத்தொகை சிறுநுசுப்பு என் னுந் தொகையோடும் அப்பொருள்படத் தொக்கு, ஒரு சொல்லாய்ப், 'பெருந்தோட் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றாற்போல மூன்றும்வழிப் பிற சொல்லடுத்துப் பேதை யென்னும் முதல் கிடந்த தெனவே படுதலின், மயக்கமின்மையான், அவர்க்கது கருத்தன் றென்க. அன்றிப் பெருந்தோள் முதலாகிய மூன்றும் பலபெயர் உம் மைத் தொகைபடத் தம்முள்தொக்கு ஒரு சொல்லாய்ப் பின் பேதை

யென்பதனோடு வேற்றுமைத் தொகைபடத் தொக்கன வெனினும், அவை உம்மைத் தொகைபடத் தொகாது நின்று பேதை யென்பதனோடு வேற்றுமைத் தொகைபட ஒருங்கு தொக்கன வெனினும், தம்முள் இயையாது பேதையென்பதனோடு இயைதலின், ஆண்டும் மயக்கமின்மை யறிக.

அஃதேல், இவ்வாறு வருதல் வழக்கிற்கும் உரித்தோ எனின்:— அடுக்கிய அடையும் சினையும் பொதுமை நீக்குதற்கன்றி அணி குறித்து நிற்றலின் செய்யுட்கே உரித்தென்பது. 'சிறுபைந்தூவி' (அகம்-௩௭) எனச் சினையொடு குணம் இரண்டடுக்கி வருதல் செய்யுட் குறித்து என்றும், 'இளம்பெருங் கூத்தன்' என முதலொடு குணம் இரண்டடுக்கி வருதல் வழக்கிற்குரித்து என்றும், பிறர் மதமேற்கொண்டு கூறினர். ஒன்றாக பலவாக இனஞ்சுட்டாதன செய்யுட்கு உரியவாம், இனஞ்சுட்டி நின்றன வழக்கிற்கு உரியவாம் என்பதே உரையாசிரியர் கருத்தென்க. அன்றிப் பிறநூன் முடிந்தது தானுடன்படுதல் என்பதனால் சினையொடு குணம் இரண்டடுக்கல் செய்யுளாறென்று கொள்ளினும் அமையும்;

'முதலொடு குணமிரண் டடுக்கல் வழக்கியல்
சினையோ டடுக்கல் செய்யு ளாறே'

என்றாராகலின்.

'வண்ணச் சினைச்சொல்' என்றதனால் வண்ணமும் சினையும் முதலுங் கூறுதற்கண்ணது இவ்வாராய்ச்சி யென்பதாம். எனவே, இளம்பெருங் கூத்தன், பெரும்பலாக்கோடு என்னுந் தொடக்கத்தன வேண்டியவாறு வரப்பெறு மென்றவாறு.

மயங்காது வருக என மரபுவழுக் காத்தவாறு. (௨௬)

௨௭. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.

இ - ள்: ஒருவனையும் ஒருத்தியையுஞ் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச்சொல்லும், வழக்கின்கண் உயர்த்துச் சொல்லுஞ் சொல்லாம், இலக்கண முறைமையாற் சொல்லும் நெறியல்ல எ - று.

எ - டு: யாம் வந்தேம், நீயிர் வந்தீர், இவர் வந்தார் என வரும்.

உயர்சொல்—உயர்க்குஞ்சொல். 'உயர்சொற் கிளவி' யென்புழிக் கூறியது கூறலன்மை பண்புத் தொகை யாராய்ச்சிக்கண் (எச்ச-௪௧௬) சொல்லுதும்.

தாம் வந்தார் தொண்டனார் எனப் பன்மைக்கிளவி இழித்தற் கண்ணும் வந்ததாலெனின்:—ஆண்டு உயர்சொல் தானே குறிப்பு நிலையாய் இழிபு விளக்கிற்றென்பது.

'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' என்றதனான் இலக்கணமன்மையும், 'வழக்கினாகிய உயர்சொல் கிளவி' யென்றதனான் வழுவன்மையுங் கூறினார்; கூறவே, வழுவமைதி யென்றவாறாம். அஃதேல், 'வழக்கினாகிய உயர்சொற் கிளவி' யெனவே வழுவமைதி யென்பது பெறுதும்; 'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' எனல் வேண்டா

வெனின் :—அங்ஙனங் கூறிற் செய்யுள் வரைந்தவாறே வழுவமைத்த வாறே என ஐயமாக்கலின், அவ்வாறு கூறல் வேண்டுமென்பது.

'பன்மைக் கிளவியும்' எனப் பொதுவகையால் கூறினாரேனும், உயர்த்தற்கண் வழங்கப்பட்டு வரும் உயர்திணைப் பன்மையும் விரவுப் பன்மையுமே கொள்ளப்படும் என்றற்கு 'வழக்கினாகிய' என்றார்.

தன்னின முடித்தல் என்பதனான் எருத்தையும் ஆவையும், எந்தை வந்தான், எம்மன்னை வந்தாள் என உயர்திணையாய் உயர்த்து வழங்க லும், ஒன்றென முடித்தல் என்பதனால் 'கன்னிஞாழல்' (சிலப்-கானல் வரி - கஅ), கன்னியெயில் என அஃறிணையாய் நின்று உயர்திணை வாய் பாட்டால் கூறப்படுதலும், பண்புகொள் பெயர்க்கொடை, வழக்கி னகத்தும், பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என இல்குணம் அடுத்து உயர் சொல்லாய் வருதலுங்கொள்க. (உஎ)

உஅ. [1]செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப.

இ - ள்: செலவு முதலாகிய நான்கு தொழிற்கண்ணும் நிலை பெறப் புலப்படாநின்ற அந்நான்கு சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் அம்மூவிடத்திற்கு முரியவாய் வரும் எ - று.

செலவு முதலாகிய தொழிற்கண் சிறப்பு வகையால் நிலைபெறாது பொதுவாய் வரும் இயங்குதல் ஈதல் என்னுந் தொடக்கத்தனவற்றின் நீக்குதற்கு 'நிலைபெறத் தோன்றும்' என்றார். முற்றும் எச்சமும் தொழிற்பெயருமாகி அத்தொழில்பற்றி வரும் வாய்பாடு பலவாயி னும், அவையெல்லாம் இந்நான்கு தொழிலும் பற்றித் தோன்றுதலின், 'நான்கு சொல்' என்றார். பொருள் வகையான் முன்னறியப்பட்டமை யான் 'அந்நாற் சொல்லும்' என்றார்.

இச் சூத்திரத்துள் ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும், ஆங்கு முதலாயின படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன.

வினைச்சொல் மூன்றிடத்திற்கும் உரியவாதல் வினையியலுள் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல்வேண்டா எனின்:—ஆண்டுப் பாலு ணர்த்தும் ஈற்றான் இடத்திற்குரிமை கூறினார், ஈண்டு ஈற்றானன்றிச் செலவு முதலாயின முதனிலைதாமே இடங்குறித்து நிற்றலுடைமை யான், இவ்வேறுபாடு ஆண்டுப் பெறப்படாமையின், ஈண்டுக் கூறினா ரென்பது.

அஃதேல், 'தருசொல் வருசொல் ஆயிரு கிளவியுந் தன்மை முன்னிலை யாயீரிடத்த, படர்க்கையிடத்த கொடைச்சொல்லுஞ் செலவுச் சொல்லும்' என ஓதுக, இச்சூத்திரம் வேண்டா வெனின்:— அங்ஙனமோதின், இடஞ்சுட்டும் முதனிலை இந்நான்குமே யென்னும் வரையறை பெறப்படாமையின், இது வேண்டுமென்பது.

அஃதேல், போதல் புகுதல் என்னுந் தொடக்கத்தனவும் இடஞ் சுட்டுதலின் நான்கென்னும் வரையறை அமையாதெனின்:—அவை

1. இது முதலாகிய மூன்று நூற்பாக்களையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர்.தெய்.

இக்காலத்துச் சிலவிடத்துப் பயின்று வருமாயினும் மூன்றிடத்திற்கும் பொதுவாகலினன்றே, ஆசிரியர் 'அந்நாற் சொல்லு'மென இவற் றையே வரைந்தோதுவா ராயிற்றென்பது. (உஅ)

உகூ. அவற்றுள்
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயி ரிடத்த.

இ - ள்: கூறப்பட்ட நான்கு சொல்லுள், தருசொல்லும் வரு சொல்லுமாகிய இரண்டும் தன்மை முன்னிலையாகிய இரண்டிடத் திற்கும் உரிய எ - று.

எ - டு: எனக்குத் தந்தான், நினக்குத் தந்தான், என்னுழை வந்தான், நின்னுழை வந்தான் எனவும்; ஈங்கு வந்தான் எனவும் வரும்.

தரப்படும் பொருளை ஏற்பான் தானும் முன்னின்றானும் ஆகலா னும், வரவுதொழில் தன்கண்ணும் முன்னின்றான் கண்ணும் சென்று முடிதலானும், ஈற்றானன்றி இவ்விரு சொல்லும் தன்மை முன்னிலைக்கு உரியவாயினவாறு கண்டுகொள்க.

'நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும் தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் அம்மூ விடத்தும் உரிய' (சொல் - உஅ) என்று மூன்றிடத்திற்கும் வரைவின்றிஆம் எனவுங் கொள்ள வைத் தமையான், 'பெருவிற லமரர்க்கு வென்றி தந்த' (புறம் - ருரு) என வும், 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' (அகம் - ௩கூ) எனவும், மயங்கி வருவனவும் அமைக்கப்படும். அஃதேல், படர்க்கைச் சொல் மயக்கமும் எய்துமாலெனின்:—அஃது எச்சவியலுள் (சொல்-சசஅ) பெறப்படுதலின், ஈண்டுக் கொள்ளப்படாதென்க.

ஒருவன் சேய்நிலத்து நின்றும் அணிநிலத்துப் புகுந்தானுயின் சேய் நிலம் நோக்க அணிநிலம் ஈங்கெனப்படுதலின், அவன்கண் வந்தான், ஆங்கு வந்தான் என்பன இலக்கணமேயாம்.

இந்நான்கும் கொடைப் பொருளன என்று உரையாசிரியர் கூறி னாராலெனின்:—'தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது' என்பதனை அமைத்தாராகலின், அவர்க்கது கருத்தன் றென்க.

தரவு வரவை யுணர்த்துவனவற்றைத் தருவதும் வருவதும் போலத் 'தருசொல்,' 'வருசொல்' என்றார். (உகூ)

௩௦. ஏனை யிரண்டும் ஏனை யிடத்த.

இ - ள்: செலவுச்சொல்லும் கொடைச்சொல்லும் படர்க்கைக் குரிய எ - று.

எ - டு: அவன்கட்சென்றான், ஆங்குச்சென்றான், அவற்குக் கொடுத்தான் என வரும்.

செலவுதொழில் படர்க்கையான்கண் சென்றுறுதலானும், கொடைப் பொருளேற்பான் படர்க்கையான் ஆகலானும் ஈற்றானன்றி இவ்விருசொல்லும் படர்க்கையிடத்திற்குரிய வாயினவாறு கண்டு கொள்க. (௩௦)

௩க. யாதுஎவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.

இ - ள்: யாது எவன் என்னும் இரண்டுசொல்லும் அறியாப் பொருளிடத்து வினாவாய் யாப்புறத் தோன்றும் எ - று.

எ - டு: இச்சொற்குப் பொருள் யாது?, இச்சொற்குப் பொருள் எவன்? என வரும்.

எவ்வகையானும் அறியாப் பொருள் வினவப்படாமையின், ஈண்டு 'அறியாப்பொருள்' என்றது பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்பு வகையான் அறியப்படாத பொருளையாம்.

யா, யாவை, யாவன், யாவள், யாவர், யார், யாண்டு, யாங்கு என்னும் தொடக்கத்தன திணையும் பாலும் இடமும் முதலாகிய சிறப்பு வகையானும் சிறிதறியப்பட்ட பொருளனவாகலின், அறியாப்பொருள் வயின் செறியத் தோன்றாமையான், இவற்றையே விதந்து 'அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்' என்றார். இவையும் திணையும் பாலும் குறித்து வருதலின் சிறப்புவகையானும் அறியப்பட்ட பொருளனவே யன்றோ எனின்:—அற்றன்று; இச்சொற்குப் பொருள் யாது, எவன் என்று வினாயவழி, இறுப்பானும், அஃறிணை யொருமையும் பொதுமையும் துணிந்து அவற்றுள் பகுதியறிதற்கு வினாவுகின்றா னல்லன் பொதுவகையான் வினாவுகின்றான் என்று உணரும். ஆகலின், அவ்வாறாதல் வழக்கினகத்து வினாவுவானதும் இறுப்பானதும் குறிப் பொடு படுத்து உணர்க.

முன்னர் வழுவமைத்தற்கு அவை இன்னபொருட்கு உரிய என அவற்றது இலக்கணம் கூறியவாறு. (ருக)

ருஉ. அவற்றுள்
யாதுஎன வரூஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே.

இ - ள்: கூறப்பட்ட இரண்டனுள் யாதென்னும் வினாச்சொல் அறியாப்பொருள் வினாவாதலேயன்றி அறிந்த பொருட்கண் ஐயம் நீக்குதற்கு ஆராய்ந்த சொல்லாதலும் உரித்து எ - று.

எ - டு: இம்மரங்களுள் கருங்காலி யாது?, நம்மெருதைந்தனுள் கெட்ட எருது யாது? என வரும்.

நமருள் யாவர் போயினார், அவற்றுள் எவ்வெருது கெட்டது எனப் பிறவும் 'அறிந்த பொருள்வயின் ஐயந்தீர்தற்குத் தெரிந்த கிளவி யாய்' வருதலின, அவையும் ஈண்டமைக்கற்பால எனின்:—அவை அறிந்த பொருள்வயின் ஐயந்தீர்தற்கல்லது யாண்டும் வாராமையின், ஈண்டமைக்கப்படாவென்பது.

இதனால் வினாவழு வமைத்தார். (ருஉ)

ருரு. இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு[1] தொகுதியின் உம்மை வேண்டும்.

இ - ள்: கேட்போரான் இத்துணை யென்று அறியப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற்கிளவிக்கும் வினைப்படு தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக எ - று.

1. 'தொகையின்' என்பது இளம். பாடம்.

எ - டு: 'பன்னிரு கையும் பாற்பட வியற்றி' (திருமுருகா-கக௮) எனவும், 'முரசு முழங்குதானை மூவரும் கூடி' (பொருநராற்-௫௪) எனவும் வரும்.

'அறிந்த சினைமுதற்கிளவி' எனவே, முன்னறியப்படாக்கால், முருகற்குக் கை பன்னிரண்டு, தமிழ்நாட்டிற்கு வேந்தர் மூவர் என உம்மை பெறுது வரும் என்பதாம்.

ஐந்தலைநாகம் உடன்றது, நான்மறைமுதல்வர் வந்தார் என்புழி, 'இனைத்தென அறிந்த சினைமுதற்கிளவி'யாயினும், வினைப்படுதொகுதியன்மையின், உம்மை பெருவாயின. அஃதேல், பன்னிருகையும் என்புழியும் தொகுதிப்பெயர் வினையொடு தொடராது கையென்பதனேடு ஒட்டிநிற்றலின், வினைப்படு தொகுதியன்றும் பிறவெனின்:—ஒட்டி நின்றதாயினும், ஐந்தலைநாகம், நான்மறைமுதல்வர் என்பன போலாது இருசொல்லும் ஒருபொருண் மேல் வருதலின், கையென்பதனேடு இயைந்த இயற்றி என்னும் வினை தொகுதிப்பெயரோடும் இயைந்ததாம்; அதனன் அது வினைப்படுதொகுதியா மென்பது.

அஃதேல், கண்ணிரண்டும் குருடு; எருதிரண்டும் மூரி எனப்பெயர் கொண்டவழி உம்மை பெறுமாறு என்னையெனின்:—பெயராக வினையாக முடிக்குஞ் சொல்லொடு படுதலை ஈண்டு விணைப்படுதல் என்றாராகலின், அவையும் வினைப்படு தொகுதியாம் என்க. ஐந்தலை, நான்மறை என்பனவற்றிற்கு நாகம், முதல்வர் என்பன முடிக்குஞ்சொல் அன்மையின், வினைப்படு தொகுதியாகாமை யுணர்க.

'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்' என்பதனுல் சினைமுதற்கிளவி யென்ருராயினும், சிறவாத பண்பு முதலாயினவும் கொள்ளப்படும்.

எ - டு: சுவையாறு முடைத் திவ்வடிசில், கதியைந்து முடைத்திக் குதிரை என வரும்.

'இருதோள் தோழர்பற்ற' எனவும், 'ஒண்குழை யொன்று ஒல்கியெருத்தலைப்ப' எனவும் உம்மையின்றி வந்தனவாலெனின்:—ஆண்டும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன வென்பது. (௩௩)

௩௪. மன்னுப் பொருளும் அன்ன இயற்றே.

இ - ள்: இல்லாப் பொருட்கும் இடமும் காலமும் பொருளும் முதலாயினவற்ருெடு படுத்து இன்மை கூறுதற்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக எ - று.

எ - டு: பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லையெனவும், குருடு காண்டல் பகலுமில்லை யெனவும், 'உறற்பால நீக்கல் உறுவர்க்கு மாகா' (நாலடி - ௧0௪) எனவும் வரும்.

இல்லாப் பொருட்கு ஒருகாலும் நிலையுறுதலின்மையின், 'மன்னுப் பொருள்' என்ருர்.

'இடம் முதலாயினவற்ருெடு படுத்தற்கண்' என்பது ஏற்புழிக் கோடல் என்பதனுல் பெற்ரும். அவற்ருெடு படாதவழிப் பவளக் கோட்டு நீலயானை யில்லை என உம்மையின்றி வருமென்பதாம்.

முற்றும்மையும் எச்ச உம்மையுமாகிய வேறுபாடுடைய வேனும், உம்மை பெறுதல் ஒப்புமையால், 'அன்ன இயற்று' என்ருர்.

இரண்டு சூத்திரத்தானும் மரபுவழுக் காத்தவாறு. (ரு௪)

ருரு. எப்பொரு ளாயினும் அல்லது இல்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.

இ - ள்: யாதாயினும் ஒரு பொருளையாயினும் ஒருவன் அல்ல தில்லென்னும் வாய்பாட்டான் இல்லையெனலுறின், அப்பொருள் தன்னையே கூறாது அப்பொருளல்லாத பிறிதுபொருள் கூறுக எ - று.

எ - டு: பயறுளவோ வணிகீர்? என்று வினயவழி உழுந்தல்ல தில்லை; கொள்ளல்லதில்லை என அல்லதில்லென்பான் பிறிதுபொருள் கூறியவாறு கண்டுகொள்க.

'அல்லதில்லெனின்' எனப் பொருள்பற்றி ஓதினாராகலின், அல்ல தில்லென்னும் வாய்பாடேயன்றி, உழுந்தன்றியில்லை உழுந்தே யுள்ளது என அப்பொருள்படுவன எல்லாம் கொள்க. உழுந்தல்ல தில்லை எனப்பிறிது பொருள் கூறாது பயறல்லதில்லையென அப்பொருள் கூறின், பயறுள்ள அல்லன வில்லையென மறுதலைப் பொருள்பட்டுச் செப்பு வழுவாமாறு அறிக.

யாதானுமாக அல்லதில்லெனின் பிறிதுபொருள் கூறுக என எஞ் சாமல் தழீஇ யாப்புறுத்தற்கு 'எப்பொருளாயினும்' என்றார்.

'அல்லதில்' என்பதற்குத் [1] தன்னுழையுள்ளதல்லதை இல்லெனின் என்றும், 'அப்பொருளல்லாப் பிறிதுபொருள் கூறல்' என்பதற்கு இனப் பொருள் கூறுக என்றும், உரைத்தாரால் உரையாசிரியரெனின்:— பயறுளவோ என்று வினயவழிப் பயறில்லை யென்றுறப்படும் வழு வின்மையானும், உள்ளதல்லதென்றல் கருத்தாயின் ஆசிரியர் அல்ல தெனக் குறித்த பொருள் விளங்காமையின் அகப்படச் சூத்திரியா ராகலானும், பாம்புணிக் கருங்கல்லும் பயறும் விற்பா னொருவனுழைச் சென்று பயறுளவோ என்றவழிப் பாம்புணிக் கருங்கலல்லதில்லை யென்றால் இனப்பொருள் கூறாமையாற் பட்ட இழுக்கின்மையானும், அவை போலியுரை யென்க. அல்லதூஉம், இனப்பொருள் கூறுக என்பதே கருத்தாயின், 'அப்பொருளல்லா இனப்பொருள் கூறல்' என்னாது 'பிறிதுபொருள் கூறல்' என்னார் ஆசிரியர், அதனாலும் அஃதுரையன்மை யுணர்க. (ருரு)

ரு௬. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்.

இ - ள்: அல்லதில் என்பான், பிறிது பொருள் கூறாது அப் பொருள் தன்னையே கூறுமாயின், இப்பயறல்லதில்லை எனச் சுட்டிக் கூறுக எ - று.

பயறுளவோ என்றவழிச் சுட்டாது பயறல்லதில்லை எனின், பய றுள உழுந்து முதலாயின இல்லை எனப் பிறிதுபொருளேற்பித்துச் செப்பு வழுவா மென்பது.

'அல்லதில்' என்பது அதிகாரத்தாற் பெற்றாம்.

தன்னினமுடித்தல் என்பதனால், பசும்பயறல்லதில்லை, பெரும்பய றல்லதில்லை எனக் கிளந்து கூறுதலுங் கொள்க.

1. 'தன்னுழையுள்ளதல்லது என்றும்' என்பதும் பாடம்.

'செப்பும் வினாவும்' (சொல் - ௧௩) என்றதனால் இவ்வேறுபாடு இனிது விளங்காமையானும், 'பொருளொடு புணராச்சுட்டு' (சொல்-௩௭) என வழுவமைக்கின்றாராகலானும், இவற்றை விதந்து கூறினார். (௩௬)

௩௭. பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்றா கும்மே.

இ - ள்: சுட்டானன்றிப் பொருள் வரையறுத்து உணர்த்தாச் சுட்டுப்பெயரால் கூறினும், பொருள் வேறாகாது இப்பயறெனச் சுட்டிக் கூறிய பொருளேயாம் எ - று.

என் சொல்லியவாறோ எனின்:—இவையல்லதில்லை என்றவழி இவை யென்பது பயற்றையே சுட்டாது உழுந்து முதலாயினவற்றிற்கும் பொதுவாய் நிற்றலின் வழுவாமன்றே; ஆயினும், முன் கிடந்த பயறு காட்டி இவை யென்றானாகலின், அவற்றையே சுட்டு முதலானமைக்கவெனச் செப்புவழு வமைத்தவாறு.

சாதியும் பண்புந் தொழிலும் முதலாயினபற்றி ஒரு பொருளை வரைந்துணர்த்தாது எல்லாப் பொருள்மேலுஞ் சேறலின் 'பொருளொடு புணராச் சுட்டுப் பெயர்' என்றார்.

'வேறுபடாது', 'ஒன்றாகும்' என்பனவற்றுள் ஒன்றே அமையுமெனின்:—பொருள் வரைந்துணர்த்தும் பெயரொடு பொருள் வரைந்துணர்த்தாச் சுட்டுப் பெயர் வேறுபாடுடைத்தேனும், ஒரு பொருள்மேல் முடிதலின் ஒருபொருட்டாமென்பது விளக்கிய 'பொருள் வேறுபடாது ஒன்றாகும்' என்றார்.

'அப்பொருள் கூறுதற்கண்' என்றது பொதுப்படக்கூறியவதனால், பிறிதுபொருள் கூறும்வழியும் இவையல்லதில்லை யெனச் சிறுபான்மை சுட்டுப்பெயரால் கூறினும் அமையும் என்பதாம்.

யானைநூல் வல்லானொருவன் காட்டுட்போவுழி ஒரு யானை யடிச்சுவடு கண்டு இஃதரசுவாவாதற்கேற்ற இலக்கண முடைத்து என்றவழியும்,

'இஃதோர் செல்வற் கொத்தனம் யாமென
மெல்லவென் மகன்வயிற் பெயர்தந் தேனே' (அகம்-௨௬)

என்புழியும் சுட்டுப்பெயர் பொருளொடு புணராது நிற்றலின், அவற்றையே அமைக்கின்றது இச்சூத்திரம்[1] என்பாரு முளர். (௩௭)

௩௮. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றின்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் வழிய என்மனார் புலவர்.

இ - ள்: இயற்பெயரும் சுட்டுப் பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிதுவினைகோடற்கு ஒருங்கு நிகழுங்காலம் தோன்றுமாயின், உலகத்தார் சுட்டுப் பெயரை முற்படக் கூறார், இயற்பெயர்க்கு வழியவாகக் கூறுவரென்று சொல்லுவர் புலவர் எ - று.

---

1. என்பார் - யாரெனத் தெரிந்திலது.

'வினைக்கொருங்கியலுங்'கால் அப்பெயர் எழுவாயாயும் உருபேற்றும் நின்றன எல்லாங் கொள்ளப்படும்.

'வினைக்'கென்புழி அவ்விருபெயரும் ஒருவினைகோடலும் தனித்தனி வினைகோடலுங் கொள்க. 'ஒருங்கியலும்' என்றதனால், அவை ஒரு பொருள்மேல் வருதல் கொள்க.

எ - டு: சாத்தன் அவன் வந்தான், சாத்தன் வந்தான் அவன் போயினான் எனவும், சாத்தி வந்தாள் அவட்குப் பூக்கொடுக்க எனவும் வரும்.

அவன்தான் வந்தான், அவனொருவனும் அறங்கூறும், ஈதொன்று குருடு என இயற்பெயரல்லா விரவுப்பெயர்க்கும் உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் வரையறையின்றிச் சுட்டுப்பெயர் முற்கிளக்கவும் படுதலின், 'இயற்பெயர்க் கிளவி'யென்றார். அவ்வாறு அவை முற்கிளக்கப்படுவது ஒருவினை கோடற்கண்ணே யென்பது. அற்றேல், அவை முடவன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க, நங்கை வந்தாள் அவட்குப் பூக்கொடுக்க, குதிரை வந்தது அதற்கு முதிரை கொடுக்க எனத் தனித்தனி வினைகோடற்கண் சுட்டுப்பெயர் பிற்கிளக்கப்படுதல், முன்னையதற்குத் தன்னின முடித்தலினானும், ஏனையிரண்டற்கும் 'இயற்பெய'ரென்ற மிகையானுங் கொள்க.

'பிறிதுவினை கோடற்கண்' எனவே, அவன் சாத்தன், சாத்தனவன் என ஒன்றற்கொன்று பயனிலையாதற்கண்ணும், ஒரு பொருண்மேல் நிகழும் எனவே, அவனுஞ் சாத்தனும் வந்தார், சாத்தனும் அவனும் வந்தார் என வேறு பொருளவாய் வருதற்கண்ணும், யாது முற்கூறினும் அமையும் என்பதாம்.

'வினை' என்றது முடிக்குஞ் சொல்லை.

சுட்டுப்பெயர் யாண்டும் இயற்பெயர்வழிக் கிளக்கப்படுமென யாப்புறுத்தற்கு, 'முற்படக்கிளவார்' என்றும், 'இயற்பெயர் வழிய' என்றுங் கூறினார். 'சுட்டுப்பெயர்' என்றாராயினும், அகர இகரச் சுட்டுப்பெயரே கொள்க.

இதுவும் [1]ஒரு மரபு வழாநிலை. (ருஅ)

ருகூ. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே.

இ - ள்: இயற்பெயரும் சுட்டுப்பெயரும் வினைக்கொருங்கியலும் வழிச் சுட்டுப்பெயரை முற்படக் கூறுதல் செய்யுளுள் உரித்து எ - று.

எ - டு: [2]'அவனணங்கு நோய்செய்தான் ஆயிழாய்! வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி முகனமர்ந்(து)
அன்னை யலர்கடப்பந் தாரணியில் என்னைகொல்
பின்னை யதன்கண் விளைவு.'

எனவரும். இதனுள் சேந்தன் என்பது இயற்பெயர்.

ஒருவினை கொள்வழிச் சுட்டுப்பெயர் முற்கிளத்தல் வந்தவழிக் கண்டு கொள்க.

இது செய்யுளிடத்து மரபுவழு அமைத்தவாறு. (ருகூ)

---

1. 'ஓர்' என்பதும் பாடம்.
2. இப்பாடல் 'தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல்' என்னும் துறை.

௪௦. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெய ரியற்கையின் செறியத் தோன்றும்.

இ - ள்: சுட்டை முதலாகவுடைய காரணப் பொருண்மையை உணர்த்தும் சொல்லும் சுட்டுப்பெயர்போலத் தன்னாற் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொற்குப்பின் கிளக்கப்படும் எ - று.

ஈண்டுச் சுட்டப்படும் பொருள் தொடர்மொழிப் பொருள்.

எ - டு: சாத்தன் கையெழுதுமாறுவல்லன் அதனால் தந்தை உவக்கும், சாத்தி சாந்தரைக்குமாறு வல்லள் அதனால் கொண்டான் உவக்கும் எனவரும்.

'சுட்டுமுதலாகிய காரணக்கிளவி' உருபேற்று நின்ற சுட்டுமுதற் பெயரோடு ஒப்பதோர் இடைச்சொல்லாகலின், 'சுட்டுப்பெய ரியற்கையின் செறியத் தோன்றும்' என்றார். செயற்கென்னும் வினையெச்சம், உருபேற்று நின்ற தொழிற் பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும், உருபும் பெயரும் [1]என்றாகாது பகுப்பப் பிளவுபட் டிசையாது ஒன்று பட்டிசைத்தலான், அதனின் வேறாயினாற்போல, இதுவும் உருபேற்ற சுட்டுப்பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான், வேறாகவே கொள்ளப்படுமென்பது.

அஃதேல், சாத்தன் வந்தான் அஃதரசற்குத் துப்பாயிற்று எனத் தொடர்மொழிப் பொருளையும் சுட்டிவரும் சுட்டுப்பெயர் கூறாது காரணக் கிளவியே கூறியதென்னை யெனின்:—அவ்வாறு வருவன தன்னின முடித்தல் என்பதனால் அடங்கும். ஈண்டுச் சுட்டப்படும் பொருளை யுணர்த்துவது பெயரன்மையின், 'சுட்டுப்பெயரியற்கை' என்றது வழக்கினகத்துச் சுட்டப்படும் பொருளை உணர்த்தும் சொற் குப் பின்னிற்றலும் செய்யுளகத்து முன்னிற்றலுமாகிய அத்துணையே யாம். செய்யுட்கண் முன்னிற்றல் வந்தவழிக் கண்டுகொள்க.

பொருள் பற்றாது பண்பு முதலாயின பற்றிவந்த சுட்டாதலின் வேறு ஓதப்பட்டதென்று உரையாசிரியர் கூறினாராலெனின்:—சாத்தன் வந்தான் அஃதரசற்குத் துப்பாயிற்று எனவும், கிழவன் பிரிந்தான் அதனைக் கிழத்தி யுணர்ந்திலள் எனவும், எழுவாயாயும் ஏனை வேற்றுமை யேற்றும் அச்சுட்டுப் பயின்று வருதலால் பண்பு முதலாயினவற்றைச் சுட்டும் சுட்டெனப் பொது வகையால் கூறாது, 'காரணக் கிளவி' என ஒருசார் வேற்றுமைக்குரிய வாய்பாடுபற்றி ஓதுதல் குன்றக்கூறலாக லானும், சுட்டுப் பெயராயின் 'சுட்டு முதலாகிய காரணக் கிளவி' என்றும், 'சுட்டுப் பெயரியற்கையின் செறியத் தோன்றும்' என்றும் கூறுதல் பொருந்தாமையானும், அது போலியுரை யென்க.

இதனால், வழக்கின்கண் மரபு வழாநிலையுஞ் செய்யுட்கண் மரபு வழுவமைதியும் உணர்த்தினர். (௪௦)

௪௧. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.

இ - ள்: வினைக்கொருங்கியலும்வழிச் சிறப்பினாகிய பெயர்க்கும் இயற்பெயரை உலகத்தார் முற்படக் கிளவார் பிற்படக் கிளப்பர் எ - று.

1. 'ஒன்றாகாது' என்பதும் பாடம்.

'வினைக்கொருங்கியலும்' என்பது ஏற்புழிக்கோடல் என்தபனுற் பெற்றும். ஈண்டுச் சிறப்பாவது மன்னர் முதலாயினூராற் பெறும் வரிசை.

எ - டு: ஏனாதி நல்லுதடன், காவிதி கண்ணந்தை என வரும்.

உம்மையால், தவம், கல்வி, குடி, உறுப்பு முதலாயினவற்ருனுகிய பெயரும் கொள்ளப்படும். அவை: முனிவ னகத்தியன் எனவும், தெய்வப் புலவன் திருவள்ளுவன் எனவும், சேரமான் சேரலாதன் எனவும், குருடன் கொற்றன் எனவும் வரும்.

திருவீரவாசிரியன், மாந்தக்கொங்கேனுதி என இயற்பெயர்முன் வந்தனவாலெனின்:—அவை தொகைச்சொல்லாகலான், அவற்றின் கண்ணதன்று இவ்வாராய்ச்சியென்பது. ஆண்டியற்பெயர் முன்னிற்றல் பண்புத்தொகை யாராய்ச்சிக்கட் (எச்ச - சகசு) பெறுதும். (சக)

சஉ. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே.

இ - ள்: ஒரு பொருளைக் குறித்து வந்த பல பெயர்ச்சொற்கள், ஒருதொழிலே முடிபாகக் கூருது பெயர்தோறும் வேருகிய தொழில் களைக் கொடுத்து முடிப்பின், ஒரு பொருளவாய் ஒன்ரு எ - று.

எ - டு: ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான் என்னுது, ஆசிரியன்வந்தான் பேரூர்கிழா னுண்டான் செயிற்றியன்சென்ருன் என வேறுவேறு தொழில் கிளந்தவழி, வந்தானும் உண்டானும் சென்ருனும் ஒருவனுகாது வேருய்த் தோன்றியவாறு கண்டுகொள்க.

'எந்தைவருக எம்பெருமான்வருக [1]மைந்தன்வருக மணாளன் வருக' என்புழிக் காதல் முதலாயினபற்றி ஒரு தொழில் பலகால் வந்தமையல்லது வேற்றுத் தொழிலன்மையான், ஒருதொழில் கிளத் தலேயாமென்பது. ஈண்டுத் தொழிலென்றது முடிக்குஞ் சொல்லை.

ஆசிரியன் வந்தானென்று ஒருகாற்கூறி இடையிட்டு அவனையே பின்னெருகால் பேரூர்கிழான் சென்ருன் என்று கூறியவழி, ஒரு தொடரன்மையான் ஆண்டாராய்ச்சியில்லை யென்பது. அஃதேல், ஆசிரியன் வந்தான் பேரூர்கிழா னுண்டான் செயிற்றியன் சென்ருன், என இடையீடின்றி நின்றனவும் ஒரு தொடரன்மையின், ஆராய்ச்சி யின்ரும் பிறவெனின்:—அற்றன்று; உட்டொடர் பலவாயினும், அவற்றின் தொகுதியாய் அவன் தொழில் பலவுங் கூறுதற் பொருண்மைத் தாகிய பெருந்தொடர் ஒன்றெனவே படுமென்பது.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்துண்டு சென்ருன் என்னுது, ஆசிரியன் வந்தான் பேரூர்கிழா னுண் டான் செயிற்றியன் சென்ருன் எனப் பெயர்தோறும் வேறு தொழில் கிளத்தல் மரபன்மையின், மரபுவழுக் காத்தவாருயிற்று. (சஉ)

சங. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்(று)
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.

இ - ள்: தன்மைச்சொல்லும் அஃறிணைச்சொல்லும் எண்ணுதற் கண் விராய் வரப்பெறும் எ - று.

1. மைந்தன் - ஈண்டுக் கணவன் என்பது பொருள்.

என் சொல்லியவாறோ எனின்:—உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எண்ணுதற்கண் விராய் வந்து உயர்திணை முடிபு கொள்ளினும், அஃறிணைமுடிபு கொள்ளினும் வழுவாமாகலின், 'மயங்கல்கூடா தம்மரபின' (சொல் - ௧௧) எனவே, அவை விராய் எண்ணப்படாமையும் எய்தி நின்றது; தன்மைப்பன்மைச் சொல்லாய் அஃறிணைச்சொல்லும் முடியுமாகலால், தன்மைச்சொல்லும் அஃறிணைச் சொல்லும் விராய்வந்து உயர்திணைமுடிபு கொள்ளினும் அமையும் எனத் திணைவழுக் காத்தவாறு.

எ - டு: யானும் என்னெஃகமும் சாறும் என வரும்.

பன்மைத் தன்மைவினை கோடல் எற்றாற்பெறுதுமோ எனின்:— 'தன்மைச்சொல்லே'யென்றதனானும்,

'பன்மை உரைக்குந் தன்மைக் கிளவி
எண்ணியன் மருங்கில் திரிபவை யுளவே.' (சொல்-௨௦௬)

என்பதனானும் பெறுது மென்பது.

அஃதேல், 'எண்ணியன் மருங்கில் திரிபவை உளவே' என்பதனான் விராய்வந்து உயர்திணைமுடிபு கோடலும் பெறப்படுதலின், இச் சூத்திரம் வேண்டா எனின்:—உய்த்துணர்ந்திடர்ப்படுவது எடுத்தோத்தில்வழி என மறுக்க. (சரு)

**சசு. ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்**
**ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது.**

இ - ள்: ஒருமையெண்ணினை உணர்த்தும் பொதுப்பிரி பாற்சொல்லாகிய ஒருவன் ஒருத்தி என்னுஞ் சொற்கள், ஒருமைக்கண்ணல்லது, இருமை முதலாகிய எண்ணுமுறைக்கண் நில்லா எ - று.

எனவே, பொதுப்பிரியாப் பாற்சொல்லாகிய ஒருவர் என்னுஞ் சொல் இருவர் மூவரென எண்ணுமுறைக்கண்ணும் நிற்குமென்பதாம்.

'பொதுப்பிரி பாற்சொல்' என்றாரேனும், ஒருவன் ஒருத்தி என்பனவற்றது பாலுணர்த்தும் ஈறே கொள்ளப்படும். என்னை? 'எண்ணுமுறை நில்லா' என்று விலக்கப்படுவன அவையே யாகலினென்பது.

மகன் மகள் என்னுந்தொடக்கத்துப் பெயர்ப்பொதுப்பிரி பாற்சொல்லின் நீக்குதற்கு 'ஒருமை யெண்ணின்' என்றும், ஒருவர் ஒன்று என்பனவற்றின் நீக்குதற்குப் 'பொதுப்பிரி பாற்சொல்' என்றுங் கூறினார். ஒருவரென்னும் ஆண்மைப்பெண்மைப் [1]பொதுவில் ஒருவன், ஒருத்தி என்பன பிரிதலின் 'பொதுப்பிரி பாற்சொல்' என்றார். 'பொதுப்பிரி பாற்சொல்' என்னும் ஒற்றுமையான் 'நில்லாது' என ஒருமையாற் கூறினார்.

ஒருவன் ஒருத்தி என ஒருமைக்கண் நிற்றலும், இருவன் மூவன் இருத்தி முத்தி என எண்ணு முறைமைக்கண் நில்லாமையும் கண்டு கொள்க. ஒன்றென முடித்தல் என்பதனான் ஒருவேன் ஒருவை என்னும் தன்மை முன்னிலையிரும் எண்ணுமுறை நில்லாமை கொள்க.

இது பால்வழுக் காத்தவாறு. (சசு)

1. 'பொதுவில் பிரிதலின்' என்பதும் பாடம்.

சரு. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.

இ - ள்: வியங்கோளொடு தொடரும் எண்ணுப்பெயர் திணை விராய் வருதல் வரையார் எ - று.

எ - டு: ஆவு மாயனுஞ் செல்க என வரும்.

தன்மைப் பன்மை வினைபோலாது வியங்கோள் இருதிணைக்கும் உரிய சொல்லாகலான் இருதிணைச் சொல்லையும் முடிக்குமன்றே, அதனான் ஆவு மாயனுஞ் செல்க என்புழி வழுவின்மையின் அமைக்கற்பாற்றன்று எனின்:—இருதிணைப் பொருட்கும் உரித்தேனும், ஒருதிணைப் பொருளைச் சொல்லுதற்கண் இருதிணைப்பொருளும் உணர்த்தாமையின், ஒரு திணையே உணர்த்தல் வேண்டும்; ஒருதிணை உணர்த்தியவழி ஏனைத்திணைப்பெயரோடு இயையாமையின் திணைவழுவாம், அதனான் அமைக்கல் வேண்டுமென்பது.

எண்ணென்று உறழென்று ஆயிரண்டும் இனனொன்றால் வேண்டுமென்பது இலக்கணமாகலான், 'யானுமென்னெஃகமுஞ்சாறும்' என்புழியும் 'ஆவுமாயனுஞ் செல்க' என்புழியும் இனனல்லன உடனெண்ணப் படுதலின் வழுவென்றாரால் உரையாசிரியரெனின்:—திணைவேறுபாடுண்டேனும் யானுமென் எஃகமும் என்புழி வினைமுதலும் கருவியுமாகிய இயைபும் ஆவு மாயனும் என்புழி மேய்ப்பானும் மேய்க்கப்படுவனவுமாகிய இயைபும் உண்மையான் உடனெண்ணப்படுதலானும், யானை தேர் குதிரை காலாள் எறிந்தான் என [1]முன்னர் உதாரணங் காட்டுபவாகலானும், பிறண்டும் 'எண்ணுத் திணை விரவுப் பெயர் அஃறிணை முடிபின' (சொல்-௫௧) என ஆசிரியர்க்கு ஆராய்ச்சி, முடிபு கோடற்கண்ணதாகலானும், அவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉம், திணைவிராய் எண்ணல் வழு என்பதே கருத்தாயின்,

'நெடுநல் யானையுந் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாம்'　　　　(புறம் - எ௨)

எனவும், 'இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்' (குறள் - ௬௨௦) எனவும், படர்க்கைச்சொல்லும் அஃறிணைக் கிளவியும் விராய் எண்ணுதல் வழக்குப் பயிற்சி யுடைமையான் அவையும் அடங்க 'உயர்திணைச் சொல்லே அஃறிணைக் கிளவி'எனப் பொதுப்பட ஓதாது 'தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி' (சொல்-௪௩) எனத் தன்மைச் சொல்லையே விதந்தோதல் குன்றக் கூறலாமாகலானும், அவர்க்கது கருத்தன்மை யறிக.

'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீருமெம்
அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்'　　　　(புறம்-௯)

எனத் திணைவிராய் வந்து முன்னிலைவினை கோடல் எற்றாற் பெறுதுமெனின்:—அந்நிகரன செய்யுள் முடிபு எனப்படும், அவற்றை அதிகாரப் புறனடையாற் (சொல்-௪௬௩) கொள்க.

1. இடையியல் 43ஆம் நூற்பா

திணைவிராய் எண்ணப்படும் பெயர் வியங்கோளல்லா விரவுவினை யொடு தொடர்ந்து வருவன வழக்கினுள் உளவேல் ஒன்றென முடித்தல் என்பதனாற் கொள்க. (சரு)

சசு. வேறுவினைப் பொதுச்சொல் [1]ஒருவினை கிளவார்.

இ - ள்: வேறுபட்ட வினையையுடைய பல பொருட்குப் பொது வாகிய சொல்லை ஒன்றற்குரிய வினையால் கிளவார் எ - று.

எனவே, பொதுவினையால் கிளப்பர் என்றவாறும்.

எ - டு: அவை அடிசில், அணி, இயம், படை யென்னும் தொடக் கத்தன.

அடிசில் என்பது: உண்பன தின்பன பருகுவன நக்குவன என்னும் நால்வகைக்கும், அணி என்பது: கவிப்பன கட்டுவன செறிப்பன பூண் பன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும், இயம் என்பது: கொட்டுவன ஊதுவன எழுப்புவன என்னும் தொடக்கத்தனவற்றிற்கும், படை என்பது: எய்வன எறிவன வெட்டுவன குத்துவன என்னும் தொடக்கத் தனவற்றிற்கும் பொதுவாகலின், அடிசில் அயின்றார், மிசைந்தார் என வும்; அணி அணிந்தார், மெய்ப்படுத்தார் எனவும்; இயம் இயம்பினர், படுத்தார் எனவும்; படை வழங்கினர், தொட்டார் எனவும் பொது வினையால் சொல்லுக. அடிசில் தின்றார், பருகினர் எனவும்; அணி கவித்தார், பூண்டார் எனவும்; இயம் கொட்டினர், ஊதினர் எனவும்; படை எறிந்தார், எய்தார் எனவும் ஒருசார்க்குரிய வினையாற் சொல் லின் மரபு வழுவாமென்பது.

பொருளின் பொதுமையைச் சொன்மேலேற்றி 'வேறு வினைப் பொதுச்சொல்' என்றார். (சசு)

சஎ. [2]எண்ணுங் காலும் அதுஅதன் மரபே.

இ - ள்: வேறுவினைப் பொருள்களைப் பொதுச் சொல்லால் கூறாது பிரித்தெண்ணுமிடத்தும் அதனிலக்கணம் ஒரு வினையாற் கிளவாது பொதுவினையாற் கிளத்தலேயாம் எ - று.

எ - டு: சோறுங்கறியும் அயின்றார், யாழுங்குழலும் இயம்பினர் எனவரும். சோறுங்கறியும் தின்றார், யாழுங்குழலும் ஊதினர் எனின் வழுவாம்.

அஃதேல், 'ஊன்துவை கறிசோறுண்டு வருந்துதொழில் அல்லது' (புறம் - கச) என்புழி உண்டென்பது ஒன்றற்கே உரிய வினையாகலின் வழுவாம் பிறவெனின்:—உண்டலென்பது உண்பன தின்பன எனப் பிரித்துக் கூறும் வழிச் சிறப்பு வினையாம்; பசிப்பிணி தீர நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாகலின் பொது வினையுமாம்; அதனானது வழுவன்றென்பது. கறியொழித்து ஏனையவற்றிற்கெல்லாம் உண்டற்றொழில் உரித்தாகலின் பன்மைபற்றிக் கூறினர் எனினும் அமையும். (சஎ)

---

1. 'ஒருஉவினை' என்பதும் பாடம். (இளம் - உரை)
2. 'எண்ணுங்காலை' எனப் பாடங்கொள்வர் தெய்.

396 ௪௮. இரட்டைக் கிளவி [1]இரட்டிற்பிரிந் திசையா.[2]

இ - ள்: இரட்டித்து நின்று பொருளுணர்த்துஞ் சொற்கள் இரட்டித்து நிற்றலில் பிரிந்து நில்லா எ - று.

எ - டு: சுருசுருத்தது, மொடுமொடுத்தது என இசைபற்றியும், கொறுகொறுத்தார், மொறுமொறுத்தார் எனக் குறிப்புப்பற்றியும், குறுகுறுத்தது கறுகறுத்தது எனப் பண்புபற்றியும் இரட்டித்து வந்தன பிரிந்து நில்லாமை கண்டுகொள்க.

அஃதேல், குறுத்தது குறுத்தது எனப் பிரிந்தும் வந்தனவா லெனின்:—அற்றன்று. குறுத்ததென்பதோர் சொல் குறுவென்பதோர் சொல்லடுத்துக் குறுகுறுத்ததென நின்று குறுமை மிகுதி உணர்த்திற்றாயின், குறுத்ததென்பது குறுமை யுணர்த்தக் குறுவென்பது மிகுதி உணர்த்திற்றாதல் வேண்டும். குறுவென்பது மிகுதியுணர்த்தாமையின் குறுகுறுத்ததென்பது ஒரு சொல்லாய் நின்று அப்பொருளுணர்த்திற்றெனவேபடும். அதனாற்றான் அக்குறுமை மாத்திரம் உணர்த்தி நிற்பது அதனின் வேறாமென்பது. கறுகறுத்ததென்பதுக்கும் ஈதொக்கும்.

கறுத்தது கறுத்தது, குறுத்தது குறுத்தது எனச் சொன்முழுவதும் இருமுறை வாராமையின், அடுக்கன்மை யறிக.

ஈண்டு 'இரட்டைக் கிளவி' யென்றது, மக்களிரட்டை விலங்கிரட்டை போல வேற்றுமை யுடையனவற்றையன்றி, இலையிரட்டையும் பூவிரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையனவற்றை யென்று உணர்க.

இரட்டித்து நின்று பொருளுணர்த்துவனவற்றைப் பிரித்து வழங்கல் மரபன்மையின், மரபுவழுக் காத்தவாறு. (௪௮)

௪௯. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
[3]உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.

இ - ள்: உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் ஒருபெயராய்ப் பலபொருட்குப் பொதுவாகிய சொல்லைப் பிற உள்பொருளொழியத் தெரிந்துகொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக தலைமையானும் பன்மையானும் எ - று.

'தெரிபு' என்பதற்குச் செயப்படுபொருள் தலைமையும் பன்மையுமேயாம்.

எ - டு: பிறரும் வாழ்வா ருளரேனும் பார்ப்பனச்சேரி யென்றல் உயர்திணைக்கண் தலைமைபற்றிய வழக்கு. எயினர்நாடென்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பிற புல்லும் மரனும் உளவேனும் கமுகந்தோட்டம் என்றல் அஃறிணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. ஓடுவங்காடென்பது அத்திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பார்ப்பார் பலராயினும் கமுகு பலவாயினும் அவை தாமே பன்மை பற்றிய வழக்காம்.

1. 'இரட்டுப் பிரிந்திசையா' எனப் பாடங்கொள்வர் இளம்.
2. இதனை நன்னூலார் (பொது - 45) அப்படியே எடுத்து மொழிந்துள்ளார்.
3. இவ்வரியை ௫௦-ஆம் நூற்பாவின் முதல் வரியாகக் கொள்வர் தெய்.

பலபொருளொரு சொல்லின் நீக்குதற்கு 'ஒரு பெய'ரென்றார்.

ஒன்றென முடித்தல் என்பதனான், அரசர் பெருந்தெரு, வயிரகடகம், ஆநீண்டுகுற்றி, ஆனதர், எருத்தில் எனப் பொதுச்சொல்லின்றி வருவனவுங் கொள்க.

உள்பொருளெல்லாம் கூறாது ஒன்றனையெடுத்துக் கூறுதன் மரபன்றாகலின், பொதுச்சொல்மேற் சொல் நிகழுமாறு உணர்த்திய முகத்தான் மரபுவழுக் காத்தவாறு. (௪௯)

௫௦. பெயரினும் தொழிலினும் பிரிபவை யெல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

இ - ள்: உயர்திணைக் கண்ணும் அஃறிணைக் கண்ணும் பெயரினானும் வினையினாலும் பொதுமையிற் பிரிந்து ஆண்மைக்கும் பெண்மைக்கும் உரியவாய் வருவன எல்லாம் வழுவாகா, வழக்குவழிப் பட்டனவாகலான் எ - று.

'உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும்' என்பது அதிகாரத்தான் வந்தது.

எ - டு: 'தொடியோர் கொய்குழை யரும்பிய குமரி ஞாழல்' என்பது உயர்திணைக்கண் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகுசொல். வடுகரசராயிரவர் மக்களையுடையர் என்பது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். இவர் வாழ்க்கைப்பட்டார் என்பது தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகுசொல். இவர் கட்டிலேறினார் என்பது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். நம்பி நூறெருமையுடையன் என்பது அஃறிணைக்கண் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகுசொல். நம்மரசன் ஆயிரம் யானையுடையன் என்பது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். தொடிசெறித்தலும், மக்கட்டன்மையும், இல்வாழ்க்கைப்படுதலும், கட்டிலேறுதலும், எருமைத்தன்மையும், யானைத்தன்மையும் ஒழிக்கப்படும் பொருட்கு முண்மையால் பொதுவாய் நிற்கற்பாலன ஒருபாற்குரியவாய் வருதலின், மரபுவழு வமைத்தவாறு.

பிறசொல்லாற் பிரிவன 'வேறுபடு வினையினும் இனத்தினுஞ் சார்பினும்' (சொல் - ௫௩) எனவும், 'தெரிநிலையுடைய அஃறிணையியற்பெயர்' (சொல் - ௧௭௪) எனவும், 'நினையுங்காலைத் தத்தம் மரபின் வினையோடல்லது பால்தெரிபிலவே' (சொல் - ௧௭௨) எனவும் முன்னோதப்படுதலானும், ஆண்டு வழுவின்மையானும், ஈண்டுத் தாமே பிரிவனவே கொள்க.

தம்மாற்றும் பிரியுமென்பார் 'பெயரினுந் தொழிலினும்' என்றார். பெயர்க்கண்ணும் வினைக்கண்ணுந் தாமே பிரிவனஎனினும் அமையும்.

அஃறிணைக்கண் தொழிலிற் பிரிந்தன உளவேல் கண்டு கொள்க.

இன்று இவ்வூர்ப் பெற்றமெல்லா மறங்கறக்கும், உழவொழிந்தன என உரையாசிரியர் காட்டினாராலோவெனின்:—பெற்றமென்னும் பொதுப்பெயர் கறத்தலும் உழுதலுமாகிய சிறப்புவினையால் பொதுமை நீங்குதல் வழுவன்மையான் ஈண்டைக்கெய்தாமையின், அவர்க்கது கருத்தன்றென்பது. (௫௦)

௫௧. பலவயி னானும்எண் ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

இ - ள்: திணை விராய் எண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச்சொற் கொண்டு முடியும் எ - று.

எ - டு: 'வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்.'

எனவும்,

'கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும்' (புறம் - ௫௫)

எனவும் வரும்.

எண்ணுத்திணை விரவுப்பெயர் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற்கொண்டு முடியுமெனவே, சிறுபான்மை உயர்திணைச் சொற் கொண்டு முடியவும் பெறுமென்பதாம்.

எ - டு: 'பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டு'
(சிலப் - வஞ்சினமாலை)

எனவும்,

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி யெனப்படு வார்.' (ஆசாரக்கோவை-௬௪)

எனவும் வரும்.

இருதிணைப்பெயரும் விராய் வந்து ஒருதிணைச்சொல்லான் முடிதல் வழுவாயினும், செய்யுளகத்தமைக எனத் திணைவழு அமைத்தவாறு.

'பாணன் பறையன் துடியன் கடம்பனென்(று)
இந்நான் கல்லது குடியுமில்லை.' (புறம் - ௩௩௫)

என இருதிணைப்பெயரும் விரவி வாராது உயர்திணைப்பெயரே வந்து செய்யுளுள் அஃறிணைமுடிபு கொண்டன என்று உரையாசிரியர் கூறினாராலெனின்:—பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டிய வழிக் குடிக்கேற்ற தொகை கொடுத்தல் வழுவன்மையான், அவ்வுரை போலியுரை யென்க. குடியென்று சுட்டாதவழிப் பாணன் பறையன் துடியன் கடம்பன் என்று இந்நால்வருமல்லது இல்லை யென்றேயாம்.

'தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க'
(சிலப் - கானல் - 32)

எனவும்,

'யானுந் தோழியும் ஆயமும் ஆடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்'
(யா. வி. 28 மேற்.)

எனவும் இவை யெவ்வாறு வந்தனவோவெனின்:—அவை தலைமைப் பொருளையும், தலைமையில் பொருளையும் விராய் எண்ணித் தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமையில் பொருளும் முடிந்தனவாவ

தோர் முறைமைபற்றி வந்தன, ஈண்டைக்கெய்தா என்பது. 'தானுந் தன் புரவியுந் தோன்றினான்' என்பதுமது. (௫௧)

௫௨. வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொலென்று
ஆயிரு வகைய பலபொரு ளொருசொல்.

இ-ள்: வினைவேறுபடும் பலபொருளொருசொல்லும் வினை வேறுபடாப் பலபொருளொருசொல்லும் என இரண்டு வகைப்படும் பலபொருளொருசொல், எ-று.

இனமுஞ் சார்பும் உளவேனும் வேறுபடுத்தற்கண் வினைசிறப்புடைமையின், அதனாற் பெயர் கொடுத்தார், ஆதீண்டு குற்றி யென்பது போல.

[1]இலக்கணச் சூத்திரங்களே யமையும் இச்சூத்திரம் வேண்டா பிற வெனின்:—இருவகைய வென்னும் வரையறை யவற்றால் பெறப்படாமையானும், வகுத்துப் பின்னும் இலக்கணங் கூறியவழிப்பொருள் இனிது விளங்குதலானும், இச்சூத்திரம் வேண்டுமென்பது. (௫௨)

௫௩. அவற்றுள்
வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினுஞ் சார்பினுந்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.

இ-ள்: அவ்விரண்டனுள்ளும், வினைவேறுபடும் பலபொருளொரு சொல், ஒருபொருட்கே சிறந்த வினையானும், இனத்தானும் சார்பானும், பொருள்தெரிநிலைக்கண் பொதுமை நீங்கித் தெளியத் தோன்றும் எ-று.

மா என்பது ஒருசார் விலங்கிற்கும் ஒருமரத்திற்கும் வண்டிற்கும் பிற பொருட்கும் பொது. குருகு என்பது ஒருபறவைக்கும் உலைமூக்கிற்கும் வளைக்கும் பிறவற்றிற்கும் பொது. நாகம் என்பது மலைக்கும் ஒருசார் மரத்திற்கும் யானைக்கும் பாம்பிற்கும் பிறவற்றிற்கும் பொது. சே என்பது ஒருசார்ப் பெற்றத்திற்கும் ஒருமரத்திற்கும் பிறவற்றிற்கும் பொது.

எ-டு: மாப்பூத்தது; மாவுமருதுமோங்கின என 'வேறுபடு வினையானும் இனத்தானும்,' மரமென்பது விளங்கிற்று. கவசம் புக்கு நின்று மாக்கொணா வென்றவழிக் குதிரையென்பது 'சார்பினால்' விளங்கிற்று. குருகு முதலாயினவு மன்ன.

'வேறுபடுவினையினு' மென்றாரேனும், ஒன்றென முடித்த லென்பதனான், இம்மா வயிரம், வெளிறு என வேறுபடுக்கும் பெயருங் கொள்ளப்படும்.

இனத்தொடு சார்பிடை வேற்றுமை யென்னையெனின்:—ஒரு சாதிக்கணணைந்த சாதி இனமெனப்படும்; அணைந்த சாதியன்றி ஒருவாற்றானியைபுடையது சார்பெனப்படுமென்பது. (௫௩)

---

1. ௫௩, ௫௪-ஆம் நூற்பாக்கள்.

௫௪. [1]ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும்.

இ - ள்: வேறுபடாத வினைகொண்டவழி வேறுபடாது தோன்றும் வினைவேறுபடாப் பலபொருளொருசொல் ஆராயுங்கால் கிளந்து சொல்லப்படும் எ - று.

எ - டு: மாமரம் வீழ்ந்தது, விலங்குமா வீழ்ந்தது என வரும்.

வினைவேறுபடாப் பலபொருளொருசொலென வேறு நிற்பன வில்லை. வேறுபடுவினை முதலாயினவற்றான் வேறுபடுவனதாமே பொது வினை கொண்டவழி வினைவேறுபடாப் பலபொருளொரு சொல்லா மென்பது அறிவித்தற்கு 'ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்' என்றார்.

'ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்' என ஒரு சூத்திர மாக உரையாசிரியர் பிரித்தாராலெனின்:—அங்ஙனம் பிரிப்பின் ஒன்று வினை மருங்கி னொன்றித் தோன்றுதலும் வினைவேறுபடூஉம் பலபொரு ளொரு சொற்கே இலக்கணமாய் மாறுகோடலானும், வினைவேறுபடு வன தாமே பொதுவினை கொண்டவழி வினைவேறு படாதனவாமென் பது அதனாற் பெறப்படாமையானும், அது போலியுரை யென்க.

முன்னும் பின்னும் வருஞ் சார்பு முதலாயினவற்றாற் குறித்த பொருள் விளங்காக்கால் கிளந்தே சொல்லுகவென யாப்புறுத்தற்கு 'நினையுங்காலை' என்றார்.

'ஆங்'கென்பது உரையசை.

குறித்த பொருள் விளங்காமைக்கூறல் மரபன்மையின் மரபுவழுக் காத்தவாறு. (௫௪)

௫௫. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.

இ - ள்: ஒருபொருள் வேறுபாடு குறித்தோன், அஃது ஆற்றல் முதலாயினவற்றால் விளங்காதாயின், அதனைத் தெரித்துச் சொல்லுக எ – று.

எ - டு: 'அரிதாரச் சாந்தம் கலந்தது போல
வுருகெழத் தோன்றி வருமே—முருகுறழும்
அன்பன் மலைப்பெய்த நீர்.'

எனவும்,

'வாரு மதுச்சோலை வண்டுதிர்த்த நாண்மலரால்
நாறு மருவி நளிமலை நன்னாட'

எனவும் வரும். 'கலந்ததுபோல வருமே யிலங்கருவி யன்பன் மலைப் பெய்த நீர்' எனவும், 'நாறு மருவி நளிமலை நன்னாட' எனவும் தெரித்து மொழியாதவழிக் குறித்தது விளங்காது வழுப்படுதலின் மரபுவழுக் காத்தவாறு. வடநூலார் இதனை நேய மென்ப.

'ஊட்டி யன்ன வொண்டளிர்ச் செயலை' (அகம் - ௬அ) என்புழி இன்னதனை யென்று தெரித்து மொழியாமையின் வழுவாம் பிற

1. இம்முதல் வரியை ஒரு நூற்பாவாகவும், அடுத்த இரு வரிகளை ஒரு நூற்பா வாகவும் கொள்வர் ஏனையுரையாசிரியர்கள்.

வெனின்:—உவமை யென்னும் அலங்காரமாயினன்றே இன்னதொன் றனையெனல் வேண்டுவது. செயலையந் தளிரினது செய்யாத நிறத்தைச் செய்ததுபோலக் கூறுங் கருத்தினளுகலிற் [1]பிறிதோரலங்காரமாம். அதனுன் அது கடாவன்றென்பது.

'படுத்துவைத் தன்ன பாறை மருங்கின்
எடுத்துநிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி.' (மலைபடு-கரு)

என இன்னோரன்ன வெல்லாம் அவ்வலங்காரம் பற்றி வந்தன.

'ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது'

என்புழிக் குவளை புலால் நாறுதற்கும் எருக்கங்கண்ணி நறிதாதற்கும் காரணங் கூருமையின் வழுவாம் பிறவெனின்:—புதல்வற் பயந்த பூங் குழன் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிழவனெடு புலந்துரைக் கின்றுளாகலின் குவளை புலால் நாறுதற்கு அவன் தவற்றேடு கூடிய அவள் காதல் காரணமென்பதூஉம், எருக்கங்கண்ணி நறிதாதற்கு மகிழ்நன் செய்த துனிகூர் வெப்பம் முகிழ்நகை முகத்தால் தணிக்கும் புதல்வன்மேல் ஒருகாலைக் கொருகால் பெருகுமன்பு காரணமென் பதூஉம் பெறப்படுதலின், வழுவாகா தென்பது.

'மீக்கூற்ற' மென்புழிப்போலக் 'கூற்றுக்''கூற்ற'மென நின்றது. (ருரு)

ருசு. குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்று
ஆவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றெடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலும்.

இ - ள்: குடிமை முதலாக விறற்சொல் ஈருகச் சொல்லப்பட்ட பதினெட்டு முளப்பட அன்ன பிறவும் அவற்றேடு பொருந்தித் தொக்கு முன்னத்தினுணருங் கிளவிகளெல்லாம், உயர்திணைப் பொருண்மேல் நின்றனவாயினும், அஃறிணைப் பொருளை யுணர்த்தி நின்றவழிப்போல, அஃறிணைமுடிபே கொள்ளும் எ - று.

எ - டு: குடிமை நன்று, குடிமை தீது; ஆண்மை நன்று, ஆண்மை தீது என வரும். ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறு பொருந்தும் வினை தலைப்பெய்க.

தன்மைதிரிபெயர் — அலி. [2]இதனேடு ஒருபொருட் கிளவியாய் வருவனவுங் கொள்க. உறுப்பின் கிளவி — குருடு முடம் என்னுந் தொடக்கத்தன. காதற்சொல்—பாவை யானை யென ஒப்புமை கருதாது காதல்பற்றி வருவன. சிறப்புச்சொல் - கண்போலச் சிறந்தானைக் கண்

1. பிறிதோரலங்காரம்—தற்குறிப்பேற்றம்.
2. இதனேடு ஒரு பொருட்கிளவியாய் வருவன அழிதூ முதலியன.

ணென்றலும் உயிர்போலச் சிறந்தானை உயிரென்றலும் என இவை முதலாயின. செறற்சொல் - செறுதலைப் புலப்படுக்கும் பொறியறை கெழீஇயிலி யென்னுந் தொடக்கத்தன. விறற்சொல் - விறலையுணர்த்தும் பெருவிறல் அருந்திறல் என்னுந் தொடக்கத்தன. தன்மை திரிபெயர் முதலாயின பொருள் வகையான் ஆறாக அடக்கப்பட்டன.

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, பெண்மை, உறுப்பின் கிளவி, சிறப்புச் சொல், விறற்சொல் என்பன உயர்திணைக்கண் ஆகுபெயராயல்லது வாரா; அல்லன இருதிணைக்கண்ணும் ஒத்த வுரிமையவெனக் கொள்க.

காதல்பற்றிச் சிறுவனை யானையென்றலும் ஆகுபெயராமன்றோ எனின்:—யாதானுமோர் இயைபுபற்றி ஒன்றன்பெயர் ஒன்றற்காயது ஆகுபெயராம்; இயைபு கருதாது காதல் முதலாயினவற்றான் யானை யென்றவழி ஆகுபெயருள் அடங்கா வென்பது. சிறுவனை யானை யென்றலும் ஒன்றன்பெயர் ஒன்றற்காத லொப்புமையான் ஆகுபெய[1]ரென்பாருமுளர்.

சொல்லானன்றித் திணைவேறுபாடு சொல்லுவான் குறிப்பொடு படுத்துணரப்படுதலின், 'முன்னத்தினுணருங் கிளவி' என்றார்.

'அஃறிணை முடிபின' என்னாது 'அஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும்' எனப் பொதுப்படக் கூறியவதனால், குடிமை நன்று, குடிமை நல்ல; அடிமை நன்று, அடிமை நல்ல என ஏற்புழி ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலுங் கொள்ளப்படும்.

'அன்ன பிறவும்' என்றதனான், வேந்து வேள் குரிசில் அமைச்சு [2]புரோசு என்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

குடிமை முதலியன உயர்திணை யுணர்த்தும்வழி அஃறிணையான் முடிதல் வழுவாயினும் அமைகவெனத் திணைவழு வமைத்தவாறு. (௫௬)

௫௭. காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்என வருஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வருஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா உயர்திணை மேன.

இ - ள்: காலமுதலாகச் சொல்லப்பட்ட பத்தும் அத்தன்மைய பிறவுமாகிய அப்பகுதிக்கண் வருஞ் சொல்லெல்லாம், உயர்திணைச் சொல்லாயினும், உயர்திணைக்கண் பால்பிரிந்திசையா, அஃறிணைப் பாலாயிசைக்கும் எ - று.

எ - டு: இவற்குக் காலமாயிற்று, உலகம் பசித்தது, உயிர் போயிற்று, உடம்பு நுணுகிற்று, தெய்வஞ் செய்தது, வினை விளைந்தது, பூதம் புடைத்தது, ஞாயிறு பட்டது, திங்க ளெழுந்தது, சொன்னன்று என வரும்:

'பிறவும்' என்றதனால், பொழுது நன்று. யாக்கை தீது, விதிவலிது, கனலி கடுகிற்று, மதி நிறைந்தது, வெள்ளி யெழுந்தது, வியாழ நன்று என்பன போல்வன கொள்க.

---

1. என்பார்—யாரெனத் தெரிந்திலது.

2. புரோசு—புரோகிதன். 'மடியதூ வுள்ளமொடு............புரோசு மயக்கி' (பதிற்-7ஆம் பத்து - பதிகம்) என்னுமிடத்தும் இப்பொருட்டாதல் அறிக.

'கால'மென்பது காலக் கடவுளை. 'உலக'மென்றது ஈண்டு மக்கட் டொகுதியை.

'உயிரே யுடம்பே'யெனப் பெரிதுவகையாற் கூறினாரேனும், மக்க ளுயிரு முடம்புமே கொள்ளப்படும். என்னை? உயர்திணை முடிவு கொள்ளா என விலக்கப்படுவன அவையேயாகலினென்பது. 'அஃ றிணை யென்மனா ரவரல பிறவே' என்புழி அஃறிணையா யடங்கி உயர் திணை முடிபெய்தாமையின், அவையும் விலக்கற்பாட்டிற் கேலா வெனின்:—அற்றன்று; மக்கட் சுட்டுடைமையான் அவை உயர் திணையேயா மென்பது. யாதோ மக்கட்சுட்டுடையவாறெனின்:— அறஞ்செய்து துறக்கம் புக்கான் எனவும், உயிர்நீத்தொருமகன் கிடந் தான் எனவும், உயிருமுடம்பும் அவரின் வேறன்றி அவராக வுணரப் பட்டு உயர்திணைக்கேற்ற முடிபுகொண்டு நிற்றலின் மக்கட்சுட்டுடைய வென்பது. ஓராவை எம்மனை வந்தாளென்றும் ஓரெருத்தை எந்தை வந்தானென்றும் உயர்திணை வாய்பாட்டாற் கூறியவாறுபோல, உயிரு முடம்பும் அவ்வாறு கூறப்பட்டன வென்று கொள்ளாமோவெனின்:— கொள்ளாம்; அவற்றான் வரும் பயனோக்கிக் காதலால் எம்மனை எந்தை யென்றான் ஆண்டு; ஈண்டுக் காதன் முதலாயின இன்மையின் மக்கட்சுட்டுடைய வென்பது.

'பால்வரை தெய்வ'மென்பது எல்லார்க்கு மின்பத் துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது. 'வினை'யென்பது அறத் தெய்வம். 'சொல்'லென்பது நாமகளாகிய தெய்வம்.

அஃதேல், குடிமை யாண்மை யென்பனவற்றோடு இவற்றிடை வேற்றுமை யென்னையெனின்:—அவை இருதிணைப் பொருட்கண்ணுஞ் சேறன் மாலைய; இவை அன்னவல்ல வென்பது.

உலகமென்பது இடத்தையும் ஆகுபெயரான் இடத்து நிகழ் பொரு ளாகிய மக்கட்டொகுதியையும் உணர்த்துமாகலான், இருதிணைக்கண் ணும் சென்றதன்றோவெனின்:—அற்றன்று; வடநூலுள் உலகமென் பது இருபொருட்கு முரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட் தொகு தியை யுணர்த்தும் வழியும் உரிய பெயரே யாகலின் ஆகுபெயரன்று; அதனால் ஒருசொல் இருபொருட்கண்ணுஞ் சென்றதெனப் படாது. இருபொருட்கு முரிமையான் இரண்டு சொல்லெனவே படுமென்பது. வேறுபொருளுணர்த்தலின் வேறு சொல்லாதலே துணிவாயினும், 'பலபொருளொருசொ' லென்புழி (சொல் – ௫௨) எழுத்தொப்புமை பற்றி ஒருசொல்லென்றார்.

மேலென்பது எழாம் வேற்றுமைப் பொருளுணர்த்துவதோரிடைச் சொல்லாகலின், ஈறு திரிந்து 'மேன'வென நின்றது.

இதுவும் திணைவழுவமைதி. (௫௭)

௫அ. நின்றாங்கு இசைத்தல் இவணியல் பின்றே.

இ - ள்: ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர்திணையாயிசைத்தல் ஈண்டு இயல்பின்று எ - று.

ஈண்டென்றது காலமுதலாகிய சொற்களை. அவை இடையீடின்றி மேற்சொல்லப்பட்டு நிற்றலின் 'இவண்' என்றார்.

'இவணியல்பின்று' எனவே, 'குடிமை ஆண்மை' (சொல்-௫௬) முதலாயின சொல்லின்கண், குடிமை நல்லன், வேந்து செங்கோலன் என நின்றுங்கு நின்று உயர்திணையாயிசைத்தல் இயல்புடைத்தென்பதாம். (௫அ)

௫௯. [1]இசைத்தலும் உரிய வேறிடத் தான.

இ - ள்: காலமுதலாகிய சொல் உயர்திணையாய் இசைத்தலுமுரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்டவழி எ - று.

எ - டு: காலன் கொண்டான், உலகர் பசித்தார் என வாய்பாடு வேறுபட்டவழி உயர்திணையாய் இசைத்தவாறு கண்டுகொள்க. (௫௯)

௬0. எடுத்த மொழிஇனஞ் செப்பலும் உரித்தே.

இ - ள்: இனமாகிய பலபொருட்கண் ஒன்றனை வாங்கிக் கூறியவழி அச்சொல் தன்பொருட்கினமாகிய பிறபொருளைக் குறிப்பால் உணர்த்தலு முரித்து எ - று.

உம்மை எதிர்மறையாகலான் உணர்த்தாமையு முரித்தென்பதாம்.

எ - டு: 'அறஞ்செய்தான் துறக்கம் புகும்' எனவும், 'இழிவறிந் துண்பான்கண் இன்பமெய்தும்' (குறள் - ௯௪௬) எனவும் வரும். இவை சொல்லுவார்க்கு இனப்பொருளியல்பு உரைக்குங் குறிப்புள்வழி, மறஞ் செய்தான் துறக்கம் புகான், கழிபேரிரையன் இன்பமெய்தான் என இனஞ்செப்புதலும், அக்குறிப்பில்வழி இனஞ்செப்பாமையுங்கண்டு கொள்க.

எடுத்த பொருளை உணர்த்தும் மொழியை 'எடுத்தமொழி' என்றார். இனனல் பொருளின் நீக்குதற்கு 'இனம்' என்றார்.

அஃதேல், மேற்சேரிக் கோழி யலைத்தது எனக் கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டது எனவும், குடங்கொண்டான் வீழ்ந்தான் எனக்குடம் வீழ்ந்தது எனவும், இவை இனஞ் செப்புமென்றும், ஆ வாழ்க அந்தணர் வாழ்க என்பன இனஞ்செப்பா வென்றும் உரையாசிரியர் கூறினாராலெனின்:— அற்றன்று; கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டலின்றி மேற்சேரிக்கோழி யலைத்தல் அமையாமையானும், குடம் வீழ்தலின்றிக் குடங்கொண்டான் வீழ்தல் அமையாமையானும், கீழ்ச்சேரிக் கோழி யலைப்புண்டலும் குடம் வீழ்தலும் சொல்லானன்றி இன்றியமையாமையாகிய பொருளாற்றலால் பெறப்படுமாகலான் ஈண்டைக்கெய்தா, இது சொல்லாராய்ச்சியாகலா னென்பது. இன்னோரன்ன சொல்லாற்றலால் பெறப்பட்டனவெனின்:— புகையுண் டென்றவழி எரியுண்மை பெறுதலுஞ் சொல்லாற்றலால் பெறப்பட்டதா மென்பது. இனி ஆ வாழ்க அந்தணர் வாழ்க என்புழிச் சொல்லுவான் ஒழிந்த விலங்கும் ஒழிந்த மக்களுஞ் சாகவென்னுங் கருத்தினனாயின் இவையுமினஞ் செப்புவன வன்றோ வென்பது, அதனான் அவை போலியுரையென்க.

ஒருதொடர் ஒருபொருளுணர்த்தி யமையாது வேறொரு பொருளுங் குறித்து நிற்றல் வழுவாயினும் அமைக எனை மரபுவழுக் காத்தவாறு. (௬0)

---

1. இந்நூற்பாவினை ௩௭௭-ஆம் குறளில் மேற்கோளாக எடுத்தாளுவர் பரிமேலழகர்.

சுக. கண்ணுந் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக்(கு) இயலும் எழுத்தலங் கடையே.

தம்வினைக்கியலு மெழுத்தான் முடிதலும் தம்முதல்வினைக்கியலு மெழுத்தான் முடிதலுமெனச் சினைநிலைக்கிளவி இருமுடிபுடையவற்றுள், முதல்வினைக்கியலு மெழுத்தான் முடிவுழி யென்பார், 'தம்வினைக்கியலு மெழுத்தலங்கடை' யென்றார்.

இ - ள்: கண்முதலாயவும் பிறவும் பன்மைகுறித்து நின்ற சினைநிலைக்கிளவி; அவை தம்வினைக்கியலு மெழுத்தான் முடியாது தம் முதல்வினைக்கியலுமெழுத்தான் முடியும்வழிப் பன்மையாற் சொல்லப்படும் யாப்புறவுடைய வல்ல; முதலொன்றாயின் ஒருமையானும், பலவாயிற் பன்மையானுங் கூறப்படும் எ - று.

எ - டு: கண்ணல்லள், தோணல்லள், முலைநல்லள் எனவும்; கண்ணல்லர், தோணல்லர், முலைநல்லர் எனவும் வரும்.

'பிறவு' மென்றதனால் புருவங் காதென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

'பன்மை கூறுங் கடப்பாடிலவே' யென்றதனாற் பால் வழுவும், 'தம்வினைக் கியலும் எழுத்தலங் கடை' யென்றதனாற் திணை வழுவும் அமைந்தார்.

பன்மை கொண்டன, பன்மையொருமை மயக்கமில்லாத் திணை வழுவாகலின், 'தம் வினைக்கியலு மெழுத்தலங்கடை' யென்பதனான் அமைக்கப்படும்.

மூக்கு நல்லள், கொப்பூழ் நல்லள் என ஒருமைச் சினைப்பெயர் நின்று உயர்திணை கொண்டனவும், நிறங்கரியள், கவவுக்கடியள் எனப் பண்புந் தொழிலும் நின்று உயர்திணைகொண்டனவும் தன்னின முடித்தல் என்பதனா னமைக்கப்படும்.

கோடு கூரிது களிறு, குளம்பு கூரிது குதிரை என அஃறிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று முதல்வினையாகிய ஒருமையான் முடிந்தனவும் அமையுமா றென்னையெனின்:- ஆண்டுப் பன்மையொருமை மயக்கமல்லது திணைவழுவின்மையின் ஈண்டைக்கெய்தா; அப்பன்மையொருமை மயக்கம் ஒன்றெனமுடித்தல் என்பதனா னமைக்கப்படும்.

அஃதேல், இச் சூத்திரத்தால் திணைவழுவோடு கூடிய பால் வழு அமைக்கப்பட்டதென்பது எற்றாற்பெறுதுமெனின்:- சினைக்கிளவிக்குத் தம்வினைக்கியலு மெழுத்தாவது அஃறிணை வினைக்குரிய எழுத்தாம்; அஃதல்லாதது உயர்திணைவினைக்குரிய எழுத்தேயாம், என்னை? அஃறிணைக்கு மறுதலை உயர்திணையேயாகலான். அதனால் திணைவழுவுதலும் பெறுதுமென்பது. அஃதேல், தம் வினைக்கியலுமெழுத்தாவன சினைவினைக்குரிய எழுத்தென்றும், அவை யல்லாதனவாவன முதல் வினைக்குரிய எழுத்தென்று முரைக்க; உரைக்கவே, உயர்திணைச்சினையும் அஃறிணைச்சினையுமெல்லாம் அடங்குமெனின்:— அற்றன்று; அஃறிணைக்கண் சினைவினைக்குரிய எழுத்தோடு முதல்வினைக்குரிய எழுத்திற்கு வேறுபாடின்றி எல்லாம் அஃறிணையெழுத்தேயாகலின், 'தம்வினைக் கியலு மெழுத்தலங்கடை' யென்பதற் கேலாதாகலால், கண் முதலாயின உயர்திணைச் சினையேயா மென்பது. (சுக)

கிளவியாக்கம் முற்றிற்று.

## உ. வேற்றுமையியல்

சூஉ. [1]வேற்றுமை தாமே ஏழென மொழிப.

நான்கு சொற்கும் பொதுவிலக்கணம் உணர்த்தினர், அதற்கிடையீடின்றி அவற்றது சிறப்பிலக்கணம் உணர்த்துதன் முறைமையாயினும், வேற்றுமையிலக்கணம் உணர்த்துதற்கு வேறிட மின்மையானும், பொது விலக்கணமாதல் ஒப்புமையானும், உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாகலின் வேற்றுமை யுணர்த்திப் பெயருணர்த்தல் முறையாகலானும், கிளவியாக்கத்திற்கும் பெயரியற்குமிடை வேற்றுமை யிலக்கணம் உணர்த்திய எடுத்துக்கொண்டார். வேற்றுமையாவன பெயரும் ஓரிடைச்சொல்லு மாகலின், அவற்ற திலக்கணமும் பொது விலக்கணமேயாம்.

வேற்றுமையிலக்கணமென ஒன்றாயினும் சிறப்புடைய எழுவகை வேற்றுமையும் அவற்றது மயக்கமும் விளிவேற்றுமையுந் தனித்தனி யுணர்த்தத் தகும் வேறுபாடு யாப்புடைமையான், மூன்றோத்தா னுணர்த்தினர்.

பொது விலக்கணமுணர்த்திச் சிறப்பிலக்கணம் உணர்த்துதல் முறையாகலின், முதற்கண்ணதாகிய பெயர்ச்சொற்குப் பயனிலைகோடலும் உருபேற்றலும் காலந்தோன்றாமையுமாகிய இலக்கணமுணர்த்துவார் இயைபுபட்டமையான் வேற்றுமையிலக்கணம் உணர்த்தினரென மேலோத்தினோடு இவ்வோத்திடை யியைபு கூறினரால் உரையாசிரியரெனின்:— அற்றன்று; இவ்வோத்துப் பெயரிலக்கணம் நுதலியெடுத்துக் கொள்ளப்பட்டாதாயின், உருபேற்றலும் பயனிலைகோடலும் காலந்தோன்றாமையுமாகிய பெயரிலக்கணம் முன்னோதி, இயைபு படுதலான் வேற்றுமை யுணர்த்தும் கருத்தினராயின் அவற்றையும் இன்ன விலக்கணத்த என உணர்த்திப் பின்னும் எடுத்துக்கொண்ட பெயரிலக்கணமேபற்றியோதிப்பெயரியலெனஓரோத்தான் முடியற்பாற்றன்றே; அவ்வாறன்றி, வேற்றுமையிலக்கணமே முன்கூறி 'அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே' (சொல்-சூகூ) எனவும், 'ஈறுபெயர்க் காகு மியற்கைய வென்ப' (சொல்-சூகூ) எனவும் வேற்றுமையிலக்கணம் கூறி அச்சூத்திரத்தாற் பயனிலை கோடலும் உருபேற்றலும் பெயர்க்கிலக்கணமென்பது உய்த்துணர வைத்துப் பின்னும் வேற்றுமையிலக்கணமே யுணர்த்தி, இதனை வேற்றுமையோத்தென்றும், அவற்றது மயக்கமுணர்த்திய ஒத்தை வேற்றுமை மயங்கியலென்றும், சிறப்பில்லா விளிவேற்றுமையுணர்த்திய ஒத்தை விளிமரபென்றும், நுதலியதனாற் பெயர் கொடுத்து, மூன்றோத்தாக வைத்து, பெயரியலென வேறோரோத்திற்குப் பெயர் கொடுத்தமையானும், 'எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே' (சொல்-கருரு) என்பது முதலாகிய ஐந்து சூத்திரமும் பெயரிலக்கண முணர்த்து மோத்தின் முன்வையாது இடைவைத்தல் பொருந்தாமையானும், இவ்வோத்துப் பெயரிலக்கணம் நுதலி யெடுத்துக் கொள்ளப்பட்டதன்று, வேற்றுமையிலக்கணமே நுதலி யெழுந்ததென வேபடும்; அதனான் அவர்க்கது கருத்தன்றென்க.

அஃதேல், 'பெயர்நிலைக்கிளவி காலந் தோன்றா' (சொல்-எ௦) எனப் பெயரிலக்கணம் ஈண்டுக் கூறியது என்னையெனின்:— பயனிலைகோட

1. இதனையும் சூநு-ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் தெய்.

லும் உருபேற்றலும் பெயரிலக்கணமென்பது ஈண்டுப் பெறப்பட்டமையான், அவற்றோடியையக் காலந்தோன்றாமையும் ஈண்டே கூறினர்; பெயரிலக்கணமாதலொப்புமையா னென்பது.

இ-ள்: வேற்றுமையாவன ஏழென்று சொல்லுவர் தொல்லாசிரியர் எ-று.

செயப்படுபொருண் முதலாயினவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துணர்த்தலின், வேற்றுமையாயின. செயப்படுபொருண் முதலாயினவற்றின் வேறுபடுத்துப் பொருண்மாத்திர முணர்த்தலின், எழுவாயும் வேற்றுமையாயிற்று. அல்லதூஉம், வேற்றுமை யென்பது பன்மை பற்றிய வழக்கெனினும் அமையும்.

'தாமே' யென்பது கட்டுரைச் சுவைபட நின்றது. (க)

சுஙு. விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே.

இ-ள்: விளிகொள்வதன் கண்ணதாகிய விளியோடு தலைப்பெய்ய வேற்றுமை யெட்டாம் எ-று.

'வேற்றுமை' யென்பது அதிகாரத்தான் வந்தது.

முன்னர்,

'விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய வென்ப' (சொல்-கக௮)

என்பவாகலின், 'விளிகொள்வ' தென்றது விளிகொள்ளும் பெயரை. 'அதன்கண் விளி'யென்றதனால், பெயருமன்று, பெயரின் வேறுமன்று, விளி வேற்றுமையாவது திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெயரிறுதி யென்பதாம்.

'வேற்றுமை தாமே யேழென மொழிப' (சொல்-சுஉ) எனப் பிறர் மதங் கூறி இச்சூத்திரத்தால் தந்துணி புரைத்தார். (உ)

சுச. அவைதாம்
பெயர் ஐ ஒடு கு
இன் அது கண் விளி யென்னும் ஈற்ற.

இ-ள்: எட்டெனப்பட்ட வேற்றுமையாவன விளிவேற்றுமையை இறுதியாகவுடைய பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண்ணும் எ-று.

பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்பன பல பெயர் உம்மைத் தொகை. அஃது ஒரு சொல்லாய் 'விளி யென்னும் ஈற்ற' என்பதனான் விசேடிக்கப்பட்டது. பெயரும் ஐயும் ஒடுவும் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணும் என விரியும்.

'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்த' லென்பதனான் ஒடுவென்றும் அதுவென்றும் ஓதினாராகலின், ஆனுருபும் அகரவுருபுங் கொள்ளப்படும்.

விளிவேற்றுமையினது சிறப்பின்மை விளக்கிய 'பெயர் ஐ ஒடு கு இன் அது கண் விளி'யென்னாது 'விளி யென்னும் ஈற்ற' எனப்பிரித்துக் கூறினர். (ங)

சுரு. அவற்றுள்
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.

இ - ள்: மேற்சொல்லப்பட்ட வேற்றுமையுள், முதற்கட் பெய ரென்று கூறப்பட்ட வேற்றுமையாவது பெயர் தோன்றிய துணையாய் நிற்கும் நிலைமையாம் எ - று.

பெயர் தோன்றிய துணையாய் நிற்கும் நிலைமையாவது, உருபும் விளியுமேலாது பிறிதொன்றனோடு தொகாது நிற்கும் நிலைமை. எனவே, உருபும் விளியுமேற்றும் பிறிதொன்றனோடு தொக்கும் நின்ற பெயர் எழுவாய் வேற்றுமையாகா தென்றவாறும்.

எ – டு: ஆ, அவன் என வரும். (ச)

சுசு. பொருண்மை சுட்டல் [1]வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்(று)
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே.

எ - டு: பொருண்மை சுட்டல்—ஆ வுண்டு என்பது.
வியங்கொள வருதல்—ஆ செல்க என்பது.
வினைநிலை யுரைத்தல்—ஆ கிடந்தது என்பது.

வினாவிற் கேற்றல்—அஃதியாது, அஃதெவன் என வினாச் சொல் லொடு தொடர்தல்.

பண்புகொள வருதல்—ஆ கரிது என்பது; தன்னின முடித்த லென் பதனால், ஆ வில்லை, ஆ வல்ல என்னுந் தொடக்கத்துக் குணப்பொருள வல்லா வினைக் குறிப்போடு தொடர்தலுங் கொள்க.

பெயர்கொள வருதல்—ஆ பல என்பது.

அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே யென்பது—அவ்வாறும் பெயர் வேற்றுமைப் பயனிலையாம் எ - று.

முடிக்குஞ் சொற்பொருள் அத்தொடர்மொழிக்குப் பயனாகலின் 'பயனிலை' என்றார். உண்டென்பது பண்பு முதலாயின சுட்டாது உண் மையே சுட்டலின் வேறு கூறினார். பொய்ப்பொருளின் மெய்ப் பொருட்கு வேற்றுமை யுண்மையாகலின், அவ்வுண்மையைப் 'பொருண்மை' யென்றார்.

வியங்கொளவருதல் வினைநிலையுரைத்தற்கண்ணும், வினாவிற் கேற்றல் பெயர்கொள வருதற்கண்ணும், வினைக்குறிப்பாயவழிப் பண்பு கொள வருதற்கண்ணும் அடங்குமாயினும் வினையும் பெயரும் பண்பும் முடிக்குஞ் சொல்லாதலேயன்றி முடிக்கப்படுஞ் சொல்லாதலு முடைய, வியங்கோளும் வினாவும் முடிக்குஞ் சொல்லாயல்லது நில்லாமையின், அவ்வேறுபாடறிவித்தற்கு வேறு கூறினாரென்பது.

'பெயர்தோன்று நிலை' (சொல் - சுரு) என்றதனானும், 'அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே' யென்பதனானும், பெயர் தோன்றிய துணையாய் நின்று பயனிலைத்தாதல் எழுவாய் வேற்றுமைய திலக்கண மென்பது பெற்றாம்.

'ஆபல' என்புழிப் பலவென்பதற்குப் பயனிலை யாதெனின், அது பயனிலையாய் ஆவென்பதனை முடித்தற்கு வந்ததாகலின், தான் பிறி தோர் சொன்னோக்காது ஆவென்பதனோடு தொடர்ந்து அதனை முடித் தமைந்து மாறுமென்பது.

1. 'வியங்கோள் வருதல்' என்பது தாமோதரம் பிள்ளை பதிப்பில் உள்ள பாடம்.

அஃதேல், பயனிலை கொள்ளாதது எழுவாய் வேற்றுமையாமா றென்னையெனின்:— உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாயினும் உருபே லாதவழியும் பெயராமாறு போல, எழுவாய் வேற்றுமை பயனிலை கொள்ளாதவழியும் எழுவாய் வேற்றுமையேயாமென்பது. இலக்கிய மெங்குஞ் செல்லாதன இலக்கணமாமாறென்னையெனின்:— ஆண்டி லக்கணமாவன உருபேற்றற்கேற்ற தன்மையும் பயனிலையும் பயனிலை கோடற்கேற்ற தன்மையுமாகலின், அத்தன்மை எல்லாவற்றிற்கு முண்மையின் இலக்கணமா மென்பது.

அகரச்சுட்டு 'அன்றி'யென ஈறு திரிந்து நின்றது. 'அன்றியனைத் தும் பெயர்ப்பயனிலை' யெனவே, பயனிலைகோடல் பெயர்க்கிலக்கண மென்பதூஉம் பெற்றாம். (ரு)

சூஎ பெயரி னாகிய தொகையுமா ருளவே
அவ்வு முரிய அப்பா லான.

இ - ள்: பெயரும் பெயருந்தொக்க தொகையுமுள; அவையு முரிய எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கோடற்கு எ - று.

எ - டு: யானைக்கோடு கிடந்தது, மதிமுகம் வியர்த்தது, கொல் யானை நின்றது, கருங்குதிரை யோடிற்று, உவாப்பதினான்கு கழிந்தன, பொற்றொடி வந்தாள் என வரும்.

'பெயரினாகிய தொகையு' மென்னும் உம்மையாற், பெயரொடு பெயர் தொக்கனவே யன்றி, நிலங்கடந்தான், மாக்கொணர்ந்தான் எனப் பெயரொடு வினை வந்து தொக்க வினையினாகிய தொகையுமுள என்பதாம்; ஆகவே பெயரொடு பெயரும் பெயரொடு தொழிலுந் தொக்கன தொகை யென்பது பெற்றாம்.

'அவ்வுமுரிய' எனப் பொதுவகையாற் கூறினாரேனும், ஏற்புழிக் கோடல் என்பதனான் எழுவாய் வேற்றுமையாதற் கேற்புடைய பெயரி னாகிய தொகையே கொள்ளப்படும்.

இருதொடர்படச் சூத்திரித்திடர்ப்படுவ தென்னை? பெயரினாகிய தொகையும் எழுவாய் வேற்றுமையாமென்றோத அமையாதோ எனின்:—அங்ஙனமோதின் பெயரொடு பெயரும், பெயரொடு வினையுந் தொக்கன தொகைச் சொல்லா மென்னுந் தொகையிலக்கணம் பெறப் படாதாம்; அவ்விலக்கண முணர்த்துதற்கு இவ்வாறு பிரித்தோதினா ரென்பது.

'பெயரினாகிய தொகையு'மென்ற உம்மையான் வினையினாகிய வினைத்தொகை தழுவப்பட்டதென்றும், 'எல்லாத் தொகையு மொரு சொன்னடைய' (சொல் - சஉ0) என்பதனால் தொகைச் சொல்லெல் லாம் எழுவாய் வேற்றுமையாதல் பெறப்படுதலின், ஈண்டு 'அவ்வு முரிய அப்பாலான' என்றது தொகைச் சொற்குப் பயனிலை கோடன் மாத்திர மெய்துவித்தற்கென்றும், உரையாசிரியர் கூறினாராலெனின்:- அற்றன்று; வினைத்தொகைக்கு நிலைமொழி வினையென்பது உரையா சிரியர்க்குக் கருத்தன்மை 'வினையின் றொகுதி காலத் தியலும்' (சொல் - சகரு) என்னுஞ் சூத்திரத்திற் சொல்லுதும். இனி 'எல்லாத் தொகையு மொருசொன் னடைய' (சொல் - சஉ0) என்பதற்கு ஒரு சொன்னடையவா மென்பதல்லது எழுவாய் வேற்றுமையாமென்னுங் கருத்தின்மையானும், அக்கருத்துண்டாயின் அவையும் எழுவாய் வேற்றுமையாய் நின்று 'அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே'

(சொல் - சுசு) என்றதனால் பயனிலை யெய்துமாகலின் 'அவ்வுமுரிய அப்பாலான' வென்றல் கூறியது கூறிற்றுமாகலானும், அதுவும் உரையாசிரியர் கருத்தன்றென்க.

அஃதேல், தொகையும் எழுவாய் வேற்றுமையா மென்பதே இச் சூத்திரத்திற்குக் கருத்தாயின் 'எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே' (சொல்-சுரு) என்னுஞ் சூத்திரத்தின்பின் வைக்க எனின்:— பெயர் தோன்றிய துணையாய் நிற்றலும் பயனிலை கோடலுமாகிய எழுவாய் வேற்றுமை யிலக்கண மிரண்டுந் தொகைச்சொற்கு மெய்து வித்தற்கு அவ்விரண்டு சூத்திரத்திற்கும் பின் வைத்தாரென்பது. ஆண்டு வைப்பின், 'அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே' (சொல் - சுசு) என்றதனாற் பயனிலைகோடல் பெயர்க்கேயாய்த் தொகைக் கெய்தாதா மென்பது. (சு)

சுஅ. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப.

இ - ள்: மூன்றிடத்துப் பெயரும் செவிப்புலனாகத் தோன்றி நின்று பயனிலை கோடல் செவ்விதென்ப ஆசிரியர் எ - று.

எனவே, அவ்வாறு தோன்றாது நின்று பயனிலை கோடலுமுண்டு; அது செவ்விதன்று என்றவாறும்.

'பெய'ரென்றது ஈண்டெழுவாயை.

எ - டு: கருவூர்க்குச் செல்லாயோ சாத்தா என்றவழிச் செல்வல் எனவும், யான் யாது செய்வல் என்றவழி இது செய் எனவும், இவன் யார் என்றவழிப் படைத்தலைவன் எனவும் செப்பியவழி, யான் நீ இவன் என்னும் எழுவாய் வெளிப்படாது நின்று, செல்வல், இது செய், படைத்தலைவன் என்னும் பயனிலை கொண்டவாறு கண்டுகொள்க.

'எவ்வயிற் பெயரும்' என்றது என்னையெனின்:—செல்வல், இது செய் என்னுந் தன்மை முன்னிலை வினைகளான் யான் நீ யென்பன வற்றின் பொருளுமுணரப்படுதலின் யான் செல்வல், நீ யிதுசெய் யெனப் பெயர் வெளிப்படுதல் பயமின்றாயினும் வழக்கு வலியுடைத் தாகலின், அவ்வாறு வருதல் பயமின்றெனப்படாதென்பது விளக்கிய 'எவ்வயிற் பெயரு' மென்றாரென்பது.

அவ்வியலான் நிலையலென விரியும். பயனிலைக்கு இருநிலைமையு மோதாது எழுவாய்க்கே யோதுதலாற் பயனிலை வெளிப்பட்டே நிற்கும்.

எவ்வயிற் பெயரும் பயனிலை கோடல் செவ்விதென, உருபேற்றல் செவ்விதன்றுமென வுரைத்து [1]அவ்வாய் நீயிரென்பன உருபேலா வென்று காட்டினாரால் உரையாசிரியரெனின்:—அவ்வாயென்பது இடைச்சொல்லாய் ஆண்டென்னும் பொருள்பட நின்றவழி உருபே யன்றிப் பயனிலையும் ஏலாதாம். இனி அல்வழிக்கண் நும்மென்பது திரிந்து நீயிரென நின்ற திரிபைப் பெயரெனக் கொண்டு உருபேலா தென்றாராயின், நீயென்பதன் திரிபாகிய நின் என்பதனையும் பெய ராகக்கொண்டு பயனிலை கொள்ளாதென்றுங் கூறல்வேண்டும்; அன்றி

1. இச்சொல் இளம். உரையில் இல்லை. எனினும், இச்சொல் அவருரையில் இருந் திருக்க வேண்டும் எனத்தெரிகிறது. நச். உரையிலும் இச்சொல் உளது.

நும்மின் திரிபாகிய நீயிரென்பதனை 'எல்லா நீயிர் நீயெனக் கிளந்து' (சொல்-௧௭௪) என இயற்கைப் பெயரோடு ஒருங்கு வைத்தது நீயி ரென்னுந் திரிபே இயல்பாக வேற்றுமைக்கண் நும்மெனத் திரியினு மமையு மென்னுங் கருத்தினராயன்றே; அதனால் இயல்பாகக் கொள் ளப்பட்ட நிலைமைக்கண் நீயிரென்பதனை உருபேலா தென்றாராயின் நும்மெனத் திரிந்து உருபேற்பதனை உருபேலாதென்றல் பொருந்தா தாம். அதனனது போலியுரை யென்க. (எ)

௬௯. கூறிய முறையின் உருபுநிலை திரியாது
ஈறுபெயர்க் காகும் இயற்கைய வென்ப.

எழுவாய் வேற்றுமை யுணர்த்தி, ஏனை யறுவகை வேற்றுமை யிலக் கணமும் உணர்த்திய எடுத்துக்கொண்டார்.

இ-ள்: பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்று கூறப்பட்ட முறைமையையுடைய உருபு தந்நிலை திரியாது பெயர்க்கீறு மியல்பை யுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

எ-டு: சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத் தனது, சாத்தன்கண் என வரும்.

அம்முறைபற்றி அவை யெண்ணுப்பெயரான் வழங்கப்படுதலின் 'கூறிய முறையி னுருபு' என்றார். வினைச்சொலிறுதி நிற்குமிடைச் சொல், தாமென வேறு உணரப்படாது அச்சொற்குறுப்பாய் நிற்கு மன்றே, இவை யவ்வாறு பெயர்க்குறுப்பாகாது தாமென வேறுணரப் பட்டிறுதி நிற்குமென்பார் 'நிலைதிரியாது' என்றார்.

உருபு பெயர் சார்ந்து வருமெனவே, உருபேற்றலாகிய பெயரிலக் கணமும் பெறப்பட்டது. (அ)

எ௦. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழில்நிலை யொட்டும் ஒன்றலங் கடையே.

இ-ள்: பெயர்ச்சொற் காலந் தோன்றா, வினைச்சொல்லோ டொக்கும் ஒரு கூறல்லாத விடத்து எ-று.

எ-டு: சாத்தன், கொற்றன், உண்டல், தின்றல் எனக் காலந் தோன்றாது நிற்றலும்; உண்டான், தின்றான் எனத் தொழினிலை யொட் டுவன காலந்தோன்றி நிற்றலுங் கண்டுகொள்க.

உண்டான், தின்றான் என்னுந்தொடக்கத்துப் படுத்துச் சொல்லப் படும் தொழிற்பெயர் வினைச்சொற்போலத் திணையும் பாலுங் காலமும் முதலாயினவற்றை விளக்கி, அன் ஆன் முதலாகிய ஈற்றவாய் வருத லின், 'தொழில்நிலை யொட்டும்' என்றார். 'ஒட்டு'மென்பது உவமச்சொல்.

பெயராகிய நிலையை யுடையது பெயர்நிலையென அன்மொழித் தொகை. பெயர்-பொருள். தொழில்நிலையுமது. 'காலந் தோன்றா' என் பன ஒரு சொல்லாய்ப் 'பெயர்நிலைக் கிளவி' யென்பதற்கு முடிபாயின.

பயனிலை கோடலும் உருபேற்றலுமாகிய பெயரிலக்கணம் ஈண்டுப் பெறப்படுதலின், அவற்றோடியையக் காலந்தோன்றாமையாகிய பெயரி லக்கணமும் ஈண்டே கூறினார். பெரும்பான்மைபற்றிக் காலந்தோன் றாமை பெயரிலக்கணமாயிற்று. (௯)

எக. [1]இரண்டா குவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்(பு)
அவ்விரு முதலில் தோன்றும் அதுவே.

இ-ள்: 'பெயர் ஐ ஒடு கு' என்னுஞ் சூத்திரத்து ஐஎனப்பெயர் பெற்ற வேற்றுமைச்சொல் இரண்டாவதாம். அஃதியாண்டுவரினும் வினையும் வினைக்குறிப்புமாகிய அவ்விரண்டு முதற்கண்ணுந் [2]தோன்றும். அவை பொருளாக வரும் எ-று.

எ-டு: குடத்தை வனைந்தான், குழையையுடையன் என வரும்.

எண்ணுமுறையான் இரண்டாவதென்பது பெறப்படுமாயினும், இக்குறி தொல்லாசிரியர் வழக்கென்பதறிவித்தற்கு 'ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி யிரண்டாவ'தென்றார். இது மூன்றாவது முதலாயி னவற்றிற்கு மொக்கும்.

'பெயரிய' என்பது பெயரென்பது முதலாக முடிந்ததோர் பெய ரெச்சம். தம்மை யுணர்த்துவனவும் பெயரெனப்படுதலின் 'ஐயெனப் பெயரிய' வென்றார்.

'வினையே வினைக்குறிப்' பென்றாராயினும் அவற்றின் செயப்படு பொருளே கொள்ளப்படும்; 'அவ்விருமுதலிற்றோன்று' மென்றமை யான், முதலாதற்கும் வேற்றுமைப்பொருளாதற்கும் ஏற்பன அவையே யாகலின். என்னை? அவை முதலாதற் கேற்றவாறெனின்:— செயப்படு பொருள் முதலாயின தொழிற்குக்காரணமாகலானும், 'ஆயெட் டென்ப தொழின்முத னிலையே' (சொல்·கக௨) என அவற்றை முதனிலை யென்று கூறுபவாகலானு மென்பது.

அஃதேல், செயப்படு பொருளாவது வினைமுதற்றொழிற் பயனுறுவ தாதலால், குழை முதலாயினவற்றிற்கு அவ்விலக்கண மேலாமையிற் செயப்படு பொருளன்மையான் வினைக்குறிப்பெனல் வேண்டா வெனின்:— அற்றன்று; 'அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளு, மெய்ந்நிலை யுடைய' (சொல்-௨௦௦) என்றாராகலின், குறிப்புச்சொற் காலமொடு தோன்றித் தொழிற்சொல்லாதலும் குழை முதலாயின தொழிற்பயனுறுதலும் ஆசிரியர் துணிபாகலின், அவையுஞ் செயப்படு பொருளா மென்பது.

ஆயின், செயப்படு பொருட்கட் டோன்றுமென வமையும், வினையே வினைக்குறிப்பெனல் வேண்டாவெனின்:— அங்ஙனங் கூறின், செயப்பாடினிது விளங்குஞ் சிறப்புடைத் தெரிநிலைவினைச் செயப்படு பொருளையே கூறினாரோ, குறிப்புப் பொருளு மடங்கப் பொதுவகை யாற் கூறினாரோவென் றையமாம்; ஐயம் நீங்க வினையே வினைக்குறிப் பென்றாரென்பது. வினை வினைக்குறிப்பு என்பன ஈண்டாகுபெயர்.

புகழை நிறுத்தான், புகழை நிறுத்தல், புகழை யுடையான், புகழை யுடைமை என இரண்டாவது பெயரொடு தொடர்ந்தவழியும் வினைச் செயப்படுபொருளும் குறிப்புச்செயப்படுபொருளும் பற்றியே நிற்கு மென்பார், 'எவ்வழி வரினு'மென்று யாப்புறுத்தார்.

---

1. இதனையும் எ௨ ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரேநூற்பாவாகக் கொள்வர் இளம்.
2. 'தோன்றுமவை' என்பது திரு. சி. கணேசையர் பதிப்பு, கழகப் பதிப்பு ஆகியவற் றிலுள்ள பாடம்.

இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப்படுவதுமெனச் செயப்படுபொருள் மூன்றும். இயற்றுதலாவது—முன்னில்லதனை யுண்டாக்குதல். வேறுபடுத்தலாவது - முன்னுள்ளதனைத் திரித்தல். எய்தப்படுதலாவது—இயற்றுதலும் வேறுபடுத்தலு மின்றித் தொழிற்பயனுறுந் துணையாய் நிற்றல். (௧௦)

எஉ. காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பின் புகழின் பழியின் என்று
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்று
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்று
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்று
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார்.

செயப்படு பொருள் மூன்றனையும் பற்றி வரும் வாய்பாடுகளை விரிக்கின்றார்.

இ - ள்: காப்பு முதலாகச் சிதைப்பு ஈறுகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும் அவை போல்வன பிறவுமாகிய அம்முதற் பொருள்மேல் வரும் எல்லாச்சொல்லும் இரண்டாம் வேற்றுமைப் பால என்று சொல்லுவர் புலவர் எ - று.

'என்று'வென்பது எண்ணிடைச் சொல். 'இன்'னெல்லாம் 'புணரியனிலையிடைப் பொருணிலைக்குதவாது' (சொல்-௨௫௦) எண்ணின்கண் வந்தன. முன்னர் வருவனவற்றிற்கும் ஈதொக்கும். 'அம்முதல்' என்றது கூறப்பட்ட செயப்படுபொருள் என்றவாறு.

எ - டு: எயிலை யிழைத்தான் என்பது இயற்றப்படுவது.

கிளியை யோப்பும், பொருளை யிழக்கும், நாணை யறுக்கும், மரத்தைக் குறைக்கும், நெல்லைத் தொகுக்கும், வேலியைப் பிரிக்கும், அறத்தை யாக்கும், நாட்டைச் சிதைக்கும் என்பன வேறுபடுக்கப்படுவன.

குறைத்தல்-சுருக்குதலும் சிறிதிழக்கச் சிதைத்தலுமாம். அறுத்தல்-சிறிதிழவாமற் சினையையாயினும் முதலையாயினும் இருகூறு செய்தல்.

ஊரைக் காக்கும், தந்தையை யொக்கும், தேரை யூரும், குரிசிலைப் புகழும், நாட்டைப்பழிக்கும், புதல்வரைப் பெறும், மனைவியைக் காதலிக்கும், பகைவரை வெகுளும், செற்றாரைச் செறும், நட்டாரை யுவக்கும், நூலைக் கற்கும், பொன்னை நிறுக்கும், அரிசியை யளக்கும், அடைக்காயை யெண்ணும், ஊரைச் சாரும், நெறியைச் செல்லும், குதிரைக் கன்றும், கணையைநோக்கும், கள்வரையஞ்சும் என்பன எய்தப்படுவன.

வெகுளலுஞ் செறலும் கொலைப்பொருள வாயவழி வேறுபடுக்கப்படுவனவாம். செறல் - வெகுளியது காரியம்.

இயற்றப்படுவது ஒருதன்மைத்தாகலின், அதற்கொருவாய்பாடே கூறினார். ஏனைய பல விலக்கணத்த வாகலின் பலவாய்பாட்டான் விரித்துக் கூறினார்.

'அன்னபிறவு'மென்றதனால், பகைவரைப் பணித்தான், சோற்றையட்டான், குழையை யுடையான், பொருளையிலன் என்னுந் தொடக்கத்தன கொள்க.

'காப்பு' முதலாயின பொருள்பற்றி யோதப்பட்டமையான், ஊரைப் புரக்கும், ஊரை யளிக்கும், தந்தையை நிகர்க்கும், தந்தையை யொட்டும், தேரைச் செலுத்தும், தேரைக் கடாவும் என்பன போல்வன வெல்லாங் கொள்க.

இயற்றப்படுதல் முதலாகியவேறுபாடு, குறிப்புவினைச் செயப்படு பொருட்கண் ஏற்பன கொள்க. (கக)

எஙு. [1]மூன்று குவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே.

இ - ள்: மேல் 'ஒடுவெனப் பெயர்கொடுத் தோதிய வேற்றுமைச் சொல் மூன்றுவதாம். அது வினைமுதலுங் கருவியுமாகிய இரண்டு முதலையும் பொருளாக வுடைத்து எ - று.

மேல்'ஐயொடு குவ்'வென்றோதியவழி (சொல் - ௬ச) ஆனுருபுந் தழுவப்பட்டமையான், ஈண்டும் அவ்வாறே கொள்ளப்படும்; படவே, மூன்றுவதாதலும் வினைமுதல் கருவிப் பொருட்டாதலும் ஆனுருபிற்கு மெய்தும்.

வினைமுதலாவது கருவி முதலாயின காரணங்களைத் தொழிற்படுத் துவது. கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படு பொருட்க ணுய்ப்பது.

'அனை'யென்பது அத்தன்மையவாகிய முதலென அவற்ற திலக் கணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு. முதலென்பதற்குப் பொருள் மேலே (சொல்-எஉ) யுரைத்தாம்.

எ - டு: கொடியொடு [2]துவக்குண்டான், ஊசியொடு [3]குயின்ற தூசும் பட்டும் எனவும், அகத்தியனால் தமிழுரைக்கப்பட்டது, வேலா னெறிந்தான் எனவும் வரும்.

பிறபொருளு முளவேனும் வினைமுதல் கருவி சிறந்தமையான் 'வினைமுதல் கருவி யனைமுதற்று' என்றார். வினைமுதல் கருவிக்கண் ஒடு வெனுருபு இக்காலத்தருகி யல்லது வாராது. (கஉ)

எச. அதனி னியறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனி னாதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனோ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனோ டியைந்த ஒப்பல் ஒப்புரை
இன்னா னேது ஈங்கென வருஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார்.

எ - டு: அதனின் இயறல்—மண்ணானியன்ற குடம் என்பது. மண் முதற்காரணம். முதற்காரணமாவது காரியத்தோ டொற்றுமை யுடையது.

அதன் தகுகிளவி—வாயாற்றக்கது வாய்ச்சி, அறிவானமைந்த சான்றோர் என்பன. இவை கருவிப்பாற்படும்.

---

1: இதனையும் எச ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரேநூற்பாவாகக் கொள்வர் இளம்.
2. துவக்குண்டான்—கட்டப்பட்டான். 3. குயின்ற—தைக்கப்பட்ட.

அதன் வினைப்படுதல்—சாத்தனுன் முடியுமிக் கருமம் என்பது. இது வினைமுதற்பாற்படும்.

அதனின் ஆதல்—வாணிகத்தானுயினுன் என்பது.

அதனின் கோடல்—காணத்தாற் கொண்டவரிசி என்பது. இவையுங் கருவிப்பாற்படும்.

இவையைந்து பொருளும் ஒடுவுருபிற்குஞ் சிறுபான்மை யுரியவாயினும், பெரும்பான்மைபற்றி ஆனுருபிற்கே யுரிய போலக் கூறினுர்.

அதனெடு மயங்கல்—எண்ணெடு விராய வரிசி என்பது.

அதனேடு இயைந்த ஒருவினைக்கிளவி — ஆசிரியனெடு வந்த மாணுக்கன் என்பது. வருதற்ருெழில் இருவர்க்கு மொத்தலின், 'ஒருவினைக் கிளவி'யாயிற்று.

அதனேடு இயைந்த வேறுவினைக் கிளவி—மலையொடு பொருத மால்யானை என்பது. பொருதல் யானைக்கல்ல தின்மையின் 'வேறுவினைக் கிளவி'யாயிற்று.

அதனேடு இயைந்த ஒப்பல் ஒப்புரை—'பொன்னேடிரும்பனையர் நின்னெடு பிறரே' என்பது. ஒப்பல்லதனை யொப்பாகக் கூறலின் 'ஒப்பலொப்புரை' யாயிற்று.

இம்மூன்றற்கும் உடனிகழ்தல் பொதுவென்பதூஉம் அவை ஒடுவெனுருபிற்கே யுரிய வென்பதூஉ முணர்த்திய, அதனேடியைதல் மூன்றற்குங் கூறினுர். அதனெடு மயங்கற்கும் ஈதொக்கும். எல்லாப்பொருட்கண்ணும் அது வென்றது உருபேற்கும் பெயர்ப் பொருளை. 'அதற்கு வினையுடைமையின்' (சொல் - எக) என்பதற்கும் ஈதொக்கும்.

இன்னுனேது என்பது—முயற்சியிற் பிறத்தலானெலி நிலையாது என்பது. 'அதனினுத'லெனக் காரக ஏது முற்கூறப்பட்டமையான், இது ஞாபக ஏதுவாம். இப்பொருள் ஆனுருபிற்கும் இன்னுருபிற்கு முரித்தென்பது விளக்கிய ஏது என்னுது 'இன்னுனேது' என்ருர். இன்னுனென்பது உம்மைத் தொகை. அவற்றதேதுப் பொருண்மை எ - று.

'என' வென்பதனை மாற்றி 'ஏது' வென்பதன் பின் கொடுத்து, 'ஈங்கு வருஉ மன்ன பிறவு'மென வியைக்க. 'ஈங்ஙன'மென்று [1]பாடமோதுவாருமுளர்.

'அதனினியறல்' என்பதற்குத் தச்சன் செய்த [2]சிறுமாவைய மென்றும், 'இன்னுன்' என்பதற்குக் கண்ணுற்[3]கொத்தை காலான் முடவனென்றும், உதாரணங்காட்டினுரால் உரையாசிரியரெனின்:— அற்றன்று; தச்சன் செய்த சிறுமா வைய மென்பது 'வினைமுதல் கருவி யனைமுதற்று' (சொல் - எஉ) என்புழி யடங்குதலான் ஈண்டும் பாற்படுக்க வேண்டாமை யானும், சினைவிகாரத்தை முதன்மேலேற்றிக் கூறும் பொருண்மை இன்னுனென்பதனுற் பெறப்படாமையானும், அது போலியுரை யென்க.

ஒடுவும், ஆனும் இரண்டு வேற்றுமை யாகற்பால வெனின்:— அற்றன்று; வேற்றுமை மயக்கமாவது ஒரு வேற்றுமையது ஒரு பொருட்கண்ணுக, சில பொருட் கண்ணுக ஏனை வேற்றுமையுஞ் சேறலன்றே; அவ்வாறன்றிச் சிறிதொழித்து எல்லாப் பொருட்கண்ணும் இரண்டுரு

1. இவ்வாறு பாடம் ஓதுவார் யாரெனத் தெரிந்திலது. 2. சிறுமாவையம்-தேர். 'தச்சன் செய்த சிறுமா வையம்' (குறுந்-சுக) என வருதல் காண்க.

3. கொத்தை-குருடன். 'குற்றமொன்றும் செய்ததில்லை கொத்தை யாக்கினீர்' (சுந்தரர்-தேவாரம்) என்றவிடத்தும் இப்பொருட்டாதல் அறிக.

புஞ் சேறலானும், [1]வடநூலுள் பொருள் வேற்றுமையானல்லது உருபு வேற்றுமையான் ஒரு வேற்றுமையாக வோதப்படாமையானும், ஈண் டெல்லா வாசிரியரும் ஒரு வேற்றுமையாகவே யோதினரென்க.

வடநூலொடு மாறுகொள்ளாமைக் கூறல் ஆசிரியர்க்கு மேற்கோ ளாயின், விளிவேற்றுமையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கற் பாலராவர், அவ்வாறடக்கலிலரெனின்:— அற்றன்று; விளிவேற்று மையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கல் ஆண்டு எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததன்று;

'ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான் பெயரது விகாரமென்
றோதிய புலவனு முளனொரு வகையான்
இந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்'

என்பவாகலின், ஐந்திர நூலார் விளி வேற்றுமையை எட்டாம் வேற்று மையாக நேர்ந்தாரென்பது பெறப்படும்; ஆசிரியர் அவர் மதம்பற்றிக் கூறினராகலின் அதனொடு மாறுகொள்ளாதென்பது. இக்கருத்து விளக்கியவன்றே, பாயிரத்துள் 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' எனக் கூறிற்றென்க.

'அன்னபிறவு' மென்றதனல், கண்ணுற்கொத்தை, தூங்கு கையா னோங்கு நடைய (புறம்-உஉ), மதியோடொக்குமுகம், சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது என்பன போல்வன கொள்க. (கங)

எரு. [2]நான்கா குவதே
குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எப்பொரு ளாயினுங் [3]கொள்ளும் அதுவே.

இ - ள்: மேல் கு எனப் பெயர் கொடுத்தோதப்பட்ட வேற்று மைச்சொல் நான்காவதாம். அது யாதாயினுமொரு பொருளாயினும் அதனை யேற்று நிற்கும் எ - று.

எ - டு: அந்தணற் காவைக் கொடுத்தான் எனவரும்.

மாணுக்கற்கு நூற்பொருளுரைத்தான் எனக் கொடைப்பொருள வாகிய சொல்லானன்றிப் பிற வாய்பாட்டாற் கூறப்படுவனவும், மாணுக்கற்கு அறிவுகொடுத்தானெனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாது ஆண்டுத் தோன்றும் பொருளுமெல்லா மடங்குதற்கு 'எப்பொருளாயினும்' என்றார். பிறபொருளு முளவாயி னும், கோடற்பொருள் சிறந்தமையின், 'எப்பொருளாயினுங் கொள்ளு' மென்றார். (கச)

எசு. அதற்குவினை யுடைமையின் அதற்குடம் படுதலின்
அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்
அதற்கியாப் புடைமையின் அதன்பொருட் டாதலின்
நட்பின் பகையின் காதலின் சிறப்பினென்(று)
அப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார்.

1. 'வடநூலுள் பொருள் வேற்றுமையல்லது உருபு வேற்றுமையின் ஒருவேற்றுமையாக ஓதப்பட்டமையானும்' என்பது தாமோதரம்பிள்ளை பதிப்பில் உள்ள பாடம்.
2. இதனையும் எசு ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரேநூற்பாவாகக் கொள்வர் இள.
3. 'கொள்ளுமற் றதுவே' என்பது ப. உ. பாடம்.

எ - டு: அதற்கு வினையுடைமை—கரும்பிற்கு வேலி என்பது. வினை ஈண்டுபகாரம்.

அதற்குடம்படுதல்—சாத்தற்கு மகளுடம்பட்டார் என்பது. [1]சான்றோர் கொலைக்குடம்பட்டார் ஏன்பது மது.

அதற்குப்படு பொருளாவது—பொதுவாகியபொருளைப் பகுக்குங் கால் ஒருபங்கிற்படும் பொருள்; அது சாத்தற்குக் கூறு கொற்றன் என்பது.

அதுவாகு கிளவி—கடிசூத்திரத்திற்குப் பொன் என்பது. பொன் கடிசூத்திரமாய்த் திரியுமாகலின் - அதுவாகு கிளவி யென்றார். கிளவி - பொருள்.

அதற்கு யாப்புடைமை-கைக்கு யாப்புடையது கடகம் என்பது.

அதற்பொருட்டாதல்-கூழிற்குக் குற்றவேல் செய்யும் என்பது.

நட்பு - அவற்கு நட்டான், அவற்குத் தமன் என்பன.

பகை - அவற்குப் பகை, அவற்கு மாற்றான் என்பன.

காதல் - நட்டார்க்குக் காதலன், புதல்வற் கன்புறும் என்பன.

சிறப்பு - வடுகரசர்க்குச் சிறந்தார் சோழியவரசர், கற்பார்க்குச் சிறந்தது செவி என்பன.

'அப்பொரு'ளென்றது அன்னபொருளை; இவ்வாடையு மந்நூலா னியன்ற தென்றதுபோல. எனவே, 'அன்னபிறவு' மென்றவாறும்.

'அப்பொருட்கிளவியு' மென்றதனால், பிணிக்கு மருந்து, நட்டார்க் குத்தோற்கும், அவற்குத் தக்காளிவள், 'உற்றார்க் குரியர் பொற்றொடி மகளிர்' (இறை - சூ. கச - உரை) என்பன போல்வனவெல்லாங் கொள்க. (கரு)

எள. [2]ஐந்தா குவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனின் இற்றிது வென்னு மதுவே.

இ - ள்: மேல் இன்னெனப் பெயர்கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச்சொல் ஐந்தாவதாம். அஃது இப்பொருளி னித்தன்மைத்து இப்பொருளென்னும் பொருண்மையை உணர்த்தும் எ - று.

ஐந்தாவது நான்கு பொருண்மையுடைத்து; பொருவும், எல்லையும், நீக்கமும், ஏதுவுமென. அவற்றுட் பொருவு இருவகைப்படும்; உறழ் பொருவும், உவமப் பொருவுமென. ஏதுவும் இருவகைப்படும்; ஞாபக ஏதுவும், காரக ஏதுவுமென. அவற்றுள் ஞாபகவேதுப் பொருண்மை மேலே (சொல்-எச) கூறப்பட்டது. காரகவேதுப் பொருண்மை அச்ச மாக்க (சொல் - எஅ) மென்பனவற்றாற் பெறப்படும். நீக்கப்பொருண்மை நீர்தல் பற்று விடுதல் (சொல்-எஅ) என்பனவற்றால் பெறப்படும். ஏனை யிரண்டும் இதனி னிற்றிது என்பதனாற் கொள்ளப்படும். அவ்விரண் டனையும் அஃதிருமுறையானுணர்த்துமாகலான். எல்லைப்பொருள் - கருவூரின் கிழக்கு; இதனினூங்கு என வரும். கிழக்கு ஊங்கு என்பன, வினைக்குறிப்பல்லவேனும் இற்றென்னும் பொருள்பட நிற்றலின், இற்றென்றலேயாம். பொருஉப் பொருட்கு உதாரணம் முன்னர்ப் (சொல்-எஅ) பெறப்படும். (கசு)

1. சான்றோர்—வீரர். 'நோன்புரித் தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை' (பதிற்-கச) என்றவிடத்தும் இப்பொருட்டாதல் அறிக.

2. இதனையும் எஅ ஆம் - நூற்பாவையும் இணைத்து ஒரேநூற்பாவாகக் கொள்வர் இளம்.

எஅ. வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்ரு
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்ரு
முதுமை யிளமைஂசிறத்த லிழித்தல்
புதுமை பழமை ஆக்க மென்ரு
இன்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்(று)
அன்ன பிறவும் அதன்பால என்மனுர்.

இ - ள்: வண்ணமுதலாகப் பற்றுவிடுதலீருகச் சொல்லப்பட்டன வும் அவைபோல்வன பிறவும் ஐந்தாம் வேற்றுமைத் திறத்தனவாம் எ - று.

வண்ணம்—வெண்மை கருமை முதலாயின. வடிவு—வட்டஞ் சதுர முதலாயின. அளவு—நெடுமை குறுமை முதலாயின. சுவை—கைப்புப் புளிப்பு முதலாயின. நாற்றம் – நறுநாற்றந் தீநாற்ற முதலாயின.

எ - டு: காக்கையிற்கரிது களம்பழம், இதனின் வட்டமிது, இதனி னெடிதிது, இதனிற் றீவிதிது. இதனிற் றண்ணிதிது, இதனின் வெய்திது, இதனி னன்றிது, இதனிற் றீதிது, இதனிற் சிறிதிது, இதனிற் பெரிதிது, இதனின் வலிதிது, இதனின் மெலிதிது, இதனிற் கடிதிது, இதனின் முதிதிது, இதனி னிளைதிது, இதனிற் சிறந்ததிது, இதனி னிழிந்ததிது, இதனிற் புதிதிது, இதனிற் பழைதிது, இவனி னிலனிவன், இவனி னுடையனிவன், இதனி னாறுமிது, இதனிற் பல விவை, இதனிற் சிலவிவை எனவும்; அச்சம்-கள்ளரி னஞ்சும் எனவும், ஆக்கம்-வாணிகத்தினுயினன் எனவும், தீர்தல்-ஊரிற் றீர்ந்தான் என வும், பற்றுவிடுதல் - காமத்திற் பற்றுவிட்டான் எனவும் வரும்.

அச்சமுதலிய நான்கு மொழித்து ஒழிந்த இருபத்து நான்கும் ஒத்த பண்பு வேறுபாடுபற்றிப் பொருஉப்பொருள் விரித்தவாறு.

'அன்னபிறவு' மென்றதனுல், அவனினளியனிவன், அதனிற் சேய்த்திது, [1]இகழ்ச்சியிற் கெட்டான், மகிழ்ச்சியின் மைந்துற்ருன் என்பன போல்வன கொள்க.

பல வாய்பாட்டோடு வழக்கின்கட் பயின்று வருதலுடைமையாற் பொருஉப் பொருள் இதற்குச் சிறப்புடைத்தாகலின், பெரும்பான்மை யும் அதனையே விரித்தார். (கஎ)

எகூ. [2]ஆறு குவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் இதன(து) இதுவெனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே.

இ - ள்: அதுவெனப் பெயர்கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொல் ஆறுவதாம். அது உடையதாய் நிற்குந் தன்னுனும் பிறிதொன் ருனும் இதனதிதுவென்பதுபட [3]நிற்குங் கிளவியிற்ருேன்றுங் கிழமை யைப் பொருளாகவுடைத்து எ - று.

---

1. 'இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாம்தம், மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து' என்ற திருக்குறளும் காண்க. 2. இதனையும் அ0 ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம். 3. 'நிற்குமதனுற் கிளவியிற்ருேன்றும்' என்பது தாமோதரம்பிள்ளை பதிப்பில் உள்ள பாடம்.

எனவே, ஆருவது கிழமைப் பொருட்டென்றும், அக்கிழமை தன்ஞன் வந்த தற்கிழமையும், பிறிதான் வந்த பிறிதின்கிழமையுமென இரண்டென்றுங் கூறியவாறும்.

'தன்'னென்றது தன்னேடொற்றுமையுடைய பொருளை. 'பிறி' தென்றது தன்னின் வேருகிய பொருளை.

அஃதேல், 'தன்னினும் பிறிதினுமாகிய கிழமைத்' தென்ஞது 'இதனதிது வெனு மன்னகிளவிக் கிழமைத்' தென்றதென்னையெனின்:– பொருட்கிழமையும், பண்புக்கிழமையும், தொழிற்கிழமையும் அவை போல்வனவுமெனக் கிழமைதாம் பல. அவற்றுளொன்று சுட்டாது இதனதிதுவென்னுஞ் சொல்லாற் ரேன்றும் கிழமைமாத்திரம் சுட்டுமென்றற்கு 'இதன திதுவெனு மன்ன கிளவிக் கிழமைத்து' என்ருர். இதனவிவையென்னும் பன்மை யுருபுத் தொடரு மடங்குதற்கு 'அன்னகிளவி' யென்ருர்.

ஒன்றுபல குழீஇய தற்கிழமையும், வேறுபல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற்கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய்திரிந்தாய தற்கிழமையுமெனத் தற்கிழமை ஐந்து வகைப்படும்.

பொருளின் கிழமையும், நிலத்தின் கிழமையும், காலத்தின் கிழமையுமெனப் பிறிதின்கிழமை மூவகைப்படும். அவற்றிற்கு உதாரணம் முன்னர்க் (சொல்-அ0) காட்டுதும். (கஅ)

அ௦. இயற்கையின் உடைமையின் முறைமையின் கிழமையின்
செயற்கையின் முதுமையின் வினையி னென்ரு
கருவியின் துணையின் கலத்தின் முதலின்
ஒருவழி யுறுப்பின் குழுவி னென்ரு
தெரிந்துமொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்
திரிந்துவேறு படூஉம் பிறவும் அன்ன
கூறிய மருங்கில் தோன்றுங் கிளவி
ஆறன் பால என்மனுர் புலவர்.

இ - ள்: இயற்கை முதலாக வாழ்ச்சியீருகச் சொல்லப்பட்டனவும் திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவுமாகிய மேற்கூறப்பட்ட கிழமைப் பொருட்கண் தோன்றுஞ் சொல்லெல்லாம் ஆரும் வேற்றுமைத் திறத்தனவென்று சொல்லுவர் புலவர் எ - று.

'திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவு'மென்ருரேனும், திரிந்து வேறு படுதல், 'அன்ன பிறவு'மென்றதனுல் தழுவப்படுவனவற்றுள் ஒருசாரனவற்றிற்கே கொள்க.

எ - டு: எள்ளது குப்பை, படையது குழாம் என்பன குழூஉக் கிழமை. இவை முறையானே ஒன்றுபல குழீஇயதும், வேறுபல குழீஇயதுமாம்.

சாத்தனதியற்கை, நிலத்ததகலம் என்பன இயற்கைக்கிழமை. சாத்தனது நிலைமை, சாத்தனதில்லாமை என்பன நிலைக்கிழமை. இவை ஒன்றியற்கிழமை.

யானையதுகோடு, புலியதுகிர் என்பன உறுப்பின்கிழமை. உறுப்பாவது பொருளின் ஏகதேச மென்ப ,தறிவித்தற்கு 'ஒருவழியுறுப்' பென்ருர்.

சாத்தனது செயற்கை, சாத்தனது கற்றறிவு என்பன செயற்கைக் கிழமை. அரசனது முதுமை, அரசனது முதிர்வு என்பன முதுமைக் கிழமை.

'முதுமை' யென்பது பிறிதோர் காரணம் பற்றாது காலம் பற்றி ஒருதலையாக அப்பொருட்கட் டோன்றும் பருவமாகலின் 'செயற்கை' யுளடக்காது வேறு கூறினார்.

சாத்தனது தொழில், சாத்தனது செலவு என்பன வினைக்கிழமை. இவை மெய்திரிந்தாய தற்கிழமை.

சாத்தனது உடைமை, சாத்தனது தோட்டம் என்பன் உடைமைக் கிழமை. மறியது தாய், மறியது தந்தை என்பன முறைமைக்கிழமை. இசையது கருவி, வனைகலத்தது திகிரி என்பன கருவிக்கிழமை. அவனது துணை, அவனதிணங்கு என்பன துணைக்கிழமை. [1]நிலத்த தொற்றிக்கலம், சாத்தனது விலைத்தீட்டு என்பன கலக்கிழமை. ஒற்றியது முதல், ஒற்றியது பொருள் என்பன முதற்கிழமை. கபிலரது பாட்டு, பரணரது பாட்டியல் என்பன செய்யுட்கிழமை. தெரிந்து மொழியாற் செய்யப்படுதலின் 'தெரிந்து மொழிச் செய்தி'யாயின. இவை பொருட் பிறிதின்கிழமை.

முருகனது குறிஞ்சிநிலம், வெள்ளியதாட்சி என்பன கிழமைக் கிழமை. காட்டதியானை, யானையது காடு என்பன வாழ்ச்சிக்கிழமை. அவற்றுள் முருகனது குறிஞ்சிநிலம், யானையது காடு என்பன நிலப்பிறிதின்கிழமை. காட்டதியானை என்பது பொருட்பிறிதின்கிழமை. [2]ஏனையது காலப்பிறிதின்கிழமை.

'திரிந்து வேறுபடூஉமன்னபிறவு'மென்றதனால் எட்சாந்து, கோட்டு நூறு, சாத்தனதொப்பு, தொகையதுவிரி, பொருளது கேடு, சொல்லது பொருள் என்னுந்தொடக்கத்தன கொள்க. அவற்றுள் எட்சாந்து, கோட்டுநூறு என்பன முதலாயின முழுவதூஉந் திரிதலின், வேறு கூறினார்.

மேற்சொல்லப்பட்ட (சொல்-எகூ) தற்கிழமை பிறிதின்கிழமை யென்பனவற்றை விரித்தவாறு. (ககூ)

அக. [3]ஏழா குவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே.

இ-ள்: கண்ணெனப் பெயர்கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொல் ஏழாவதாம். அது வினைசெய்யா நிற்றலாகிய இடத்தின்கண்ணும், நிலமாகிய இடத்தின்கண்ணும், காலமாகிய இடத்தின்கண்ணுமென அம்மூவகைக் குறிப்பின்கண்ணுந் தோன்றும் எ-று.

எனவே, ஏழாவது இடப்பொருண்மைத் தென்றவாறும்.

'குறிப்பின் தோன்றுமது' என்றது அவற்றை யிடமாகக் குறித்த வழி அவ்வேற்றுமை தோன்றுமென்றவாறு. எனவே, இடமாகக் குறிக் கப்படாதவழி அப்பெயர்க்கண் வேற்றுமை தோன்றாதென்பதாம்.

---

1. நிலத்தது ஒற்றிக்கலம்—நிலத்திற்குரிய போக்கிய பத்திரம்.
2. ஏனையது—வெள்ளியதாட்சி.
3. இதனையும் அஉ ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரேநூற்பாவாகக் கொள்வர் இளம்.

தன்னின முடித்த லென்பதனால், ஏனை வேற்றுமைச் சொற்களும் அவ்வப்பொருட்கண் குறிப்பில்வழி அவ்வப்பெயர்க்கண் வாராமை கொள்க.

எ - டு: தட்டுப் புடைக்கண் வந்தான், மாடத்தின்கணிருந்தான், கூதிர்க்கண் வந்தான் என வரும். (௨௦)

௮௨. கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ
அன்ன பிறவும் அதன்பால என்மனார்.

இ - ள்: கண் முதலாக இடமீறாகச் சொல்லப்பட்ட பத்தொன்பது பொருளும் அவை போல்வன பிறவும் ஏழாவதன் றிறத்தன எ - று.

'கண்'ணென்னும் பொருளாவது, 'கண்ணின்று கூறுதலாற்றா னவ ணியின்' (கலி - ௬௮) எனவும், 'கண்ணகன்ஞாலம்' எனவும், கண் ணென்று மிடைச்சொல்லா னுணர்த்தப்படும் இடப்பொருண்மை. 'தேவகை'யென்பது திசைக்கூறு. கண்கால் புறமக முள்ளென்பன முதலாயினவற்றது பொருள்வேற்றுமை வழக்கு நோக்கி யுணர்ந்து கொள்க.

எ - டு: கண்ணின்று சொல்லியானை என்கண்ணின்றிவை சொல லற்பாலையல்லை என்றும், ஊர்க்காற்செய்யை ஊர்க்கட்செய் என்றும், ஊர்ப்புறத்து நின்றமரத்தை ஊர்க்கண்மரம் என்றும், எயி லகத்துப் புக்கானை எயிற்கட்புக்கான் என்றும், இல்லுளிருந்தானை இற்கணிருந்தான் என்றும், அரசனுழை யிருந்தானை அரசன்கணிருந் தான் என்றும், ஆலின்கீழ்க் கிடந்தஆவை ஆலின்கட்கிடந்தது என்றும், மரத்தின்மேலிருந்த குரங்கை மரத்தின்கணிருந்தது என்றும், ஏர்ப்பின்சென்றானை ஏர்க்கட்சென்றான் என்றும், காட்டுச்சாரோடு வதனைக் காட்டின்கணோடும் என்றும், உறையூர்க்கயனின்ற சிராப் பள்ளிக் குன்றை உறையூர்க்கட்குன்று என்றும், எயிற்புடை நின்றாரை எயிற்கண்நின்றார் என்றும், வடபால் வேங்கடம் தென்பாற் குமரி என்பனவற்றை வடக்கண்வேங்கடம் தெற்கட்குமரி என்றும், புலிமுன் பட்டானைப் புலிக்கட்பட்டான் என்றும், நூலினிடையுங்கடையுந் தலையு நின்ற மங்கலத்தை நூற்கண்மங்கலம் என்றும், கைவலத்துள்ள தனைக் கைக்கணுள்ளது என்றும், தன்னிடத்து நிகழ்வதனைத் தன்கண் நிகழ்வது என்றும் அவ்விடப்பொருள்பற்றி ஏழாம்வேற்றுமை வந்த வாறு கண்டு கொள்க.

'எனாஅ' வென்பது எண்ணிடைச்சொல்.

கண்முதலாயினவெல்லாம் உருபென்றாரால் உரையாசிரியரெனின்:— உருபாயின், ஏழாவதற்குக் கண்ணென்பது உருபாதல் மேலே பெறப் பட்டமையாற் பெயர்த்துங் கண்காலென்றல் கூறியது கூறிற்று மாக லானும் ஊர்ப்புறத்திருந்தான், ஊரகத்திருந்தான், கைவலத்துள்ளது கொடுக்கும் எனப் புறம் அகம் வலமென்பனவற்றுவழி அத்துச்சாரியை கொடுத்து உதாரணங்காட்டினமையானும், அவர்க்கது கருத்தன் றென்க. உருபல்லவேல், என்னுழை, என்முன் என நிலைமொழி உருபிற் கோதிய செய்கை பெற்றவாறென்னையெனின்:— 'அதற் பொருட்டா கலின்' (சொல் - ௭௬) எனவும், 'தம்முடைய தண்ணளியுந் தாமும்' எனவும் உருபின் பொருள்பட வரும் பிறமொழி வந்துழியும்

நிலைமொழி அச்செய்கை பெற்று நிற்றலின், அச்செய்கை உருபு புணர்ச்சிக்கே யென்னும் யாப்புறவின்றென்க.

'அன்ன பிறவு' மென்றதனால், பொருட்கண் உணர்வு, என்கண் அன்புடையன், மலர்க்கண் நாற்றம், ஆகாயத்துக்கட் பருந்து என்னுந் தொடக்கத்தன கொள்க. (உக)

அங. [1]வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்றுநின் றியலுந் தொகைவயின் பிரிந்து
பல்லா றுகப் பொருள்புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய வென்ப.

இ-ள்: வேற்றுமைத்தொகையை விரிக்குமிடத்து, வேற்றுமையே யன்றி, அன்மொழித்தொகையை விரிப்புழிப் பல்லாற்றான் அன்மொழிப்பொருளொடு புணர்ந்து வரும் எல்லாச்சொல்லும், விரிக்கப் படும் எ-று.

உருபுதொகப் பொருள் நிற்றலின், வேற்றுமைத்தொகையை 'வேற்றுமைப் பொரு'ளென்றார். தொகையை, வேற்றுமைப்பொரு ளென்றும், பொருளென்றும் யாண்டுமாள்ப.

அன்மொழித்தொகை பண்புத்தொகை முதலாகிய தொகை இறுதி நின்றியறலின், 'ஈற்றுநின்றியலுந் தொகை' யென்றார்.

எ-டு: தாழ்குழல், பொற்றொடி, மட்கார்ணம் என்னும் அன் மொழித் தொகைகளை விரிப்புழி, தாழ்குழலையுடையாள், பொற் றொடியை யணிந்தாள், மண்ணாகிய காரணத்தா னியன்றது என வரும் உடைமையும், அணிதலும், இயறலும், கருங்குழற் பேதை, பொற்றொடியரிவை, மட்குடம் என்னும் வேற்றுமைத் தொகைகளை விரிப்புழியும் கருங் குழலையுடைய பேதை, பொற்றொடியை யணிந்த அரிவை, மண்ணானியன்ற குடம் என வந்தவாறு கண்டுகொள்க.

'பொருள் புணர்ந்திசைக்கு'மெனவே, இருதொகைக் கண்ணும் ஒரு வாய்பாட்டா னன்றிப் பொருள் சிதையாம லுணர்த்துதற் கேற்ற வாய்பாடெல்லாவற்றானும் வருமென்பதாம். அவ்வாறுதல் மேற்காட் டப்பட்டனவற்றுள் கண்டுகொள்க.

அன்மொழித் தொகையிற் சொற்பெய்து விரித்தல் யாண்டுப் பெற்றாமெனின்:—அதுவும் அநுவாதமுகத்தான் ஈண்டே பெற்றா மென்க. பெறவே, இரண்டு தொகையும் விரிப்புழி வரும் வேறுபாடு கூறியவாறும்.

இதனை 'வேற்றுமைத் தொகையே யுவமைத் தொகையே' (சொல்-சகஉ) என்னுஞ் சூத்திரத்தின் பின் வைக்கவெனின்:-அதுவும் முறையாயினும், இனி வருஞ் சூத்திரங்களான் வேற்றுமைத் தொகை விரிபற்றிய மயக்கமுணர்த்துதலான், ஆண்டுப்படு முறைமை யுணர்த் துதல் ஈண்டு மியைபுடைத் தென்க.

[2]உரையாசிரியர் இரண்டு சூத்திரமாக அறுத்து ஆசிரியர் மதவிகற் பங்கூறித் தம்மதமிது வென்பது போதர ஒன்றாக வுரைப்பாருமுள ரென்றார். இரண்டாய் ஒன்றாயவழிப் பிறிதுரையின்மையின், உரை யாசிரியர் கருத்து இதுவேயாம். (உஉ)

வேற்றுமையியல் முற்றிற்று.

---

1. இந்நூற்பாவின் முன்னிரண்டடிகளை ஒரு நூற்பாவாகவும், பின்னிரண்டடிகளை ஒரு நூற்பாவாகவும் கொள்வர் இளம். கல். ஆகியோர்.
2. இவ்வாக்கியம் இளம். உரையில் இல்லை.

## ௩. வேற்றுமை மயங்கியல்

அ௪. கருமம் அல்லாச் சார்பென் கிளவிக்(கு)
உரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை.

மேற்கூறப்பட்ட வேற்றுமை தம்முள் மயங்குமா றுணர்த்திய எடுத்துக்கொண்டார். அம்மயக்கம் இருவகைப்படும்; பொருள் மயக்கமும், உருபு மயக்கமுமென. பொருள் மயக்கமாவது தன் பொருளில் திராது பிறிதொன்றன் பொருட்கண் சேறல். உருபு மயக்க மாவது தன் பொருளிற்றிர்ந்து சேறல். 'யாத னுருபிற் கூறிற் றாயினும்' (சொல்-௧௦௪) என்பதனான் உருபு மயக்கமுணர்த்தினார்; அல்லனவற்று னெல்லாம் பொருண் மயக்கமுணர்த்தினார். இவ்விரு வகை மயக்கமு முணர்த்துதலான், இவ்வோத்து வேற்றுமை மயங்கிய லென்னும் பெயர்த்தாயிற்று. மயக்கமேயன்றி வேற்றுமைக்கோதிய இலக்கணத் திற் பிறழ்ந்து வழீஇயமைவனவும் பிறவும் இயைபுடையன ஈண்டுணர்த் துதலான், இக்குறி பன்மை நோக்கிச் சென்ற குறியென வுணர்க.

இ - ள்: இரண்டாவதற்கோதப்பட்ட சார்பு பொருண்மை கருமச்சார்புங் கருமமல்லாச்சார்புமென இரண்டுவகைப்படும். அவற் றுள், கருமச் சார்பு தூணைச் சார்ந்தான் என ஒன்றனை யொன்று மெய்யுறுதலாம். கருமமல்லாச் சார்பு மெய்யுறுதலின்றி அரசரைச் சார்ந்தான் என வருவதாம். கருமமல்லாத சார்பு பொருண்மைக்கு உரித்தாய் வருதலுமுடைத்து ஏழாவது எ - று.

எ - டு: அரசர்கட் சார்ந்தான் என வரும்.

கருமமாவது ஈண்டு மெய்யுறுதலாயின், அரசர்கட் சார்ந்தான் என்புழி உறுதலின்மையிற் சார்பாமாறென்னையெனின்:—தூண் பற்றாக ஒருசாத்தன் சார்ந்தாற்போல அரசர் பற்றாக அச்சார்ந்தா னொழுகுதலின் சார்பாயிற் றென்பது.

உம்மை எதிர்மறை.

தூணின்கட் சார்ந்தான் எனக் கருமச்சார்ச்சிக்கண் ஏழாவது சென்றுற் படுமிழுக்கென்னையெனின்:—அன்னதோர் வழக்கின்மையே பிறிதில்லை யென்க. இக்காலத்து அவ்வாறு வழங்குபவாலெனின்:— கருமமல்லாச் சார்ச்சிக்கண் வருமுருபைச் சார்தலொப்புமையாற் கருமச்சார்ச்சிக் கண்ணுங் கொடுத்து உலகத்தார் இடைத்தெரிவின்றி வழங்குகின்றாரெனவேபடும்; ஆசிரியர் 'கருமமல்லாச் சார்பென் கிளவி' யென விதந்து கூறினமையானென்பது. (௧)

அ௫. சினைநிலைக் கிளவிக்(கு) ஐயுங் கண்ணும்
வினைநிலை யொக்கும் என்மனார் புலவர்.

இ - ள்: சினைமேல் நிற்குஞ் சொல்லிற்கு இரண்டாவதும் ஏழா வதும் வினைநிலைக்கண் ஒக்குமென்று சொல்லுவர் புலவர் எ - று.

எ - டு: கோட்டைக் குறைத்தான், கோட்டின்கட் குறைத்தான் எனவரும்.

வினைக்குறிப்பை நீக்குதற்கு 'வினை'யென்றார். 'வினைநிலையொக்கு' மென்றாரேனும், புகழ்தல் பழித்த லென்னுந் தொடக்கத்தன வொழித்து மயங்குதற்கேற்கும் அறுத்தல் குறைத்தல் முதலாயின வினையே கொள்ளப்படும்.

இரண்டாவதன் பொருட்கண் ஏழாவது சென்றதாயினும், சிறுவர விற்றன்றி இரண்டாவதுபோல ஏழாவது வழக்கின்கட்பயின்று வருதலின், 'ஒக்கு'மென்றார்; அது காரணத்தால், கருமமல்லாச் சார்ச்சிக்கும் சினைக்கிளவிக்கும் ஏழாவது உரிமையுடைத்தென உடன்கூறாது, வேறு கூறினாரென்பது. (உ)

அ௬. கன்றலுஞ் செலவும் ஒன்றுமார் வினையே.

இ-ள்: கன்றல்பொருண்மேல் வருஞ்சொல்லும் செலவு பொருண்மேல் வருஞ்சொல்லும் இரண்டாவதற்கும் ஏழாவதற்கும் [1]ஒரு தொழில் எ - று.

எ - டு: சூதினைக்கன்றினான், சூதின்கட்கன்றினான்; நெறியைச் சென்றான், நெறிக்கட்சென்றான் என வரும்.

பொருள்பற்றி யோதினமையால், சூதினையிவறினான், சூதின்கணிவறினான்; நெறியை நடந்தான், நெறிக்கணடந்தான் என வருவனவுங் கொள்க.

இரண்டாவதற்கு இப்பொருள் மேலே கூறப்பட்டமையால், கன்றல் செலவென்னும் பொருட்கு ஏழாவது முரித்தென்றேத அமையுமெனின், அங்ஙனமோதின் ஏழாவதன் வரவு சிறுபான்மை யென்பது படும்; ஆகலின் உடனோதினாரென்பது.

'சினைநிலைக்கிளவி'(சொல் - அ௫)நிலைமொழிவரையறை யாகலானும் இது வருமொழிவரையறை யாகலானும், வேறு கூறினாரென்பது. (ந)

அஎ. [2]முதற்சினைக் கிளவிக்(கு) அதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே.

இ - ள்: முதற்சொல்லோடு தொடர்ந்த சினைச்சொல்லிற்கு ஆறும் வேற்றுமை முதற்கண் வருமாயின், சினைச்சொல்லின்கண் இரண்டாம் வேற்றுமையே வரும் எ - று.

எ - டு: யானையது கோட்டைக் குறைத்தான் என வரும்.

'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்' (சொல்-அ௫) என்றதனான், முதற்சினைக் கிளவிக்கும் இரண்டு வேற்றுமையு மெய்துவதனை நியமித்தவாறு. இது வருஞ் சூத்திரத்திற்கு மொக்கும். (ச)

அஅ. முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளி தென்ப.

இ - ள்: அம்முதற்சினைக் கிளவிக்கண், முதற்சொல்முன் ஐகார வேற்றுமைவரின், சினைச்சொல்முன் கண்ணென்னும் வேற்றுமை வருதல் தெள்ளிது எ - று.

எ - டு: யானையைக் கோட்டின்கட் குறைத்தான் என வரும்.

'தெள்ளிது' என்றதனான், யானையைக் கோட்டைக் குறைத்தான் எனச் சிறுபான்மை ஐகார வேற்றுமையும் வருமென்பதாம்.

---

1. 'ஒரு தொழில' என்றிருப்பின் நன்று.
2. இதனையும் அஅ ஆம் நூற்பாவையுமிணைத்து ஒரே நூற்பாவாகக்கொள்வர் தெய்.

சினைக்கிளவிக்கண் மயக்கமுணர்த்துகின்ற சூத்திரத்திடைக் 'கன்றலுஞ் செலவும்' என்னுஞ் சூத்திரம் வைத்ததென்னை யெனின்:— ஐயுங்கண்ணுமென்பது அதிகாரத்தான் வரச் சூத்திரஞ் சுருங்குமாகலின், 'சினைநிலைக் கிளவிக்கு' என்னுஞ் சூத்திரத்தின்பின் அதனை வைத்தாரென்பது. (ரு)

அகூ. முதலுஞ் சினையும் பொருள்வேறு படாஅ
நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே.

இ - ள்: முதலுஞ் சினையும் முதலாயது முதலேயாய்ச் சினையாயது சினையேயாய்த் தம்முள் வேறுபொருளாகா; சொல்லுங்கால், சொல்லுவானது சொல்லுதற் குறிப்பினுல் முதலென்றுஞ் சினையென்றும் வழங்கப்படும் எ - று.

'சொற்குறிப்பின' வென்றது, முதலெனப்பட்டது தானே தன்னைப் பிறிதொன்றற்கு ஏகதேசமாகக் குறித்தவழிச் சினையுமாம்; சினையெனப்பட்டது தானே தன்கண் ஏகதேசத்தை நோக்கி முதலெனக் குறித்த வழி முதலுமாம் எ - று.

கோட்டது நுனியைக் குறைத்தான், கோட்டை நுனிக்கட் குறைத்தான், கோட்டை நுனியைக் குறைத்தான் என முதற்கோதப்பட்ட உருபு சினைக்கண்ணும் வந்ததாலென்று ஐயுற்றார்க்கு, கருத்து வகையாற் கோடென்பது ஆண்டு முதலாய் நிற்றலின், முதலிற்கு ஓதிய உருபே முதற்கண் வந்ததென, ஐய மகற்றியவாறு. (சு)

கூ0. பிண்டப் பெயரும் ஆயியல் திரியா
பண்டியல் மருங்கின் [1]மரீஇய மரபே.

இ - ள்: பிண்டத்தை யுணர்த்தும் பெயரும் முதற்சினைப் பெயரியல்பிற் றிரியா; அவ்வாறு அவற்றை முதலுஞ் சினையுமாக வழங்குதல் மேற்றொட்டு வழங்கிவாராநின்ற கூற்றான் மருவிய முறை எ-று.

பிண்டம்—பலபொருட்டொகுதி.

ஈண்டு 'ஆயியல் திரியா'வென மாட்டெறிந்தது, முதற்சினைக் கிளவிக்குப்போலப் பிண்டப்பெயர்க்கு முதற்கண் ஆறுவது வரின் சினைக்கு இரண்டாவது வருதலும், முதற்கு இரண்டாவது வரின் சினைக்கு ஏழாவது வருதலும், சிறுபான்மை இரண்டாவது வருதலுமாம்.

எ - டு: குப்பையது தலையைச் சிதறினான், குப்பையைத் தலைக்கட் சிதறினான், குப்பையைத் தலையைச் சிதறினான் என வரும்.

பிண்டமும் முதலுஞ்சினையுமேயாகலின் வேறு கூறல் வேண்டாஎனின்:— குப்பை யென்புழி, தொக்க பலபொருளல்லது, அவற்றின் வேறாய் அவற்றானியன்று தானொன்றெனப்படும் பொருளின்மையின், தொல்லாசிரியர் அதனை முதலென்று வேண்டார்; அதனான் வேறு கூறினாரென்பது. படை காடு கா முதலாயினவுமன்ன. (எ)

கூக. ஒருவினை யொடுச்சொல் உயர்பின் வழித்தே.

இ - ள்: 'அதனொடியைந்த ஒருவினைக்கிளவி'யென மூன்றாவதற்கோதிய ஒருவினை யொடுச்சொல் உயர்பொருளை யுணர்த்தும் பெயர்வழித் தோன்றும் எ - று.

---

1. 'மரீஇய பண்பே' எனப்பாடங் கொள்வர் ப. உ.

எ - டு: அரசனொடிளையர் வந்தார், ஆசிரியனொடு மாணக்கர் வந்தார் என வரும்.

உயர்பொருட் பெயர்வழி ஒடுக்கொடுக்க எனவே, உயர்பில்வழிச் சாத்தனுங் கொற்றனும் வந்தார் என இருபெயரும் எழுவாயாய் நிற்கு மென்பதாம்.

[1]நாயொடு நம்பி வந்தான் என இழிபெயர்க்கண்ணும் ஒருவினை யொடுச்சொல் வந்ததாலெனின்:— யாதானுமோராற்றான் அதற்குயர் புண்டாயினல்லது அவ்வாறு கூறார்; கூறுபவாயின், அஃது ஒருவினை யொடுச்சொ லெனப்படாது, கைப்பொருளொடு வந்தான் என்பது போல, அது தனக்குண்டாக வந்தானெனப் பிறிதுபொருள்படுவதோ ரொடு வுருபா மென்க.

இதனை வேற்றுமை யோத்தின்கண் 'அதனினியறல்' (சொல்-எச) என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது ஈண்டுவைத்த தென்னை யெனின்:— வேற்றுமையது பெயரும் முறையுந் தொகையும் பொது வகையான் அவற்ற திலக்கணமும் உணர்த்தியதல்லது, இன்ன வேற் றுமை இன்னபொருட்கண் இன்னவாறாமென்னும் விசேட இலக்கணம் அதிகாரம்பட்டின்றாகலான், ஆண்டு வையாது, மூன்றாவது இப்பொருட் கண் இவ்வாறாமென விசேடவிலக்கணம் 'மூன்றனு மைந்தனும்' (சொல்-கூஉ) எனக் கூறுகின்றாராகலின், அதனோடியைய ஈண்டு வைத் தார்; இதுவும் ஒரு பொருள்பற்றி யோதுகின்ற விசேடவிலக்கண மாகலானென்பது. (அ)

கூஉ. மூன்றனும் ஐந்தனுந் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கோ ரனைய என்மனார் புலவர்.

இ - ள்: மூன்றும் வேற்றுமைக்கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக் கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட ஆக்கத்தோடு கூடிய ஏதுச்சொல் அவ்வேதுப்பொருண்மையை நோக்கும்நோக்கு ஒருதன்மைய எ-று.

எ-டு: வாணிகத்தானாயினான், வாணிகத்தானாயபொருள் என வும்; வாணிகத்தினாயினான், வாணிகத்தினாயபொருள் எனவும் வரும்.

வாணிகத்தான், வாணிகத்தின் எனவுருபொடு தொடர்ந்து நின்ற சொல்லை 'ஏதுக்கிளவி' யென்றார்.

'அதன்வினைப்படுத லதனினாதல்' (சொல்-எச) என்றும், 'புதுமை பழமை யாக்கம்' (சொல் - எஅ) என்றும் மூன்றாவதற்கும் ஐந்தாவதற் கும் ஏதுப்பொருள் மேற்கூறப்பட்டமையான் இச்சூத்திரம்வேண்டா வெனின்:— அற்றன்று; பிரிநிலையேகார முதலாகிய இடைச்சொல்லும் ஒருசார் வினைச்சொல்லும் முன்னோதப்பட்டனவேனும், எச்சமாத லொப்புமையான் எச்சவாராய்ச்சிக்கண் அவைதம்மையே,

'பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே' (சொல்-சுகூ0)

எனப் பின்னுங் கூறினாற்போல, ஏதுப்பொருண்மை மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் மேற்கூறப்பட்டதாயினும், மயக்கமாதலொப்புமை

1. 'பரியல் நாயொடு பன்மலைப் படரும், வேட்டுவற் பெறலோ டமைந்தனை' (அகம் - 28) என்றவிடத்து 'நாயொடு வேட்டுவன்' என வருதல் காண்க.

யான் மயக்கவாராய்ச்சிக்கண் ஈண்டுங் கூறினாராகலின், கூறியது கூறலென்னுங் குற்றமின்றென்பது. இஃது 'அச்சக்கிளவி' (சொல்-கoo) என்பதற்குமொக்கும்.

அஃதேல், மயக்கமாவது ஒருவேற்றுமை பிறிதொன்றன்பொருட் கட் சேறலன்றே; ஏதுவின்கண் வரும் மூன்றுவதும் ஐந்தாவதும் தம் பொருளேபற்றி நிற்றலின் மயங்கின வெனப்படாவெனின்:—நன்று சொன்னாய். ஏதுப்பொருண்மை தனக்குரியவாற்றான் அவற்றிற்குத் தன்பொருளாயினவாறுபோலப் பிறிதொன்றற் குரியவாற்றாற் பிறி தொன்றன் பொருளாதலு முடைமையின், அம்முகத்தான் மயங்கின வெனவே படுமென்பது. அல்லதூஉம், ஒருபொருட்கண் இரண்டுருபு சென்ற துணையான் மயக்கமாயிற்றெனினு மமையும்.

'ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி'யெனவே, ஆக்கமொடு புணராது ஞாபகவேதுப் பொருண்மைக்கண் வரும் இன்னும் ஆனும் ஒத்தவரவினவல்ல என்பதாம். ஆண்டைந்தாவது பெருவரவிற்றெனக் கொள்க. (கூ)

கூ௩. இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம்(அ)வ்
விரண்டன் மருங்கின் ஏதுவு மாகும்.

இ-ள்: 'நோக்கலி னஞ்சலின்' (சொல்-எ௨) என இரண்டாவதற் கோதிய நோக்கப்பொருண்மை நோக்கியநோக்கமும் நோக்கல் நோக்கமுமென இரண்டு வகைப்படும். நோக்கிய நோக்கம் கண்ணா னேக்குதல். நோக்கல்நோக்கம் மனத்தானென்றனை நோக்குதல். அந்நோக்கல்நோக்கமாகிய பொருள் மூன்றுவதற்கும் ஐந்தாவதற்கு முரிய ஏதுப் பொருண்மையுமாம் எ-று.

நோக்கல்நோக்கத்தால் நோக்கப்படும் பொருளை, 'நோக்கல் நோக்க'மென்றார். 'நோக்கல்நோக்க மவ்விரண்டன் மருங்கின் ஏது வுமாகு'மெனவே, அவ்வேதுப் பொருண்மைக்குரிய இரண்டுருபும் அவ்வேதுப் பொருண்மையிற் றிராது இரண்டாவதன் பொருட்கண் வருமென்பதாம். ஓம்படைப்பொருட்கண் வருவனவற்றிற்கும் ஈதொக் கும்.

எ-டு: 'வானோக்கி வாழு முயிரெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.' (குறள்-௫௪௨)

என்புழி, வானை நோக்கி வாழும், கோலை நோக்கி வாழும் என இரண் டாவது வருதலேயன்றி, வானானோக்கி வாழும், வானினோக்கி வாழும், கோலானோக்கி வாழும், கோலினோக்கி வாழும் என மூன்றுவதும் ஐந்தாவதும் வந்தவாறு கண்டு கொள்க.

ஏதுவாயினவா றென்னையெனின்:—உயிருங் குடியும் வானையுங் கோலையும் நோக்குவது அவற்றானாய பயன்பற்றி அவற்றைத்தா மின்றி யமையாமையன்றே; அதனான் அவ்வாறு பயன்படுவன அவற்றதின்றி யமையாமைக்கு ஏதுவாதலு முடையவென்பது. அஃதேல், வானுங் கோலும் ஏதுவாயவழி நோக்கப்படுவன பிறவாவான் செல்லு மெனின்:—அற்றன்று; கண்ணுட் குத்தினான் என்றவழிக் கண்ணே செயப்படு பொருளாதலும் பெறப்பட்டாற்போல, வானானோக்கும், கோலானோக்கும் என்புழியும் அவைதாமே செயப்படுபொருளாதலும் பெறப்பட்டமையால், நோக்கப்படுவன பிறவாவான் செல்லா வென்பது. (கo)

கூச. [1]அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அதுவென் உருபுகெடக் குகரம் வருமே.

இ-ள். ஆறும் வேற்றுமைப் பொருண்மேல் வரும் உயர்திணைத் தொகைக்கண் உருபு விரிப்புழி அதுவென்னுமுருபுகெட அதன் பொருட்கண் நான்காமுருபு வரும் எ-று.

ஈண்டு 'அதுவெனுருபு கெடு'தலாவது அவ்வுருபு ஆண்டு வாராமை.

எ-டு: நம்பி மகன், நங்கை கணவன் என்னுந் தொகைகளை விரிப்புழி, நம்பிக்கு மகன், நங்கைக்குக்கணவன் என நான்கனுருபு வந்தவாறு கண்டு கொள்க.

'உயர்திணைத் தொகைவயி னதுவெனுருபுகெடக்குகரம் வரு'மென்றதனால், ஆறனுருபு அஃறிணைப்பால்தோன்ற நிற்றல் பெற்றாம்.

உயர்திணைத்தொகைவயின் ஆறுவதனை விலக்கி நான்காவதே சேறலின், 'இதனதிதுவிற்று' (சொல் - கக0) என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்படும் பொருளோடு உடன் வையாது இதனை வேறு கூறினர். (கக)

கூரு. தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டு மூன்றுங்
கடிநிலை யிலவே பொருள்வயி னான.

இ-ள்: தனக்கேயுரித்தாய் நில்லாது ஒருகால் ஈற்றுப்பெயரோடுஞ் சென்று தடுமாறு தொழிலொடு தொடர்ந்த பெயர்க்கு இரண்டாவதும் மூன்றாவதுங் கடியப்படா, அவ்வேற்றுமை தொக அவற்றின் பொருள் நிற்குந் தொகையிடத்து எ-று.

எ-டு: புலிகொன்ற யானை, புலிகொல் யானை என்புழிப் புலியைக்கொன்ற யானை எனவும், புலியாற் கொல்லப்பட்ட யானை எனவும், இரண்டாவதும் மூன்றாவதும் மயங்கியவாறு கண்டு கொள்க.

கொன்ற, கொல்லென்பன வினைமுதற் பொருட்குரியவாகப் புலியென்பது செயப்படு பொருளாயவழியல்லது இரண்டாவது வாராமையானும், அச்சொற்கள் செயப்படு பொருட்குரியவாகப் புலி வினைமுதலாயவழியல்லது மூன்றாவது வாராமையானும், இவை ஒருபொருட்கண் வந்தன அன்மையின், மயக்கமாமாறென்னை யெனின்:—ஒரு பொருட்கண் வாராமையின் மயக்கமெனப்படாதாயினும், தடுமாறு தொழிற்றொகைக்கண் இரண்டும் வந்து நிற்றலின் மயக்கப்பாற்படு மென்பது. (கஉ)

கூசு. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப வுணரு மோரே.

இ-ள்: தடுமாறு தொழிலொடு புணர்ந்த பெயருள், இறுதிப் பெயர்முன்னர்ப் பொருள் வேறுபாடுணர்த்துஞ்சொல்வரின், அச்சொல்லான் அப்பொருள்வேற்றுமை தெரிவர் உணர்வோர் எ-று.

எ-டு: புலிகொல்யானை யோடாநின்றது, புலிகொல் யானைக் கோடு வந்தன என வரும்.

---

1. இவ்விடத்துத் தெய். கூரு-ஆம் நூற்பாவை வைத்து உரை செய்துள்ளார்.

பிறமயக்கம் போலாது ஈண்டுப் பொருள் வேறுபாடுணர்ந்தல்லது உருபு விரிக்கலாகாமையின், 'மெய்யறி பனுவலின் வேற்றுமை தெரிப' என்றார். முன் புலியைக் கொன்ற யானை, பின் பிறிதொன்றனான் இறந்துழியும் புலிகொல்யானைக்கோடு வந்தனவென்ப; அவ்வழிக் கொன்றது, கொல்லப்பட்டதென்னும் வேறுபாடு குறிப்பானுணரப்படுமென்பார் 'உணருமோர்' என்றார். பிறவுமன்ன. (கங)

கூஎ. ஓம்படைக் கிளவிக் கையும் ஆனும்
தாம்பிரி விலவே [1]தொகைவரு காலை.

இ - ள்: ஓம்படைப் பொருண்மைக்கு ஐகாரவுருபும் ஆனுருபும் ஒத்தவுரிமைய, அவ்வேற்றுமை தொக்கவழி எ - று.

ஓம்படுத்தல் — பாதுகாத்தல்.

எ - டு: புலிபோற்றிவா என்புழி ஓம்படைக்கிளவி இரண்டாவதற்கோதிய காப்பின்கண் அடங்குதலின், புலியைப் போற்றி வாவென ஐகாரவுருபும், புலி அவன் போற்றி வருதற்கு ஏதுவாதலுமுடைமையால் புலியாற் போற்றி வாவென ஆனுருபும், ஒத்தவுரிமையவாய் வந்தவாறு கண்டுகொள்க.

புலியேதுவாதலு முடைத்தாயின், 'இரண்டன் மருங்கி னோக்க னோக்கமு மோம்படைக் கிளவியு மேதுவு மாகும்' எனவமையும் இச்சூத்திரம் வேண்டாவெனின்:— அங்ஙனமோதின் ஓம்படைப் பொருண்மைக்கு ஐந்தா முருபு மெய்தும், அதனை விலக்குதற்கு 'ஐயுமானுந் தாம் பிரிவில'வென வேறு கூறினார். இவை பிரிவிலவெனவே, இன்னுருபு பிரிவுடைத்தாய், புலியிற் போற்றிவாவெனச் சிறுபான்மை வருமென்பதாம். இரண்டு வேற்றுமைக்கும் ஓம்படைப் பொருண்மை இச்சூத்திரத்தா னெய்துவித்தாரெனினு மமையும். 'தாம்'என்பது செய்யுட் சுவைபட நின்றது. (கச)

கூஅ. [2]ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்(கு)
ஏழும் ஆகும் உறைநிலத் தான.

இ - ள்: ஆறாம் வேற்றுமைக்கண் ஓதிய வாழ்ச்சிக்கிழமைக்கு உறைநிலத்தின்கண் ஏழாவதும் வரும் எ - று.

எ - டு: காட்டியானை என்பது காட்டதியானையென விரிதலேயன்றிக் காட்டின்கண் யானையெனச் சிறுபான்மை ஏழாவது விரியினு மமையு மென்றவாறு.

யானைக்காடு, நம்பியூர் என்பன வாழ்ச்சிக்கிழமைப் பொருளவாயினும், ஆண்டேழாவது மயங்காதென்றற்கு 'உறை நிலத்தான' வென்றார். எனவே உறைநிலப்பெயர் பின்மொழியாய வழியது இம்மயக்கமென்பதாம். (கரு)

கூகூ. [3]குத்தொக வருஉங் கொடையெதிர் கிளவி
அப்பொருள் ஆறற்(கு) உரித்தும் ஆகும்.

---

1. 'தொகவரு காலை' எனப்பாடங்கொள்வர் நச். கல். ஆகியோர்.
2. இவ்விடத்துத் தெய். கூகூ ஆம் நூற்பாவை வைத்து உரை செய்துள்ளார்.
3. கூச ஆம்—நூற்பாமுதல் இதுவரையுள்ள நூற்பாக்கள் தெய். உரையில் இம்முறைமாறிக் கிடக்கின்றன.

இ - ள்: குவ்வென்னு முருபு தொகவருங் கொடையெதிர் கிளவி யாகிய தொகையினது கொடையெதிர்தலாகிய அப்பொருண்மை ஆறும் வேற்றுமைக் குரித்துமாம் எ - று.

எ - டு: நாகர்பலி என்பது நாகர்க்கு நேர்ந்த பலியென விரிதலே யன்றி நாகரது பலியென விரியினுமமையு மென்றவாறு.

'கொடையெதிர் கிளவி' யென்பதற்குத் 'தருசொல் வருசொற்' (சொல்-உரு) குரைத்ததுரைக்க. கொடை யெதிர்தல்-கொடையை விரும்பி மேற்கோடல். நாகர்க்குக் கொடுத்தலே விரும்பி மேற் கொண்டவழித் திரிபின்றி அவர்க்கஃதுடைமையாதலின், கிழமைப் பொருட்குரிய உருபாற் கூறினும் அமையு மென்றவாறு. (கசு)

கoo. அச்சக் கிளவிக் கைந்து மிரண்டும்
எச்ச மிலவே பொருள்வயி ளுன.

இ - ள்: அச்சப்பொருண்மைக்கு ஐந்தாம்வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்தகிழமைய, வேற்றுமைதொக அவற்றின் பொருள் நின்றவழி எ - று.

எ - டு: பழியஞ்சும் என்புழி, பழியினஞ்சும், பழியையஞ்சும் என இரண்டும், ஒத்த கிழமையவாய் நின்றவாறறிக.

அஃதேல், ஒருபொருட்கண் வரினன்றே மயக்கமாவது; இவை செயப்படு பொருளும் ஏதுவுமாகியபொருள் வேறுபாடுடையனவாக லின் மயக்கமாமாறென்னையெனின்:—அற்றன்று; ஈண்டேதுவாதலே அஞ்சப்படுதலாய் வேறன்றி நிற்றலின், ஒருபொருட்கண் வந்தனவே யாம்; அதனுன் மயக்கமாமென்பது. (கஎ)

கoக அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா(து)
உருபினும் பொருளினும் மெய்தடு மாறி
இருவயின் நிலையும் வேற்றுமை யெல்லாம்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே.

இ - ள்: மேல் மயக்கங் கூறப்பட்ட வேற்றுமையயன்றி, அவை போல்வன பிறவும், தொன்றுதொட்டு வரும் வழக்கிற் பிழையாது, உருபானும் பொருளானும் ஒன்றன்நிலேக்களத்து ஒன்று சென்று, பிறிதொன்றன்பொருளுந் தன்பொருளுமாகிய ஈரிடத்தும் நிலேபெறும் வேற்றுமையெல்லாந் திரிபுடையவல்ல தெரிந்துணர்வோர்க்கு எ-று.

பொதுவகையான் 'இருவயினிலேயு' மென்ருரேனும், வழிபோயிஞ ரெல்லாங் கூறைகோட்பட்டார் என்றவழிக் கூறைகோட்படுதல் கடவுளரை யொழித்து ஏனையோர்க்கேயாயினவாறுபோல ஏதுப் பொருட்கண் வரும் மூன்ருவதும் ஐந்தாவதும் ஒருபொருளேபற்றி நிற்றலின் இருவயினிலேயற்கேலாமையான், அவற்றை யொழித்து அஃதேனேயவற்றிற்கேயாம். என்னே? [1]ஏனைய தன்பொருளிற்றீராது பிறிதொன்றன் பொருட்கட் சேறலுடைமையான் இருவயினிலேயற் கேற்றவா றறிக.

'அன்னபிற'வாவன:—நோயினீங்கிஞன், நோயை நீங்கிஞன் எனவும்; சாத்தனே வெகுண்டான், சாத்தஞெடு வெகுண்டான் எனவும்;

1. 'ஏனைய' என்னும் சொல் தாமோதரம்பிள்ளே பதிப்பில் இல்லே.

முறையாற்குத்துங்குத்து, முறையிற்குத்துங்குத்து எனவும்; கடலொடு காடொட்டாது, கடலைக்காடொட்டாது எனவும் வருவனவும் பிறவுமாம்.

இக்காலத்துச் சிதைந்து வழங்கும் மயக்கமு முண்மையால், 'தொன்னெறி பிழையா'தன ஆராய்ந்துணரப்படுமென்பார் 'தெரியுமோர்க்கு' என்றார். (கஅ)

கூ௧. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒருசொன் னடைய பொருள்சென் மருங்கே.

இ - ள்: பலவுருபுந் தம்முட்டொடர்ந் தடுக்கிவந்த வேற்றுமைச் சொற்களெல்லாம் முடிக்குஞ் சொல்லொன்றனான் முற்றுப்பெற்று நடக்கும், அவ்வொன்றனாற் பொருள் செல்லுமிடத்து எ - று.

ஈண்டு 'வேற்றுமைக் கிளவி'யென்றது வேற்றுமையுருபை யிறுதியாகவுடைய சொல்லை.

எ - டு: 'என்னொடு நின்னொடுஞ் சூழாது' (அகம் - கஉஅ)
எனவும்,

'அந்தணர் நூற்கும் அறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்' (குறள் - ருசங)

எனவும் வரும்.

சாத்தன்றாயைக் காதலன், நாய் தேவனுயிற்று என்புழி, தாயை, தேவன் என்பன, காதலன் ஆயிற்றென்னும் பயனிலைக்கு அடையாய் இடைநின்றாற் போல, கோட்டை நுனிக்கட் குறைத்தான், தினையிற் கிளியைக் கடியும் என்புழி, நுனிக்கண், கிளியை யென்பன, குறைத்தான், கடியுமென்னும் முடிக்குஞ் சொல்லிற்கு அடையாய் இடைநின்ற வாசலான், அவையடுக்கன்மையின், அவையுதாரணமாதல் உரையாசிரியர் கருத்தன்றென்க.

குழையைச் சாத்தனது கள்ளரின் என இவ்வாறு தொடராது வருவனவற்றை நீக்குதற்கு 'உருபு தொடர்ந்தடுக்கிய' வென்றும், நீ தந்த சோற்றையுங் கூறையையு முண்டுடுத்திருந்தேம் என இன்னோரன்னுழி ஒருசொல்லாற் பொருள் செல்லாமையின் அவற்றை நீக்குதற்குப் 'பொருள்சென் மருங்'கென்றுங் கூறினார். பிறவுமன்ன. (கக)

கூ௩. இறுதியும் இடையும் எல்லா வுருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்.

இ - ள்: வேற்றுமைத்தொடரிறுதிக்கண்ணும் அதனிடைநிலத்தும் ஆறுருபுந் தத்தமக்கோதிய பொருட்கண் நிற்றலை வரையார் எ - று.

எ - டு: கடந்தான் நிலத்தை, வந்தான் சாத்தனொடு, கொடுத்தான் சாத்தற்கு, வலியன் சாத்தனின், இருந்தான் குன்றத்துக்கண் எனவும்; நிலத்தைக் கடந்தான், சாத்தனொடு வந்தான், சாத்தற்குக் கொடுத்தான், சாத்தனின் வலியன், சாத்தனதாடை, குன்றத்துக் கணிருந்தான் எனவும் வரும்.

'நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையா' ரெனவே, அப்பொருளுணர்த்தாக்கால் நிலவுதல் வரையப்படுமென்பதாம். அங்ஙனம் வரையப்படுவன யாவையெனின்:— ஆறுவதும் ஏழாவதும், சாத்தனதாடை,

குன்றத்துக்கட் கூகை என இடை நின்று தம்பொருளுணர்த்தினாற் போல, ஆடை சாத்தனது, கூகை குன்றத்துக்கண் என இறுதிநின்ற வழி அப்பொருளுணர்த்தாமையான், அவ்வுருபுகள் ஆண்டு வரையப் படும். ஆறனுருபேற்ற பெயர் உருபொடு கூடிப் பெயராயும் வினைக் குறிப்பாயும் நிற்றலுடைமையான், அந்நிலைமைக்கண் ஆடை சாத்த னது என இறுதிக்கண்ணும் நிற்குமென்பது.

இவ்வரையறை யுணர்த்துதற்கும், 'மெய்யுருபு தொகாஅ இறுதி யான' (சொல் - ௧0௫) என முன்னருணர்த்தப்படும் வரையறைக்கு இடம்படுத்தற்கும் 'ஈறுபெயர்க்காகும் (சொல் - ௬௯) என்றோதப் பட்ட உருபு தம்மையே இறுதியுமிடையும் நிற்குமென வகுத்துக் கூறினாரென்பது. (௨0)

௧0௪. பிறிதுபிறி தேற்றலும் உருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப.

இ - ள்: பிறிதோருருபு பிறிதோருருபை யேற்றலும் ஆறுருபுந் தொக்கு நிற்றலும், நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்து வருதலான், வழுவாகா எ - று.

ஏற்புழிக் கோடலென்பதனால், பிறிதோருருபேற்பது ஆறாவதே யாம். 'பிறிதேற்றலு' மென்றமையால், தானல்லாப் பிறவுரு பேற்றல் கொள்க.

எ - டு: சாத்தனதனை, சாத்தனதனொடு, சாத்தனதற்கு, சாத்தன தனின், சாத்தனதன்கண் என உருபு உருபேற்றவாறும்; நிலங்கடந் தான், தாய்மூவர், கருப்புவேலி, வரைவீழருவி, சாத்தன்கை, குன்றக் கூகை எனவும்; கடந்தானிலம், இருந்தான் குன்றத்து எனவும் உருபு தொக்கு நின்றவாறுங் கண்டு கொள்க.

'இறுதியு மிடையு'மென்பதனை அதிகாரத்தான் வருவித்து இரண் டிடத்துங் கூட்டி யுரைக்க.

சாத்தனதனது எனச் சிறுபான்மை தன்னையுமேற்றல் உரையிற் கோடலென்பதனாற் கொள்க.

பெயரிறுதி நின்ற உருபு தன்பொருளோடு தொடராது பிறிதோ ருருபையேற்றலும், தாம் நின்று தம்பொருளுணர்த்துதற்பாலன தொக்கு நிற்றலும், இலக்கணமன்மையின், வழுவமைத்தவாறு. (௨௧)

௧0௫. ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ இறுதி யான.

இ - ள்: ஐகாரவேற்றுமைப் பொருளுங் கண்ணென் வேற்று மைப் பொருளுமல்லாத பிறபொருள்மேனின்ற உருபு தொடர் மொழியிறுதிக்கண் தொக்குநில்லா எ - று.

'இறுதியுமிடையு'மென்பது அதிகரிக்க 'உருபுதொக வருதலு' மென்றமையான் வரைவின்றி எல்லாவுருபும் இறுதிக்கண்ணுந் தொகு மென்பது பட்டதனை விலக்கி, இவ்விரு பொருட்கண்ணும் வருவனவே இறுதிக்கட்டொகுவன அல்லன தொகாவென வரையறுத்தவாறு.

எ - டு: அறங்கறக்கும் என இடைக்கண் தொக்கு நின்ற நான்கா வது கறக்குமறம் என இறுதிக்கண் தொக்கு நில்லாமை கண்டு கொள்க. பிறவுமன்ன. (௨௨)

௬0௬. [1]யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.

இ-ள்: ஒருதொடர் யாதானுமோர் வேற்றுமையதுருபு கொடுத்துச் சொல்லப்பட்டதாயினும், அவ்வுருபு தன் பொருளான் அத்தொடர்ப்பொருள் செல்லாதவழிப் பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமையைச் சாரும் எ-று.

பொருள் செல்லாமையாவது, உருபேற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்முளியையாமை. அவ்வேற்றுமையைச் சார்தலாவது, அதன் பொருட்டாதல்.

எ-டு: 'ஒளியரி நாணற் கிழங்குமணற் கீன்ற
முளியோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்' (அகம்-௨௧௨)

என்றவழி நான்காவதன் பொருளான் அவ்வுருபேற்ற சொல்லும் அவ்வுருபு நோக்கிய சொல்லும் தம்முளியையாமையின், அவற்றை யியைக்கும் ஏழாவதன் பொருட்டாயினவாறு கண்டு கொள்க.

உருபு தன்பொருளிற்றீர்ந்து பிறவுருபின் பொருட்டாயும் நிற்கு மென உருபுமயக்கங் கூறியவாறாயிற்று.

அஃதேல், அரசர்கட்சார்ந்தான் என்புழியும் இரண்டாவதன் பொருட்கண் ஏழாவது சென்றதென்றமையான், அதனோடிதனிடை வேற்றுமை யென்னையெனின்:—அரசர்கட்சார்ந்தான் என்புழி, அரசரது சார்தற்கிடமாதலே சாரப்படுதலுமாய் இருபொருண்மையும் ஒற்றுமைப்பட்டு நிற்றலின், தத்தம்பொருள்வயிற் றம்மொடு சிவணு மாகுபெயர்போல, இடப்பொருண்மைக்குரிய கண்ணெனுருபு அவ்விடப் பொருண்மையோடு ஒற்றுமையுடைத்தாகிய செயப்படு பொருட்கும் ஆண்டுரித்தேயாம். மணற்கீன்ற என்புழி, நான்காவதன் பொருளோடு ஏழாவதன் பொருட் [2]கென்னு மியைபின்மையான், ஒப்பில்வழியாற் பிறிதுபொருள் சுட்டும் ஆகுபெயர்போல, அப்பொருட் குரித்தன்றி வந்ததெனப்படும். அன்னபிறவற்றுள்ளும் இவ்வேறுபாடு தெரிந்துணர்க.

தன்பொருளிற் றீர்தல் இலக்கணமன்மையின், இதனை யிலக்கணத் தோடுறழ்ந்து வருவனவற்றோடு வைத்தார். (௨௫)

௬0௭. எதிர்மறுத்து மொழியினுந் தத்தம் மரபின்
பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே.

இ-ள்: விதிமுகத்தாற்கூறுது எதிர்மறுத்துக்கூறினும், தத்தமிலக்கணத்தான் வரும் பொருள்நிலைமை திரியா வேற்றுமையுருபு எ-று.

எ-டு: மரத்தைக் குறையான், வேலானெறியான் என வரும்.

என்சொல்லியவாறோவெனின் :—குறையான், எறியான் என்றவழி வினை நிகழாமையின், மரமும் வேலுஞ் செயப்படுபொருளுங் கருவியுமெனப்படாவாயினும், எதிர்மறைவினையும் விதிவினையோ டொக்குமென்பது நூன்முடிபாகலான், ஆண்டுவந்த உருபுஞ் செயப்

1. இந்நூற்பாவினை நன்னூலார் கொண்டெடுத்து மொழிவர். (பெய-௬0)

2. என்றும்-சிறிதும். இஃது இப்பொருட்டாதல், 'என்னும் இமையான் நினைத் திருந்தாள்' (சிந்-1658), 'ஏதமிது போமின் என என்னும் முறையீயான்' (சிந்-2014), 'என்னும் பனியாயிரவெல்லாம் வைகினை' (பரி-6:81) என்பனவற்றான் விளங்கும்.

படுபொருண் முதலாயினவற்றுமேல் வந்தன வெனப்படுமென வழுவமைத்தவாறு. பிறவுமன்ன. (உச)

கoஅ. கு ஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே.

இ - ள்: கு ஐ ஆனென வரூஉ மூன்றுருபும், தொடரிறுதிக்கண் ணின்றவழி, அகரத்தோடு பொருந்தி நிற்றலுமுடைய செய்யுளுள் எ - று.

எ-டு: 'கடிநிலை யின்றே யாசிரி யற்க' (தொல். புள்-கூச) எனவும், 'காவ லோனக் களிறஞ் சும்மே', 'களிறு மஞ்சுமக் காவ லோன' எனவும், 'புரைதீர் கேள்விப் புலவ ரான' எனவும், 'உள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான' (கற்பியல்-ருஉ) எனவும் வரும்.

குகரமும் ஐகாரமும் ஈறு கெட அகரத்தொடு சிவணலுடைமை யான்; ஐ ஆன் கு என முறையிற் கூறாது, கு ஐ என அவற்றை இயைய வைத்தார். இயைய வைக்கின்றவர் ஐகாரம் முன்வைக்கவெனின்:—முறை அதுவாயினுஞ் செய்யுளின்பம் நோக்கிக் குகரம் முன்வைத்தா ரென்பது.

அஃதேல், இத்திரிபு 'தம்மீறு திரிதல்' (சொல்-உருக) என இடைச் சொற்கோதிய பொதுவிலக்கணத்தாற் பெறப்படுதலின், ஈண்டுக் கூறல் வேண்டாவெனின்:—அப்பொது விலக்கணத்தான் எய்துவன உருபிற்குமெய்துமேல், பிறிதுபிறிதேற்றலும், 'பிறிதவணிலைய' (சொல்-உருக) லாயடங்குதலான், ஈண்டுக் கூறல் வேண்டாவாம்; அதனான் அன்ன பொதுவிலக்கணம் உருபிற்கெய்தாதென மறுக்க.

கoகூ. [1]அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் [2]இல்லென மொழிப.

இ-ள்: அஃறிணைப் பெயர்க்கண் அகரத்தொடு சிவணி ஈறுதிரிதல் குவ்வும் ஐயுமில்லென எய்தியது விலக்கியவாறு.

அ எனத் திரிதலை, 'அ எனப் பிறத்த' லென்றார். (உகூ)

ககo. இதன திதுவிற் றென்னுங் கிளவியும்
அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்
அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்
முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
பால்வரை கிளவியும் பண்பி னாக்கமும்
காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்
அன்ன பிறவும் நான்க னுருபில்
தொன்னெறி மரபின தோன்ற லாறே.

இ - ள்: இதனதிது இத்தன்மைத் தென்னும் ஆறாவதன் பொருண்மையும், ஒன்றனையொன்று கொள்ளுமென்னும் இரண்டாவதன் பொருண்மையும், ஒன்றனானொன்று தொழிற்படற்கு ஒக்கும் என்னும்

1. 'அவற்றுள்' என்ற தனிச்சொல்லுடன் இந்நூற்பாவினை ஆள்வர் இளம். ப. உ. ஆகியோர். 2. 'இலவென மொழிப' எனப் பாடங்கொள்வர் ப. உ.

மூன்ருவதன் பொருண்மையும், முறைப்பொருண்மையைக் கொண்டு நின்ற பெயர்ச்சொல்லினது ஆரும் வேற்றுமைப் பொருண்மையும், நிலத்தை வரைந்து கூறும் பொருண்மையும், பண்பின்கணும் பொருவு மாகிய ஐந்தாவதன் பொருண்மையும், காலத்தின்கண் அறியப்படும் ஏழாம் வேற்றுமைப்பொருண்மையும், பற்றுவிடுபொருண்மையும், தீர்ந்துமொழிப் பொருண்மையுமாகிய ஐந்தாவன்பொருண்மையும், அவை போல்வன பிறவும், நான்கனுருபாற் ரேன்றுதற்கண் தொன்னெறி மரபின எ - று.

எ - டு: யானைக்குக்கோடு கூரிது எனவும், இவட்குக் கொள்ளு மிவ்வணி எனவும், அவற்குச் செய்யத்தகு மக்காரியம் எனவும், ஆவிற் குக் கன்று எனவும், கருவூர்க்குக் கிழக்கு எனவும், சாத்தற்கு நெடியன் எனவும், காலைக்கு வரும் எனவும், மனைவாழ்க்கைக்குப் பற்றுவிட்டான் எனவும், ஊர்க்குத் தீர்ந்தான் எனவும், அப்பொருளெல்லாவற்றின் கண்ணும் நான்காமுருபு வந்தவாறு கண்டு கொள்க.

வன்பால் மென்பால் என்பவாகலின் நிலத்தைப் 'பால்' என்ருர்.

'சிறப்பே நலனே காதல் வலியோ(டு)
அந்நாற் பண்பும் நிலைக்கள மென்ப' (பொருள்-உஎகூ)

என, உவமை நிலைக்களத்தைப் பண்பென்பவாகலின் 'பண்பினுக்கம்' என்ருர்.

இதுவும் வேற்றுமை மயக்கமாகலின் மேற்கூறப்பட்டவற்ருேடு வையாது இத்துணையும் போதந்து வைத்ததென்னையெனின்:—அது தொகை விரிப்ப மயங்குமதிகாரம்; இது தொகையல்வழி யானையது கோடு கூரிது என்னுந் தொடர்மொழிப்பொருள் சிதையாமல் யானைக் குக் கோடு கூரிது என நான்காவது ஆண்டுச்சென்று நின்றதாகலான், அவற்ருேடு வையாராயினுரென்பது. அஃதேல், ஆவின்கன்று எனவும் கருவூர்க்கிழக்கு எனவுந் தொகையாயும் வருதலின், அப்பொருட்கண் நான்காவது வருதல் ஈண்டுக் கூறற்பாற்றன்றெனின்:—அஃதொக்கு மன்னுயினும், பிற வேற்றுமைப் பொருட்கண் நான்காவது சேறலொப் புமையான் அவற்றிற்கு வேருேர் சூத்திரஞ் செய்யாது இவற்ருே டொருங்கோதினு ரென்பது.

'அன்னபிறவு' மென்றதனுன் ஊர்க்கட்சென்ருன், ஊர்க்கணுற் றது செய்வான் என்னு மேழாவதன் பொருட்கண்ணும், ஊரிற்சேயன் என்னும் ஐந்தாவதன் பொருட்கண்ணும், ஊர்க்குச்சென்ருன், ஊர்க்குற்றது செய்வான், ஊர்க்குச்சேயன் என நான்காவது வருதல் கொள்க. பிறவுமன்ன. (உஎ)

கககூ. ஏனை யுருபும் அன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான.

இ - ள்: நான்கனுருபல்லாத பிறவுருபுந் தொகையல்லாத தொடர்மொழிக்கண் ஒன்றன்பொருள் சிதையாமை ஒன்று மயங்கு தற்கட் குற்றமில, வழங்கு முறைமையான் எ - று.

எ - டு: நூலது குற்றங்கூறினுன் என்னுந் தொடர்மொழிக்கண் நூலைக் குற்றங்கூறினுன் எனவும், அவட்குக் குற்றேவல் செய்யும் என்னுந் தொடர்மொழிக்கண் அவளது குற்றேவல் செய்யும் எனவும் வருவன கோள்க. பிறவுமன்ன. (உஅ)

கசஉ. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி யென்று
இன்னதற் கிதுபய னாக வென்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முதல் நிலையே.

இ - ள்: வினையும், வினைமுதலும், செயப்படுபொருளும், நிலமும், காலமும், கருவியுமாகிய ஆறும், இன்னதற்கு, இது பயனாக என்று சொல்லப்படும் இரண்டொடுந்தொக்குத் தொழிலது முதனிலை யெட்டாமென்று சொல்லுவர் ஆசிரியர் எ - று.

ஈண்டேதுப்பொருண்மை கருவிக்கண் அடக்கப்பட்டது.

'தொழின் முதனிலை'யென்றது தொழிலது காரணத்தை. காரியத்தின் முன்னிற்றலின் முதனிலையாயிற்று. காரணமெனினும் காரகமெனினு மொக்கும்.

எ - டு: வனைந்தான் என்றவழி, வனைதற்றொழிலும், வனைந்த கருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற்கிடமாகிய நிலமும், அத்தொழில் நிகழுங்காலமும், அதற்குக் கருவியாகிய திகிரிமுதலாயினவும், வனையப்பட்ட குடத்தைக் கொள்வானும், வனைந்ததனாய பயனுமாகிய எட்டும்பற்றி அத்தொழில் நிகழ்ந்தவாறு கண்டுகொள்க.

அஃதேல், தொழிலின் வேறாயது காரகமாகலின், வனைதற்றொழிற்கு அத்தொழில்தான் காரகமாமாறென்னையெனின்:— வனைந்தானென்பது வனைதலைச் செய்தானென்னும் பொருட்டாகலின், செய்தற்கு வனைதல் செயப்படு பொருள் நீர்மைத்தாய்க் காரகமாமென்பது. அற்றாகலினன்றே, கொளலோகொண்டான் என்பது இரண்டாம் வேற்றுமைத் தொடராயிற்றென்பது.

'இன்னதற்கு,' 'இதுபயனாக' என்னும் இரண்டும் அருகியல்லது வாராமையின், 'அன்னமரபி னிரண்டொடு'மெனப் பிரித்துக் கூறினார்.

அஃதேல், 'செய்வது' முதலாகிய முதனிலை வேற்றுமையோத்தினுள் கூறப்பட்டமையின் இச்சூத்திரம் வேண்டாவெனின்:—அற்றன்று; இரண்டாவதற்கோதிய பொருளெல்லாவற்றையுஞ் செயப்படுபொருளெனத் தொகுத்து, ஏதுவைக் கருவிக்கண்ணும் வினைசெய்யிடத்தைக் காலத்தின்கண்ணும் அடக்கி, ஏழாகச்செய்து, அவற்றோடு ஆண்டுப் பெறப்படாத வினையென்னு முதனிலை கூட்டி, எட்டென்றாராகலின், இப்பாகுபாடு ஆண்டுப் பெறப்படாமையான், இச்சூத்திரம் வேண்டுமென்பது.

இதனாற்பயன், 'நிலனும் பொருளுங் காலமும் கருவியும்' (சொல் - உகச) எனவும், 'செயப்படு பொருளைச் செய்தது போல' (சொல் - உசகூ) எனவும் வினைக்கிலக்கணங் கூறுதலும் பிறவுமாம். (உகூ)

கசங. அவைதாம்
வழங்கியன் மருங்கின் குன்றுவ குன்றும்.

இ – ள்: மேற்கூறப்பட்ட தொழின் முதனிலைதாம் எல்லாத் தொழிற்கும் எட்டும் வருமென்னும் யாப்புறவில்லை; வழக்கின்கட் சில தொழிற்கட் குன்றத்தகுவன குன்றிவரும் எ - று.

குன்றத் தகுவனவாவன, செயப்படுபொருளும் ஏற்பதும் பயனுமாம்.

எ - டு: கொடியாடிற்று, வளிவழங்கிற்று என்புழி செயப்படு பொருளும் ஏற்பதும் பயனுமாகிய முதனிலையில்லையாயினும், ஒழிந்தன வற்றான் ஆடுதலும் வழங்கலுமாகிய தொழினிகழ்ந்தவாறு கண்டு கொள்க.

இதனாற்பயன், எல்லாத்தொழிற்கும் முதனிலையெட்டுங் குன்றாது வருமோ சிலதொழிற்குச் சில குன்றிவருமோ வென்னும் ஐயம் நீங்குதலும், செயப்படுபொருள் குன்றிய வினையை யுணர்த்துஞ்சொல் இரண்டாதவதனோ டியையாதென்பது பெறுதலுமாம். (௱௦)

௧௧௪. முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
[1]அனையமர பினவே ஆகுபெயர்க் கிளவி.

இ - ள்: முதற்சொல் வாய்பாட்டாற் கூறப்படுஞ் சினையறி கிளவியும், சினைச்சொல் வாய்பாட்டாற் கூறப்படும் முதலறி கிளவியும், நிலத்துப் பிறந்த பொருண்மேல் அந்நிலப்பெயர் கூறலும், பண்புப் பெயர் அப்பண்புடையதனை யுணர்த்திப் பண்புகொள் பெயராய் நின்றதூஉம், முதற் காரணப்பெயரான் அக்காரணத்தானியன்ற காரியத்தைச் சொல்லுதலும் அன்மொழிப் பொருண்மேனின்ற இரு பெயரொட்டும், செய்யப்பட்ட பொருண்மேல் அதனைச் செய்தான் பெயரைச் சொல்லுஞ் சொல்லுமென அப்பெற்றிப்பட்ட இலக்கணத் தையுடையன ஆகுபெயர் எ - று.

எ - டு: கடுத்தின்றான், தெங்குதின்றான் என முதற்பெயர் சினை மேலும், இலை நட்டு வாழும், பூ நட்டு வாழும் எனச் சினைப்பெயர் முதன்மேலும், குழிப்பாடி நேரிது என நிலப்பெயர் அந்நிலத்துப் பிறந்த ஆடைமேலும், இம்மணி நீலம் எனப் பண்புப்பெயர் அப்பண் புடையதன் மேலும், இக்குடம் பொன் எனக் காரணப்பெயர் அதனா லியன்ற காரியத்தின்மேலும், பொற்றொடி வந்தாள் என இருபெய ரொட்டு அன்மொழிப் பொருள்மேலும், இவ்வாடை கோலிகன் எனச் செய்தான் பெயர் செயப்பட்டதன்மேலும், வந்தவாறுகண்டு கொள்க.

அன்மொழித்தொகை எச்சவியலுள்[3] உணர்த்தப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டா வெனின்:—அன்மொழித் தொகை தொகையாத லுடைமையான் ஆண்டுக் கூறினார்; இயற்கைப்பெயர் ஆகுபெயர் எனப் பெயர் இரண்டாயடங்கும்வழி [2]ஆகுபெயர்ப்பட்டதன்மேலும் வந்தவாறு கண்டுகொள்க. அன்மொழித்தொகை எச்சவியலுளுணர்த் தப்படும்; அதனால் அவ்வாகுபெயராதலுடைமை பற்றி ஈண்டுக் கூறி னார்; எச்சவியலுட் கூறப்பட்டவாயினும், வினையெச்ச முதலாயின வினைச்சொல்லாதலும் இடைச்சொல்லாதலு முடைமையான் அவற்றை வினையியலுள்ளும் இடையியலுள்ளுங் கூறியவாறு போல வென்பது.

தொல்காப்பியனானுங் கபிலனானுஞ் செய்யப்பட்ட நூலைத் தொல் காப்பியங் கபிலமென்றல் வினைமுதலுரைக்குங் கிளவியென்றாரால்

---

1. 'அனைமரபினவே' எனப்பாடங்கொள்வர் இளம். கல். ப. உ. ஆகியோர்.
2. 'ஒரு பெயர்ப்பட்டதென மேலும்' என்பதும் பாடம். 3. சொல் - ௪௧௮.

உரையாசிரியரெனின்:—அற்றன்று; ஒரு மொழி யிலக்கணம் ஈண்டுக் கூறுராயினும் வெற்புச் சேர்ப்பு என்னும் பெயரிறுதி இதனையுடையா னென்னும் பொருள் தோன்ற அன்னென்பதோர் இடைச்சொல் வந்து வெற்பன் சேர்ப்பன் என நின்றாற்போல, தொல்காப்பியன் கபிலன் என்னும் பெயரிறுதி இவனாற் செய்யப்பட்டதென்னும் பொருள் தோன்ற அம்மென்பதோர் இடைச்சொல் வந்து அன் கெடத் தொல் காப்பியம் கபிலம் என நின்றனவென்பது ஆசிரியர் கருத்தாம்; அத னான் அவையுதாரணமாதல் உரையாசிரியர் கருத்தன்றென்க.

'அனையமரபின' வென்றது அவ்வாறியாதனுமோ ரியைபுபற்றி ஒன்றன்பெயர் ஒன்றற்காதலென ஆகுபெயரிலக்கணத்திற்குத் தோற்று வாய் செய்தவாறு.

ஒன்றன் பொருட்கண் ஒன்றுசேறலென்னு மொப்புமையான் இவற்றை யீண்டுக் கூறினார்.

அஃதேல் [1]ஆகுபெயர் எழுவாய் வேற்றுமை மயக்கமாதலான் ஈண்டுக் கூறினாரென்றாரால் உரையாசிரியரெனின்:— ஆகுபெயர் ஏனை வேற்றுமையுமேற்று நிற்றலானும், எழுவாய் வேற்றுமையாய் நின்ற வழியும் அது பிறிதோர் வேற்றுமைப் பொருட்கட் சென்று மயங்கா மையின் வேற்றுமைமயக்க மெனப்படாமையானும் அது போலியுரை யென்க. (நடக)

கககு. அவைதாம்
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை
[2]வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

இ-ள்: மேற்கூறப்பட்ட ஆகுபெயர்தாம் தத்தம் பொருளின் நீங்காது தம்பொருளின் வேறல்லாத பொருளொடு புணர்தலும், தம் பொருட்கியைபில்லாத பிறிது பொருளைச் சுட்டிநிற்றலுமென இரண் டியல்புடைய வேறுபாடு போற்றி யுணரப்படும் எ-று.

எ-டு: கடுவென்னு முதற்பெயர் முதலோடொற்றுமையுடைய சினைமேல் நிற்றல் தத்தம்பொருள்வயிற் றம்மொடு சிவணலாம். குழிப் பாடியென்னுமிடப்பெயர் இடத்தின் வேறாய ஆடைமேனிற்றல் ஒப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலாம்.

அஃதேல், குழிப்பாடியும் ஆடையும் இடமும் இடத்துநிகழ் பொரு ளுமாகிய இயைபுடைய வாகலினன்றே அதன் பெயர் அதற்காயிற்று; அதனான் அஃதொப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டலாமாறென்னை யெனின்:— நன்று சொன்னாய்; அவ்வியைபுடையவேனும், முதலுஞ் சினையும் பண்பும் பண்புடையதுமாதன் முதலாகிய ஒற்றுமையாகிய இயைபிலவாகலின், அவை தம்முள் வேறெனவேபடும்; அதனாற் குழிப் பாடியென்பது ஒப்பில்வழியாற்பிறிது பொருள் சுட்டலேயாமென்பது. ஒற்றுமையாகிய இயைபுள்வழி அது தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணிற்றென்றும், அவ்வியைபின்றி இடமும் இடத்துநிகழ் பொருளுமாதன் முதலாகிய இயைபேயாயவழி இஃதொப்பில் வழியாற்

1. இவ்வாக்கியம் இளம். உரையில் இல்லை.
2. இவ்வரியைத் தனி நூற்பாவாகக் கொள்வர் இளம். நச். கல். ப. உ. ஆகியோர்.

பிறிது பொருள் சுட்டிற்றென்றும், வேறுபடுத்துணரப்படுமென்பார், 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டு' மென்றூர் என்பது.

அஃதேல், இதனைப் பிரித்து இரு சூத்திரமாக உரைத்தாரால் உரையாசிரியரெனின்:— அங்ஙனம் பிரிப்பின் தம்மொடு சிவணலும் பிறிது பொருள் சுட்டலுமாகிய இவற்றது வேறுபாட்டின்கணென்பது இனிது பெறப்படாமையானும், எழுத்தோத்தினுள் 'புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியும்' (எழுத் - ௧௫௬) என்னுஞ் சூத்திரத்து இந்நிகர்ப் பாதுகாவலைப் பிரியாது ஒன்றாகவே யுரைத்தலானும், அவர்க்கது கருத்தன் றென்க. (௩௨)

௧௧௬. அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே.

இ - ள்: அளவுப்பெயரும் நிறைப்பெயரும் ஆகுபெயராகக் கொள்ளுமிடமுமுடையவென்று சொல்லுவர் உணர்ந்தோர் எ - று.

எ - டு: பதக்குத்தூணி யென்னும் அளவுப்பெயர் இந்நெற்பதக்கு, இப்பயறு தூணி எனவும், தொடி துலாமென்னும் நிறைப்பெயர் இப் பொன்றொடி, இவ்வெள்ளி துலாம் எனவும், அளக்கப்பட்ட பொருண் மேலும், நிறுக்கப்பட்ட பொருண்மேலும், ஆகுபெயராய் நின்றவாறு கண்டுகொள்க.

ஒன்று இரண்டென்னுந் தொடக்கத்து எண்ணுப் பெயரும் எண்ணப்பட்ட பொருண்மேனின்றவழி ஆகுபெயரேயாகலின் அவற்றை யொழித்த தென்னையெனின்:— அவை எண்ணப்படு பொருட்கு முரிய வாகலின் ஆகுபெயரெனப்படா; அதனுன் அவற்றை யொழித்தா ரென்பது. (௩௩)

௧௧௭. கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.

இ - ள்: சொல்லப்பட்டனவேயன்றிப் பிறவும் ஆகுபெயருள வேல், அவையெல்லாஞ் சொல்லப்பட்டவற்றதியல்பான் உணர்ந்து கொள்க எ - று.

சொல்லப்பட்டவற்றதியல்பாவது, யாதானுமோரியையு பற்றி ஒன்றன்பெயர் ஒன்றன்மேல் வழங்கப்படுதல்.

எ - டு: யாழ் குழல் என்னுங் கருவிப்பெயர் யாழ் கேட்டான், குழல் கேட்டான் என அவற்றானுகிய ஓசைமேலும் ஆகுபெயராய் நின்றன. யானை பாவை என்னும் உவமைப்பெயர் யானை வந்தான், பாவை வந்தாள் என உவமிக்கப்படும் பொருண்மேலும், ஏறு குத்து என்னுந் தொழிற்பெயர் இஃதோரேறு, இஃதோர்குத்து என அத்தொழிலானும் வடுவின் மேலும், வருவனவெல்லாங் கொள்க. பிறவு மன்ன.

இயைபுபற்றி ஒன்றன்பெயர் ஒன்றற்காங்கால் அவ்வியைபு ஓரிலக்கணத்ததன்றி வேறுபட்ட இலக்கணத்தை யுடைத்து; அவ்விலக்கண மெல்லாம் கடைப்பிடித்துணர்க என்பார், 'வேறுபிற தோன்றினும்' என்றூர். (௩௪)

வேற்றுமை மயங்கியல் முற்றிற்று.

## ங. விளிமரபு

ககஅ. விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய வென்ப.

நிறுத்த முறையானே விளிவேற்றுமை யுணர்த்திய வெடுத்துக் கொண்டார்; அதனுன் இவ்வோத்து விளிமரபென்னும் பெயர்த் தாயிற்று.

இ - ள்: விளியென்று சொல்லப்படுவன தம்மையேற்கும் பெயரோடு விளங்கத் தோன்று மியல்பையுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர் எ - று.

விளிவேற்றுமை எதிர்முகமாக்குதற் பொருட்டாதல் பெயரானே விளங்குதலிற் கூறுராயினர். ஈறுதிரிதலும், ஈற்றயனீடலும், பிறிது வந்தடைதலும், இயல்பாதலுமென்னும் வேறுபாடுடைமையான் 'விளியெனப் படுப' என்றுர். 'கொள்ளும் பெயரோ' டெனவே, கொள்ளாப் பெயருமுள வென்பதாம். இயல்புவிளிக்கண் திரியாது நின்ற பெயரீறே விளியெனப் படுதலின், ஆண்டுந் தெற்றென விளங்குமென் பார் 'தெளியத் தோன்றும்' என்றுர். (க)

கககூ. அவ்வே
இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப.

இ - ள்: விளி கொள்ளும் பெயரும் கொள்ளாப் பெயரும் இவை யென மாணுக்கனுணர்தற்பொருட்டு அவை யிவ்வோத்தினகத்துப் பொருள்படக் கிளக்கப்படும் எ - று.

இது கூறுவாமென்னுந் தந்திரவுத்தி.

அவ்வேயெனக் 'கொள்ளும் பெயரொடு தெளியத் தோன்றும்' (சொல் - ககஅ) எனப் பெயரா னுணர்த்தப்படுவதாய் நின்ற விளியைச் சுட்டிய, பெயரைச் சுட்டுதல் இடருடைத்தெனின்:—விளிவேற்றுமை யாவது கொள்ளும் பெயரின் வேறன்றி அவை தாமேயாய் நிற்றலின், அப்பெயரைச் சுட்டவே விளியுஞ் சுட்டப்பட்டனவேயாம்; அதனுன் இடரின் றென்பது. இவ்வாறுரையாது அவ்வேயெனச் சுட்டப்பட்டன விளிவேற்றுமை யெனின்:—வருஞ் சூத்திரத்தின் அவைதாமெனப் பட்டனவும் விளி வேற்றுமையேயாய் 'மெய்ப்பொருள் சுட்டிய விளி கொள் பெயர்' (சொல் - கஉo) என்பதனேடு இயையாவாமென்பது.

விளிகொள்ளும் பெயரும், கொள்ளாப் பெயரும், உயர்திணை விரவுப்பெயர் ஈண்டுயர்திணைப் [1]பெயருள்ளடங்குதலும், நுண்ணுணர் விஞர்க்கல்லது அறியலாகாமையின், ஏனேரும் அறிதற்கு அவை கிளக்கப்படுமென்பார் 'இவ்வென அறிதற்கு' என்றுர். (உ)

கஉo. [2]அவைதாம்
இஉ ஐஒ வென்னு மிறுதி
அப்பால் நான்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.

---

1. 'பெயருள்ளுமடங்குதலும்' என்பதும் பாடம்.
2. ''அவற்றுள்' எனப்பாடங் கொள்வர் தெய்.

இ - ள்: இளக்கப் படுவனவாகிய பெயர்தாம் இ உ ஐ ஓ என்னு மிறுதியையுடைய அக்கூற்று நான்கு பெயரும் உயர்திணைப் பெயருள் விளி கொள்ளும் பெயர் எ - று.

அஃறிணைப்பெயர் ஆகுபெயராயி உயர்திணைக்கண் வந்துழியும், விரவுப்பெயர் உயர்திணைக்கண் வருங்காலும், அவை விளியேற்கு மிடத்து உயர்திணைப் பெயரா மென்றற்கு 'உயர்திணை மருங்கின் மெய்ப்பொருள் சுட்டிய' வென்றுர்.

எ - டு: 'சுடர்த்தொடீஇ கேளாய்' (கலி - ருக) எனவும், சாத்தீ என வும் அவை உயர்திணைப் பெயராய் விளியேற்றவாறு கண்டு கொள்க.

'மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயர்', 'அப்பால் நான்' கென்பன எழுவாயும் பயனிலையுமாய் இயைந்து, ஒருசொன்னீர்மைய வாய், 'அவைதாம்' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாயின.

அஃதேல், உயர்திணை விரவுப் பெயரைப் பொருள்பற்றி உயர் திணைப் பெயர்க்கண் அடக்கினுராலெனின், முன்னர் 'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' (சொல் - கஙo) எனல் வேண்டாவாம் பிற வெனின்:— நன்று சொன்னுய்; 'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' என்புழி, விரவுப்பெயரென்றது அஃறிணை விரவுப் பெயரென அஃ றிணைக்கண் வருவனவற்றை விதந்தோதுதலான், உயர்திணைக்கண் வருவன உயர்திணைப் பெயருள் அடங்குமென்பதற்கு அச்சூத்திரமே கரியாயிற்றென்பது. அல்லதூஉம், புள்ளியீற்றுயர்திணைப் பெயர்க்கண் அவ்வீற் றுயர்திணை விரவுப் பெயரு மடங்கி விளிகோடலெய்துதலா னன்றே, தான் நீயிரென்பன விளி கொள்ளாவென எய்தியது விலக் குவாராயிற்று; அதனுனுமடங்குதல் பெறுதுமென்பது. அல்லதூஉம், உயர்திணை யதிகாரத்து முறைப்பெயர் விளியேற்குமாறு கூறினமை யானும் பெறப்படும்.

விரவுப்பெயரை உயர்திணைப்பெயரோடு மாட்டெறிபவாகலின், மாட்டேற்றுன் முறைப்பெயர் ஆகாரமும் ஏகாரமும் பெற்று விளி யேற்ற லெய்தாமையின் ஈண்டுக் கூறினுரென்றுரால் உரையாசிரிய ரெனின்:— அக்கருத்தினராயின் அஃறிணையென்னுஞ் சொல்லொ ழித்துக்,

'இளந்த விறுதி விரவுப் பெயரே
விளம்பிய நெறிய விளிக்குங் காலை'

எனவும், இதன் பின்

'முறைப்பெயர் மருங்கின் ஐயெ னிறுதி
யாவொடு வருதற் குரியவு முளவே' (சொல் - கஉசு)

எனவும், இதன்பின் னகார (சொல் - கஙௗ), ளகார (சொல் - கசஎ) விற்றிருவகை முறைப்பெயருமடங்கப்,

'புள்ளி யிறுதி யேயொடு வருமே'

எனவும் ஓதுவார்மன் னுசிரியர். என்னை? மயங்கக் கூறலென்னுங் குற்ற மும் நீங்கிச் சூத்திரமுஞ் சுருங்குமாதலான். அவ்வாறேதாமையானும், முறைப் பெயரே யன்றித் தான் நீயிர் என்பனவும் ஈண்டுக் கூறப் பட்டமையானும், உரையாசிரியர்க்கு அது கருத்தன்றென்க. (ரு)

கஉக. அவற்றுள்
இ ஈ யாகும் ஐஆய் ஆகும்.

மேற்கூறப்பட்ட நான்கீறும் விளியேற்குமாறு கூறுகின்ருர்.

இ - ள்: அவற்றுள் என்பது அந்நான்கீற்றினுள் என்றவாறு. நம்பி, நம்பீ என இகரம் ஈகாரமாயும், நங்கை, நங்காய் என ஐகாரம் ஆயாயும் ஈறு திரிந்து விளியேற்கும் எ - று. (ச)

கஉஉ. [1]ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்.

இ - ள்: கோ, கோவே எனவும், வேந்து, வேந்தே எனவும், ஓகாரமும் உகரமும் ஏகாரம் பெற்று விளியேற்கும் எ - று. (ரு)

கஉங. உகரந் தானே குற்றிய லுகரம்.

இ - ள்: மேற்கூறப்பட்ட உகரமாவது குற்றியலுகரம் எ - று.

[2]திரு, திருவே எனச் சிறுபான்மை முற்றுகரவீறு முளவேனும், ஓதிய முறையானே விளியேற்பன குற்றுகரவீறே யாகலின் 'குற்றிய லுகர'மென்ருர். (சு)

கஉச. ஏனை யுயிரே யுயர்திணை மருங்கில்
தாம்விளி கொள்ளா என்மனர் புலவர்.

இ - ள்: மேற்கூறப்பட்ட நான்கீறுமல்லா உயிரீறு உயர்திணைக் கண் விளி கொள்ளாவென்று சொல்லுவர் புலவர் எ - று.

கொள்வன இவையென வரையறுத் துணர்த்தவே, ஏனைய கொள்ளாவென்ப துணரப்படும். வரையறைக்குப் பயன் அதுவாக லான்; அதனுல் இச்சூத்திரம் வேண்டாவெனின்:— அஃதொக்கும்: வரையறையாற் பெறப்படுவதனையே ஒருபயன்நோக்கிக் கூறினர். யாதோ பயனெனின்:— ஏனையுயிர் விளிகொள்ளாவென, மேற்கூறப் பட்ட உயிர்கூறியவாறன்றிப் பிறவாற்ருனும் விளி கொள்வனவுமுள வென்ப துணர்த்துதற்கென்பது.

எ - டு: கணி, கணியே; கரி, கரியே என வரும். பிறவுமன்ன.

'தாம்' என்றதனுன் ஏனையுயிர் தம்மியல்பாற் கொள்ளாவாயினுஞ் சொல்லுவான் குறிப்புவகையாற் கொள்வனவுமுள வென்பதாம்.

எ - டு: மகவென்பது விளி பெருதாயினுஞ் சொல்லுவான் குறிப் பான் மகவேயென விளியேற்றவாறு கண்டுகொள்க. (எ)

கஉரு. அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப.

இ - ள்: அளபெடை தன்னியல்புமாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரை பெற்று நிற்கும் இகரவீற்றுப்பெயர் இ ஈயாகாது இயல்பாய் விளியேற்குஞ் செயற்கையை யுடையவாம் எ - று.

'அளபெடைமிக் கியற்கையவாகுஞ் செயற்கைய'வென்னுது 'மிகூஉ மிகர விறுபெய'ரென அநுவதித்தாரேனும், மாத்திரை மிக்கி யல்பா மென்பது அதனுற் பெறப்படும்.

---

1. இதனையும் கஉங ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரேநூற்பாவாகக் கொள்வர் தெய்.
2. முற்றியலுகரம் விளியேற்றல், 'திருவே புகுதுக' (சிந் - உகஉக) என்பதனுனு மறிக.

எ-டு [1]தொழீஇஇ எனவும், தொழீஇஇஇ எனவும் வரும்.

இ ஈயாகாமையின் 'இயற்கையவாகு'மென்றும், மாத்திரை மிகுதலாகிய செயற்கையுடைமையாற் 'செயற்கைய' வென்றுங் கூறினர். இகரவிறுபெயரென்பது இகரத்தானிற்ற பெயரென விரியும். (அ)

கஉகூ. முறைப்பெயர் மருங்கின் ஐயென் இறுதி
ஆவொடு வருதற் குரியவு முளவே.

இ-ள்: முறைப்பெயரிடத்து ஐயென்னு முடிபு ஆயாகாது ஆவொடு வருதற்கு முரியனவுள எ-று.

எ-டு: அன்னை, அன்னா எனவும்; அத்தை, அத்தா எனவும்வரும்.

'உம்மையான்' அன்னாய் அத்தாய் என ஆயாதலுமுடையவென்பதாம். உம்மை பிரிந்து நின்றது. (கூ)

கஉஎ. அண்மைச் சொல்லே யியற்கை யாகும்.

இ-ள்: நான்கிற் றண்மைச்சொல்லும் இயற்கையாய் விளியேற்கும் எ-று.

அண்மைக்கண் விளி கொள்வதனை 'அண்மைச்சொல்' என்றார்.

எ-டு: நம்பி வாழி, வேந்து வாழி, நங்கை வாழி, கோ வாழி என வரும். (க௦)

கஉஅ. னரலள என்னும் அந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே.

உயிரீற் றுயர்திணைப்பெயர் விளியேற்குமா றுணர்த்தி, இனிப் புள்ளியீற் றுயர்திணைப்பெயர் விளியேற்குமா றுணர்த்துகின்றார்.

இ-ள்: புள்ளியீற்றுயர்திணைப்பெயர் ன ர ல ள வென்னும் அந்நான்கீற்ற வென்று சொல்லுவர் ஆசிரியர் எ-று.

னரலள வென்னுமொற்றை ஈறாகவுடைய சொல்லை 'னரலள' வென்றார். (கக)

கஉகூ. ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா.

இ-ள்: அந்நான்குமல்லாத புள்ளியீற்றுப் பெயர் விளிகொள்ளா எ-று.

ஈண்டும் 'விளிகொள்ளா' வென்றதனாற்பயன், கூறப்பட்ட புள்ளியீறு பிறவாற்றான் விளி கொள்வனவுளவென்ப துணர்த்தலாம்.

எ-டு: பெண்டிர், பெண்டிரோ எனவும், தம்முன், தம்முனா எனவும் வரும். பிறவுமன்ன.

'விளங்குமணிக் கொடும்பூணாஅய்' (புறம் - க௩௦) என ஏனைப் புள்ளி சிறுபான்மை விளியேற்றலுங் கொள்க. (கஉ)

க௩௦. அவற்றுள்
அன்னென் இறுதி ஆவா கும்மே.

---

1. தொழீஇஇ—தொழில் செய்கின்றவளே! (கலி—க0௩, க0௪)
'தோழீஇஇ' என்பதும் பாடம்.

இ - ள்: அவற்றுள் அன்னென்னும் னகரவீறு ஆவாய் விளியேற்கும் எ - று.

எ - டு: சோழன், சோழா; சேர்ப்பன், சேர்ப்பா என வரும். (கங)

கஙக. அண்மைச் சொல்லிற்(கு) அகர மாகும்.

இ - ள்: அண்மைவிளிக்கண் அன்னீறு அகரமாம் எ - று.

எ - டு: துறைவன், துறைவ; ஊரன், ஊர என வரும். (கச)

கஙஉ. ஆனென் இறுதி இயற்கை யாகும்.

இ - ள்: ஆனென்னும் னகரவீறு இயல்பாய் விளியேற்கும் எ-று.

எ - டு: சேரமான், மலையமான் என்பன கூவுதற்கண்ணும் அவ்வாறு நிற்றல் கண்டு கொள்க. (கரு)

கஙங. தொழிலிற் கூறும் ஆனென் இறுதி
ஆயா கும்மே விளிவயி னான.

இ - ள்: தொழிலானொருபொருளைச் சொல்லும் ஆனீற்றுப்பெயர் விளிக்கண் ஆயாம் எ - று.

எ - டு: வந்தான், வந்தாய்; சென்றான், சென்றாய் என வரும்.

விளியதிகாரமாகலான் 'விளிவயினான' எனல் வேண்டா எனின்:— சொல்லில்வழி உய்த்துணர்வதென்று மறுக்க. (கசு)

கஙச. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே.

இ - ள்: ஆனீற்றுப் பண்புகொள் பெயரும் அவ்வீற்றுத் தொழிற் பெயர்போல ஆயாய் விளியேற்கும் எ - று.

எ - டு: கரியான், கரியாய்; செய்யான், செய்யாய் என வரும். (கஎ)

கஙரு. அளபெடைப் பெயரே அளபெடை யியல.

இ - ள்: ஆனீற்றளபெடைப்பெயர் இகரவீற்றளபெடைப்பெயரே போல மூன்று மாத்திரையினீண்டு இயல்பாய் விளியேற்கும் எ - று.

எ - டு: உழாஅஅன், கிழாஅஅன் என வரும்.

அளபெடை மூன்று மாத்திரையின் நீண்டிசைத்தலாகிய விகார முடைமையான் 'ஆனென் இறுதி யியற்கை யாகும்' (சொல் - கஙஉ) என்புழி அடங்காமை யறிக. (கஅ)

கஙசு. முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே.

இ - ள்: னகாரவீற்று முறைப்பெயர் ஏகாரம் பெற்று விளியேற்கும் எ-று.

எ - டு: மகன், மகனே; மருமகன், மருமகனே என வரும். (கசு)

கஙஎ. தானென் பெயரும் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி யனைத்தும் விளிகோ ளிலவே.

இ - ள்: தானென்னும் பெயரும், அவன் இவன் உவனென்னும் சுட்டுமுதற்பெயரும், யானென்னும் பெயரும், யாவனென்னும் வினாப் பெயருமாகிய அவ்வனைத்தும், னகரவீறேயாயினும், விளிகொள்ளா எ - று. (உ0)

கூஅ. ஆரும் அருவும் ஈரொடு சிவணும்.

நிறுத்த முறையானே ரகாரவீறு விளியேற்குமாறுணர்த்துகின்றார்.

இ-ள்: ரகாரவீற்றுள் ஆர், அர் என நின்ற இரண்டும் ஈராய் விளியேற்கும் எ-று.

எ-டு: பார்ப்பார், பார்ப்பீர்; கூத்தர், கூத்தீர் என வரும். (உக)

கூகூ. தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே.

இ-ள்: மேற்கூறிய இரண்டீற்றுத் தொழிற் பெயர்க்கும் ஈரோடு ஏகாரம் வருதலுங் குற்றமன்று எ-று.

எ-டு: வந்தார், வந்திரே; சென்றார், சென்றீரே என வரும்.

அர் ஈற்றுத் தொழிற்பெயர் வந்தவழிக் கண்டுகொள்க. 'ஏகாரம் வருதலும் வழுக்கின்' றென்றதனான், ஏகாரம் பெறாது ஈரொடு சிவணலே பெரும்பான்மை யென்பதாம். (உஉ)

கசo. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே.

இ-ள்: அவ்விரண்டீற்றுப் பண்புகொள் பெயரும், அவ்வீற்றுத் தொழிற்பெயர்போல, ஈரோடு சிவணியும், சிறுபான்மை ஈரோடேகாரம் பெற்றும் விளியேற்கும் எ-று.

எ-டு: கரியார், கரியீர், இளையர், இளையீர் எனவும்; கரியீரே, இளையீரே எனவும் வரும். (உ௩)

கசக. அளபெடைப் பெயரே அளபெடை யியல.

இ-ள்: ரகாரவீற்றளபெடைப் பெயர், முற்கூறிய அளபெடைப் பெயரேபோல, மூன்று மாத்திரையின் மிக்கியல்பாய் விளியேற்கும் எ-று.

எ-டு: சிறுஅஅர் (புறம்-உகூக), மகாஅஅர் என வரும். (உச)

கசஉ. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன.

இ-ள்: அவர், இவர், உவர் என வரும் ரகாரவீற்றுச்சுட்டு முதற்பெயர், னகாரவீற்றுச் சுட்டுமுதற்பெயரே போல விளிகொள்ளா எ-று. (உரு)

கச௩. நும்மின் திரிபெயர் வினவின் பெயரென்(று)
அம்முறை யிரண்டும் அவற்றியல் பியலும்.

இ-ள்: நும்மின்திரிபாகிய நீயிரும் வினவின் பெயராகிய யாவரும் இரண்டும், மேற்கூறிய சுட்டுப் பெயரேபோல, விளியேலா எ-று.

நீயிரென்பதனை நும்மெனத் திரியாது நும்மென்பதனை நீயிரெனத் திரிப்பினும் இழுக்காதென்னுங்கருத்தான், எழுத்தோத்தினுள் (௩உரு) நும்மென நிறுத்தித் திரித்தாராகலான், அதுபற்றி நீயிரென்பதனை 'நும்மின் திரிபெய'ரென்றார். (உகூ)

கசச. எஞ்சிய விரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும்.

நிறுத்த முறையானே லகார ளகாரவீற்றுப்பெயர் விளியேற்குமாறுணர்த்திய எடுத்துக்கொண்டார்.

இ - ள்: மிக்கதன்கண் நிகழும் வினைச்சொல்லை நோக்கித் திரிபின்றிப் பயக்கும் அம்மிக்கதனது பண்பைக் குறித்துவரும் வினைமுதற்சொல், சுட்டிச் சொல்லப்படுவதோர் வினைமுதலில்லாதவிடத்து, நிகழ்காலத்தான் யாப்புறுத்த பொருளை யுடைத்தாம் எ - று.

முயற்சியும் தெய்வமுமாகிய காரணங்களுட் டெய்வஞ்[1] சிறந்தமையான், அதனை 'மிக்கது' என்றார். தெய்வமாய இருவினையாகிய மிக்கதன்கண் வினைச்சொல்லாவன, தவஞ்செய்தான், தாயைக் கொன்றான் என்னுந்தொடக்கத்தன. அப்பண்பு குறித்த வினைமுதற்கிளவியாவன, சுவர்க்கம் புகும், நிரயம் புகும் என்பன.

எ - டு: யாவன் றவஞ்செய்தான் அவன் சுவர்க்கம் புகும்; யாவன் றாயைக் கொன்றான் அவனிரயம் புகும் எனவும்; ஒருவன் றவஞ்செயிற் சுவர்க்கம் புகும், தாயைக் கொல்லி னிரயம் புகும் எனவும் மிக்கதன் வினைச்சொ னோக்கி அம்மிக்கதன் றிரிபில் பண்பு குறித்த வினைமுதற்கிளவி நிகழ்காலத்தான் வந்தவாறு கண்டு கொள்க.

'அப்பண்பு குறித்த'வென்பதற்கு, மிக்கதாகிய இருவினைப்பயனுறுதல் அவ்வினைமுதற் கியல்பென்பது குறித்தவென்று உரைப்பினுமமையும்.

பொதுவகையயாகக் கூறாது ஒருவற்சுட்டியவழி, அவன் றவஞ்செய்து சுவர்க்கம் புக்கான், புகுவன் என ஏனைக்காலத்தாற் சொல்லப்படுதலின், அவ்வாறு ஒருவற்சுட்டுதலை நீக்குதற்கு, 'வினைமுதற்கிளவியாயினும் செய்வ தில்வழி' யென்றார். செய்வதென்றது செய்கையை [2]யென்பாரு முளர்.

வினைச்சொல்லென்றாரேனும், தவஞ்செய்தான் சுவர்க்கம் புகும்; தாயைக் கொன்றா னிரயம் புகும் என வினைப்பெயராய் வருதலுங் கொள்க.

தவஞ்செய்யிற் சுவர்க்கம் புகுவன் என எதிர்காலத்தாற் சொல்லப்படுவதனை நிகழ்காலத்தாற் சொல்லுதல் வழுவாயினும் அமைகவென வழுவமைத்தவாறு.

அஃதேல், 'இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை' (சொல்-உசடு) என்புழி இது தெளிவாயடங்குமெனின்:— அற்றன்று; இயற்கையுந் தெளிவும் சிறந்த காரணமாகிய தெய்வத்தானாக பிறிதொன்றானாக திரிதலுடைய, இது திரிபின்றாகலானும், இறந்தகாலத்தாற் சொல்லப்படாமையானும், ஆண்டடங்காதென்பது. இதனது திரிபின்மையும் அவற்றது திரிபுடைமையும் விளக்குதற்கன்றே, ஆசிரியர் 'மிக்கதன் மருங்கின்' என்றும், 'இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை' என்றும் ஓதுவாராயிற்றென்பது. (சடு)

உசகூ. இதுசெயல் வேண்டும் என்னுங் கிளவி
இருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும்.

இ - ள்: இது செயல்வேண்டு மென்பதுபட வருஞ்சொல், தன்பாலானும் பிறன்பாலானுமென ஈரிடத்தும் நிலைபெறும் பொருண்மையை யுடைத்தாம் எ - று.

---

1. 'சிறந்தமையான், அதற்குக் காரணமாகிய தவஞ்செய்தல் தாயைக் கோறல் முதலாகிய தொழிலை 'மிக்கது' என்றார்', என்பது முன்னைய பதிப்புக்களில் உள்ள பாடம்.

2. என்பார் - இளம்.

தன்னென்றது செயலது வினைமுதலை.

எ - டு: ஓதல்வேண்டும் என்றவழி வேண்டுமென்பது ஓதற்கு வினை முதலாயினாற்கும் அவனோதலை விரும்புந் தந்தைக்கும் ஏற்றவாறு கண்டு கொள்க.

இதனான் ஒருசார்வினைச்சொற் பொருள்படும் வேறுபா டுணர்த்தினார்; உணர்த்தாக்காற் றெற்றென விளங்காமையி னென்பது. (௪௬)

உ௪௪. வன்புற வருஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற் குரிமையும் உடைத்தே.

இ - ள்: துணிந்து திட்பமெய்துதற்கு வரும் வினாவையுடைய வினைச்சொல் வினைநிகழ்வுணர்த்தாது எதிர்மறுத்துணர்த்துதற்கு உரித்தாதலுமுடைத்து எ - று.

வினாவாவன: ஆ, ஏ, ஓ என்பன.

எ - டு: கதத்தானாகக் களியானாக ஒருவன் தெருளாது ஒருவனை வைதான்; அவன்றெருண்டக்கால், வையப்பட்டான் நீ யென்னை வைதாய் என்றவழித் தான் வைதலை யுணராமையான் வைதேனே யென்னும்; ஆண்டவ்வினாவொடு வந்த வினைச்சொல் வைதிலே னென்னும் எதிர்மறைப் பொருள்பட வந்தவாறு கண்டுகொள்க.

வினாவொடு வந்தவழி எதிர்மறைப் பொருள்படுமா றென்னை யெனின்:— சொல்லுவான் குறிப்புவகையான் எதிர்மறைப்பொருளுணர்த்திற்றென்க. எதிர்மறைப்பொருளுணர்த்திற்று ஆண்டேகாரமாகலின், வினைச்சொல் எதிர்மறுத்துணர்த்துதற் குரிமையு முடைத்தென்றல் நிரம்பாதெனின்:— எதிர்மறையாயின பயன்றருவது 'வினாவுடை வினைச்சொ'லென்றாராகலின், அஃதெதிர்மறுத்தல் யாண்டையதென மறுக்க.

வினைநிகழ் வுணர்த்தற்பாலது வினையது நிகழாமை யுணர்த்துதல் வழுவாயினும் அமைகவென வினைச்சொற்பற்றி மரபுவழு வமைத்த வாறு. (௪௭)

உ௪ரு. வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும்
இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை.

இ - ள்: எதிர்காலத்துக்குரிய வினைச்சொற்பொருண்மை, இயற்கையாதலும் தெளியப்படுதலும் சொல்லுமிடத்து, இறந்தகாலச் சொல்லானும் நிகழ்காலச்சொல்லானும் விளங்கத்தோன்றும் எ-று.

இயற்கையென்பது பெற்றி முதலாயினவற்றா லுணரப்படுவது. தெளிவு என்பது நூற்றெளிவான் வருவது.

எ - டு: ஒருகாட்டின்கட் போவார் கூறைகோட்படுதல் ஒருதலையாகக் கண்டு இஃதியற்கையென்று துணிந்தான், கூறைகோட் படாமுன்னும், இக்காட்டுட்போகிற் கூறைகோட்பட்டான், கூறை கோட்படும் என்னும். எறும்பு முட்டை கொண்டு தெற்றி யேறின் மழை பெய்தல் நூலாற்றெளிந்தான், அவை முட்டைகொண்டு தெற்றி யேறியவழி, மழை பெய்யா முன்னும், மழை பெய்தது,

மழை பெய்யும் என்னும். ஆண்டு எதிர்காலத்திற்குரிய பொருள் இறந்தகாலத்தானும் நிகழ்காலத்தானும் தோன்றியவாறு கண்டு கொள்க.

இது காலவழு வமைத்தவாறு. (சஅ)

உசகூ. [1]செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே.

இ - ள்: செயப்படுபொருளைச்செய்த வினைமுதல்போலத் தொழிற் படச் சொல்லுதலும் வழக்கின்கண் இயலு மரபு எ - று.

'வழக்கியன்மர'பெனவே, இலக்கண மன்றென்றவாறும்.

எ - டு: திண்ணை மெழுகிற்று, கலங் கழீஇயிற்று எனவரும்.

திண்ணை மெழுகப்பட்டது, கலங் கழுவப்பட்டது என்றுமன் ஆகற் பாலது, அவ்வாய்பாடன்றி வினைமுதல் வாய்பாட்டான் வருதலும் வழக்கினுளுண்மையான் அமைகவென வினைச்சொற்பற்றி மரபுவழு வமைத்தவாறு.

செயப்படுபொருளை வினைமுதல் வாய்பாட்டாற் கிளத்தலே யன்றி, எளிதினடப்படுதனேக்கி அரிசிதானேயட்டது எனச் செயப்படு பொருளை வினைமுதலின் றொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மர பென்றற்குத், 'தொழிற்படக் கிளத்தலும்' என்ருர். இதைக் கருமகருத்த [2]னென்ப. (சகூ)

உசஎ. இறப்பே எதிர்வே ஆயிரு காலமுஞ்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி.

இ - ள்: இறப்பும் எதிர்வுமாகிய இரண்டுகாலமும் மயங்கு மொழிப் பொருளாய் விளங்கத் தோன்றும் எ - று.

எ - டு: இவர் பண்டு இப்பொழிலகத்து விளையாடுவர்; நாளை அவன் வாளொடு வெகுண்டு வந்தால் பின், நீ யென்செய்குவை என வரும்.

அவ்விரண்டுகாலமும் மயங்குமொழிப் பொருளாய்த் தோன்று மெனவே, அவற்றை யுணர்த்துஞ்சொன் மயங்குமென்றவாறும். அவை பெயரும் வினையுமாய் மயங்குதலின், மயங்கு வினைச்சொற் கிளவி யென்னது பொதுப்பட 'மயங்குமொழிக் கிளவி' என்ருர். தோன்றுமென்பது பெயரெச்சமெனினு மிழுக்காது.

பண்டு விளையாடினுர் என்றும், நாளை வருவன் என்றுமன்அன்றே கூறற்பாலது; அவ்வாறன்றித் தம்முண் மயங்கக் கூறினு மமைக வெனக் காலவழு வமைத்தவாறு. (௫௦)

உசஅ. ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்.

இ - ள்: இறப்பும் எதிர்வுமேயன்றி நிகழ்காலமும் அவற்றெடு மயங்கும் எ - று.

எ - டு: இவள் பண்டு இப்பொழிலகத்து விளையாடும் எனவும், நாளை வரும் எனவும் வரும்.

---

1. நன்னூலில் உள்ள பொதுவியல் சகூ-ஆம் நூற்பா இதனைத் தழுவியதாகும்.
2. என்பார்—இளம். கல். ஆகியோர்.

'சிறப்பத்தோன்றும்' (சொல் - உ௪௭) எனவும், 'மயங்குதல்வரை யார்' (சொல் - உ௪அ) எனவும் கூறினர்; இறப்பும் எதிர்வும் மயங்குதல் பயின்று வருதலானும், அத்துணை நிகழ்கால மயக்கம் பயின்று வாராமையானு மென்க.

மூன்றுகாலமுந் தம்முண் மயங்குமென்றாரேனும், ஏற்புழியல்லது மயங்காமை கொள்க. ஏற்புழிக் கொள்ளவே, வந்தானை வருமென்றலும், வருவானை வந்தானென்றலுமென இவை முதலாயினவெல்லாம் வழுவென்பதாம். பிறவுமன்ன. (௫௧)

விணையியல் முற்றிற்று.

## எ. இடையியல்

உ௫௧. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே.

420

நிறுத்தமுறையானே இடைச்சொல்லுணர்த்தியவெடுத்துக்கொண் டார். அதனன், இவ்வோத்து இடையியலென்னும் பெயர்த்தாயிற்று. மொழிக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பான்மையும் இடை வருதலின் இடைச்சொல்லாயிற்று.

இ - ள்: இடைச்சொல் என்று சொல்லப்படுவன பெயரொடும் வினையொடும் வழக்குப்பெற்றியலும்; தாமாக நடக்குமியல்பில எ - று.

'இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு, மவற்றுவழி மருங் கிற் றோன்றும்' (சொல் - க௫௯) என்றதனன் இடைச்சொல் பெயரும் வினையுஞ் சார்ந்து வருதல் பெறப்பட்டமையால், 'பெயரொடும் வினை யொடும் நடைபெற்றியலுந் தமக்கியல்பில' வென்றது, ஈண்டுப்பெயரும் வினையு முணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப் படுப்பதல்லது தமக்கெனப் பொருளுடையவல்ல வென்றவாறும்.

எ - டு: 'அதுகொ றோழி காம நோயே' (குறுந் - ௫) எனவும், வருகதில் லம்மவெஞ் சேரி சேர' (அகம் - உ௭௬) எனவும், பெயரும் வினையுஞ் சார்ந்து அப்பொருளை வெளிப்படுத்தவாறு கண்டுகொள்க.

சார்ந்து வருதல் உரிச்சொற்குமொத்தலின், தமக்கெனப் பொரு ளின்மை இடைச்சொற்குச் சிறப்பிலக்கணமாம்.

'தமக்கியல்பிலவே' யென்றது, சார்ந்தல்லது வாராவென வலியு றுத்தவாறு. 'பெயரொடும் வினையொடு நடைபெற்றியலுந் தமக்கியல் பில' வெனப் பொதுப்படக் கூறியவதனல், சாரப்படுஞ் சொல்லின் வேறாய் வருதலேயன்றி, உண்டனன், உண்டான் எனவும்; என்மனர், என்றிசினோர் எனவும்; அருங்குரைத்து (புறம் - ௫) எனவும் அவற்றிற் குறுப்பாய் வருதலுங் கொள்க.

இனி ஒருரை :— 'இடைச்சொற்கிளவியும் உரிச்சொற் கிளவியும் அவற்றுவழி மருங்கிற் றோன்றும்' என்பதற்குச், சார்ந்து வருதலான் இடைச்சொல்லும் உரிச்சொல்லுஞ் சிறப்பில; இவை யுட்படச் சொன்னுன்காமென்பது கருத்தாகலின், இடைச்சொல் பெயரும் வினையுஞ் சார்ந்து வருமென்னும் வேறுபாடு அதனுற் பெறப்படாது. என்னை? இடைச்சொல் பெயர்சார்ந்தும் உரிச்சொல் வினைசார்ந்தும் வரினும் அவற்றது சிறப்பின்மையுஞ் சொன்னுன்காதலும் உணர்த்துதல் சிதையாதாகலான். அதனுன் இடைச்சொல் பெயரும் வினையுஞ் சார்ந்து வருமென்பது இச்சூத்திரத்தாற் கூறல் வேண்டுமென்ப. அவ்வுரை யுரைப்பார் 'பெயரினும் வினையினு மெய்தடு மாறி' (சொல்-உகள.) என்பதற்கும் பெயரும் வினையுஞ் சார்ந்தென்று [1]பொருளுரைப்ப. (க)

உருடு. அவைதாம்
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயன் மருங்கிற் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி யாகி வருநவும்
இசைநிறைக் கிளவி யாகி வருநவும்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்று
அப்பண் பினவே நுவலுங் காலை.

இ - ள்: மேற்சொல்லப்பட்ட இடைச்சொற்கள்தாம், இரண்டு சொற்புணருமிடத்து அப்பொருணிலைக் குதவுவனவும், வினைச்சொல்லை முடிக்குமிடத்துக் காலப்பொருளவாய் வருவனவும், செயப்படுபொருண் முதலாகிய வேற்றுமைப் பொருட்கண் உருபென்னுங் குறியவாய் வருவனவும், பொருளுடையவன்றிச் சார்த்திச் சொல்லப்படுந் துணையாய் வருவனவும், வேறுபொருளுணர்த்தாது இசைநிறைத்தலே பொருளாக வருவனவும், தத்தங் குறிப்பாற் பொருளுணர்த்துவனவும், ஒப்புமை தோன்றுதவழி அவ்வொப்புமைப்பொருள் பயப்பனவுமெனக் கூறப்பட்ட ஏழியல்பையுடைய சொல்லுமிடத்து எ - று.

புணரியனிலை-புணரியலது நிலை. ஆண்டுப் 'பொருணிலைக்குதவுத' லாவது, எல்லாவற்றையும் என்புழி வற்றுச் சாரியை நிலைமொழிப் பொருள் அஃறிணைப் பொருளென்பதுபட வருதலும், எல்லா நம்மையும் என்புழி நம்முச்சாரியை அப்பொருள் தன்மைப்பன்மை யென்பதுபட வருதலுமாம். அல்லனவும் தாஞ்சார்ந்து வரும் மொழிப் பொருட்கு உபகாரமுடையவாய் வருமாறோர்ந்து கொள்ளப்படும். அல்லாக்கால், சாரியை மொழியாகா வென்பது.

வினைச்சொல் ஒரு சொல்லாயினும் முதனிலையும் இறுதிநிலையும் இடைச்சொல்லுமாகப் பிரித்துச் செய்கை செய்து காட்டப்படுதலின், 'வினைசெயன் மருங்கின்' என்றார். அம்முடிபுணர்த்தாமைக்குக் காரணம் 'புணரிய னிலையிடை யுணரத் தோன்று' (எழுத்-சஅ உ) என்புழிச் சொல்லப்பட்டது. அவற்றுள் ஒரு சாரன பாலுணர்த்தாமையானும், எல்லாங் காலமுணர்த்துதலானும், 'காலமொடு வருநவும்' என்றார்.

1. இவ்வாறு பொருளுரைப்பார் யாரெனத் தெரிந்திலது.

வேற்றுமைப் பொருளவாய் வருவன பிறசொல்லுமுள வாகலின், அவற்றை நீக்குதற்கு 'உருபாகுநவு' மென்றார். பிறசொல்லாவன, 'கண்ணகன் ஞாலம்', 'ஊர்க்கா னிவந்த பொதும்பர்' (குறிஞ்சிக்கலி - உ௦) என ஏழாம்வேற்றுமைப் பொருட்கண் வருங் கண் கால் முதலாயினவும், 'அனையை யாகன் மாறே' (புறம்-௪), 'சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே', 'இயல்புளிக் கோலோச்சு மன்னவன்' (குறள் - ருசரு) என மூன்றும் வேற்றுமைப் பொருட்கண் வரும் மாறு உளி என்பனவும், அன்ன பிறவுமாம்.

அஃதேல், வேற்றுமையுருபு மென்றேதுவார்; ஓதவே இவை நீங்குமெனின்:—அஃதொக்கும்; அவை தம்மையுந் தழிஇக்கோடற்கு 'வேற்றுமைப் பொருள் வயின்' என்றார், அவை வருங்கால் நிலைமொழி யுருபிற்கேற்ற செய்கை எற்புழிப் பெறுதலுடைமையின், 'உருபாகுநவும்' என்றார். இஃது இருபொருளுணர்த்தலான் இருதொடராகக் கொள்க.

அசைத்தல்—சார்த்துதல். பொருளுணர்த்தாது பெயரொடும் வினையொடுஞ் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்றலின், 'அசைநிலை' யாயிற்று. அவை அந்தின் முதலாயின. 'புகழ்ந்திகு மல்லரோ பெரிதே' 'உரைத்திசினோரே' எனச் சார்ந்த மொழியை வேறுபடுத்து நிற்றலின், அசைநிலைச் சொல்லாயின [1]வென்பாரு முளர்.

செய்யுட்கண் இசைநிறைத்து நிற்றலின், 'இசைநிறை'யாயின.

குறிப்புச் சொல்லுவான் கண்ணதாயினும் அவன் குறித்த பொருளைத் தாங்குறித்து நிற்றலின், 'தத்தங்குறிப்பி'னென்றார். சொல்லுவான் குறித்த பொருளைத் தாம் விளக்குமெனவே, 'கூறியதோர் வாள்' என மன்னுனன்றி ஓசை வேறுபட்டான் ஒருகாற் றிட்பமின்றென்னுந் தொடக்கத்து ஒழியிசைப் பொருள் தோன்றலும் பெறப்படும். பொருட்கும் பொருளைப் புலனாகவுடைய உணர்விற்கும் ஒற்றுமை கருதிப் பொருளுணர்வைப் 'பொரு'ளென்றார். 'மிகுதி செய்யும் பொருள' (சொல் - உகூகூ) என்பது முதலாயினவற்றிற்கும் ஈதொக்கும்.

ஒக்குமென்னுஞ் சொல்லன்றே ஒப்புமை யுணர்த்துவது; அச்சொல் ஆண்டின்மையான் ஒப்புமை தோன்றுமையான், 'ஒப்பில் வழியா' லென்றார்; உவமையொடு பொருட்கு ஒப்பில்லையென்றாரல்லரென்பது. ஒக்குமென்னுஞ் சொல்லை ஒப்பென்றார் [2]என்பாருமுளர். 'ஒப்பில் வழியாற் பொருள் செய்குந'வாவன, அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப என்பன முதலாகப் பொருளதிகாரத்துக் (பொருள் - ௬௪௯) கூறப்பட்ட முப்பத்தாறனுள் ஒக்குமென்ப தொழிய ஏனையவாம்.

சாரியையும், வேற்றுமையுருபும், உவமஉருபும், குறிப்பாற் பொருளுணர்த்துமாயினும், புணர்ச்சிக்கண் உபகாரப்படுதலும் வேற்றுமைத் தொகைக்கும் உவமத் தொகைக்கும் அவ்வுருபுபற்றி இலக்கணங் கூறுதலும் முதலாகிய பயனோக்கி, இவற்றை வேறு கூறினார்.

இடைச்சொ லேழனுள்ளும் முதனின்ற மூன்றும் மேலே யுணர்த்தப்பட்டமையான் முன் வைத்தார். ஒப்பில்வழியாற் பொருள் செய்குந முன்னருணர்த்தப்படுதலின் இறுதிக்கண் வைத்தார். ஒழிந்த மூன்றும் இவ்வோத்தின்கண் உணர்த்தப்படுதலின் இடை வைத்தார். (உ).

1, 2. என்பார்—யாரெனத் தெரிந்திலது.

உருக. அவைதாம்
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலுந்
தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்
அன்னவை யெல்லாம் உரிய வென்ப.

இ - ள்: மேற்சொல்லப்பட்ட இடைச்சொல், இடைவருதலே யன்றித், தம்மாற் சாரப்படுஞ்சொற்கு முன்னும் பின்னும் வருதலும், தம்மீறு வேறுபட்டு வருதலும், பிறிதோரிடைச்சொல் ஓரிடைச்சொன் முன் வருதலுமாகிய அத்தன்மையவெல்லாம் உரிய எ - று.

எ - டு: 'அதுமன்' (புறம் - கசஎ) எனவும், 'கேண்மியா' (புறம் - கசஅ) எனவும், சாரப்படுமொழியை முன்னடுத்து வந்தன. 'கொன்னூர்' (குறுந் - கஙஅ) எனவும், 'ஓஒவினிதே' (குறள் - ககஎசு) எனவும், பின்னடுத்து வந்தன. 'உடனுயிர் போகுக தில்ல' (குறுந் - ருஎ) என ஈறு திரிந்து வந்தது. 'வருகதில் லம்ம வெஞ்சேரி சேர' (அகம் - உஎசு) என்பது பிறிதவணின்றது.

'அவைதா'மெனப் பொதுவகையான் ஓதினரேனும், இவ்விலக்கணம் இவ்வோத்தின்கண் உணர்த்தப்படும் அசைநிலை முதலாகிய மூன்றற்குமெனக் கொள்க.

'அன்னவையெல்லா' மென்றதனான், 'மன்னைச் சொல்' (சொல் - உருஉ) 'கொன்னைச்சொல்' (சொல் - உருச) எனத் தம்மை யுணர நின்றவழி ஈறு திரிதலும், 'னகாரை முன்னர்' (எழுத் - ருஉ) என எழுத்துச்சாரியை ஈறு திரிதலுங் கொள்க. (ங)

உருஉ. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்(று)
அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

இவ்வோத்தின்கண் ணுணர்த்தப்படும் மூவகை யிடைச்சொல்லுள், தத்தங் குறிப்பாற் பொருள் செய்குந பொருளுணர்த்துதற் சிறப்புப் பரப்புடைமையான் அதனை முன்னுணர்த்துகின்றார்.

இ - ள்: கழிவு குறித்து நிற்பதும், ஆக்கங் குறித்து நிற்பதும், ஒழியிசைப் பொருண்மை குறித்து நிற்பதுமென மன்னைச்சொல் மூன்றாம் எ - று.

எ - டு: 'சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே' (புறம் - உகரு) என்புழி மன்னைச்சொல், இனி அது கழிந்ததென்னும் பொருள் குறித்து நின்றது. 'பண்டு காடும னின்று கயல் பிறழும் வயலாயிற்று' என்புழி அஃதாக்கம் குறித்து நின்றது. 'கூரியதோர் வாண்மன்' என்புழித் திட்பமின்றென்றானும் இலக்கணமின் றென்றானும் எச்சமாய் ஒழிந்த சொற்பொருண்மை நோக்கி நின்றது. (ச)

உருங. விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்(று)
அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

இ - ள்: விழைவு குறித்து நிற்பதும், காலங் குறித்து நிற்பதும், ஆண்டொழிந்து நின்ற சொற்பொருளை நோக்கி நிற்பதுமெனத் தில்லைச் சொல் மூன்றாம் எ - று.

எ - டு: 'வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப், பெறுகதில் லம்ம யானே' (குறுந் - ௧௪) என அவளைப் பெறுதற்கு ஞுளதாகிய விழைவின்கண் வந்தது. 'பெற்றுங் கறிகதில் லம்மவிவ் வூரே' (குறுந் - ௧௪) எனப் பெற்றகாலத் தறிகவெனக் காலங்குறித்து நின்றது. 'வருகதில் லம்மவெஞ் சேரி சேர' (அகம் - ௨௭௬) என வந்தக்கால் இன்னது செய்வலென்னும் ஒழியிசைப்பொரு ளுணர்க்கிற்று. (௫)

௨௫௪. அச்சம் பயமிலி காலம் பெருமையென்(று)
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.

இ - ள்: அச்சப்பொருளதும், பயமின்மைப் பொருளதும், காலப் பொருளதும், பெருமைப்பொருளதுமெனக் கொன்னைச்சொல் நான்காம் எ - று.

எ - டு: 'கொன்முனை யிரவூர் போலச், சிலவா குகநீ துஞ்சு நாளே' (குறுந் - ௯௧) என்புழி அஞ்சி வாழுமூர் எனவும், 'கொன்னே கழிந்தன் றிளமை' (நாலடி - ௫௫) என்புழிப் பயமின்றிக் கழிந்தது எனவும், 'கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனே' என்புழிக் காதலர் நீங்கிய காலமறிந்து வந்த வாடை எனவும், 'கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே' (குறுந் - ௧௩௮) என்புழிப் பேரூர் துஞ்சினும் எனவும், கொன்னைச்சொல் நான்கு பொருளும்பட வந்தவாறு கண்டுகொள்க.

௨௫௫. எச்சஞ் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை யாக்கமென்(று)
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

இ - ள்: எச்சங்குறிப்பது முதலாக ஆக்கங் குறிப்பதீறாக உம்மைச்சொல் எட்டாம் எ - று.

எ - டு: சாத்தனும் வந்தான் என்னுமும்மை, கொற்றனும் வந்தானென்னும் எச்சங் குறித்து நிற்றலின், எச்சவும்மை. கொற்றனும் வந்தான் என்பதூஉம், இறந்த சாத்தன் வரவாகிய எச்சங் குறித்து நிற்றலின், எச்சவும்மை.

'குறவரு மருளுங் குன்றத்துப் படினே' (மலை - ௨௭௫) என்பது குன்றத்து மயங்கா தியங்குதற்கண் குறவர் சிறந்தமையாற் சிறப்பும்மை.

'ஒன்று இரப்பான்போ லிளிவந்துஞ் சொல்லுமுலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கட் டோன்று மடக்கமு முடையன்
இல்லோர் புன்க ணீகையிற் றணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையு முடையன்' (கலி - ௪௭)
என்புழி இன்னனென்று துணியாமைக்கண் வருதலின் ஐயவும்மை.

சாத்தன் வருதற்கு முரியன் என்பது, வாராமைக்குமுரியனென்னும் எதிர்மறையை ஒழிபாகவுடைத்தாய் நிற்றலின், எதிர்மறையும்மை.

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் என எஞ்சாப் பொருட்டாகலான் முற்றும்மை.

'நிலனு நீருந் தீயும் வளியு மாகாயமு மெனப் பூதமைந்து' என்புழி எண்ணுதற்கண் வருதலின் எண்ணும்மை.

இருநில மடிதோய்தலிற் றிருமகளுமல்லள் அரமகளுமல்லள் இவள் யாராகும்? என்றவழித் தெரிதற்பொருட்கண் வருதலின் தெரிநிலையும்மை. திருமகளோ அரமகளோ என்னுது அவரை நீக்குதலின், ஐயவும்மையின் வேறுத லறிக.

ஆக்கவும்மை வந்தவழிக் கண்டுகொள்க. உரையாசிரியர் நெடியனும் வலியனுமாயினுன் என்புழி உம்மை ஆக்கங்குறித்து நிற்றலின் ஆக்கவும்மை யென்ருர். 'செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே' (சொல் - கரு) என்னுமும்மை, வழுவையிலக்கண மாக்கிக்கோடல் குறித்து நின்றமையின் ஆக்கவும்மை [1]என்பாருமுளர்.[2] (எ)

உருசுா. பிரிநிலை வினவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே.

இ - ள்: பிரிநிலைப்பொருட்டாவது முதலாக ஓகாரம் அறுவகைப்படும் எ - று.

எ - டு: 'யானே தேறே னவர்பொய் வழங்கலரே' (குறுந் - உக) என்பது தேறுவார் பிறரிற்பிரித்தலிற் பிரிநிலை யெச்சமாயிற்று. சாத்தனுண்டானே என்பது வினவோகாரம். யானே கொள்வேன் என்பது கொள்ளேனென்னு மெதிர்மறை குறித்து நிற்றலின், எதிர்மறையோகாரம். கொளலோ கொண்டான் என்பது, கொண்டுய்யப் போயினு னல்லனென்பது முதலாய ஒழியிசை நோக்கி நிற்றலின் ஒழியிசை யோகாரம். திருமகளோவல்லள் அரமகளோவல்லள் இவள் யார்? என்றவழித் தெரிதற்கண் வருதலின் தெரிநிலையோகாரம். ஓஒபெரியன் என்பது பெருமைமிகுதி யுணர்த்தலிற் சிறப்போகாரம்.

உருஎ. தேற்றம் வினவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை யிவ்வைந் தேகா ரம்மே.

இ - ள்: தேற்றேகார முதலாக ஏகாரமைந்து எ - று.

எ - டு: 'உண்டேஎ மறுமை' எனத் தெளிவின்கண்வருதலின் தேற்றேகாரம். நீயே கொண்டாய் என வினப் பொருளுணர்த்தலின் வினவேகாரம். அவருளிவனே கள்வன் எனப் பிரித்தலிற் பிரிநிலையேகாரம். நிலனே நீரே தீயே வளியே என எண்ணுதற்கண் வருதலின் எண்ணேகாரம். 'கடல்போற் ருேன்றல காடிறந் தோரே' (அகம்-க) என்பது செய்யுளிறுதிக்கண் வருதலின் ஈற்றசையேகாரம். 'வாடா வள்ளியங் காடிறந் தோரே' (குறுந்-உகசு) எனச் செய்யுளிடையும் வருதலின் ஈற்றசையென்பது மிகுதி நோக்கிச் சென்ற குறி.

இஃதசைநிலையாயினும் ஏகார வேறுபாடாகலின் ஈண்டுக் கூறினர்.

உருஅ. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ(டு) அவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனவென் கிளவி.

1. என்பார்—யாரெனத் தெரிந்திலது.

2. இதனையடுத்து, 'பாலும் ஆயிற்று என்ருல், அதுவே மருந்துமாயிற்று எனவருதலாம். (ஆக்கம்)' என்ற வாக்கியம் கழகப் பதிப்பில் உள்ள பாடம்.

இ - ள்: வினை முதலாகிய ஆறு பொருண்மையுங் குறித்து வரும் எனவென்னு மிடைச்சொல் எ - று.

எ - டு: 'மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்' (புறம் - கசங) என வினைப் பொருண்மையும், 'துண்ணெனத் துடித்தது மனம்' எனக் குறிப்புப் பொருண்மையும், ஒல்லென வொலித்தது என இசைப் பொருண்மையும், வெள்ளென விளர்த்தது எனப் பண்புப்பொருண்மையும், நிலனென நீரெனத் தீயென வளியென என எண்ணுப்பொருண்மையும், 'அழுக்கா றெனவொரு பாவி' (குறள் - கசஅ) எனப் பெயர்ப் பொருண்மையும் குறித்து, எனவென்னுஞ் சொல் வந்தவாறு கண்டு கொள்க. (கo)

உ௬௯. என்றென் கிளவியும் அதனோ ரற்றே.

இ - ள்: என்றென்னு மிடைச்சொல்லும் எனவென்பது போல அவ் ஆறுபொருளுங் குறித்து வரும் எ - று.

எ - டு: 'நரைவரு மென்றெண்ணி' (நாலடி - கக) எனவும், 'விண்ணென்று விசைத்தது' எனவும், 'ஒல்லென் றொலிக்கு மொலிபுனலூரற்கு' (ஐந்திணை ஐம்பது - உஅ) எனவும், பச்சென்று பசுத்தது எனவும், நிலனென்று நீரென்று தீயென்று எனவும், பாரி யென்றொருவனுளன் எனவும் வரும். (கக)

உ௭o. விழைவின் தில்லை தன்னிடத் தியலும்.

இ - ள்: 'அம்மூன்றென்ப தில்லைச்சொல்' (சொல் - உ௬௩) என்று சொல்லப்பட்ட மூன்றனுள், விழைவின்கண் வருந் தில்லை தன்மைக்கணல்லது வாராது எ - று.

தன்மைக்கண் வருதல் மேற்காட்டப்பட்டனவற்றுள்ளும் பிறண்டுங் கண்டு கொள்க.

இடம் வரையறுத்தோதாமையின், விழைவின்றில்லை தன்மைக்கண் வருதலும் மேலே பெறப்பட்டதனைப் பின்னுங்கூறினர், ஏனையிடத்து வாராதென்று நியமித்தற்கென்பது. (கஉ)

உ௭க. தெளிவின் ஏயுஞ் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.

இ - ள்: தெளிவின்கண் வரும் ஏகாரமுஞ் சிறப்பின்கண் வரும் ஓகாரமும் அளபான் மிக்க இசையை யுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர் எ - று.

அளபெடையாய் வருதல் மேற்காட்டப்பட்டனவற்றுள்ளும் பிறண்டுங் கண்டுகொள்க. (கங)

உ௭உ. மற்றென் கிளவி வினை மாற்றசைநிலை
அப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.

இ - ள்: மற்றென்னுஞ்சொல் வினைமாற்றும் அசைநிலையுமென இரண்டாம் எ - று.

எ - டு: 'மற்றறிவா நல்வினை யாமிளையம்' (நாலடி-கக) என்றவழி அறஞ்செய்கல் பின்னறிவாமென அக்காலத்து வினைமாற்றுதலான் மற்றென்பது வினைமாற்றின்கண் வந்தது. 'அதுமற் றவலங் கொள்ளாது

நொதுமற் கூறுமும்' (குறுந் - கஉ) என அசைநிலையாய் வந்தது. [1]கட்டுரையிடையும் 'மற்றோ' என அசைநிலையாய் வரும். (கச)

உசுரு. எற்றென் கிளவி இறந்த பொருட்டே.

இ - ள்: எற்றென்னுஞ் சொல் இறந்த பொருண்மைத்து எ - று.

எ - டு: 'எற்றென் னுடம்பி னெழினலம்' என்பது என்னல மிறந்த தென்னும் பொருள்பட நின்றது. 'எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்' என்பதூஉம் இதுபொழுது துணிவில்லாருட் டுணிவில்லாதேன்யான் என்று துணிவு இறந்ததென்பதுபட நின்றது.

உசுச. மற்றைய தென்னுங் கிளவி தானே
　　　சுட்டுநிலை யொழிய இனங்குறித் தன்றே.

இ - ள்: மற்றையதெனப் பெயர்க்கு முதனிலையாய் வரும் மற்றையென்னும் ஐகாரவீற் றிடைச்சொல் சுட்டப்பட்டதனை ஒழித்து, அதனினங்குறித்து நிற்கும் எ - று.

எ - டு: ஆடை கொணர்ந்தவழி அவ்வாடை வேண்டாதான் மற்றையது கொணாவென்னும். அஃது அச்சுட்டிய வாடை யொழித்து அதற்கினமாகிய பிறவாடை குறித்து நின்றவாறு கண்டுகொள்க.

பெரும்பான்மையும் முதனிலையாய் நின்றல்லது அவ்விடைச்சொல் பொருள் விளக்காமையின், 'மற்றையதென்னுங் கிளவி' என்றார். சிறுபான்மை மற்றையாடை எனத் தானேயும் வரும். மற்றையஃது மற்றையவன் என்னுந் தொடக்கத்தனவும் அவ்விடைச்சொன் முதனிலையாய பெயர். (கரு)

உசுரு. மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

இ - ள்: மன்ற வென்னுஞ்சொல், தெளிவுப் பொருண்மையை யுணர்த்தும் எ - று.

எ - டு: 'கடவு ளாயினு மாக, மடவை மன்ற வாழிய முருகே' (நற் - ருச) என வரும். மடவையே யென்றவாறும். (கஎ)

உசுசு. தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே.

எ - டு: 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' (புறம் - எரு) எனத் தஞ்சக் கிளவி அரசுகொடுத்த லெளிதென எண்மைப் பொரு ளுணர்த் தியவாறு கண்டு கொள்க. (கஅ)

உசுஎ. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்(று)
　　　ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப.

இ - ள்: அந்திலென்னுஞ்சொல், ஆங்கென்னும் இடப்பொருளு ணர்த்துவதும் அசைநிலையுமென இரண்டாம் எ - று.

எ - டு: 'வருமே—சேயிழை யந்திற் கொழுநற் காணிய' (குறுந் - உகரு) என்புழி ஆங்கு வருமென்றவாறும். 'அந்திற் கச்சினன் கழலி னன்' (அகம் - எசு) என வாளாதே அசைத்து நின்றது. (கக)

உசுஅ. கொல்லே ஐயம்.

---

1. கட்டுரை - வழக்கு.

எ - டு: குற்றிகொல்லோ மகன்கொல்லோ எனக் கொல் ஐயத்துக் கண் வந்தவாறு. (உ0)

உகூகூ. [1]எல்லே இலக்கம்.

'எல்'லென்பது உரிச்சொல் நீர்மைத்தாயினும், ஆசிரியர் இடைச் சொல்லாக ஓதினமையான், இடைச்சொல்லென்று கோடும்.

எ - டு: 'எல்வளை' (புறம் - உச) என எல்லென்பது இலங்குதற் கண் வந்தவாறு. (உக)

உஎ0. [2]இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே.

இ - ள்: இயற்பெயர் முன்னர் வரும் ஆரென்னு மிடைச்சொற் பலரறிசொல்லான் முடியும் எ - று.

ஈண்டு 'இயற்பெய'ரென்றது, இருதிணைக்கும் அஃறிணை யிருபாற்கு முரிய பெயரை.

எ - டு: பெருஞ் சேந்தனர் வந்தார், முடவனர் வந்தார், முடத் தாமக் கண்ணியார் வந்தார், தந்தையார் வந்தார் எனவும்; நரியார் வந்தார் எனவும் வரும்.

தாம், தான், எல்லாம், நீயிர், நீ என்னும் ஐந்து மொழித்து அல்லா வியற்பெய ரெல்லாவற்று முன்னரும் அஃறிணை யியற்பெய ரெல்லா வற்று முன்னரும் ஆரைக்கிளவி வருதலின், பெரும்பான்மை குறித்து 'இயற்பெயர் முன்னர்' என்றார்.

நம்பியார் வந்தார், நங்கையார் வந்தார் எனச் சிறுபான்மை உயர் திணைப்பெயர் முன்னர் வருதல் ஒன்றென முடித்த லென்பதனற் கொள்க.

ஆரைக்கிளவி கள்ளென்பதுபோல ஒற்றுமைப்பட்டுப் பெயரீறாய் நிற்றலின், ஆரைக்கிளவி பலரறிசொல்லான் முடியுமென்றது, அதனை யீறாகவுடைய பெயர் பலரறி சொல்லான்முடியு மென்றவாறும்.

'பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே' என ஆரைக்கிளவிய தியல் புணர்த்தவே, அஃது உயர்த்தற் பொருட்டாதலும், திணைவழு வும் பால்வழுவும் அமைத்தலும் பெற்றும்.

ஒருமைப் பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆரைக்கிளவி வந்து பலரறிசொல்லான் முடிதலின், 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியின்' (சொல்-உஎ) வேறுதலறிக. (உஉ)

உஎக. அசைநிலைக் கிளவி ஆகுவழி யறிதல்.

இ - ள்: ஆரைக்கிளவி அசைநிலையா மிடமறிக எ - று.

எ - டு: 'பெயரி னாகிய தொகையுமா ருளவே' (சொல்-கூஎ) என வும், 'எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே' (எழுத் - கூக) என வும் வரும்.

---

1. 'எல்லே விளக்கம்' எனப்பாடங் கொள்வர் இளம். 'எல்லே இரக்கம்' என்றும் ஒரு பாடம் உளது. 2. இதனையும் உஎக-ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரே நூற் பாவாகக் கொள்வர் தெய்.

'ஆகுவழியறித' லென்றதனால், அசைநிலை யாங்கால் உம்மை முன்னரும், உம்மீற்று வினைமுன்னரு மல்லது வாராமை யறிக. சிறுபான்மை பிறாண்டு வருமேனுங் கொள்க. (உரு)

உஎஉ. [1]ஏயுங் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய வென்ப.

இ - ள்: ஏயென்னு மிடைச்சொல்லும் குரையென்னு மிடைச்சொல்லும் இசைநிறையும் அசைநிலையு மென ஓரொன்றிரண்டாம் எ - று.

எ - டு: 'ஏஎ யிஃதொத்தன் நாணிலன் தன்னொடு' (கலி - சுஉ) என்பது இசைநிறை. ஏஎயென் சொல்லுக என்பது அசைநிலை. 'அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே' (புறம் - ரு) என்பது இசைநிறை. 'பல்குரைத் துன்பங்கள் சென்று படும்' (குறள் - க0சரு) என்பது அசைநிலை.

தொடர்மொழி முதற்கட் பிரிந்துநின்றல்லது பெரும்பான்மையும் ஏகாரம் இசைநிறையும் அசைநிலையு மாகாமையின், சார்ந்த மொழியோடு ஒன்றுபட்டிசைத்து இடையும் இறுதியும் நிற்குந் தேற்றேகார முதலாயினவற்றோடு ஒருங்கு கூறாது வேறு கூறினார்.

அஃதேல். இதனை நிரனிறைப் பொருட்டாகக் கொண்டு ஏ இசைநிறை; குரை அசைநிலை யென்றுரால் உரையாசிரியரெனின்:— அற்றன்று; மற்று அந்தில் என்பனபோலப் பொருள்வகையான் வேறுபடுவனவற்றை இரண்டா மென்பதல்லது, சொல்வகையான் இரண்டாகிய சொல்லை இரண்டா மென்றதனான் ஒரு பயனின்மையின், அவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉம், [2]ஒவ்வொருசொல்லும் இசைநிறையும் அசைநிலையுமாக லுடைமையான் அவற்றை யுடன்கூறினாரென்னுக்கால் இசைநிறையும் அசைநிலையும் ஒருங்கு மயங்கக்கூறலாமாகலானும், அவர்க்கது கருத்தன்மை யுணர்க. (உச)

உஎங. [3]மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

இ - ள்: மாவென்னு மிடைச்சொல் வியங்கோளைச் சார்ந்து அசைநிலையாய் வரும் எ – று.

எ - டு: 'புற்கை யுண்கமா கொற்கை யோனே' எனவரும். (உரு)

உஎச. மியா இக மோ மதி இகுஞ்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்.

இ - ள்: மியா முதலாகிய ஆறும் முன்னிலை மொழியைச் சார்ந்து வரும் அசைச்சொல்லாம் எ - று.

எ - டு: கேண்மியா சென்மியா எனவும், 'கண்பனி யான்றிக வென்றி தோழி' எனவும், 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' (குறுந்-உ) எனவும், 'உரைமதி வாழியோ வலவ' எனவும், மெல்லம் புலம்ப கண்டிகும்' எனவும், 'காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை' (அகம் - எ) எனவும் வரும். (உசு)

---

1. 'ஏவுங் குரையும்' என்பது இளம். தெய். ஆகியோர் பாடம்.
2. 'ஒரு சொல்லே' என்பது முன்னைய பதிப்புக்களில் உள்ள பாடம்.
3. நன்னூலார் இந்நூற்பாவினை கொண்டெடுத்து மொழிவர். (நன்-சஙசு)

உஎரு. அவற்றுள்
இருமுன் பின்னும் ஏனை யிடத்தொடும்
தகுநிலை யுடைய என்மனார் புலவர்.

இ-ள்: மேற்கூறப்பட்ட ஆறனுள், இருமுன் பின்னும் படர்க்கைச் சொல்லோடுந் தன்மைச்சொல்லோடும் பொருந்து நிலையுடையவென எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தவாறு.

எ-டு: 'கண்டிரு மல்லமோ' (ஐங்குறு-உ௯க) எனவும், 'கண் ணும் படுமோ வென்றிசின் யானே' (நற்-௬௯) எனவும், தன்மைக்கண் வந்தன. 'புகழ்ந்திரு மல்லரோ பெரிதே' எனவும், 'யாரஃ தறிந்திசி னோரே' (குறுந்-௧அ) எனவும் படர்க்கைக்கண் வந்தன. (உஎ)

உஎசு. அம்மகேட் பிக்கும்.

இ-ள்: அம்மவென்னு மிடைச்சொல் ஒருவனை ஒருவன் ஒன்று கேளென்று சொல்லுதற்கண் வரும் எ-று.

எ-டு: 'அம்ம வாழி தோழி' (ஐங்குறு-௬௧) என வரும்.

மியா இக முதலாகிய அசைநிலை ஒரு பொருளுணர்த்தாவாயினும் முன்னிலைக்கணல்லது வாராமையான் அவ்விடமுணர்விக்குமாறு போல, அம்ம வென்பதூஉம் ஒரு பொருளுணர்த்தாதாயினும் ஒன்ற னைக் கேட்பிக்குமிடத்தல்லது வாராமையான் அப்பொருளுணர்விக்கு மென்பது விளக்கிய, 'கேட்பிக்கு' மென்றார். (உஅ)

உஎஎ. ஆங்க உரையசை.

இ-ள்: ஆங்கவென்னு மிடைச்சொல் கட்டுரைக்கண் அசை நிலையாய் வரும் எ-று.

எ-டு: 'ஆங்கக்குயிலு மயிலுங்காட்டி' என வரும். (உகூ)

உஎஅ. ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும்.

இ-ள்: ஒப்புமையுணர்த்தாத போலிச்சொல்லும் ஆங்கவென் பதுபோல உரையசையாம் எ-று.

எ-டு: மங்கலமென்பதோ ரூருண்டு போலும் என வரும்.

போலும் போல்வது என்னுந் தொடக்கத்துப் பலவாய்பாடுந் தழுவுதற்குப் 'போலி' யென்றார். 'நெருப்பழற் சேர்ந்தக்கா னெய் போல்வதூஉம்' (நாலடி-கஉச) என்பதுமது. அசைநிலையும் பொருள் குறித்தல்லது நில்லாமையின் 'அப்பொருட் டாகும்' என்றார். (௩௦)

உஎகூ. யாகா
பிறபிறக் கரோபோ மாதென வரூஉம்
ஆயேழ் சொல்லு மசைநிலைக் கிளவி.

இ-ள்: யா முதலாகிய ஏழிடைச்சொல்லும் அசைநிலையாம் எ-று.

எ-டு: யா பன்னிருவர் மாணுக்கருள ரகத்தியனார்க்கு எனவும், 'புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா' (கலி-௬௧) எனவும், 'தான் பிறவரிசை யறிதலிற் றன்னுந்தூக்கி' (புறம்-கச௦) எனவும், 'அதுபிறக்கு' எனவும், 'நோதக விருங்குயி லாலுமரோ' (கலி-௩௩) என வும், 'பிரியின் வாழா தென்போ தெய்ய' எனவும், 'விளிந்தன்று மாத வர்த் தெளிந்தவென் னெஞ்சே' (நற்-கஎஅ) எனவும் வரும்.

இடம் வரையருமையின் இவை மூன்றிடத்திற்குமுரிய.

'ஆங்கவும்' (சொல் - உஎஎ) 'ஒப்பில்போலியும்' (சொல் - உஎஅ) உரை தொடங்குதற்கண்ணும், [1]ஆதரமில் வழியும் வருதலின் வேறு கூறினர். (ளக)

உஅ௦. ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை.

இ - ள்: ஆக, ஆகல், என்பது என்னு மூன்றிடைச்சொல்லும், அசைநிலையாங்கால், இரட்டித்து நிற்கும் எ - று.

'பிரிவில் அசைநிலை' யெனவே, தனித்து நின்று அசைநிலையாகா வென்பதாம்.

எ - டு: ஒருவன் யானின்னேன் என்றுனும், நீ யின்னை என்றுனும், அவனின்னன் என்றுனும் கூறியவழிக்கேட்டான் ஆக ஆக, ஆகல் ஆகல் என்னும்; இவை உடம்படாமைக்கண்ணும் ஆதரமில்வழியும் வரும். ஒருவனென்றுரைப்பக் கேட்டான் என்பது என்பது என்னும். அது நன்குரைத்தற்கண்ணும் இழித்தற்கண்ணும் வரும். பிறுண்டு வரினும் வழக்கு நோக்கி யுணர்ந்து கொள்க. (ளஉ)

உஅக. ஈரளப(பு) இசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் [2]தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையால் நெறிப்படத் தோன்றும்.

இ - ள்: இரண்டு மாத்திரையை யுடைத்தாய மொழிக்கீறுகா தெனப்பட்ட ஔகாரம், பிரிவிலசைநிலையென மேற்கூறப்பட்டன போல இரட்டித்து நிற்குமிடத்தும், இரட்டியாது அளபெடையாய் நிற்குமிடத்தும், அளபெடையின்றித் தான் வருமிடத்தும், பொருள் வேறுபடுதலுள; அப்பொருள் வேறுபாடு சொல்வான் குறிப்பிற்குத் தகுமோசைவேறுபாட்டாற் புலப்படும் எ - று.

பொருள்வேறுபாடாவன, வழக்கு நோக்கச் சிறப்பும் மாறுபாடு மாம்.

எ - டு: ஔஔவொருவன் றவஞ்செய்தவாறு என்றவழிச் சிறப்புத் தோன்றும். ஒரு தொழில் செய்வானை ஔஔ வினிச்சாலும் என்றவழி, மாறுபாடு தோன்றும். ஔஉ வொருவ னிரவலர்க் கீந்த வாறு, ஔஉவினி வெகுளல் எனவும்; ஔவவன் முயலுமாறு, ஔ வினித் தட்டுப்புடையல் எனவும்; அளபெடுத்தும் அளபெடாதும் வந்த வழியும், அப்பொரு டோன்றியவாறு கண்டுகொள்க. இதனை இக் காலத்து ஒகாரமாக வழங்குப. பிறபொருள்படுமாயினும் அறிந்து கொள்க.

'ஈரளபிசைக்கு' மென்றே யொழியின் நெட்டெழுத்தெல்லாவற்று மேலும், 'இறுதியிலுயி'ரென்றே யொழியின் எகரவொகரத்துமேலுஞ் சேறலான், 'ஈரளபிசைக்கு மிறுதியிலுயிர்' என்றார்.

1. ஆதரம்—விருப்பம். 2. 'தனிவருங் காலையும்' எனப் பாடங் கொள்வர் தெய்.

இது தத்தங் குறிப்பிற் பொருள் செய்வதாயினும் அடுக்கி வருத லுடைமையான் ஈண்டு வைத்தார். (௩௩)

௨௪௨. [1]நன்றீற்(று) ஏயும் அன்றீற்(று) ஏயும்
அந்தீற்(று) ஓவும் அன்னீற்(று) ஓவும்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்.

இ-ள்: நன்றீற்றேயும் அன்றீற்றேயுமாவன நன்றே அன்றே என்பன. அந்தீற்றோவும் அன்னீற்றோவுமாவன அந்தோ அன்னோ என்பன. நன்றின திற்றின்கண் ஏயென விரியும். இவ்விரிவு ஏனையவற்றிற்கு மொக்கும். 'நன்றீற்றே'யென்பதனான் 'நம்மூர்ந்து வரூஉ மிகர வைகார மும்' (சொல்-௧௨௩) என்புழிப்போலச் சொன்முழுவதுங் கொள்ளப் படும். ஒழிந்தனவு மன்ன. 'குறிப்பொடுகொள்ளு'மென்றது, மேலது போல இவையுங் குறிப்போசையாற் பொருளுணர்த்து மென்றவாறு.

எ - டு: ஒருவன் ஒன்றுரைத்தவழி அதற்கு மேவாதான் நன்றே நன்றே, அன்றே யன்றே என அடுக்கியும் வரும்; அவை மேவாமைக் குறிப்பு விளக்கும். அவனன்றே யிதுசெய்வான் என அடுக்காது நின்றவழி, அன்றீற்றேவுக்குத் தெளிவு முதலாகிய பிற பொருளும் படும். ஏனையிரண்டும் அடுக்கியும் அடுக்காதும் இரங்கற்குறிப்பு வெளிப் படுக்கும். இவையும் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குவன.

'அன்னபிறவு'மென்றதனான், அதோ அதோ, சோ சோ, ஒக்கும் ஒக்கும் என்னுந் தொடக்கத்தன கொள்க. (௩௪)

௨௪௩. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையுந்
தத்தமுள் மயங்கும் உடனிலை யிலவே.

இனி, மேற்கூறப்பட்ட இடைச்சொல்லின்கட் படு மிலக்கண வேறுபா டுணர்த்துகின்றார்.

இ - ள்: எச்சவும்மை நின்றவழி எஞ்சுபொருட்கிளவியாம் எதிர் மறையும்மைத் தொடர் வந்து தம்முண் மயங்குதலில எ - று.

எ - டு: சாத்தனும் வந்தான் கொற்றனும் வரலுமுரியன் எனின் இயையாமை கண்டுகொள்க.

ஏனையும்மையொடு மயங்குதல் விலக்காராயிற் றென்னையெனின்:- அவை எஞ்சுபொருட் கிளவியவாய் வாராமையி னென்பது. (௩௫)

௨௪௪. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

இ - ள்: எச்சவும்மையாற் றழுவப்படும் எஞ்சுபொருட்கிளவி உம்மையில் சொல்லாயின், அவ்வும்மையில் சொல்லை அவ்வும்மைத் தொடர்க்குப்பின் சொல்லாது முன் சொல்லுக எ - று.

எ - டு: சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான் என வரும். கொற்றனும் வந்தான் சாத்தனும் வந்தான் எனப் பிற்படக்கிளப்பின், முற்கூறியதனை விலக்குவதுபோன்று பொருள் கொள்ளாமை கண்டு கொள்க. 'அடகுபுலால் பாகு பாளிதமு முண்ணான், கடல்போலுங் கல்வி யவன்' என்பதுமது.

---

1. 'நன்றீற்று ஏவும் அன்றீற்று ஏவும்' எனப் பாடங்கொள்வர் தெய்.

உம்மையடாதே தானே நிற்றலிற் 'செஞ்சொ'லென்ருர். செஞ்சொலாயின் முற்படக் கிளக்க வெனவே, எஞ்சுபொருட்கிளவி உம்மையொடுவரிற் பிற்படக் கிளக்க வென்றவாரும். (௩௬)

426 உஅரு. முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி யுரித்தும் ஆகும்.

இ - ள்: முற்றும்மை யடுத்து நின்ற தொகைச்சொல்லிடத்து எச்சச்சொல் லுரித்துமாம் எ - று.

எ - டு: பத்துங்கொடால், அனைத்துங்கொடால் என்புழி முற்றும்மை தம்பொருளுணர்த்தாது சிலவெஞ்சக் கொடுவென்னும் பொருள் தோன்றி நின்றவாறு கண்டுகொள்க.

முற்றுதலென்னும் பொருளது பண்பு முற்றியவும்மையென ஒற்றுமை நயத்தாற் சொன்மேலேறி நின்றது. 'உரித்துமாகு' மெனவே, எச்சப்பொருண்மை குறியாது நிற்றலே பெரும்பான்மை யென்பதாம்.

ஏற்புழிக்கோட லென்பதனுன் எச்சப்படுவது எதிர்மறை வினைக்கணென்று கொள்க.

பத்துங்கொடு என்பது பிறவுங்கொடு வென்பதுபட நிற்றலின், விதிவினைக்கண்ணும் எச்சங் குறிக்கும் [1]என்பாருமுளர். இப்பொழுது பத்துங்கொடு என்பது கருத்தாயின், இப்பொழுது பத்துக்கொடு என உம்மையின்றியும் பொருள் பெறப்படும்; பத்துங்கொடு பிறவுங்கொடு என்பது கருத்தாயின், இஃதெச்சவும்மையாகலின் ஈண்டைக் கெய்தாது; அதனுன் அது பொருத்தமின்றென்க.

இவை மூன்று சூத்திரத்தானும் வழுவற்கவென இடைச்சொற் பற்றி மரபுவழுக் காத்தவாறு. (௩௭)

உஅசு. ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரள(பு) ஆகலும் உரித்தே.

இ - ள்: செய்யு ளிறுதிக்கண் நின்றிசைக்கும் ஈற்றசை யேகாரங் கூற்றிடத்து ஒருமாத்திரைத் தாகலு முரித்து எ - று.

எ - டு: 'கடல்போற் ருேன்றல காடிறந் தோரே' (அகம் - க) என்புழி ஓரளபாயினவாறு கண்டுகொள்க.

தேற்றமுதலாயின நீக்கி ஈற்றசையே தழுவுதற்கு 'ஈற்று நின் றிசைக்கு' மென்ருர். செய்யுளிடை நிற்பதனை நீக்குதற்கு ஈற்று நின் றிசைக்கு மென்றே யொழியாது 'இறுதி' யென்ருர். மேனின்ற [2]செய்யுளுறுப்போடு பொருந்தக் கூறுதற்க ணென்பார் 'கூற்றுவயி' னென்ருர். உம்மை: எதிர்மறை. (௩௮)

உஅஎ. உம்மை எண்ணும் எனவென் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பா டிலவே.

இ - ள்: உம்மையான் வருமெண்ணும், எனவான் வருமெண்ணும், இறுதிக்கட் டொகை பெறுதலைக் கடப்பாடாக வுடையவல்ல எ - று.

எனவே, தொகை பெற்றும் பெருதும் வருமென்பதாம்.

---

1. என்பார் - இளம். 2. செய்யுளுறுப்போடு - மாத்திரை அளவோடு.

எ - டு: 'உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையும், ஆயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையும், அம்மூ வுருபின' (சொல்-கக௦) எனவும், 'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி' (சொல்-உகள) எனவும், 'நிலனென நீரெனத் தீயென வளியென நான்கும்' எனவும், 'உயிரென வுடலென வின்றி யமையா' எனவும் அவ்விருவகை யெண்ணுந் தொகைபெற்றும் பெறாதும் வந்தவாறு.

'தொகை'யெனப் பொதுப்படக் கூறியவதனான், எண்ணுப்பெயரே யன்றி 'அனைத்தும்' 'எல்லா'மென்னுந் தொடக்கத்தனவுங்கொள்க. (ஙகூ)

உஅஅ. எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலும் என்மனார் புலவர்.

இ - ள்: சொற்றொறும் வாராது எண்ணேகாரம் இடையிட்டு வரினும் எண்ணுதற் பொருட்டாம் எ - று.

எ - டு: 'மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்' (தொல் - எழுத் - பாயிரம்) எனவும், 'தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே, யுறலோ டாங்கைம் புலனென மொழிப' எனவும் வரும்.

எண்ணுக் குறித்து வருவன, எண்ணப்படும் பெயரெல்லாவற்றோடும் வருதன் மரபாயினும், இடையிட்டு வரினும் அமைகவென அமைத்தவாறு.

'எனவும் என்றும் ஒடுவும்' (சொல்-உகூச) சொற்றொறும் வாராது ஒருவழி நின்றும் எண்ணுக் குறிக்குமாலெனின்:— அவை ஒருவழி நின்று எல்லாவற்றோடும் ஒன்றுதலின் ஆண்டாராய்ச்சி யில்லையென்க.

பிறவெண் ஒடாநின்றவழி ஏகாரவெண் இடை வந்ததாயினும், ஒடாநின்ற பிறவெண்ணேயாமென உரைத்தாரால் உரையாசிரியரெனின்:—அவ்வாறு விராயெண்ணியவழிப் பிறவெண்ணாற் பெயர் கொடுப்பின் அதனை ஏகாரவெண்ணென்பாரையும் விலக்காமையானும், பிறவெண்ணா மென்றதனாற் பெறப்படுவதோர் பயனின்மையானும் அவர்க்கது கருத்தன்றென்க. (ச०)

உஅகூ. உம்மை தொக்க எனாவென் கிளவியும்
ஆவீ றாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.

இ - ள்: உம்மை தொக்கு நின்ற எனாவென்னுமிடைச் சொல்லும் என்றாவென்னு மிடைச்சொல்லும் இரண்டும் எண்ணுமிடத்து வரும் எ - று.

எ - டு: நிலனெனா நீரெனா எனவும்; நிலனென்றா நீரென்றா எனவும் வரும்.

'உம்மைதொக்க வெனாவென்கிளவி' யெனவே, எனாவுமென அச்சொல் உம்மோடு வருதலுமுடைத்தென்பதாம். உம்மோடு வந்தவழி அவ்வெண் உம்மைஎண்ணுள் அடங்கும். 'எண்ணுவழிப்பட்டன' வெனவே, அவை சொற்றொறும் வருதலேயன்றி இடையிட்டும் வருமென்பதாம்.

எ - டு: 'பின்சா ரயல்புடை தேவகை யெனா' (சொல் - அஉ) எனவும், 'ஒப்பிற் புகழிற் பழியி னென்றா' (சொல் - எஉ) எனவும் இடையிட்டு வந்தவாறு.

இவை [1]எண்ணுதற்கண் அல்லது வாராமையானும், 'அவற்றின் வருஉ மெண்ணி னிறுதியும்' (சொல் - உகூ0) எனச் சூத்திரஞ் சுருங்குதற் சிறப்பினானும், ஈண்டு வைத்தார். (சக)

உகூ0. அவற்றின் வருஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குறி மரபிற் செவ்வெண் இறுதியும்
ஏயி னாகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினுந் தொகையின் றியலா.

இ - ள்: மேற்சொல்லப்பட்ட எனா, என்று என்பனவற்றான் வரும் எண்ணினிறுதியும், இடைச்சொல்லானன்றிப் பெயரானெண்ணப் படுஞ் செவ்வெணிறுதியும், ஏகாரத்தான் வரும் எண்ணினிறுதியும், யாதானுமோரிடத்து வரினுந் தொகையின்றி நில்லா எ - று.

எ - டு: நிலனெனா நீரெனா விரண்டும் எனவும், நிலனென்று நீரென்று விரண்டும் எனவும், நிலநீரென விரண்டும் எனவும், நிலனே நீரேயென விரண்டும் எனவும் தொகை பெற்று வந்தவாறு.

செவ்வெண் இடைச்சொல்லெண் [2]அன்று, ஆயினும் எண்ணுதலுந் தொகை பெறுதலுமாகிய ஒப்புமையான் ஈண்டுக் கூறினார். (சஉ)

உகூக. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.

இ - ள்: உம்மை யெண்ணின்கண் உருபு தொகுதல் வரையப் படாது எ - று.

'பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப' (சொல்-க0ச)

என்னும் பொதுவிதியான் 'உம்மையெண்ணின்கண் உருபு தொகல்' பெறப்பட்டமையால், பெற்றதன் பெயர்த்துரை நியமப்பொருட்டாகலான், உம்மை யெண்ணி னுருபுதொகல் வரையப்படாது; ஏனையெண்ணின்கண் அவை வரையப்படுமென நியமித்தல் இதற்குப் பயனாகக் கொள்க.

'குன்றி கோபங் கொடிவிடு பவள, மொண்செங் காந்த ளொக்கு நின்னிறம்' எனப் பிறவெண்ணின்கண் உருபு தொக்கதாலெனின்:— அற்றன்று; செவ்வெண் தொகையின்றி நில்லாமையின் (சொல்-உகூ0) அவற்றையென ஒருசொல் விரிக்கப்படும்; விரிக்கவே, குன்றி முதலாயின எழுவாயாய் நின்றனவா மென்பது.

எ - டு: 'பாட்டுங் கோட்டியு மறியாப் பயமி
றேக்கு மரம்போ னீடிய வொருவன்'

'இசையினுங் குறிப்பினும் பண்பினும் தோன்றி' (சொல்-உகூஎ) என உம்மை யெண்ணின்கண் உருபு தொக்கவாறு கண்டுகொள்க.

'வரையா' ரென்றதனான், ஆண்டும் எல்லாவுருபுந் தொகா; ஐயுங் கண்ணுமே தொகுவனவெனக் கொள்க.

யானை தேர் குதிரை காலாளெறிந்தார் என உம்மையும் உருபும் உடன்றொக்கவழி, உம்மைத்தொகை யென்னாது உருபுத்தொகை யென்க வென்பது இச்சூத்திரத்திற்குக் கருத்தாக உரைத்தாரால்

1. 'எண்ணுதற்கண் வாராமையானும்' என்பது கழகப் பதிப்பிலுள்ள பாடம்.
2. 'அன்றென்றாராயினும்' என்பது முன்னைய பதிப்புக்களிலுள்ள பாடம்.

உரையாசிரியரெனின்:— அஃது உம்மைத் தொகையாகலின் ஒரு சொன்னடைத்தாய் உருபேற்றானும் பயனில கொண்டானும் நிற்கும்; அத்தொகையிடை உருபின்மை, சிற்றறிவினர்க்கும் புலனும்; அதனான் அஃதவர்க்குக் கருத்தன்மை சொல்லவேண்டுமோ வென்பது. (சங)

உ௬௨. உம்உந் தாகும் இடனுமா ருண்டே.

இ-ள்: வினைசெயன் மருங்கிற் காலமொடு வருவனவற்றுள் உம்மீறு உந்தாய்த் திரிதலு முடைத்து எ-று.

எ-டு: 'நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து' (புறம்-௩௯௫) எனவும், 'நாரரி நறவினுண் மகிழ்தூங் குந்து' (புறம்-௪௦௦) எனவும் வரும்.

'வினைசெயன் மருங்கிற் காலமொடு வரும் (சொல்-உ௫௦) உம்' மென்பது ஏற்புழிக்கோடலென்பதனாற் பெற்றாம்.

'இடனுமாருண்டே' யென்றது, இத்திரிபு பெயரெச்சத்திற்கேற்ற வழி யென்பது கருதிப்போலும். 'தம்மீறு திரிதன்' (சொல்-உ௫௪) முதலாயின இவ்வோத்தினுட் கூறப்படும் இடைச்சொற்கே யென்பது இதனானும் (சொல்-உ௫௪ உரை காண்க) பெற்றாம்.

வினையியலுள்ளுங் கூறப்படுமாயினும், இடைச்சொற்றிரிபாகலான் ஈண்டுக் கூறலும் இயைபுடைத்தென்பது. (சச)

உ௬௩. வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே.

இ-ள்: வினையொடு நிற்பினும் எண்ணிடைச் சொற்கள் தன் நிலையிற் றிரியா; அவற்றொடு வருங்கால் அவற்றவற்றியல்பு ஆராய்தல் வேண்டும் எ-று.

எ-டு: உண்டுந் தின்றும் பாடியும் வந்தான் எனவும், உண்ண வெனத் தின்னவெனப் பாடவென வந்தான் எனவும் வரும். ஒழிந்த வெண்ணொடு வருவனவுளவேற் கண்டுகொள்க.

பெரும்பான்மையும் பெயரோடல்லது எண்ணிடைச்சொல் நில்லா மையின் அதனை முற்கூறி, சிறுபான்மை வினையொடு நிற்றலு முடைமையான் இதனை ஈண்டுக் கூறினார்.

'நினையல் வேண்டு மவற்றவற் றியல்பே' யென்றதனான், எண்ணிடைச்சொல் முற்றுச்சொல்லும் பெயரெச்சமும் பற்றி வாராதென்பதூஉம், வினையெச்சத்தோடும் ஏற்பன வல்லது வாராவென்பதூஉம், ஆண்டுத்தொகை பெறுதல் சிறுபான்மை யென்பதூஉங் கொள்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமையாற் [1]கலியாணம் பொலிந்தது என முற்றுச் செவ் வெண் தொகை பெற்று வந்ததென்றாரால் உரையாசிரியரெனின்:— அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்து மாறுதலின் எண்ணப் படாமையானும், மூவருமென்பது சாத்தன் முதலாயினோர் தொகை யாகலானும், அது போலியுரை யென்க. (சரு)

---

1. கலி-பெருக்கம், யாணம்-அன்பு. அன்புப் பெருக்கத்திற்குரிய அம்மண வினையைக் குறித்தது. இது தமிழ்ச் சொல்லே. 'தனிரடிமென் நகை மயிலைத் நாதவிழ் தார் காளைக்குக் கனிமகிழ் சுற்றம் போற்றக் கலியாணம் செய்தார்கள்' (பெரிய-காரைக்-௧௧) என்றவிடத்தும் இச்சொல் எடுத்தாளப்பட்டிருத்தல் காண்க.

உ௬௪. என்றும் எனவும் ஒடுவுந் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுட் பிரிந்தே.

இ – ள்: என்றும் எனவும் ஒடுவும் என்பன ஒருவழித்தோன்றி எண்ணினுட் பிறவழியும் பிரிந்து சென்று ஒன்றுமிடமுடைய எ- று.

எ - டு: 'வினைபகை யென்றிரண்டி னெச்சம்' (குறள் - ௬௭௪) எனவும், 'கண்ணிமை நொடியென' (நூன்மரபு-எ) எனவும், பொருள் கருவி காலம் வினையிடனொ டைந்தும்' (குறள்-௬௭௫) எனவும், அவை ஒருவழி நின்று, வினையென்று, பகையென்று எனவும், கண்ணிமை யென நொடியென எனவும், பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடத்தொடு எனவும் நின்றவிடத்துப் பிரிந்து, பிறவழிச் சென்று ஒன்றியவாறு கண்டுகொள்க.

'ஒன்றுவழியுடைய' வென்றதனால், சொற்றொறு நிற்பதே பெரும் பான்மை யென்பதாம். சொற்றொறு நின்றவெண் இக்காலத்தரிய. ஒடுவென்பதோ ரிடைச்சொல் எண்ணின்கண்வருத லிதனாற்கொள்க.

இவை மூன்றும் பொருளிற்பிரிந்து எண்ணின்கண் அசையாய் வருதலுடைய வென்பது உரையாசிரியர்க்குக் கருத்தென்பாருமுளர். அசைநிலை யென்பது இச்சூத்திரத்தாற் பெறப்படாமையானும், 'கண் ணிமை நொடி' (எழுத்-எ) என்னுஞ் சூத்திரத்து 'என'வைக் கண் ணிமை யென்பதனோடுங் கூட்டுகவென் றுரைத்தலானும், அவர்க்கது கருத்தன்றென்க. (௪௬)

உ௬௫. அவ்வச் சொல்லிற்(கு) அவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே.

இ - ள்: மேற்கூறப்பட்ட இடைச்சொற்கள், அவ்வச்சொல்லிற்கு அவையவை பொருளென நிலைபெறச் சொல்லப்பட்ட இயல்பை யுடையன வாயினும், வினையொடும் பெயரொடும் ஆராய்ந்து உணரத் தோன்றி வேறுபொருளவாயும் அசைநிலையாயுந் திரிந்துவரினும், ஆராய்ந்து கொள்க எ - று.

எனவே, கூறிய முறையான் வருதல் பெரும்பான்மையென்றும், வேறுபட வருதல் சிறுபான்மையென்றுஞ் சொல்லியவாறாம்.

'வினையொடும் பெயரொடு'மென்றது, அவை வேறுபொருள வென்றுணர்த்துதற்குச் சார்பு கூறியவாறு.

எ - டு: 'சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ' (அகம்-௪௬) எனவும், 'கலக்கொண்டேன் கள்ளென்கோ காழ்கொற்றன் சூடென்கோ' எனவும் ஓகாரம் ஈற்றசையாயும் எண்ணாயும் வந்தது. 'ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே' (அகம்-உஎ௩) என மா முன்னிலை யசைச்சொல்லாயிற்று. 'அதுமற் கொண்கன் றேரே' என மன் அசைநிலையாயிற்று. பிறவுமன்ன.

செய்யுளின்ப நோக்கி 'வினையொடும் பெயரொடு' மென்றார். (௪எ)

உ௬௬. [1]கிளந்த அல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற்(று) இயலான் உணர்ந்தனர் கொளலே.

1. 'கிளந்த வல்ல அன்ன பிறவும்' எனப் பாடங்கொள்வர் தெய்.

இ - ள்: மேற்சொல்லப்பட்டனவன்றி, அவை போல்வன பிற வரினும், அவற்றைக் கிளந்த சொல்லினியல்பா னுணர்ந்துகொள்க. எ - று.

'கிளந்தவற்றியலா' னென்றது, ஆசிரியர் ஆணையானன்றிக் கிளந்தவற்றையும் இன்னவென் றறிவது வழக்கினுட் சார்பும் இடமுங் குறிப்பும் பற்றியன்றே; கிளவாதவற்றையும் அவ்வாறு சார்பும் இடமுங் குறிப்பும் பற்றி இஃதசைநிலை, இஃதிசைநிறை, இது குறிப்பால் இன்ன பொருளுணர்த்தும் என்றுணர்ந்துகொள்க வென்றவாறு.

எ - டு: 'நெறிதுதவிர்ந் திக மாளநின் பரிசிலருய்ம்மார்' எனவும், 'சொல்லென் றெய்ய நின்னொடு பெயர்ந்தே' எனவும், 'அறிவார் யாரஃ திறுவுழி யிறுகென' எனவும், 'பணியுமா மென்றும் பெருமை' (குறள்-கூஎஅ) எனவும், ஈங்கா யினவா லென்றிசின் யானே' (நற்-ருரு) எனவும், மாள, தெய்ய, என, ஆம், ஆல் என்பனவும் அசைநிலையாய் வந்தன. 'குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே' (திருமுரு - உகள) எனத் தொறுவென்பது தான் சார்ந்த மொழிப்பொருட்குப் பன்மையும் இடமாதலு முணர்த்தி நிற்கும்.

ஆனம், ஏனம், ஓனம் என்பன எழுத்துச்சாரியை. பிறவும் எடுத்தோதாத இடைச்சொல்லெல்லாம் இப்புறனடையாற் றழீஇக் கொள்க. (சஅ)

இடையியல் முற்றிற்று.

## அ உரியியல்

உகூஎ. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொல் பலபொருட்(கு) உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்(கு) உரிமை தோன்றினும்
பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்த மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்.

நிறுத்த முறையானே உரிச்சொல்லுணர்த்திய வெடுத்துக்கொண்டார்; அதனான் இவ்வோத்து உரியியலென்னும் பெயர்த்தாயிற்று. தமக்கியல்பில்லா விடைச்சொற்போலாது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்குத் தாமே யுரியவாதலின், உரிச்சொல்லாயிற்று. பெரும்பான்மையுஞ் செய்யுட் குரியவாய் வருதலின் உரிச்சொல் லாயிற்றென்பாருமுளர்.

இ - ள்: உரிச்சொல்லை விரித்துரைக்குமிடத்து, இசை குறிப்புப் பண்பென்னும் பொருண்மேற் றோன்றி, பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் தம்முருபு தடுமாறி, ஒருசொற் பல பொருட்குரித்தாய்

வரினும் பலசொல் ஒருபொருட்குரித்தாய் வரினும் கேட்பானாற் பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றோடு சார்த்திப் பெயரும் வினையுமாகிய தத்தமக்குரிய நிலைக்களத்தின்கண் யாதானுமொரு சொல்லாயினும் வேறு வேறு பொருளுணர்த்தப்படும் எ - று.

என்றது, இசை குறிப்புப் பண்பென்னும் பொருளவாய்ப் பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி ஒருசொல் ஒரு பொருட் குரித்தாதலேயன்றி, ஒருசொற் பலபொருட்கும் பலசொல் ஒருபொருட்கும் உரியவாய் வருவன உரிச்சொல்லென்றும், அவை பெயரும் வினையும்போல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையின், வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடு சார்த்தித் தம்மையெடுத்தோதியே அப்பொருளுணர்த்தப்படுமென்றும், உரிச்சொற்குப் பொது விலக்கணமும் அவற்றிற்குப் பொருளுணர்த்து முறைமையு முணர்த்தியவாறு.

குறிப்பு - மனத்தாற் குறித்துணரப்படுவது. பண்பு - பொறியானுணரப்படுங் குணம்.

கறுப்பு, தவவென்பன பெயர்வினைப்போலி. துவைத்தல், துவைக்குமென்பன பெயர் வினைக்கு முதனிலையாயின.

உறு முதலாயின மெய்தடுமாறாது வருதலின், 'பெயரினும் வினையினு மெய்தடுமாறி' யென்றது, பெரும்பான்மைபற்றியெனக் கொள்க. அவை கூறியவாற்றாற் பொருட்குரியவாய் வருமாறு முன்னர்க் காணப்படும்.

மெய்தடுமாறலும், ஒருசொற் பலபொருட் குரிமையும், பலசொல் ஒருபொருட்குரிமையும் உரிச்சொற்கு உண்மையான் ஓதினாரேனும், உரிச்சொற்கு இலக்கணமவாது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்குரியவாய் வருதலேயாம்.

ஒருசொல் ஒருபொருட் குரித்தாதல் இயல்பாகலாற் சொல்லாமையே முடியுமென்பது. (க)

உகஅ. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா வுரிச்சொன் மேன.

இ - ள்: வெளிப்பட்ட உரிச்சொல் கிளந்ததனாற் பயனின்மையிற் கிளக்கப்படா; வெளிப்பட வாரா உரிச்சொன்மேற்றுக் கிளந்தோதல் எ - று.

'பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தி யெச்சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல்' (சொல் - உகஎ) என்றதனால், பயிலாதவற்றைப் பயின்றவற்றோடு சார்த்தியும்,பயின்றவற்றைப் பிறிதொன்றனோடு சார்த்தாது தம்மையே கிளந்தும் எல்லா வுரிச்சொல்லும் உணர்த்தப்படு மென்பதுபட்டு நின்றதனை விலக்கி, பயனின்மையாற் பயின்ற உரிச்சொற் கிளக்கப்படாது பயிலாத உரிச்சொல்லே கிளக்கப்படுமென வரையறுத்தவாறு.

'மேல'வென்பது 'மேன'வென நின்றது. (உ)

உகக. [1]அவைதாம்
உறுதவ நனியென வரூஉ மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப.

1. இத்தனிச்சொல் தெய். உரையில் இல்லை.

வெளிப்படவாரா உரிச்சொல்லைக் கிளந்தோதி விரிக்கின்றார்.

'அவைதாம்' என்றது, வெளிப்பட வாரா உரிச்சொற்றாம் என்ற வாறு. அதற்கு முடிபு 'அவைதாம், அம்மா மெம்மே மென்னும் கிளவி யும்' (சொல் - ௨௦௨) என்புழி உரைத்தாங் குரைக்க.

இ - ள்: 'உறுபுனல் தந்துல கூட்டி' (நாலடி. - ௧அ௫) எனவும், 'ஈயாது வீயுமுயிர் தவப் பலவே' (புறம் - ௨௩௬) எனவும், 'வந்து நனி வருந்தினை வாழியென் நெஞ்சே' (அகம் - ௧௬) எனவும், உறு, தவ, நனி யென்பன மிகுதியென்னும் குறிப்புப் பொருளுணர்த்தும் எ - று.

குறிப்புச்சொற் பரப்புடைமையான் முற்கூறினர். (௩)

௩௦௦. [1]உருவுட் காகும் புரையுயர்(பு) ஆகும்.

இ - ள்: 'உருகெழு கடவுள்' எனவும், 'புரைய மன்ற புரையோர் கேண்மை' (நற் - ௧) எனவும், உருவும் புரையும், [2]உட்கும் உயர்பு முணர்த்தும் எ - று. (௪)

௩௦௧. குருவுங் கெழுவும் நிறனா கும்மே.

இ-ள்: 'குருமணித் தாலி', 'செங்கேழ் மென்கொடி' (அகம்-அ௦) எனக் குருவும் கெழுவும், நிறமென்னும் பண்புணர்த்தும் எ - று. (௫)

௩௦௨. செல்லல் இன்னல் இன்னா மையே.

இ - ள்: 'மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்' (அகம் - ௨௨) எனவும், 'வெயில்புறந் தருஉம் இன்ன லியக்கத்து' (மலைபடு - ௩௭௪) எனவும், செல்லலும் இன்னலும், இன்னாமை யென்னுங் குறிப் புணர்த்தும் எ - று. (௬)

௩௦௩. [3]மல்லல் வளனே.

௩௦௪. ஏபெற் றாகும்.

இ - ள்: 'மல்லன் மால்வரை' (அகம் - ௫௨) எனவும், 'ஏகல் லடுக்கம்' (நற் - ௧௧௬) எனவும், மல்லலும் ஏவும், வளமும் பெற்று மாகிய குறிப்புணர்த்தும் எ - று.

பெற்று—பெருக்கம். ஈது அக்காலத்துப் பயின்றதுபோலும். இவை யிரண்டு சூத்திரம். (௭ - அ)

௩௦௫. [4]உகப்பே உயர்தல் உவப்பே உவகை.

இ - ள்: 'விசும்புகந் தாடாது' எனவும், 'உவந்துவந் தார்வ நெஞ் சமொ டாய்நல னளைஇ' (அகம் - ௩௫) எனவும், உகப்பும் உவப்பும், உயர்தலும் உவகையுமாகிய குறிப்புணர்த்தும் எ - று. (௯)

௩௦௬. பயப்பே பயனும்.

௩௦௭. பசப்புநிற னாகும்.

இ - ள்: 'பயவாக் களரனையர் கல்லா தவர்' (குறள் - ௪௦௬) எனவும், 'மையில் வாண்முகம் பசப்பூரும்மே' (கலி - ௭) எனவும்,

---

1. 4. இவற்றை இருநூற்பாக்களாகக் கொள்வர் தெய். 2. உட்கு-அச்சம்.

3. இதனையும் ௩0௪-ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் இளம், நச். ஆகியோர்.

பயப்பும் பசப்பும், பயனும் நிறவேறுபாடுமாகிய குறிப்பும் பண்பு முணர்த்தும் எ - று. (கo—கக)

ருoஅ. இயைபே புணர்ச்சி.

ருoகூ. இசைப்பிசை யாகும்.

இ - ள்: 'இயைந்தொழுகும்' எனவும், 'யாழிசையூப் புக்கும்' எனவும், இயையும் இசைப்பும், புணர்ச்சிக்குறிப்பும் இசைப்பொருண் மையு முணர்த்தியவாறு. (கஉ—கரு)

ருகo. அலமரல் தெருமரல் ஆயிரண்டுஞ் சுழற்சி.

இ - ள்: 'அலமர லாயம்' (ஐங் - சுகூ) எனவும், 'தெருமர லுள்ளமோ டன்னை துஞ்சாள்' எனவும், அலமரலும் தெருமரலும், சுழற்சியாகிய குறிப்புணர்த்தும் எ - று. (கச)

ருகக. மழவுங் குழவும் இளமைப் பொருள.

இ - ள்: 'மழகளிறு' (புறம் - ருஅ) எனவும், 'குழக்கன்று' (நாலடி - கoரு) எனவும், மழவுங் குழவும், இளமைக்குறிப்புப் பொருளுணர்த் தும் எ - று. (கரு)

ருகஉ. [1]சீர்த்தி மிகுபுகழ்.

ருகரு. மாலை இயல்பே.

இ - ள்: 'வயக்கஞ்சால் சீர்த்தி' எனவும், இரவரன் மாலையனே' (குறிஞ்சிப் - உருகூ) எனவும், சீர்த்தியும் மாலையும், பெரும்புகழும் இயல்புமாகிய குறிப்புணர்த்தும் எ - று. (கசு—கஎ)

ருகச. கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்.

இ - ள்: 'துனிகூரெவ்வமொடு' (சிறுபாண் - ருகூ) எனவும், 'கழி கண் ணோட்டம் (பதிற் - உஉ) எனவும் கூர்ப்பும் கழிவும், ஒன்ற னது சிறத்தலாகிய குறிப்பை யுணர்த்தும் எ - று.

'உள்ள' தென்றது, முன் சிறவாதுள்ளதென்றவாறு. (கஅ)

ருகரு. கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள.

இ - ள்: 'கதழ்பரி நெடுந்தேர்' (நற் - உoரு) எனவும், 'துனை பறை நிவக்கும் புள்ளின மான' (மலைபடு - ருரு) எனவும், கதழ் வும் துனைவும், விரைவாகிய குறிப்புணர்த்தும் எ - று. (ககூ)

ருகசு. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கஞ் செய்யும்.

இ - ள்: 'அதிர வருவதோர் நோய்' (குறள் - சஉக) எனவும், 'விதிர்ப்புற வறியா வேமக் காப்பினை' (புறம் - உo) எனவும், அதிர்வும் விதிர்ப்பும், நடுக்கமாகிய குறிப்புணர்த்தும் எ - று.

'அதிழ்'வென்று பாடமோதி, 'அதிழ்கண் முரசம்' என்றுதாரணங் [2]காட்டுவாரு முளர். (உo)

ருகஎ. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையுஞ் செய்யும் பொருள.

---

1. இதனையும் ருகரு-ஆம் நூற்பாவையும் இணைத்து ஒரே நூற்பாவாகக் கொள்வர் நச்.
2. காட்டுவார் - யாரெனத் தெரிந்திலது.

இ - ள்: 'வார்ந்திலங்கும் வை யெயிற்று' (குறுந்-௧௪) 'வார்கயிற் ஞெழுகை' (அகம்-௧௩௩) எனவும், 'போகு கொடி மருங்குல்' 'வெள் வேல் விடத்தேரொடு காருடைபோகி' (பதிற்-௧௩) எனவும், 'ஒழுகு கொடி மருங்குல்', 'மால்வரையொழுகிய வாழை' (சிறுபாண் - ௨௧) எனவும், வார்தல், போகல், ஒழுகல் என்னு மூன்றுசொல்லும், நேர் மையும் நெடுமையுமாகிய பண்புணர்த்தும் எ - று. (௨௧)

௩௧௮. தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட் டாகும்.

இ - ள்: தீர்தலுந் தீர்த்தலு மென்னுமிரண்டும் விடுதலாகிய குறிப்புணர்த்தும் எ - று.

எ - டு: 'துணையிற் றீர்ந்த கடுங்கண் யானை' (நற் - ௧௦௮) என வரும். தீர்த்தல் விடுதற்பொருண்மைக்கண் வந்தவழிக் கண்டு கொள்க.

தீர்த்தலென்பது செய்வித்தலை யுணர்த்திநின்ற நிலைமையெ னின்:— செய்வித்தலை யுணர்த்து நிலைமை வேறாதின், 'இயைபே புணர்ச்சி' (உரியியல் - ௧௨) என்புழியும் இயைப்பென வேறாதல் வேண்டும்; அதனாற் றீர்த்தலுஞ் செய்தலை யுணர்த்துவதோ ருரிச் சொல்லெனவே படுமென்பது.

'விடற்பொருட்டாகு' மென்பதனை இரண்டனோடுங் கூட்டுக. பன்மை யொருமை மயக்கமெனினு மமையும். (௨௨)

௩௧௯. கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.

இ - ள்: 'கெடவர லாயமொடு' எனவும், 'பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளும்' (பொருள். மெய்ப் - ௧) எனவும், கெடவர லும் பண்ணையும், விளையாட்டாகிய குறிப்புணர்த்தும் எ - று. (௨௩)

௩௨௦. தடவுங் கயவும் நளியும் பெருமை.

இ - ள்: 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்' (புறம் - ௩௯௪), 'கயவாய்ப் பெருங்கை யானை' (அகம் - ௧௧௮), 'நளி மலைநாடன்' (புறம் - ௧௫௦) எனத் தடவும் கயவும் நளியும், பெருமையாகிய பண்பு ணர்த்தும் எ - று. (௨௪)

௩௨௧. [1]அவற்றுள்
தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்.

௩௨௨. கயவென் கிளவி [2]மென்மையும் ஆகும்.

௩௨௩. நளியென் கிளவி செறிவும் ஆகும்.

இ - ள்: 'தடமருப்பெருமை' (நற் - ௧௨௦), 'கயந்தலை மடப்பிடி' (நற் - ௧௩௭), 'நளியிருள்' எனத் தடவென்கிளவி முதலாயின, பெருமை யேயன்றிக் கோட்டமும் மென்மையுமாகிய பண்பும், செறிவாகிய குறிப்பு முணர்த்தும் எ - று. (௨௫—௨௭)

௩௨௪. பழுதுபயம் இன்றே.

௩௨௫. சாயன் மென்மை.

---

1. ௩௨௧, ௩௨௨, ௩௨௩ ஆகிய மூன்று நூற்பாக்களையும் இணைத்து ஒரே நூற்பா வாகக் கொள்வர் தெய்.

2. 'மென்மையும் செய்யும்' என்பது இளம். நச். தெய். ஆகியோர் பாடம்.

ஙஉகூ. முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே.

இ - ள்: 'பழுதுகழி வாழ்நாள்', 'சாயன் மார்பு' (பதிற் - கசு), 'மண்முழுதாண்ட' எனப் பழுது முதலாயின, பயமின்மையாகிய குறிப்பும் மென்மையாகிய பண்பும் எஞ்சாமையாகிய குறிப்புமுணர்த்தும் எ - று. (உஅ—ங0)

ஙஉஎ. வம்புநிலை யின்மை.

ஙஉஅ. மாதர் காதல்.

ஙஉகூ. நம்பும் மேவும் நசையா கும்மே.

இ - ள்: 'வம்புமாரி' (குறுந் - கூசு), 'மாதர் நோக்கு' (அகம் - கஙo), 'நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி' (அகம் - ககூஅ), 'பேரிசை நவிர மேஎ யுறையுங், காரி யுண்டி' (மலைபடு - அஉ) என வம்பும் மாதரும், நிலை யின்மையுங் காதலுமாகிய குறிப்புணர்த்தும்; நம்பும் மேவும் நசையாகிய குறிப்புணர்த்தும் எ - று.

மே - நசையாக. (ஙக—ஙங)

ஙஙo. ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.

இ - ள்: 'வேனிலுழந்த வறிதுயங் கோய்களிறு' (கலி - எ), 'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை' (கலி - கூசு), 'நிழத்த யானை மேய்புலம் படர' (மதுரை - ஙoங), 'கயலற லெதிரக் கடும்புனற் சாஅய்' (நெடுநல் - கஅ) என ஓய்தன் முதலாயின நுணுக்கமாகிய குறிப்புணர்த்தும் எ - று.

ஆய்ந்த தானை—பொங்குதல் விசித்தலானுணுகிய தானை. 'உள்ள' தென்றது, முன்னுணுகாதுள்ள தென்றவாறு. (ஙச)

ஙஙக. புலம்பே தனிமை.

ஙஙஉ. துவன்றுநிறை வாகும்.

ஙஙங. முரஞ்சன் முதிர்வே.

ஙஙச. வெம்மை வேண்டல்.

இ - ள்: 'புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி' (அகம் - எ) எனவும், 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்' (நற் - கஎo) எனவும், 'சூன்முரஞ் செழிவி' எனவும், 'வெங்காமம்' (அகம் - கரு) எனவும், புலம்பு முதலாயின, தனிமையும் நிறைவும் முதிர்வுமாகிய குறிப்பும் விரும்புதலாகிய பண்புமுணர்த்தும் எ - று. (ஙரு—ஙஅ)

ஙஙரு. பொற்பே பொலிவு.

ஙஙசு. வறிதுசிறி தாகும்.

ஙஙஎ. [1]ஏற்றம் நினைவுந் துணிவு மாகும்.

இ - ள்: 'பெருவரை யடுக்கம் பொற்ப' (நற் - ஙச) எனவும், 'வறிதுவடக் கிறைஞ்சிய' (பதிற் - உச) எனவும், 'கானலஞ் சேர்ப்பன் கொடுமை யேற்றி' (குறுந் - கசரு), 'எற்றேற்ற மில்லாருள் யானேற்ற

1. 'எற்றம்' எனப் பாடங்கொள்வர் நச்.

மில்லாதேன்' எனவும், பொற்பு முதலாயின முறையானே பொலிவும், சிறிதென்பதூஉம், நினைவும் துணிவுமாகிய குறிப்புமுணர்த்தும் எ-று. (௩௯—௪௩)

௩௩௮. பிணையும் பேணும் பெட்பின் பொருள.

இ-ள்: 'அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்' எனவும், 'அமரர்ப்பேணியு மாவுதி யருத்தியும்' (புறம்-௬௬) எனவும், பிணையும் பேணும், பெட்பின் பொருளாகிய புறந்தருதலென்னுங் குறிப்புணர்த்தும் எ-று.

'பெட்பின் பொருள' வென்றதனால், பெட்பின் பொருளாகிய விரும்புதலுணர்த்தலுங் கொள்க. அது வந்தவழிக் கண்டுகொள்க.

௩௩௯. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்.

இ-ள்: 'பணைத்துவீழ் பகழி' எனப் பணை யென்பது பிழைத்தலாகிய குறிப்புணர்த்தும்; அதுவே யன்றி 'வேய்மருள் பணைத்தோள்' (அகம்-௧) எனப் பெருப்பாகிய குறிப்பு முணர்த்தும் எ-று.

பெருமையாகிய பண்புணர்த்தாது பெருத்தலாகிய குறிப்புணர்த்துமென்பார் 'பெருப்'பென்றார். (௪௩)

௩௪௦. படரே உள்ளல் செலவும் ஆகும்.

இ-ள்; 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி' (புறம்-௪௭), 'கறவை கன்றுவயிற் படர' (குறுந்-௧௦௮) எனப் படரென்பது உள்ளுதலுஞ் செலவுமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (௪௪)

௩௪௧. பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள.

இ-ள்: 'பையுண்மாலை' (குறுந்-௧௯௫) எனவும், 'சிறுமை யுறுபவோ செய்பறி யலரே' (நற்-௧) எனவும், பையுளுஞ் சிறுமையும், நோயாகிய குறிப்புணர்த்தும் எ-று. (௪௫)

௩௪௨. எய்யா மையே அறியா மையே.

இ-ள்: 'எய்யா மையலை நீயும் வருந்துதி' (குறிஞ்சிப்-௮) என எய்யாமை அறிவின்மையாகிய குறிப்புணர்த்தும் எ-று.

அறிதற் பொருட்டாய் எய்தலென்றுனும் எய்த்தலென்றுனும் சான்றோர் செய்யுட்கண் வாராமையின், 'எய்யாமை' எதிர்மறையன்மை யறிக. (௪௬)

௩௪௩. 'நன்றுபெரி தாகும்.

இ-ள்: 'நன்று, மரிதுற் றனையாற் பெரும' (அகம்-௧௦) என நன்றென்பது பெரிதென்னுங் குறிப்புணர்த்தும் எ-று.

'பெருமை' யென்னுது 'பெரி'தென்றதனுன் நன்றென்பது வினையெச்சமாதல் கொள்க. (௪௭)

௩௪௪. தாவே வலியும் வருத்தமும் ஆகும்.

இ-ள்: 'தாவி னன்பொன் றைஇய பாவை' (அகம்-௨௧௨) எனவும், 'கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றென' (குறும்-௬௯) எனவும், தாவென்பது வலியும் வருத்தமுமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (௪௮)

௩௪௫. [1]தெவுக்கொளல் பொருட்டே.

௩௪௬. தெவ்வுப்பகை யாகும்.

இ-ள்: 'நீர்த் தெவுநிரைத் தொழுவர்' (மதுரை-௮௯) எனவும், 'தெவ்வுப் புலம்' எனவும், தெவுந் தெவ்வும், முறையானே கொள்ளுதலும் பகையுமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (௪௯-௫௦)

௩௪௭. விறப்பும் உறப்பும் வெறுப்புஞ் செறிவே.

இ-ள்: 'விறந்த காப்போ டுண்ணின்று வலியுறுத்தும்' எனவும், 'விறந்த விஞ்சி' எனவும்', 'வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்' (புறம்-௫௩) எனவும், விறப்பு முதலாயின செறிவென்னுங் குறிப்புணர்த்தும் எ-று. (௫௧)

௩௪௮. அவற்றுள்
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்.

இ-ள்: 'அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல' (பெரும்பாண்-௨௪௬) என விறப்பென்பது செறிவே யன்றி வெருவுதற் குறிப்புமுணர்த்தும் எ-று. (௫௨)

௩௪௯. கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள

இ-ள்: 'கம்பலை மூதூர்' (புறம்-௫௪) எனவும், 'ஒருபெருஞ் சும்மையொடு' எனவும், 'கலிகொளாய மலிபுதொகு பெடுத்த' (அகம்-௧௧) எனவும், 'உயவுப்புணர்ந் தன்றிவ் வழுங்க லூரே' (நற்-௨௦௩) எனவும், கம்பலை முதலாகிய நான்கும் அரவமாகிய இசைப் பொருண்மை யுணர்த்தும் எ-று. (௫௩)

௩௫௦. அவற்றுள்
அழுங்கல் இரக்கமுங் கேடும் ஆகும்.

இ-ள்: 'பழங்கணோட்டமு நலிய வழுங்கின னல்லனோ' (அகம்-௬௬) எனவும், 'குணனழுங்கக் குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர் கட்கு' (நாலடி-௩௫௩) எனவும், அழுங்கல், அரவமேயன்றி இரக்கமுங் கேடுமாகிய குறிப்புமுணர்த்தும் எ-று. (௫௪)

௩௫௧. கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்.

இ-ள்: 'கழுமிய ஞாட்பு' (களவழி-௧௧)'எனக் கழுமென்பது மயக்கமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (௫௫)

௩௫௨. செழுமை வளனுங் கொழுப்பும் ஆகும்.

இ-ள்: 'செழும்பல் குன்றம்' எனவும், 'செழுந்தடி தின்ற செந்நாய்' எனவும், செழுமை, வளனுங் கொழுப்புமாகிய பண்புணர்த்தும் எ-று. (௫௬)

௩௫௩. [2]விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையும்.

1. இளம். உரையில் இந்நூற்பா ௩௪௩-ஆம் நூற்பாவை அடுத்துள்ளது.
2. 'விழுமம் சீர்மையும் இடும்பையும் செய்யும்' என்பது இளம். பாடம்.
'விழுமம், சீர்மையும் சிறப்பும் இடும்பையும் செய்யும்' என்பது தெய். பாடம்.

இ - ள்: 'விழுமியோர்க் காண்டொறுஞ் செய்வர் சிறப்பு'(நாலடி-௧௫௯) எனவும், 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' (புறம்-௨௭) எனவும், 'நின்னுறு விழுமங் களைந்தோள்' (அகம்-௧௭௦) எனவும், விழுமம் முறையானே சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையுமாகிய குறிப் புணர்த்தும் எ - று. (௫௭)

௩௫௪. கருவி தொகுதி.

௩௫௫. கமம்நிறைந் தியலும்.

இ - ள் 'கருவி வானம்' (புறம்-௧௫௯) எனவும், 'கமஞ்சூன் மாமழை' (அகம்-௪௩, குறுந்-௧௫௮) எனவும், கருவியும் கமமும், தொகுதியும் நிறைவுமாகிய குறிப்புணர்த்தும் எ - று.

'கருவிவானம்' என்புழிக் கருவி-மின்னு, முழக்கு முதலாயவற்றது தொகுதி. (௫௮ - ௫௯)

௩௫௬. அரியே ஐம்மை.

௩௫௭. கவவகத் திடுமே.

இ - ள்: 'அரிமயிர்த் திரண்முன்கை' (புறம்-௧௧) எனவும், 'கழூஉ விளங் காரங் கவைஇய மார்பே' (புறம்-௧௯) எனவும், அரியுங் கவவும், ஐம்மையும் அகத்திடு மாகிய குறிப்புணர்த்தும் எ - று. (௬௦ - ௬௧)

௩௫௮. துவைத்தலுஞ் சிலைத்தலும் [1]இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்.

இ - ள்: 'வரிவளை துவைப்ப' எனவும், 'ஆமா நல்லேறு சிலைப்ப' (முருகு-௩௧௫) எனவும், 'கடிமரந் தடியு மோசை தன்னூர், நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப' (புறம்-௩௬) எனவும், 'ஏறிரங்கிருளிடை' (கலி-௪௬) எனவும், துவைத்தன் முதலாயின இசைப்பொருளுணர்த் தும் எ - று. (௬௨)

௩௫௯. அவற்றுள்
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.

இ - ள்: 'செய்திரங்காவினை' (புறம் - ௧௦) என இரங்கல், இசையே யன்றிப் பொருளது கழிவாகிய குறிப்பு முணர்த்தும் எ-று.

கழிந்த பொருள்பற்றி வருங் கவலையைக்'கழிந்தபொரு'ளென்றார். (௬௩)

௩௬௦. இலம்பா(டு) ஒற்கம் ஆயிரண்டும் வறுமை.

இ - ள்: 'இலம்படு புலவ ரேற்றகை நிறைய' (மலைபடு - ௫௭௬) எனவும், 'ஒக்க லொற்கஞ் சொலிய' (புறம்-௩௨௭) எனவும், இலம் பாடும் ஒற்கமும் வறுமையாகிய குறிப்புணர்த்தும் எ - று.

இலமென்னு முரிச்சொல், பெரும்பான்மையும் பாடென்னுந் தொழில்பற்றி யல்லது வாராமையின் 'இலம்பா'டென்றார். (௬௪)

௩௬௧. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.

இ - ள்: 'தருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து' (நெடுநல் - ௯௦) எனவும், 'பாய்புனல்' எனவும், ஞெமிர்தலும் பாய்தலும், பரத்த லாகிய குறிப்புணர்த்தும் எ - று. (௬௫)

1. 'இரக்கலும் இயம்பலும்' எனப் பாடங் கொள்வர் தெய்.

ருசுஉ. [1]கவர்வுவிருப் பாகும்.

ருசுரு. சேரே திரட்சி.

ருசுச. வியலென் கிளவி அகலப் பொருட்டே.

இ - ள்: 'கவர்நடைப் புரவி' (அகம் - கங௦) எனவும், 'சேர்ந்து செறி குறங்கு' (நற்-கஎ௦) எனவும், 'வியலுலகம்' எனவும், கவர்வு முதலாயின முறையானே விருப்புந் திரட்சியும் அகலமுமாகிய குறிப் புணர்த்தும் எ - று. (சுசு - சுஅ)

ருசுரு. [2]பேநாம் உருமென வரூஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.

இ - ள்: 'மன்ற மராஅத்த பேமுதிர் கடவுள்' (குறுந் - அஎ) என வும், 'நாமநல்லார்' எனவும், 'உருமில் சுற்றம்' (பெரும்பாண் - சசஎ) எனவும், பே முதலாகிய மூன்றும் அச்சமாகிய குறிப்புணர்த்தும் எ - று. (சுகூ)

ருசுசு. வயவலி யாகும்.

ருசுஎ. வாளொளி யாகும்.

ருசுஅ. துயவென் கிளவி அறிவின் திரிபே.

இ - ள்: 'துன்னருந் துப்பின் வயமான்' (புறம் - சச) எனவும், 'வாண்முகம்' (புறம் - சு) எனவும், 'துயவுற்றேம் யாமாக' எனவும் வயமுதலாயின, வலியும் அறிவு வேறுபடுதலுமாகிய குறிப்பும் ஒளி யாகிய பண்புமுணர்த்தும் எ - று. (எ௦-எஉ)

ருசுகூ. உயாவே உயங்கல்.

ருஎ௦. உசாவே சூழ்ச்சி.

ருஎக. வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்.

இ - ள்: 'பருந்திருந் துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை' (அகம் - ககூ) எனவும், 'உசாத்துணை' (குறுந் - உ௦எ) எனவும், 'வயவுறு மகளிர் (புறம் - உ௦) எனவும், உயா முதலாயின, முறையானே உயங் கலுஞ் சூழ்ச்சியும் வேட்கைப் பெருக்கமுமாகிய குறிப்புணர்த்தும் எ - று. (எரு - எரு)

ருஎஉ. கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள.

இ - ள்: 'நிற்கறுப்பதோ ரருங்கடி முனையள்' எனவும், 'நீ சிவந் திறுத்த நீரழி பாக்கம்' (பதிற் - கரு) எனவும், கறுப்புஞ் சிவப்பும், வெகுளியாகிய குறிப்புணர்த்தும் எ - று.

'கருமை செம்மை'யென்னுது 'கறுப்புச் சிவப்'பென்றதனுன், தொழிற்பட்டுழியல்லது அவை வெகுளி யுணர்த்தாமை கொள்க. (எசு)

ருஎரு. நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப.

இ - ள்: 'கறுத்த காயா', 'சிவந்த காந்தள்' (பதிற் - கரு) என அவை வெகுளியேயன்றி நிறவேறுபாடுணர்த்தற்கு முரிய எ - று.

---

1. 'கவர்பு' எனப் பாடங் கொள்வர் தெய்.
2. 'பேஎநாம்', 'பேம் நாம்' என்பன முறையே தெய். நச். ஆகியோர் பாடம்.

இவை வெளிப்படு சொல்லாயினும், 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' வென்றதனுல், கருங்கண், செவ்வாய் எனப் பண்பாயவழி யல்லது தொழிலாயவழி நிறவேறுபா டுணர்த்தாவென்பது படுதலின், அதனைப் பாதுகாத்தவாறு. (எஎ)

௩௭௪. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.

இ - ள்: 'நொசிமட மருங்குல்' (கலி - ௬௦) எனவும், 'நுழைநூற் கலிங்கம்' (மலைபடு - ருசுக) எனவும், 'நுணங்குதுகி னுடக்கம் போல' (நற் - கரு) எனவும் நொசிவு முதலாயின, நுண்மையாகிய பண் புணர்த்தும் எ - று. (எஅ)

௩௭௫. புனிறென் கிளவி யீன் றணிமைப் பொருட்டே.

இ - ள்: 'புனிற்ருப் பாய்ந்தெனக் கலங்கி' (அகம் - ருசு) எனப் புனிறென்பது ஈன்றணிமையாகிய குறிப்புணர்த்தும் எ - று. (எகூ)

௩௭௬. நனவே களனும் அகலமுஞ் செய்யும்.

இ-ள்: 'நனவுப்புகு விறலியிற் ரேன்று நாடன்' (அகம்-அ௨) எனவும், 'நனந்தலை யுலகம்' (பதிற்-௬௩) எனவும், நனவு, களனும் அகலமு மாகிய குறிப்புணர்த்தும் எ-று. (அ௦)

௩௭௭. மதவே மடனும் வலியும் ஆகும்.

இ-ள்: 'பதவு மேய்ந்த மதவுநடை நல்லான்' (அகம்-கச) எனவும், 'கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு' (அகம்-௩௬) எனவும், மதவென் பது மடனும் வலியுமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (அக)

௩௭அ. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே.

இ-ள்: 'மதவிடை' (பெரும்பாண்-௬௩) எனவும், 'மாதர் வாண் முக மதைஇயநோக்கே' (அகம்-௧௩௦) எனவும், மடனும் வலியுமே யன்றி, மிகுதியும் வனப்புமாகிய குறிப்புஞ் சிறுபான்மை யுணர்த்தும் எ-று.

'மதவிடை' யென்புழி மிகுதி, உள்ள மிகுதி. (அ௨)

௩௭கூ. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.

இ-ள்: 'மீனெடு பெயரும் யாண ரூர' (நற்-௨க௦) என யாண ரென்பது வாரி புதிதாகப் படுதலாகிய குறிப்புணர்த்தும் எ-று. (அ௩)

௩அ௦. அமர்தல் மேவல்.

௩அக. யாணுக் கவினும்.

இ-ள்: 'அகனமர்ந்து செய்யா ளுறையும்' (குறள்-அச) எனவும், 'யாணது பசலை' (நற் - ரு௦) எனவும், அமர்தலும் யாணும், முறை யானே மேவுதலுங் கவினுமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (அச-அரு)

௩அ௨. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

இ-ள்: 'நெல்லுகுத்துப் பரவுங் கடவுளுமிலவே' (புறம்-௩௩ரு) எனவும், 'கைதொழூஉப் பழிச்சி' (மதுரை-௬௬ச) எனவும், பரவும் பழிச் சும், வழுத்துதலாகிய குறிப்புணர்த்தும் எ-று. (அசு)

௩அ௩. கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்ச முன்தேற்(று) ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.

இ-ள்: கடியென்னு முரிச்சொல் வரைவு முதலாகிய பத்துக் குறிப்பு முணர்த்தும் எ-று.

எ-டு: 'கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு' (குறள்-சுருஅ) என வரைவும், 'கடிநுனைப் பகழி' எனக் கூர்மையும், 'கடிகா' (களவழி-உகூ) எனக் காப்பும், 'கடிமலர்' எனப் புதுமையும், 'கடுமான்' (அகம்-கஙச) என விரைவும், 'கடும்பகல்' (அகம்-கஙஅ) என விளக்கமும், 'கடுங்கா லொற்றலின்' (பதிற்-உரு) என மிகுதியும், 'கடுநட்பு' எனச் சிறப்பும், 'கடியையா னெடுந்தகை செருவத் தானே' (பதிற்-சுக) என அச்சமும், 'கொடுஞ்சுழிப் புகார்த்தெய்வ நோக்கிக் கடுஞ்சூ டருகுவ னினக்கே' (அகம் - கo) என முன்தேற்றும் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

முன்தேற்று - புறத்திலன்றித் தெய்வமுதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல். (அஎ)

ஙஅச. ஐயமுங் கரிப்பும் ஆகலும் உரித்தே.

இ-ள்: 'கடுத்தன எல்லளோ வன்னை' (ஐங்குறு-ககூச) எனவும், 'கடிமிளகு தின்றகல்லா மந்தி' எனவும், கடியென்கிளவி மேற்கூறப் பட்ட பொருளே யன்றிச் சிறுபான்மை [1]ஐயமாகிய குறிப்புங் கரிப் பாகிய பண்பு முணர்த்துதற்கு முரித்து எ-று. (அஅ)

ஙஅரு. ஐவியப் பாகும்.

ஙஅசூ. முனைவுமுனி வாகும்.

ஙஅஎ. வையே கூர்மை.

ஙஅஅ. எறுழ்வலி யாகும்.

இ-ள்: 'ஐதே காமம் யானே' (நற்-கசங) எனவும், 'சேற்றுநில முனைஇய செங்கட் காரான்' (அகம்-சசூ) எனவும், 'வைநுனைப் பகழி' (முல்லை-எங) எனவும், 'போரெறுழ்த் திணிதோள்' (பெரும்பாண்-சூங) எனவும், ஐ முதலாயின முறையானே வியப்பும் முனிவுங் கூர்மையும் வலியுமாகிய குறிப்புணர்த்தும் எ-று. (அகூ-கூஉ)

ஙஅகூ. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியால் புணர்த்தனர் உணர்த்தல்
தத்த மரபில் தோன்றுமன் பொருளே.

இ - ள்: இச்சொல் இப்பொருட்குரித்தென மேற்கூறப்பட்ட உரிச்சொ லெல்லாவற்றையும், அவற்று முன்னும் பின்னும் வருமொழி களை ஆராய்ந்து, அம்மொழிகளுட் டக்க மொழியாலே ஒருபொரு ளுணர்த்துக; இவ்வாறுணர்த்தவே, வரலாற்று முறைமையாற் றத்தமக்குரித்தாய் பொருள் விளங்கும் எ - று.

இஃது என்சொல்லியவாறோவெனின்:— 'உறுதவ நனியென வருஉ மூன்று, மிகுதி செய்யும் பொருள வென்ப' (சொல் - உகூக) எனவும், 'செல்ல லின்ன லின்னா மையே' (சொல் - ஙoஉ) எனவும், ஓதியவழி, அவை வழக்கிடைப் பயின்ற சொல்லன்மையான் இவை மிகுதியும் இன்னாமையு முணர்த்துமென்று ஆசிரியராணையாற் கொள் வதல்லது வரலாற்றுாற் பொருளுணர்த்துமெனப்படாவோ வென்று

1. 'கடுத்தபின், தேற்றுதல் யார்க்கும் அரிது' (குறள்-சூகூங) என்பதும் காண்க.

ஐயுறுவார்க்கு, 'உறுகால்' (நற்-௩௭), 'தவப்பல' (புறம்-உ௩௫), 'நனி சேய்த்து' (ஐங்குறு - ௪௪௩) எனவும், 'மணங்கமழ் வியன்மார் பணங் கிய செல்லல்' (அகம் - உஉ) எனவும், முன்னும் பின்னும் வருஞ்சொன் னோடு அவற்றுள் இச்சொல்லோடு இவ்வுரிச்சொல் இயையுமென்று கடைப்பிடிக்கத், தாம் புணர்த்த சொற்கேற்ற பொருள் விளங்குத லின், உரிச்சொல்லும் வரலாற்றாற் பொருளுணர்த்து மென்பது பெறப் படுமென ஐயமகற்றியவாறெனக் கொள்க. வரலாற்றாற் பொரு ளுணர்த்தாவாயின், குழுவின் வந்த குறிநிலைவழக்குப்போல இயற் கைச் சொல்லெனப்படா வென்பது. (௯௩)

௩௯௦. கூறிய கிளவிப் பொருள்நிலை [1]அல்ல
வேறுபிற தோன்றினும் [2]அவற்றொடுங் கொளலே.

இ - ள்: முன்னும் பின்னும் வருபவை நாடியவழி, உரிச்சொற்குக் கூறப்பட்ட பொருளேயன்றிப் பிற பொருடோன்றுமாயினும், கூறப் பட்டவற்றோடு அவற்றையுங்கொள்க எ - று.

எ - டு: 'கடிநாறும் பூந்துணர்' என்றவழிக் கடியென்பது முன் னும் பின்னும் வருபவை நாட, வரைவு முதலாயின பொருட்கேலாது மணப் பொருட்டாயினவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன. (௯௪)

௩௯௧. பொருட்குப்பொருள் தெரியின் அதுவரம் பின்றே.

பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்திப் பொருளுணர்த்துங்காற் படுமுறைமை யுணர்த்துகின்றார்.

இ - ள்: ஒருசொல்லை ஒருசொல்லாற் பொருளுணர்த்தியவழி அப்பொருளுணர்த்த வந்த சொற்கும் பொருள் யாதெனப் பொருட் குப் பொருடெரியுமாயின், மேல் வருவனவற்றிற்கெல்லாம் ஈதொத் தலின், அவ்வினா இறைவரம்பின்றியோடும்; அதனாற் பொருட்குப் பொருடெரியற்க எ - று.

ஒரு சொற்குப் பொருளுரைப்பது பிறிதோர் சொல்லானன்றே; அச்சொற்பொருளும் அறியாதானை உணர்த்துமா றென்னையெனின், அது வருகின்ற சூத்திரத்தாற் பெறப்படும். (௯௫)

௩௯௨. பொருட்குத்திரி பில்லை உணர்த்த வல்லின்.

இ - ள்: 'உறுகால்' (நற்-௩௭) என்புழி உறுவென்னுஞ் சொற்குப் பொருளாகிய மிகுதி யென்பதன் பொருளும் அறியாத மடவோனா யின், அவ்வாறு ஒருபொருட்கிளவி கொணர்ந்துணர்த்தலுறாது கடுங் காலது வலிகண்டாய், ஈண்டு உறுவென்பதற்குப் பொருளென்று தொடர்மொழி கூறியானும், கடுங்காலுள்வழிக் காட்டியானும், அம் மாணாக்கனுணரும் வாயிலறிந்து உணர்த்தல் வல்லனாயின் அப்பொரு டிரிபுபடாமல் அவனுணரும் எ - று.

அவற்றானு முணர்தலாற்றாதானை உணர்த்துமாறென்னையெனின், அதற்கன்றே வருஞ்சூத்திர மெழுந்ததென்பது. (௯௬)

௩௯௩. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.

---

1. 'அல்லது' என்பது இளம். நச். தெய். ஆகியோர் பாடம்.
2. 'அவற்றொடு' என்பது இளம். நச். ஆகியோர் பாடம்.

இ - ள்: வெளிப்படத் தொடர்மொழி கூறியானும் பொருளைக் காட்டியானும் உணர்த்தவும் உணராதானை உணர்த்தும் வாயிலில்லை; உணர்ச்சியது வாயில் உணர்வோர துணர்வை வலியாகவுடைத்தாக லான் எ - று.

யாதானு மோராற்று னுணருந்தன்மை அவற்கில்லையாயின், அவனை யுணர்த்தற்பாலனல்ல னென்றவாறு. (சுஎ)

நகூச. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

இ - ள்: உறு தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொரு ளாதல் வரலாற்று முறைமையாற் கொள்வதல்லது, அவை அப் பொருளவாதற்குக் காரணம் விளங்கத் தோன்றா எ - று.

பொருளொடு சொற்கியைபு இயற்கை யாகலான் அவ்வியற்கை யாகிய இயைபாற் சொற்பொரு ளுணர்த்துமென்ப ஒரு சாரார். ஒரு சாரார் பிறகாரணத்தா னுணர்த்து மென்ப. அவற்றுண் மெய்ம்மை யாகிய காரணம் ஆசிரியர்க்குப் புலனாவதல்லது நம்மனோர்க்குப் புலனா காமையின், 'மொழிப்பொருட் காரண மில்லை' யென்னாது 'விழிப்பத் தோன்றா' வென்றார். அக்காரணம் பொதுவகையான் ஒன்றாயினுஞ் சொற்றோறு முண்மையிற் சிறப்பு வகையாற் பலவாம்; அதனான் 'விழிப் பத்தோன்றா' வெனப் பன்மையாற் கூறினார்.

உரிச்சொற்பற்றி யோதினாரேனும், ஏனைச்சொற்பொருட்கு மிதொக்கும். (சுஅ)

நகூடு. எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல்(பு) இன்றே.

இ - ள்: முதனிலையும் இறுதிநிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருளுணர்த்தல் உரிச்சொல்லிடத்தியைபுடைத்தன்று எ - று.

'இவணியல்பின்'றெனவே, எழுத்துப் பிரிந்து பொருளுணர்த்தல் பிறாண்டு இயல்புடைத் தென்பதாம். அவையாவன: வினைச்சொல்லும் ஒட்டுப் பெயருமாம். பிரிதலும் பிரியாமையும் பொருளுணர்த்துவன வற்றிற்கே யாகலின், கூறை கோட்படுதல் கடவுளர்க்கு எய்தாதவாறு போல, இடைச் சொற்கு இவ்வாராய்ச்சி யெய்தாமை யறிக.

தவ நனியென்னுந் தொடக்கத்தக்கன குறிப்பு வினையெச்சம் போலப் பொருளுணர்த்தலின், அவைபோலப் பிரிக்கப்படுங்கொல்லோ வென்றையுறுமை ஐயமகற்றியவாறு. (சுக)

நகூசு. அன்ன பிறவுங் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் லெல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்(து)
ஓம்படை ஆணையிற் கிளந்தவற் றியலான்
பாங்குற வுணர்தல் என்மனார் புலவர்.

இ - ள்: அன்ன பிறவுங் கிளந்தவல்ல பன்முறையானும் பரந்தன வரூஉம் உரிச்சொல்லெல்லாம் என்பது, சொல்லப்பட்டனவே யன்றி அவைபோல்வன பிறவும் பலவாற்றானும் பரந்துவரு முரிச்சொல் லெல்லாம் எ - று.

பொருட்குறை கூட்ட வியன்ற மருங்கினினைத்தென வறியும் வரம்பு தமக்கின்மையின் என்பது, பொருளொடு புணர்த்துணர்த்த இசை குறிப்புப் பண்புபற்றித் தாமியன்ற நிலத்து இத்துணையென வரையறுத்துணரு மெல்லை தமக்கின்மையான் எஞ்சாமைக் கிளத்த லரிதாகலின் எ - று. ௧

வழிநனி கடைப்பிடித்தோம்படை யாணையிற் கிளந்தவற்றியலாற் பாங்குறவுணர்தல் என்பது, 'இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப், பெயரினும் வினையினு மெய்தடு மாறி' (சொல்-உகூஎ) எனவும், 'முன்னும் பின்னும் வருபவை நாடி' எனவுங் கூறிய நெறியைச் சோராமற் கடைப்பிடித்து 'எச்சொல் லாயினும் பொருள் வேறு கிளத்தல்' (சொல்-உகூஎ) எனவும், 'ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்தல், தத்த மரபிற் றோன்றுமன் பொருளே' (சொல்-ங அகூ) எனவும், என்றுற் றரப்பட்ட பாதுகாவ லாணையிற் [1]கிளந்தவற்றியல் பொடு மரீஇயவற்றை முறைப்பட வுணர்க எ - று.

குறிப்புப்பொருண்மை பலவகைத்தாகலானும், 'பெயரினும் வினை யினு மெய்தடுமாறியுந் தடுமாறுதும் ஒருசொற் பலபொருட் குரித்தா யும் வருதலானும், ஈறுபற்றித் தொகுத்துணர்த்தற்கு அன்னவீறுடைய வன்மையானும், 'பன்முறை யானும் பரந்தன வருஉம்' என்றார்; பொருளைச் சொல் இன்றியமையாமையின், 'அதனைக் 'குறை' யென்றார்; ஒருவன் வினையும் பயனும் இன்றியமையாயின், 'வினைக்குறை தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு' (குறள்-கூகஉ), 'பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே' (புறம் - கஅஅ) என்றாற்போல, 'பொருட் குறை கூட்ட வரம்பு தமக் கின்மையி' னென இயையும்.

இருமை யென்பது கருமையும் பெருமையுமாகிய பண்புணர்த்தும். சேணென்பது சேய்மையாகிய குறிப்புணர்த்தும். தொன்மை யென் பது பழமையாகிய குறிப்புணர்த்தும். இவையெல்லாம் 'அன்ன பிறவுங் கிளந்த வல்ல'வென்பதனாற்கொள்க. பிறவுமன்ன. (௧௦௦)

உரியியல் முற்றிற்று.

## கூ. எச்சவியல்

உகூஎ. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்(று)
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

கிளவியாக்க முதலாக உரியிய லிறுதியாகக் கிடந்த ஓத்துக்களுள் உணர்த்துதற் கிடமின்மையான் உணர்த்தப்படாது எஞ்சி நின்ற சொல்லிலக்கணமெல்லாந் தொகுத்துணர்த்திய வெடுத்துக்கொண் டார். அதனான் இவ்வோத்து எச்சவியலென்னும் பெயர்த்தாயிற்று.

---

1. 'கிளந்தவற்றியல்பொடும் ஒரீஇயவற்றை' என்பது தாமோதரம்பிள்ளைப் பதிப்பில் உள்ள பாடம்.

'கண்டீரென்ற' (சொல்-சஉடு) எனவும், 'செய்யாயென்னு முன்னிலை வினைச்சொல்' (சொல்-சுடுo) எனவும், 'உரிச்சொன் மருங்கினும்' (சொல்-சுடுகூ) எனவும், 'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி' (சொல்-சகூக) எனவும், இவை முதலாகிய சூத்திரங்களா னுணர்த்தப்பட்ட அசைநிலையும் வினைச்சொல் லிலக்கணமும் வழுவமைதியும் அவ்வோத்துக்களு ளுணர்த்தாது ஈண்டுணர்த்திய தென்னையோவெனின்:— அதற்குக் காரணம் அவ்வச்சூத்திர முரைக்கும்வழிச் சொல்லுதும்.

பலபொருட்டொகுதிக்கு ஒன்றனாற் பெயர் கொடுக்குங்கால் தலைமையும் பன்மையும் பற்றிக் கொடுப்பினல்லது பிறிதாறின்மையானும், தலைமையும் பன்மையும் எச்சத்திற்கின்மையானும், [1]பத்துவகையெச்சம் ஈண்டு உணர்த்தலான் எச்சவியலாயிற்றென்றல் பொருந்தாமை யுணர்க.

செய்யுட்குரிய சொல்லும், அவற்றதிலக்கணமும், அவற்றாற் செய்யுள் செய்வுழிப்படும் விகாரமும், செய்யுட் பொருள்கோளும், எடுத்துக் கோடற்க ணுணர்த்துகின்றார்.

இ - ள்: இயற்சொல்லும், திரிசொல்லும், திசைச்சொல்லும், வடசொல்லும் என அத்துணையே செய்யுளீட்டுதற்குரிய சொல்லாவன எ - று.

இயற்சொல்லானுஞ் செய்யுட்சொல்லாகிய திரிசொல்லானுமேயன்றித் திசைச்சொல்லும் வடசொல்லும் இடைவிராய்ச் சான்றோர் செய்யுள் செய்யுமாறு கண்டு ஏனைப்பாடைச் சொல்லுஞ் செய்யுட்குரியவோவென் றையுற்றார்க்கு, இந்நான்கு சொல்லுமே செய்யுட்குரியன; பிறபாடைச்சொல் உரியவல்லவென்று வரையறுத்தவாறு.

செய்யுள் செய்யலாவது ஒருபொருண்மேற் பலசொற் கொணர்ந்தீட்டலாகலான், 'ஈட்ட'லென்றார்.

பெயர்வினையிடையுரி யென்பன இயற்சொற் பாகுபாடாகலான், இயற்சொல் அந்நான்கு பாகுபாட்டானுஞ் செய்யுட்குரித்தாம். திரிசொற் பெயராயல்லது வாரா. 'என்மனா' ரென்பதனை வினைத்திரிசொல் என்பாருமுளர். அஃது 'என்றிசினோர்', 'பெறலருங்குரைத்து' (புறம்-ரு) என்பனபோலச் செய்யுண்முடிபுபெற்று நின்றதென்றலே பொருத்தமுடைத்து. தில்லென்னு மிடைச்சொல், தில்லவென்றானுந் தில்லையென்றானும் திரிந்து நின்றவழி அவை வழக்கிற்குமுரியவாகலின், திரிசொல்லெனப்படா. 'கடுங்கால்' என்புழிக் கடியென்னு முரிச்சொல், 'பெயரினும் வினையினு மெய்தடுமாறி' (சொல்-உகூஎ) என்பதனாற் பண்புப்பெயராய் பெயரொடு தொக்கு வழக்கினுட் பயின்று வருதலால், திரிசொல்லெனப்படாது. திசைச்சொல்லுள் ஏனைச் சொல்லுமுளவேனும், செய்யுட் குரித்தாய் வருவது பெயர்ச்சொல்லேயாம். வடசொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட் குரியவாய் வாரா. இவ்வாறுதல் சான்றோர் செய்யுள் நோக்கிக் கண்டுகொள்க. (க)

ருகூஅ. அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் [2]வழாமை யிசைக்குஞ் சொல்லே.

---

1. இக்கருத்தினர் யாரெனத் தெரிந்திலது. 2. 'வழாஅமை யிசைக்கும்' என்பது இளம். பாடம். 'வழாம லிசைக்கும்' என்பது தெய். பாடம்.

இ-ள்: அந்நான்கனுள், இயற்சொல்லென்று சொல்லப்பட்ட சொற்றும், செந்தமிழ்நிலத்து வழக்காதற்குப் பொருந்திக் கொடுந்தமிழ் நிலத்துந் தம்பொருள் வழுவாமலுணர்த்துஞ் சொல்லாம் எ-று.

அவையாவன: நிலம், நீர், தீ, வ்ளி, சோறு, கூழ், பால், தயிர், மக்கள், மா, தெங்கு, கமுகு என்னுந் தொடக்கத்தன.

செந்தமிழ்நிலமாவன, வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்.

திரிபின்றி இயல்பாகிய சொல்லாகலின் இயற்சொல்லாயிற்று. கொடுந்தமிழ் நிலத்திற்கும் பொதுவாகலின் இயற்சொல்லாயிற்றெனினுமமையும். நீரென்பது ஆரியச்சிதைவாயினும் அப்பொருட்கு அதுவே சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ் நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லாயிற்று. பிறவு மிவ்வாறு வருவன இயற்சொல்லாகக் கொள்க.

'தா'மென்பது கட்டுரைச்சுவைபட நின்றது. (உ)

௩௯௯. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி.

இ-ள்: ஒருபொருள் குறித்து வரும் பலசொல்லும் பலபொருள் குறித்து வரும் ஒருசொல்லுமென இருவகைப்படுந் திரிசொல் எ-று.

எ-டு: வெற்பு, விலங்கல், விண்டு என்பன ஒருபொருள் குறித்த வேறுபெயர்க்கிளவி. எகின மென்பது அன்னமும் கவரிமாவும் புளிமாவும் நாயு முணர்த்தலானும், உந்தி யென்பது யாழ்ப்பத்தருறுப்பும் கொப்பூழும் தேர்த்தட்டும் கான்யாறு முணர்த்தலானும், இவை வேறுபொருள் குறித்த ஒருசொல்.

திரிசொல்லது திரிவாவது உறுப்புத் திரிதலும் முழுவதுந் திரிதலுமென இருவகைத்து. கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத் திரிந்தன. விலங்கல், விண்டு என்பன முழுவதுந் திரிந்தன. முழுவதுந் திரிந்தனவற்றைக் [1]கட்டிய வழக்கென்பாருமுளர். அவை கட்டிய சொல்லாமாயிற் செய்யுள் வழக்காமாறில்லை; அதனான் அவையுந் திரிவெனல் வேண்டுமென்பது.

அஃதேல், பலசொல் ஒருபொருட் குரியவாதலும் ஒருசொல் பலபொருட்குரித்தாதலும், உரிச்சொல் முதலாகிய இயற்சொற்கு முண்மையான் அது திரிசொற் கிலக்கணமாமாறென்னையெனின்:— அது திரிசொற் கிலக்கண முணர்த்தியவாறன்று; அதனது பாகுபாடுணர்த்தியவாறு. திரிபுடைமையே திரிசொற்கிலக்கணமாதல் "சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்' என்பதனாற் பெற வைத்தார்.

கிள்ளை மஞ்ஞை யென்பன ஒருசொல் ஒருபொருட் குரித்தாகிய திரிசொல்லாதலின் இருபாற் றென்றல் நிரம்பாதெனின்:—அற்றன்று; ஆசிரியர் இருபாற்றென்ப திரிசொற்கிளவி எனத் தொகை கொடுத்தாராகலின், கிள்ளை மஞ்ஞை யென்பனவற்றோடு ஒருபொருட் கிளவியாய்

1. கட்டிய சொல்—ஆன்றோர் கூறியதாய்த் தொன்றுதொட்டு வருவதன்றி, இடைக்காலத்தே வழங்கி வரும் சொல்.

வரும் திரிசொலுள்வாக லொன்றோ, இவை பிறபொருள் படுத லொன்றோ, இரண்டனு ளொன்று திட்பமுடைத்தாதல் வேண்டும். என்னை? ஆசிரியர் பிற கூறாமையி னென்பது.

திரித்துக்கொண்டது இயற்கைச்சொல்லான் இன்பம்பெறச் செய்யுளிட்ட லாகாமையானன்றே; அதனால் 'திரிசொல்லெனவே, செய்யுட்குரித்தாதலும் பெறப்படும். (௩)

சoo. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

இ-ள்: செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலத்துந் தாங் குறித்த பொருள் விளக்குந் திசைச்சொல் எ-று.

என்றது, அவ்வந்நிலத்துத் தாங் குறித்த பொருள் விளக்குவதல் லது, அவ்வியற்சொற்போல எந்நிலத்துந் தம்பொருள் விளக்கா வென்றவாறும்.

பன்னிருநிலமாவன: பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலை நாடு, அருவாநாடு, அருவாவடதலை எனச் செந்தமிழ் நாட்டுத்தென்கீழ் பால் முதலாக வடகீழ்பாலிறுதியாக எண்ணிக் கொள்க.

எ-டு: தென்பாண்டி நாட்டார் ஆ எருமை என்பவற்றைப் பெற்றமென்றும், தம்மாமி யென்பதனைத் தந்துவையென்றும் வழங்குப. பிறவுமன்ன.

'தங்குறிப்பின'வென்று தனிமொழி தம்பொருளுணர்த்துமாற்றுக் குச் சொல்லினர். இருமொழி தொடருமிடத்துத் [1] தள்ளை வந்தான் என வேண்டியவாறு வரப்பெறு மென்றாரல்ல ரென்பது. (௪)

சoக. வடசொற் கிளவி வடவெழுத்(து) ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

இ-ள்: வடசொற் கிளவியாவது வடசொற்கே உரியவெனப் படுஞ் சிறப்பெழுத்தினீங்கி இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தானியன்ற சொல்லாம் எ-று.

எனவே, பொதுவெழுத்தா னியன்ற வடசொல்லும் செய்யுட் செய்தற்குச் சொல்லா மென்றவாறாயிற்று.

அவை: வாரி, மேரி, குங்குமம், மணி என்னுந்தொடக்கத்தன.

வடசொல்லாவது வடசொல்லோடொக்குந் தமிழ்ச்சொல்லென்றா ரால் உரையாசிரியரெனின்:—அற்றன்று; ஒக்குமென்று சொல்லப்படு வன ஒருபுடையா னொப்புமையும் வேற்றுமையுமுடைமையான் இரண் டாகல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மை யாகிய ஒரு சொல்லிலக்கண முடைமையான் இரண்டுசொல்லெனப் படா; அதனான் ஒத்தல் யாண்டையது; ஒரு சொல்லேயாமென்பது. ஒரு சொல்லாயினும் ஆரியமுந் தமிழுமாகிய இடவேற்றுமையால் வேறாயினவெனின்:—அவ்வாறாயின் வழக்குஞ் செய்யுளுமாகிய இட வேற்றுமையாற் சோறு கூழென்னுந் தொடக்கத்தனவும் இரண்டு சொல்லாவான் செல்லும்; அதனான்இடவேற்றுமையுடையவேனும் ஒரு

1. தள்ளை—தாய். 'தன்னை வந்தான்' என்பது முன்னைய பதிப்புக்களிலுள்ள பாடம்.

சொல்லிலக்கணமுடைமையான் ஒருசொல்லேயாம். ஒரு சொல்லாய வழித் தமிழ்ச்சொல் வடபாடைக்கட்செல்லாமையானும், வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாகலானும், இவை வடசொல்லாய் ஈண்டு வழங்கப்பட்டனவெனல்வேண்டும்; அதனுன் அது போலியுரை யென்க. அல்லதூஉம், அவை தமிழ்ச்சொல்லாயின் 'வடவெழுத் தொரீஇ' யென்றல் பொருந்தாமையானும், வடசொல்லதாலறிக. (ரு)

சo௬. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

இ - ள்: பொதுவெழுத்தானியன்றனவே யன்றி, வடவெழுத்தா னியன்ற வடசொற் சிதைந்து வரினும், பொருத்தமுடையன, செய்யு ளிடத்து வரையார் எ - று.

எ - டு: 'அரமிய வியலகத் தியம்பும்' (அகம் - சஉச) எனவும், 'தசநான் கெய்திய பணைமருணேன்ருள்' (நெடுநல் - ககரு) எனவும், வரும்.

'சிதைந்தன வரினு'மெனப் பொதுப்படக் கூறியவதனுன், ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் பாகதமாய்ச் சிதைந்து வருவனவுங் கொள்க.

இச்சூத்திரத்தானும் அவை தமிழ்ச்சொ லன்மையறிக. (சு)

சoஎ. அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித்தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்.

இ - ள்: இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொல்லென்னு நான்கு சொல்லேயுஞ் செய்யுளாகத் தொடுக்குங்கால், மெலியதனை வலிக்கவேண்டும்வழி வலித்தலும், வலியதனை மெலிக்கவேண்டும்வழி மெலித்தலும், குறைவதனை விரிக்கவேண்டும்வழி விரித்தலும், மிகுவதனைத் தொகுக்கவேண்டும்வழித் தொகுத்தலும், குறியதனை நீட்டவேண்டும்வழி நீட்டலும், நெடியதனைக் குறுக்கவேண்டும்வழிக் குறுக்கலுமாகிய அறுவகை விகாரமும், செய்யுளின்பம்பெறச் செய்வான் நாட்டுதலை வலியாகவுடைய எ - று.

எ - டு: 'குறுத்தை யிரும்புலி' (ஐங்-உசுசு), 'முத்தை வருஉங் காலந் தோன்றின்' (எழுத்-ககூச) என்பன வலிக்கும்வழி வலித்தல். 'சுடுமண்பாவை', 'குன்றிய லுகரத் திறுதி' (சொல்-க) என்பன மெலிக் கும்வழி மெலித்தல். 'தண்ணந் துறைவன்' (குறுந்-உகூசு) என்பது விரிக்கும்வழி விரித்தல். 'மழவ ரோட்டிய' (அகம்-க) என்பது தொகுக் கும்வழித் தொகுத்தல். 'குன்றி கோபங் கொடிவிடு பவள மொண்செங் காந்தளொக்கு நின்னிறம்'என்புழிச் செவ்வெண்ணின் றொகை தொக்கு நிற்றலின் இதுவுமது. 'வீடுமின்' என்பது நீட்டும்வழி நீட்டல். 'பாசிலை' (புறம்-ருச)யென்பது காட்டுவாருமுளர்[1]. உண்டார்ந்தென்பது உண் டருந்தெனக் குறுகி நிற்றலிற் குறுக்கும்வழிக் குறுக்கல். 'அழுந்துபடு விழுப்புண்' (நற் - கூஎ) என்பதுமது. பிறவுமன்ன.

1. காட்டுவர்—இளம்.

'நாட்டல் வலிய'வென்றது, இவ்வறுவகை விகாரமும் இன்னுழியா மென்று வரையறுக்கப்படா; செய்யுள் செய்யுஞ் சான்றோர் அணிபெற நாட்டலைத் தமக்கு வலியாகவுடைய வென்றவாறு. நாட்டல்-நிலை பெறச் செய்தல். (எ)

௪௦௪. நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்(று)
[1]அவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே.

இனிச்செய்யுளிடத்து விகாரவகையான் மொழிகள் தம்முட் புணருமாறு கூறுகின்றார்.

இ - ள்: நிரனிறையும், சுண்ணமும், அடிமறியும், மொழிமாற்று மென நான்கென்று சொல்லுப; அந்நான்கு சொல்லுஞ் செய்யுளிடத் துத் தம்முட்புணருமுறையை எ - று.

'நான்கு சொல்லு'மென்பதூஉஞ் 'செய்யுளிடத்'தென்பதூஉம் அதிகாரத்தாற் பெற்றாம்.

நிரனிறையுஞ் சுண்ணமும் மொழிமாற்றாத லொக்குமாயினும், நிரனிற்றலும் அளவடியெண்சீரைச் சுண்ணமாகத் துணித்தலுமாகிய வேறுபாடுடைமையான், அவற்றைப் பிரித்து அவ்வேறுபாட்டாற் பெயர்கொடுத்து, வேறிலக்கணமில்லாத மொழிமாற்றை 'மொழி மாற்'றென்றார்.

இச்சூத்திரத்தான் 'மொழிபுணரியல்பு' நான்கென வரையறுத்த வாறு. (அ)

௪௦௫. அவற்றுள்
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

இ - ள்: அந்நான்கினுள், நிரனிறையாவது வினையானும் பெய ரானும் ஆராயத் தோன்றிச் சொல்வேறு நிற்பப் பொருள் வேறு நிற்றலாம் எ - று.

தொடர்மொழிப்பொருள் முடிக்குஞ் சொற்கண்ணதாகலான் முடிக்குஞ் சொல்லைப் 'பொரு'ளென்றார்.

'வினையினும் பெயரினு'மென்றதனான், வினைச்சொல்லான் வருவ தூஉம், பெயர்ச்சொல்லான் வருவதூஉம், அவ்விரு சொல்லான் வரு வதூஉமென நிரனிறை மூன்றாம்.

எ.-டு: 'மாசு போகவுங் காய்பசி நீங்கவும்—கடிபுனன் மூழ்கி யடிசில்கை தொட்டு' என முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச் சொல் வேறு வேறு நிற்றலின், வினை நிரனிறையாயிற்று. அவை மாசு போகப் புனன்மூழ்கி, பசி நீங்க அடிசில் கைதொட்டு என வியையும். 'கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி' என முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு வேறு நிற்றலின், பெயர் நிரனிறையாயிற்று. அவை நுசுப்புக் கொடி, உண்கண் குவளை, மேனி கொட்டை என வியையும்.

---

1. 'எனநான் கென்ப பொருள்புணர் இயல்பே' எனப் பாடங்கொள்வர் தெய்.

[1]'உடலு முடைந்தோடு மூழ்மலரும் பார்க்குங்
கடலிரு ளாம்பல்பாம் பென்ற—கெடலருஞ்சீர்த்
திங்க டிருமுகமாச் செத்து'

என முடிப்பனவாகிய வினையும் முடிவனவாகிய பெயரும் வேறுவேறு நிற்றலின், பொருணிரனிறையாயிற்று. அவை கடல் உடலும், இருள் உடைந்தோடும், ஆம்பல் ஊழ்மலரும், பாம்பு பார்க்கும் என வியையும்.

'நினையத்தோன்றி' யென்றதனால், சொல்லும் பொருளும் வேறு வேறு நிற்குங்கால் நிரல்பட நில்லாது,

'களிறும் கந்தும் போல நளிகடற்
கூம்புங் கலனுந் தோன்றுந்
தோன்றன் மறந்தோர் துறைகெழு நாட்டே'

என மயங்கி வருதலுங்கொள்க. (௯)

௪௰௯. சுண்ணம் தானே
பட்டாங் கமைந்த ஈரடி யெண்சீர்
ஒட்டுவழி யறிந்து துணித்தனர் இயற்றல்.

இ - ள்: சுண்ணமாவது இயல்பாக அமைந்த ஈரடிக்கணுள வாகிய எண்சீரைத் துணித்து இயையும்வழி அறிந்து கூட்டி இயற்றப் படுவதாம் எ - று.

அளவடியல்லாதன விகாரவடியாகலிற் பட்டாங்கமைந்தில வாதலிற் பட்டாங்கமைந்த வீரடியெனவே, அவ்வடியாதல் பெறப்படும். ஈரடியெண்சீர் விகாரவடியானும் பெறப்படுதலின், அவற்றை நீக்குதற்குப் 'பட்டாங்கமைந்த வீரடி'யென்றார். எனவே, சுண்ணம் அளவடியிரண்டனு ளல்லது பிறுண்டு வாராதென்பது.

எ - டு: 'சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை'

என்புழி, ஆழ, மிதப்ப, நீத்து, நிலையென்பனவும், சுரை, அம்மி, யானைக்கு, முயற் கென்பனவும், நின்றுழி நிற்ப இயையாமையின், சுரை மிதப்ப, அம்மி யாழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக் கூட்ட, இயைந்தவாறு கண்டுகொள்க.

சுண்ணம்போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலிற் 'சுண்ண' மென்றார். (௧௦)

௪௰௭. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

இ - ள்: அடிமறிச்செய்யுளாவது, சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தநிலையிற்றிரிந்து ஒன்றனிலைக்களத்து ஒன்று சென்று நிற்கும் எ-று.

எனவே, எல்லாவடியும் யாண்டுஞ் செல்லுமென்பதாம்.

---

1. "அடல்வே லமர்நோக்கி நின்முகங் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனைஇருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆமென்று தாம்" - என்பது தெய். காட்டும் மேற்கோள்.

எ - டு: 'மாறாக் காதலர் மலைமறந் தனரே
யாறாக் கட்பனி வரலா னாவே
வேறா மென்றோள் வளைநெகிழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே'

என வரும். இதனுட் சீர் நின்றாங்கு நிற்பப் பொருள் சிதையாமல் எல்லா வடியுந் தடுமாறியவாறு கண்டுகொள்க.

பெரும்பான்மையும் நாலடிச்செய்யுட்கணல்லது இப்பொருள்கோள் வாராதென்க.

'நிரனிறைதானே', 'சுண்ணந்தானே', 'மொழிமாற்றியற்கை' என்பனபோல, ஈண்டும் 'அடிமறிச்செய்தி'யென்பதனைக் குறளடியாக்கி, 'அடிநிலை திரிந்து சீர்நிலை திரியாது, தடுமா றும்மே பொருடெரி மருங்கின்' என்று சூத்திரமாக [1] அறுப்பாரு முளர். (௧௧)

௪௦அ. பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இருசீர் எருத்துவயின் [2] திரிபுந்
தோற்றமும் வரையார் அடிமறி யான.

இ - ள்: பொருளாராயுங்கால், அடிமறிச் செய்யுட்கண் ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற் சென்று திரிதலும் வரையார் எ - று.

'சீர்நிலை திரியாது தடுமாறு' (சொல் - ௪௦௭) மென்றாராகலின் சீர்நிலை திரிதலும் ஒருவழிக்கண்டு எய்தியதிகந்துபடாமற் காத்தவாறு.

இலக்கியம் வந்தவழிக் கண்டுகொள்க.

'எருத்துவயி' னென்பதற்கு 'ஈற்றயற்சீர்வயி' னென்று பொருளுரைத்து,

'சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
சார னாட நீவரு தியே
வார லெனினே யானஞ் சுவலே'

என்புழி அஞ்சுவல் யான் என இறுதிச்சீர் ஈற்றயற்சீர்வயிற் சென்று திரிந்ததென்று உதாரணங் காட்டினாரால் உரையாசிரியரெனின்:— யானஞ் சுவலென நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லுமாகலின் இவ்வாறு திரிதல் பொருந்தாமையின், அவர்க்கது கருத்தன்றென்க.

எல்லாவடியும் யாண்டுஞ் செல்லுமாயினும், உரைப்போர் குறிப்பான் 'எருத்'தென்றும் 'ஈற்றடி'யென்றுங் கூறினார்.

'உரைப்போர் குறிப்பி னுணர்வகை யன்றி
யிடைப்பான் முதலீ றென்றிவை தம்முண்
மதிக்கப் படாதன மண்டல யாப்பே.'

---

1. 'அடிமறிச்செய்தி
அடிநிலை திரிந்து சீர்நிலை திரியாது
தடுமா றும்மே பொருடெரி மருங்கின்'.
இவ்வாறு அறுப்பார் யாரெனத் தெரிந்திலது.
2. 'திரியும்' எனப் பாடங்கொள்வர் தெய்.

என உரைப்போர் குறிப்பான் முதலு மிடையு மீறுங்கோடல் [1]பிறருங் கூறினரென்பது. (கஉ)

௪௦௯. மொழிமாற் றியற்கை
சொல்நிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.

இ - ள்: மொழிமாற்றினதியல்பு, பொருளெதி ரியையுமாறு சொன்னிலையை மாற்றி முன்னும் பின்னும் கொள்ளும்வழிக் கொளுவுதலாம் எ - று.

எ - டு: 'ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன்முள்ளூர் வேங்கைவீ தாஞணுந் தோளா
ணிறனுள்ளா ருள்ள தலர்'

என இதனுள், பாரி பறம்பின்மேற் றண்ணுமைதாஞணுந் தோளாள் எனவும், நிறன் விறன்முள்ளூர் வேங்கைவீ எனவும், உள்ளாருள்ளதாகிய அலர் ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும் எனவும், முன்னும் பின்னுங் கொள்வழி யறிந்து கொளுவப் பொருளெதிரியைந்தவாறு கண்டுகொள்க.

மொழிமாற்று நின்று ஒன்றற்கொன்று செவ்வாகாமை கேட்டார் கூட்டியுணருமாற்றாற் கடாவல் வேண்டும். அல்லாக்கால், அவாய் நிலையுந் தகுதியுமுடையவேனும் அண்மையாகிய் காரணமின்மையாற் சொற்கள் தம்முளியையாவா மென்க. (கங)

௪௧௦. தநநுஎ எனும் அவைமுத லாகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா.

செய்யுட்குரிய சொல்லும், சொற்றொடுக்குங்காற்படும் விகாரமும் அவை செய்யுளாக்குங்காற் றம்முட்புணர்ந்து நிற்குமாறுமாகிய செய்யுளொழிபு உணர்த்தி, இனி வழக்கிலக்கணத்தொழிபு கூறுகின்றார்.

இ - ள்: த ந நு எ என்பனவற்றை முதலாக வுடையவாய்க் கிளைமை நுதலி வரும் பெயரும் பிரிக்கப்படா எ - று.

அவையாவன: தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்; நுமன், நுமள், நுமர்; எமன், எமள், எமர்; தம்மான், தம்மாள், தம்மார்; நம்மான், நம்மாள்; நம்மார், நும்மான், நும்மாள், நும்மார்; எம்மான், எம்மாள், எம்மார் என வரும்.

'உம்மையால்'பிற கிளைநுதற் பெயரும் பிரிக்கப் பிரியாவென்பதாம். அவை தாய், ஞாய், தந்தை, தன்னை என்னுந் தொடக்கத்தன.

இவற்றைப் பிரிப்பப் பிரியாவென்றது என்னையெனின்:—வெற்பன் பொருப்பன் என்னுந் தொடக்கத்து ஒட்டுப்பெயர் வெற்பு+அன், பொருப்பு+அன் எனப் பிரித்தவழியும், வெற்பு, பொருப்பு என்னு முதனிலை தம்பொருள் இனிது விளக்கும். தமன் எமன் என்பவற்றைத் தம்+அன், எம்+அன் எனப் பிரிக்கலுறின் தம், எம் என்பன முதனிலையாய்ப் பொருளுணர்த்துவனவாதல் வேண்டும்; அவை பொருளுணர்த்தாமையின், தமன், எமன் என வழங்கியாங்குக் கொள்வ

1. காக்கைபாடினியார்.

தல்லது பிரிக்கப் படாமையின், அவ்வாறு கூறினாரென்பது. பிறவு மன்ன. அஃதேல், தாம் யாம் என்பன அவற்றிற்கு முதனிலையாகப் பிரிக்கவே, அவையுந் தம் பொருளுணர்த்து மெனின்:—தமன், எமன் என்பன தன்கிளை என்கிளை எனவும், தங்கிளை எங்கிளை எனவும் முதனிலை வகையான் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாதலுடைய. ஒருமையுணர்த்துங்கால் தாம் யாம் என்பன பொருந்தாமையின் தான் யான் என்பனவே முதனிலையெனல் வேண்டும். வேண்டவே, இவ்வாறு பிரிப்பின் தமன் எமன் என்ன ஓரொன்றிரண்டு சொல்லாதல் வேண்டு தலான், எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையின் ஒரு சொல் லெனவே படும்; இரண்டு சொல்லென்றல் நிரம்பாமையின், அவ்வாறு பிரித்தலும் பொருத்தமின்றென்பது.

கிளைநுதற்பெயர் விளிமரபின்கட் பெறப்பட்டமையாற் பெய ரியலு ளுணர்த்தாராயினர். அதனால் ஆண்டியைபுபட்டின்றாகலான், பிரிப்பப் பிரியா ஒருசொல்லடுக்கோடியைய இதனை ஈண்டு வைத்தார்.

சுகக. [1]இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தலென்(று)
அவைமுன் றென்ப ஒருசொல் லடுக்கே.

இ - ள்: இசைநிறையும், அசைநிலையும், பொருள்வேறுபாட்டோடு புணர்வதுமென ஒருசொல்லடுக்கு அம்மூன்று வகைப்படும் எ - று.

எ - டு: 'ஏ ஏ ஏ ஏ யம்பன் மொழிந்தனள்' என்றது இசை நிறை. மற்றோ மற்றோ; அன்றே அன்றே என்பன அசைநிலை. பாம்பு, பாம்பு; அவ னவன்; வைதேன் வைதேன்; உண்டு உண்டு, போம் போம் என் பன, முறையானே விரைவுந் துணிவும் உடம்பாடும் ஒருதொழில் பல கால் நிகழ்தலுமாகிய பொருள்வேறுபா டுணர்த்தலிற் பொருளொடு புணர்தல். பொருள் வேறுபாடு பிறவுமுளவேல் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க.

அடுக்கு ஒருசொல்லது விகாரமெனப்படும்; இரண்டு சொல்லாயின் இருபொருளுணர்த்துவ தல்லது இப்பொருள் வேறுபாடுணர்த்தாமையி னென்பது. (கரு)

சுகஉ. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்(று)
அவ்வா றென்ப தொகைமொழி நிலையே.

இனித் தொகையிலக்கண முணர்த்துகின்றார்.

இ - ள்: வேற்றுமைத்தொகை முதலாகத் தொகைச்சொல்ஆறும் எ - று.

வேற்றுமையுருபும் உவமவுருபும் உம்மையும் வினைச்சொல்லீறும் பண்புச்சொல்லீறுந் தொகுதலிற் றொகையாயின வென்பாரும், அவ்வப் பொருண்மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்று மைப்படத் தம்முளியைதலிற் றொகையாயின வென்பாருமென இரு திறத்தர் ஆசிரியர். செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என உருபு தொக்கு ஒருசொன்னீர்மைப் படாதனவுந் தொகையாவான்

---

1. இந்நூற்பாவை சஉஉ-ஆம் நூற்பாவிற்குப்பின் வைத்துள்ளார் தெய்.

சேறலின் அவற்றை நீக்குதற்கும், வேழக்கரும்பு, கேழற்பன்றி என்புழித் தொக்கனவில்லை யெனினும் தொகையென வேண்டப்படுமாகலான் அவற்றைத் தழுவுதற்கும், உருபு முதலாயின தொகுதலிற் றொகை யென்பார்க்கும் ஒட்டி யொருசொன்னீர்மைப்படுதலுந் தொகையிலக்கணமெனல் வேண்டும்; அதனுன் உருபு முதலாயின தொகுதல் எல்லாத் தொகையினுஞ் செல்லாமையான், எல்லாத் தொகைக்கண்ணுஞ் செல்லுமாறு ஒட்டி யொருசொல்லாதல் தொகையிலக்கணமாய் முடிதலின், இவ்வாசிரியர்க்கு இதுவே துணிவெனப் படுமென்பது.

அற்றாயின், 'உருபு தொக வருதலும்' (சொல் - க0ச) எனவும், 'வேற்றுமை தொக்க பெயர்வயினானும்' (சொல் - சகஅ) எனவும், 'உம்மை தொக்க பெயர்வயி னானும்' எனவும், 'உவமை தொக்க பெயர்வயி னானும்' எனவும் ஓதலால் அவை ஆண்டுத் தொக்கன வெனப்படுமன்றோவெனின்:—அற்றன்று; 'அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயின்' (சொல் - கூச) என்புழி அதுவெனுருபு நின்று கெட்டதாயின் நின்ற காலத்துத் திணைவழுவாம்; அத்திணைவழு அமைவுடைத்தெனின் விரிக்கின்றுழி நான்காமுருபு தொடராது அது தன்னையே விரிப்பினும் அமைவுடைத்து; அதனுன் முறைப்பொருடோன்ற நம்பிமகன் என இரண்டுசொற் றொக்கன வென்பதே ஆசிரியர் கருத்தெனல்வேண்டும். அதனுன் உருபும் உவமையும் உம்மையுந் தொகுதலாவது தம்பொருள் ஒட்டிய சொல்லாற் றோன்றத் தாம் ஆண்டுப் புலப்படாதே நிற்றலேயாம். அல்லதூஉம், வினைத்தொகை பண்புத்தொகை அன்மொழித்தொகை யென்பனவற்றின்கண் வினையும் பண்பும் அன்மொழியுந் தொக்குநில்லாமையானும், அஃதே கருத்தாதலறிக.

'வேற்றுமைத் தொகை'யென்பது வேற்றுமைப் பொருளையுடைய தொகையென்றானும், வேற்றுமைப் பொருடொக்க தொகையென்றானும் விரியும். 'உவமத்தொகை', 'உம்மைத்தொகை', 'அன்மொழித் தொகை'யென்பனவும் அவ்வாறு விரியும். அன்மொழியாவது - தொக்க சொல்லல்லாத மொழி. 'வினைத்தொகை', 'பண்புத்தொகை'யென்பன வினையினது தொகை, பண்பினது தொகையென விரியும். வினைபண் பென்றது அவற்றை யுணர்த்துஞ் சொல்லை. ஒரு சொல்லாற் றொகையின்மையிற் பிறிதோர் சொல்லொடு தொகுதல் பெறப்படும்.

இச்சூத்திரத்தாற் றொகைச்சொல் இனைத்தென வரையறுத்தவாறு.

சகக. அவற்றுள்
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.

363

இ - ள்: வேற்றுமைத்தொகை அவ்வேற்றுமை யுருபு தொடர்ப் பொருளுணர்த்தியாங் குணர்த்தும் எ - று.

எனவே, சாத்தனொடு வந்தான் என்னும் பொருட்கட் சாத்தன் வந்தான் எனவும், சாத்தற்குக் கொடுத்தான் என்னும் பொருட்கட் சாத்தன் கொடுத்தான் எனவும், உருபுதொடர்ப்பொரு ளுணர்த்தும் ஆற்றலில்லன தொகா; அவ்வாற்றலுடையனவே தொகுவன வென்றவாறும்.

இரண்டாம் வேற்றுமைத்தொகை முதலாக 'வேற்றுமைத் தொகை' அறுவகைப்படும்.

எ-டு: நிலங்கடந்தான், குழைக்காது எனவும்; தாய்மூவர், பொற்குடம் எனவும்; கருப்புவேலி, கடிசூத்திரப்பொன் எனவும்; வரைபாய்தல், கருவூர்க்கிழக்கு எனவும்; சாத்தன் புத்தகம், கொற்றனுணர்வு எனவும்; மன்றப் பெண்ணை, மாரியாமா எனவும் வரும். இவை, முறையானே நிலத்தைக் கடந்தான்; குழையை யுடைய காது; தாயொடு மூவர்; பொன்னானியன்ற குடம்; கரும்பிற்கு வேலி; கடிசூத்திரத்திற்குப் பொன்; வரையினின்றும் பாய்தல்; கருவூரின் கிழக்கு; சாத்தனது புத்தகம்; கொற்றன துணர்வு; மன்றத்தின்கணிற்கும் பெண்ணை; மாரிக்கணுள தாமா என்னும் உருபுதொடர்ப் பொருளை இனிது விளக்கியவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன. (கஎ)

சகச. உவமத் தொகையே உவம இயல.

இ-ள்: உவமத்தொகை உவமவுருபு தொடர்ப்பொருள் போலப் பொருளுணர்த்தும் எ-று.

எனவே, புலியன்ன சாத்தன், மயிலன்ன மாதர் என்னும் பொருட்கட் புலிச்சாத்தன், மயின்மாதர் என அப்பொருள் விளக்கும் ஆற்றலில்லன தொகா; ஆற்றலுடையனவே தொகுவனவென்பதாம்.

எ-டு: புலிப்பாய்த்துள்; மழைவண்கை; துடிநடுவு; பொன்மேனி என்பன புலிப்பாய்த்துளன்ன பாய்த்துள்; மழையன்ன வண்கை; துடியன்ன நடுவு; பொன்னன்ன மேனி எனத் தம் விரிப்பொருளுணர்த்தியவாறு கண்டுகொள்க.

அஃதேல், புலிப்பாய்த்துளை யொக்கும் பாய்த்துள்; மழையை யொக்கும் வண்கை என விரிதலின் அவையெல்லாம் வேற்றுமைத் தொகை யெனப்படும்; அதனான் உவமத்தொகையென ஒன்றில்லை யெனின்:— அற்றன்று; சொல்லுவார்க்கு அது கருத்தாயின் வேற்றுமைத் தொகையுமாம். அக்கருத்தானன்றிப் புலியன்ன பாய்த்துள், பொன்மானுமேனி என வேற்றுமையோடு இயைபில்லா உவமவுருபு தொடர்ப்பொருட்கட் டொக்கவழி உவமைத்தொகையாவதல்லது வேற்றுமைத்தொகை ஆண்டின்மையின் வேற்றுமைத்தொகையாமாறில்லையென்க. உவமவுருபு ஒப்பில்வழியாற் பொருள் செய்யும் இடைச்சொல்லாகலான், வினையும் வினைக்குறிப்பும் பற்றி வரும். அவைபற்றி, 'என்போற் பெருவிதுப் புறுக நின்னை, யின்னாதுற்ற வறனில் கூற்றே' (புறம்-உருரு) என்புழிப் போலஎன்பது குறிப்பு வினையெச்சமாய் நிற்றலானும், 'நும்ம னோருமற் றினைய ராயி—னெம்ம னோரிவட் பிறவலர் மாதோ' (புறம்-உகo) என்புழி அன்னோரென்பது இடைச்சொன் முதனிலையாகப் பிறந்த குறிப்புப்பெயராகலானும், என்னைப் போல, நும்மையன்னோர், எம்மையன்னோரென இரண்டாவது விரித்தற் கேற்புடைமை யறிக. (கஅ)

சகரு. வினையின் தொகுதி காலத் தியலும்.

இ-ள்: வினைத்தொகை காலத்தின்கணிகழும் எ-று.

'காலத்தியலு'மெனப் பொதுவகையாற் கூறியவதனான் மூன்று காலமுங் கொள்க.

'தொகுதி காலத்தியலு'மெனவே, அவ்வினை பிரிந்து நின்றவழித் தோன்றுது தொக்கவழித் தொகையாற்றலாற் காலந்தோன்று மென்றவாறும்.

ஈண்டு 'வினை'யென்றது எவற்றையெனின் :— வினைச்சொற்கும் வினைப்பெயர்க்கும் முதனிலையாய், உண், தின், செல், கொல் என வினைமாத்திர முணர்த்தி நிற்பனவற்றை யென்பது. இவற்றை வட நூலார் 'தாது' வென்ப.

எ - டு: ஆடரங்கு; செய்குன்று; புணர்பொழுது; அரிவாள்; கொல்யானை; செல்செலவு என வரும்.

காலமுணர்த்தாது வினைமாத்திரமுணர்த்தும் பெயர், நிலப்பெயர் முதலாகிய பெயரொடு தொக்குழிக் காலமுணர்த்தியவாறு கண்டு கொள்க. காலமுணர்த்துகின்றுழிப் பெயரெச்சப் பொருளவாய் நின்றுணர்த்துமென்பது 'செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்— மெய்யொருங் கியலுந் தொழிறொகு மொழியும்' (எழுத்-சஅ௨) என்ப தனாற் கூறினார். தொகைப் பொருளாகிய தாம் பிரிந்தவழிப் பெறப் படாமையின் ஆசிரியர் இவற்றைப் 'புணரிய நிலையிடை யுணரத் தோன்றா' என்றார். அதனான் இவை தஞ்சொல்லான் விரிக்கப்படா மையிற் பிரிவிலொட்டாம்.

பெயரெச்சம் நின்று தொக்கதென்றாரால் உரையாசிரியரெனின்:- அற்றன்று; ஆசிரியர் இவற்றைப் பிரித்துப் புணர்க்கப்படா, வழங்கிய வாறே கொள்ளப்படுமென்றது, பிரித்தவழித் தொகைப்பொருள் சிதைதலானன்றே; கொன்றயானை என விரிந்தவழியும் அப்பொருள் சிதைவின்றேல் 'புணரியநிலையிடை யுணரத்தோன்றா' என்றற்கோர் காரணமில்லையாம். அதனாற் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர் கருத்தன்மையின், உரையாசிரியர்க்கும் அது கருத்தன்றென்க. அல்ல தூஉம், ஆகுபெயர் உணர்த்தியவழி வினைத்தொகையுளப்பட 'இரு பெய ரொட்டும்' (சொல் - ககச) என்றாராகலானும் வினை நின்று தொகுதல் அவர்க்குக் கருத்தன்மை யறிக.

அஃதேல், வினைத்தொகைக்கு முதனிலை பெயராமன்றோ வெனின்:—உரிஞென்பது முதலாயினவற்றைத் தொழிற்பெய ரென்றா ராகலின், தொழின் மாத்திர முணர்த்துவனவெல்லாம் தொழிற்பெய ரென்பது ஆசிரியர் கருத்தென்ப. (கக)

சகக. வண்ணத்தின் வடிவின் அளவின் [1]சுவையினென்(று)
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்ன(து) இதுவென வருஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே.

இ - ள்: வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவும் அவை போல்வன பிறவுமாகிய குணத்தை நுதலிப் பின் றொக்கவழிக் குணச் சொற் குணமுடையதனை யுணர்த்தலான் இன்னதிதுவென ஒன்றனை ஒன்று விசேடித்து இருசொல்லும் ஒருபொருண்மேல் வருமியல்பை யுடைய எல்லாத் தொகைச்சொல்லும் பண்புத்தொகையாம் எ - று.

'நுதலி'யென்னுஞ் சினைவினையெச்சம், 'வரு'மென்னு முதல்வினை யோடு முடிந்தது.

'இயற்கை'யென்றது, தொக்குழிப் பண்புடையதனைக் குறித்தல் அத்தொகைச் சொல்லதியல்பென்பதல்லது காரணங் கூறப்படா தென்றவாறு. தொகைக்கணல்லது அச்சொல் தனிநிலையாய், உண்,

1. 'சுவையின்' எனப் பாடங் கொள்வர் தெய்.

தின், செல், கொல் என்பன போலப் பொருளுணர்த்தாமையின், பண்புத்தொகையும் வினைத்தொகை போலப் பிரிக்கப்படாதாம்.

எ - டு: கருங்குதிரை என்பது வண்ணப்பண்பு. வட்டப்பலகை யென்பது வடிவு. நெடுங்கோ லென்பது அளவு. தீங்கரும்பென்பது சுவை. அவை, கரிதாகிய குதிரை, வட்டமதாகிய பலகை எனப் பண்புச் சொல்லும் பண்புடைப்பொருளே குறித்தலான், இருசொல்லும் ஒருபொருளவாய் இன்ன திதுவென ஒன்றையொன்று பொதுமை நீக்கியவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன.

'அன்னபிறவு' மென்றதனுன், நுண்ணூல், பராரை, மெல்லிலை, நல்லாடை என்னுந் தொடக்கத்தன கொள்க.

அஃதேல், கரிதாகிய குதிரை, வட்டமதாகிய பலகை என்பன அத் தொகையின் விரியாகலிற் பண்புத்தொகை பிரிக்கப்படாதென்ற தென்னையெனின்:— அற்றன்று; தொகைப்பொரு ளுணர்த்துதற்குப் பிறசொற் கொணர்ந்து விரித்ததல்லது, தன்சொல்லான் விரியாமை யின் அவை விரியெனப்படா வென்க. வடநூலாரும் பிரியாத்தொகை யும் பிறசொல்லான் விரிக்கப்படுமென்ருர். பிற சொற்கொணர்ந்து விரிக்குங்கால், கரிய குதிரை, கரிதாகிய குதிரை, கரியது குதிரை என அத்தொகைப் பொருளுணர்த்துவன வெல்லாவற்ருனும் விரிக்கப்படும்.

கரியதென்னும் பண்புகொள்பெயர் கருங்குதிரையெனத் தொக்க தென்ருரால் உரையாசிரியரெனின்:—அதனைப் பெயரெச்சம் வினைத் தொகை நிலைமொழியென்றதற்கு உரைத்தாங்கு (சொல் - சகரு) உரைத்து மறுக்க.

தனிநிலையாவது, கரியன், செய்யன், கருமை, செம்மை என்பன வற்றிற்கெல்லாம் முதனிலையாய்ச் சொல்லாய் நிரம்பாது, கரு செவ் வெனப் பண்புமாத்திர முணர்த்தி நிற்பதாம்.

'என்ன கிளவியு'மென்றதனுல், சாரைப்பாம்பு, வேழக்கரும்பு, கேழற்பன்றி எனப் பண்பு தொகாது பெயர் தொக்கனவும் அத் தொகையாதல் கொள்க. இவற்றது சாரை முதலாகிய நிலைமொழி பிரித்தவழியும் பொருளுணர்த்தலின், இவற்றைப் பிரித்துப் புணர்த் தார்.

அஃதேல், பாம்பைச் சாரை விசேடித்ததல்லது சாரையைப் பாம்பு விசேடித்தின்ருகலின் ஒன்றை யொன்று பொதுமை நீக்காமை யாற் சாரைப்பாம்பென்பது முதலாயின பண்புத்தொகை யாயினவா றென்னையெனின்:— நன்று சொன்னுய்: விசேடிப்பதும் விசேடிக்கப் படுவதுமாகிய இரண்டனுள் விசேடிப்பது விசேடியாக்கால் அது குற்ற மாம்; விசேடிக்கப்படுவது விசேடித்தின்றென்ருலும் விசேடிக்கப்படுத லாகிய 'தன்றன்மைக் கிழுக்கின்மையான், விசேடியாது நிற்பினும் அமையுமென்க. இவ்வேறுபாடு பெறுதற்கன்றே, 'இன்னதிதுவென வரூஉ' மெனப் பின்மொழியை விசேடிப்பதாகவும், முன்மொழியை விசேடிக்கப்படுவதாகவும், ஆசிரியர் ஓதுவாராயிற்றென்பது.

அற்றேனும், சாரையெனவே குறித்த பொருள் விளங்கலிற் பாம் பென்பது மிகையாம் பிறவெனின்:— அற்றன்று; உலக வழக்காவது, சூத்திர யாப்புப்போல மிகைச்சொற்படாமைச் சொல்லப்படுவ தொன்றன்றி, மேற்ருெட்டுக் கேட்டார்க்குப் பொருள் இனிது விளங்க வழங்கப்பட்டு வருவதாகலின், அது கடாவன்றென்க. மிகைச்சொற்

படாமைச் சொல்லப்படுமாயின், யான் வந்தேன், நீ வந்தாய் என்னாது வந்தேன், வந்தாய் என்றே வழங்கல் வேண்டுமென்பது. உயர்சொற் கிளவி, இடைச்சொற்கிளவி, உரிச்சொற்கிளவி என்புழியும், உயர் சொல், இடைச்சொல், உரிச்சொல்லென்பன சொல்லென்பதன்கட் கருத்துடையவன்றிக் குறிமாத்திரமாய், உயர்வு, இடை, உரி என்ற துணையாய் நின்றனவாகலின், சாரையென்பது பாம்பை விசேடித்தாற் போல அவை கிளவி யென்பதனை விசேடித்து நின்றனவென்பது. அவ்வாற்றான் அமைவுடையவாயினும், சூத்திரமாகலின், உயர்சொல், இடைச்சொல், உரிச்சொலெனவே யமையும்; கிளவியென்பது மிகை யெனின்:— மிகையாயினும், இன்னோரன்ன அமைவுடைய வென்ப துணர்த்துதற்கு அவ்வாறோதினாரென்பது.

இனி ஒற்றுமை நயத்தால் என்புந்தோலு முரியவாதலாகிய உறுப்புஞ் சாரை யெனப்படுதலின், அவற்றை நீக்கலாற் பாம்பென்ப தூஉம் பொதுமை நீக்கிற்[1]றென்பாருமுளர். (௨௦)

௪௧௨. இருபெயர் பல்பெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோ(டு) அவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே.

இ - ள்: இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகைச் சொற்றிரளையும் தனக்குச் சார்பாகக் குறித்து நிற்கும் உம்மைத் தொகை எ - று.

எ - டு: உவாப்பதினான்கு என்பது இருபெயரானாய உம்மைத் தொகை. புலிவிற்கெண்டை என்பது பலபெயரானாய உம்மைத் தொகை. தூணிப்பதக்கு என்பது அளவுப்பெயரானாய உம்மைத் தொகை. முப்பத்துமூவரென்பது எண்ணியற்பெயரானாய உம்மைத் தொகை. தொடியரை யென்பது நிறைப்பெயரானாய உம்மைத் தொகை. பதினைந்தென்பது எண்ணுப்பெயரானாய உம்மைத்தொகை. இனி அவை விரியுங்கால், உவாவும் பதினான்கும் எனவும், புலியும் வில்லுங் கெண்டையும் எனவும், தூணியும் பதக்கும் எனவும், முப்பதின் மரும் மூவரும் எனவும், தொடியும் அரையும் எனவும், பத்து மைந்தும் எனவும் விரியும்.

வேற்றுமைத்தொகை முதலாயின பலசொல்லாற் றொகுதல் சிறு பான்மை; அதனான் உம்மைத்தொகை இருசொல்லானும் பலசொல் லானும், ஒப்பத் தொகுமென்பது அறிவித்தற்கு 'இருபெயர் பல்பெய' ரென்றார்.

கற்சுனைக் குவளையிதழ், பெருந்தோட் பேதை எனப் பிறதொகை யும் பெரும்பான்மையும் பல சொல்லான் வருமாலெனின்:— கல்லென் பதுஞ் சுனையென்பதுங் கற்சுனையெனத் தொக்கு ஒருசொல்லாய்ப், பின் குவளையென்பதனோடு தொக்கு ஒருசொல்லாய்ப், பின் இதழென்பத னோடு தொக்குக் கற்சுனைக் குவளையிதழென வொன்றாயிற்று. பெருந் தோளென்னுந் தொகை ஒருசொல்லாய்ப் பேதை யென்பதனோடு தொக்குப் பெருந்தோட்பேதையென வொன்றாயிற்று. அவை இவ் வாற்றானல்லது தொகாமையின் இருசொற்றொகையேயாம்.

1. என்பார்—யாரெனத் தெரிந்திலது.

புலிவிற் கெண்டை என்புழி மூன்று பெயருந் தொகுமென்னுது முதற் பெயரொழித்தும் இறுதிப் பெயரொழித்தும், ஏனையிரண்டுந் தம்முட்டொக்கு ஒருசொல்லாய்ப் பின் மற்றையதனேடு தொகு மெனின்:— முன்ருகுமிரண்டற்கும் ஓரியைபு வேறுபாடின்மை யானும், இருதொகைப்படுத்தல் பலசெய்கைத்தாகலானும், அவை மூன்று பெயரும் ஒருங்கு தொக்கனவெனவே படுமென்பது.

அளவின் பெயர் முதலாயின, இருபெயராயல்லது தொகாவென வரையறுத்தற்கு 'இருபெயர் பல்பெய'ரென அடங்குவனவற்றைப் பெயர்த்துக் கூறினர். கலனே தூணிப்பதக்கு, தொடியே கஃசரை, நூற்றுநாற்பத்துநான்கு என்புழித் தூணிப்பதக்கு, கஃசரை, நாற்பத்து நான்கு என்பன ஒரு சொற்போல அளவுப்பெயரும், நிறைப்பெயரும் எண்ணுப்பெயருமாய் வழங்கப்பட்டு வருதலின், கலமுந் தூணிப்பதக்கும், தொடியும் கஃசரையும், நூறும் நாற்பத்துநான்கும் என இருமொழி நின்று தொக்கவென்றலே பொருத்த முடைமையறிக.

உம்மைத்தொகை இன்னபொருள்பற்றித் தொகுமென்னுது 'அவ்வறு கிளவியும்' எனச் சொல்லேபற்றி ஓதினரேனும், ஏற்புழிக் கோடலென்பதனுனும், 'உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே பலர் சொன் னடைத்து' (சொல் - ௪௨௧) என்பதனுனும் எண்ணும்மைப் பொருட்கட் டொகுமென்பது பெறப்படும். எண்ணின்கண் வரும் இடைச்சொற் பலவேனும், தொக்குநிற்கும் ஆற்றலுடையது உம்மைப் பெயராகலான், உம்மைத் தொகையாயிற்று. (௨௧)

௪௨அ. பண்புதொக வருஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே.

இ - ள்: பண்புச்சொற்ருெகுஞ் சொல்லினும் உம்மை தொக்க பெயர்க்கண்ணும் வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிச் சொற்கண் நின்று நடக்கும் அன்மொழித்தொகை எ - று.

பண்புத்தொகைபடவும் உம்மைத்தொகைபடவும் வேற்றுமைத் தொகைபடவும் அச்சொற்ருெக்கபின் அத்தொகை அன்மொழித் தொகை யாகாமையின், தொகுவதன்முன் அவற்றிற்கு நிலைக்கள மாகிய சொற்பற்றி வருமென்பது விளக்கிய, 'தொகைவயினனு' மென்னுது, 'பண்புதொக வருஉங் கிளவி யானும், உம்மை தொக்க பெயர்வயினனும், வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்' என்றார். இறுதிச்சொற் படுத்தலோசையாற் பொருள் விளக்குமாறு வழக்கி னுள்ளுஞ் செய்யுளுள்ளுங் கண்டுகொள்க.

எ - டு: வெள்ளாடை, அகரவீறு என்பன பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தகரஞாழல் என்பது உம்மைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. பொற்ருெடி என்பது வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இனி, அவை வெள்ளாடையுடுத்தாள், அகர மாகிய ஈற்றையுடைய சொல் எனவும், தகரமு ஞாழலுமாகிய சாந்து பூசினுள் எனவும், பொற்ருெடி தொட்டாள் எனவும் விரியும்.

பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறத்தல் பெரும்பான்மையாக லின், முறையிற்கூருது அதனை முற்கூறினர்; வேற்றுமைத்தொகை

உ

# தொல்காப்பியம் சொல்லதிகாரம்

## சேனாவரையம் விளக்கவுரை

## க. கிளவியாக்கம்

முதல் நூற்பா :

நிறுத்த முறை - முன்னைய நூல்களுள் நிறுத்தமுறை. பாயிரத்துள் நிறுத்தமுறை யெனினும் அமையும்.

எழுத்துக்கள் தனித்தோ அன்றித் தொடர்ந்தோ நின்று பொருள் தரின் அது சொல்லாகும். எழுத்துக்கள் தனித்து நின்ற நிலையில் எவ்வெவ்விலக்கணங்களை யுடையனவோ, அவ்விலக்கணங்களையே சொல்லாகும் பொழுதும் பெறும் என்பர் நன்னூலார். 'மொழி யாய்த் தொடரினும் முன்னனைத் தெழுந்தே' என்பது நன்னூல். ஆனால் சேனாவரையரோ எழுத்துக்கள் தன்னிலையில் இருக்கும் பொழுது பெறும் இலக்கணங்களை, மொழிநிலையில் இருக்கும்பொழுது முழுவதும் பெறுவதில்லை; ஒருபுடையே (சிறுபான்மையே) பெறும் என்பர். எடுத்துக்காட்டாகச் சிவம் என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். சிகரம், வகரம், மகர ஒற்று மூன்றும் தனிநிலையில், குற்றெழுத்தாந்தன்மையும் ஒற்றெழுத்தாந்தன்மையும் உடையவாத லும்; ஒருமாத்திரையும் அரைமாத்திரையும் உடையவாதலும் போலவே, சொல்லாகி நிற்கும் பொழுதும் இருக்கிறது. எனினும் மகர வொற்று எழுத்தாம் நிலையில் தனித்துக் கூறப்படுவது போல, சொல் நிலையில் வருவதில்லை. சொல்நிலையில், இடையிலும் இறுதியிலும் ஒற்றுகுமேயன்றி முதலில் யாண்டும் வருவதில்லை. இதைப் போன்றே சிகரத்தையும், வகரத்தையும் தனித்தனியே உச்சரிக்கும் பொழுது அவற்றிற்குக் கொடுக்கும் ஒலியழுத்தம், சொல்லாம்நிலையில் கொடுப்பதில்லை. இந்நுண்மையைக் கருதியே சேனாவரையர், 'சொல்லாவது எழுத்தொடு ஒருபுடையான் ஒற்றுமையுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது' என்றனர். இதனையே சங்கர நமச்சிவாயரும் 'எழுத்தானாயபதம் அரிசனம் முதலியவற்றால் சமைந்த சுண்ணம் போலாது, மலராற் சமைந்த மாலை போல நிற்றலின்' என விளக்கினர்.

இளம்பூரணர் 'சொல் என்பது எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை' என விளக்கம் கண்டனர். இத்தொடரில் 'எழுத் தொடு புணர்ந்து' என்பதற்கு, எழுத்துக்களொடு கூடி எனப்பொருள் கொண்டுவிட்டால், ஓரெழுத்தொரு மொழியாக வருவனவற்றிற் கெல்லாம் இவ்விலக்கணம் பொருந்தாததாய் முடியும். ஆதலின் எழுத்தொடு புணர்ந்து என்பதற்கு 'எழுத்தாதல் தன்மையொடு புணர்ந்து' என விளக்கம் கண்டனர் சேனாவரையர்.

கட்டுரைச் சுவை—செய்யுட்கண் வரும் ஓசையின்பம்.

சமய ஆற்றலால் பொருள் உணர்த்தலாவது:— சொல் தோன்றிய காலத்திலேயே இச்சொல் இப்பொருளை யுணர்த்துக என்னும் இறைவன் ஆணையின் வண்ணம் பொருளுணர்த்தி வருவது. அவாய் நிலையால் பொருள் உணர்த்தலாவது:—ஒரு சொல் தன்னொடு சேர்ந்து பொருள் முடித்தற்குரிய சொல்லை அவாவி நிற்பது. பசு நடந்தது என் புழி, பசு என்ற சொல் தன்னொடு பொருள் முடித்தற்கு வரும் நடந்

தது என்ற சொல்லை அவாவி நிற்றல் காண்க. தகுதியால் பொருள் உணர்த்தலாவது:— பொருள் விளக்கும் சொற்கள் தம்முள் தகுதி நோக்கி இணைந்து நின்று, பொருள் உணர்த்துவதாகும். நீரால் நனை, நெருப்பால் சுடு என்பனவற்றுள் நனைத்தற்கும், சுடுதற்கும் ஏற்ற சொற்கள் தகுதி நோக்கித் தொடர்ந்து நிற்றல் காண்க. அண்மை நிலையால் பொருள் உணர்த்தலாவது:— சொற்களை இடையீடின்றிக் கூறுவதாலேயே பொருள் விளங்கி நிற்பதாகும். ஆற்றங்கரைக்கண் ஐந்து கனிகள் உளவாகின்றன என்புழி, இச்சொற்களை இடையீடின்றிக் காணுங்கால் பொருள் விளங்குதலும், ஒவ்வொரு சொல்லையும் இடையிட்டுக் கூறின் பொருள் விளங்காமையும் கண்டு கொள்க.

அதிகாரம் என்பது முறைமை, ஆணை செலுத்துதல், வரையறைப் படுத்துதல் முதலிய பல பொருள்படும். அதற்கு வடநூலார் கூறும் இருபொருள்களைக் கூறி, ஏற்புடைமை கருதி ஒன்றை மட்டும் ஈண்டு ஏற்றுக்கொள்ளுகிறார் சேனாவரையர். (க) ஒரு பொருளின் இலக்கணத்தைப் பல இயல்களிலும் சொல்லின் அதனை அதிகாரம் என்பர். எ-டு: சொல்லின் இலக்கணத்தைக் கிளவியாக்கம் முதலாக எச்சவியல் வரை கூ இயல்களிலும் சொல்லி வருதல் போல்வது. (உ) ஒரு நூற்பாவிலுள்ள ஒருசொல் அல்லது ஒருதொடர், அடுத்தடுத்துள்ள நூற்பாக்களிலும் சென்று இயைந்து தன் பொருளைத் தருவதாகும். எ - டு: உ௩ ஆம் நூற்பாவிலுள்ள 'ஐயக்கிளவி' என்ற சொல் அடுத்த நூற்பாவிலும், ௩௫ ஆம் நூற்பாவில் உள்ள 'அல்லதில்' என்ற சொல் அடுத்த நூற்பாவிலும், ௪௯ ஆம் நூற்பாவிலுள்ள 'உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்' என்ற தொடர் அடுத்த நூற்பா விலும், ௬௨ ஆம் நூற்பாவிலுள்ள 'வேற்றுமை' என்னும் சொல் அடுத்த நூற்பாவிலும் சென்றியைந்து பொருள்படுதல் காண்க. இவற்றுள் முன்னையதே ஈண்டைக்குப் பொருந்துவதாகும்.

இவ்விருமையுள் முன்னையது, வேந்தன் இருந்துழி இருந்து தன் நிலம் முழுதும் தன்னாணையில் நடப்பச் செய்தல் போன்றது என்றும், பின்னையது சென்று நடாத்தும் தண்டத் தலைவர் போன்றது என்றும் சிவஞான முனிவர் உவமை காட்டி விளக்குவர்.

'ஆடூஉ வறிசொல்' 'மகடூஉவறிசொல்' என்பன போலச் சொற்களையே எடுத்துக்கூறி விளக்கல் தம்மையே எடுத்தோதி விளக்க லாம். யாது, எவன் என்ற சொற்கள் எவ்வெப் பொருளில் வரும் எனக் கூறிச்செல்வது போல்வன, இலக்கணம் கூறி விளக்கலாம்.

நொய்—தவிடு. நுறுங்கு—குறுணி.

'என்மனார்' என்ற சொற்கு இலக்கணம் கூறுவதில் உரையாசிரியரும் சேனாவரையரும் கருத்து வேறுபடுகின்றனர். சேனாவரையர், 'என்மனார்' என்பது ஆர் ஈற்று எதிர்கால முற்றுச்சொல்; அது செய்யுள் முடிபிற்கு (செய்யுள் வழக்கிற்கு) மட்டுமே வரும் என்பர். இவர் கருத்துப்படி என்+மன்+ஆர் என்பனவே 'என்மனார்' என்பதாயிற்று. என்—பகுதி, மன்—எதிர்கால இடைநிலை, ஆர்—பலர்பால் விகுதி.

இளம்பூரணர் என்மனார் என்பதை விகாரச்சொல் என்பர். இதன் வேர்ச்சொல் 'என்ப' என்பர். அதன்கண்ணுள்ள பகரத்தைக் குறைக்

கும்வழிக் குறைத்தலால் குறைத்தும், விரிக்குவழி விரித்தலால் மன், ஆர் என்பன பெய்தும் விரிக்க 'என்மனார்' என வரும் என்பர். இவர் கருத்துப்படி என்ப+மன்+ஆர் = என்மனார் என ஆகும். 'மன்' என்னும் இடைச்சொல் இசைநிறைக்க வந்ததாகும்.

இதனை இருகாரணங்களால் சேனாவரையர் மறுக்கின்றார். (க) ஒரு சொல் இலக்கண இலக்கியங்களில் மிகுதியாகப் பயின்று வருமானால் அது இயற்கைச் சொல்லாகவே இருக்கும். விகாரச் சொல்லாக இருத்தல் இயலாது. அந்நிலையில் என்மனார் என்பது நூல்(இலக்கணங்) களிலும், சான்றோர் செய்யுட்களிலும் பயின்றுவரக் காண்கின்றோம். எனவே இது விகாரச் சொல்லாக இருத்தல் இயலாது. (உ) இடையியலில் மன் என்னும் இடைச்சொல் கழிவு, ஆக்கம், ஒழியிசை ஆகிய மூன்று பொருளில் மட்டுமே வரும் (சொல்-உ௫உ) என்று ஆசிரியர் கூறியுள்ளார். அங்ஙனமாகவும், இங்கு மன் என்பது இசை நிறைக்க வரும் என்பது, தாம் உரை வகுக்கும் மூலநூலுக்கே மலைவாகின்றது. ஆதலின் பொருந்தாது என்பர்.

இசைநிறை யென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் — மன் என்பது இசை நிறைக்க வாராது என்று கூறுபவர் நூலாசிரியர். மேற்கோள்மலைவு—(ஆசிரியர் அங்ஙனம் கூறியிருக்க தாம் இசை நிறைக்க வருமென்றல்) எடுத்துக்கொண்ட நூலுக்கே மாறுபாடு ஆகும்.

மக்கட் சுட்டு—மக்கள் என்று நன்கு மதிக்கப்படும் பொருள். சுட்டு —நன்கு மதித்தல். அது நன்குமதித்தலையுடைய பொருளையுணர்த்துதலின் அன்மொழித்தொகையாயிற்று. நச்சினார்க்கினியரும் கல்லாடரும் மக்கட் சுட்டு என்பதை இருபெயரொட்டாகுபெயர் என்பர்.

மக்கள் என்னாது 'மக்கள் சுட்டு' என ஆசிரியர் கூறற்குக் காரணம், மக்களாகப் பிறந்தால் மட்டுமன்றி, அவர்களை மக்கள் என்று கருதிய வழியே அவர்கள் உயர்திணையென மதிக்கப்படுவர் என்பதைக் குறிப்பதற்கேயாகும். செயற்கரிய செய்த ஒருவன் இறந்துவிடின், அவனுடைய பிணத்தையும் உயர்திணையென்றே மதிப்பர். இழிந்த பல செயல் செய்த ஒருவன் உயிருடன் இருப்பினும், அவனைப் பதடி என அஃறிணையாகவே மதிப்பர் என்பது கருத்து. இதனை ருஎ ஆம் நூற்பா உரையாலும் நன்கறியலாம். 'உறுப்பொத்தல் மக்கள் ஒப்பன்றால் வெறுத்தக்க, பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு' (குறள் - கூகூ௩) என ஆசிரியர் திருவள்ளுவரும் கூறுதல் காண்க. .

உயிருடையன, உயிர்இல்லன, மக்களின் உயிர், உடம்பு ஆகிய இவை அஃறிணையில் அடங்கும். ஆதலின் இவை அஃறிணையின் பகுதியாம். அஃறிணையில் இப்பகுதியெல்லாம் அடங்கும் என்பதைக் காட்டுதற்கே ஆசிரியர், 'அஃறிணையென்மனார் அவரல' என்னாது, பிற என்ற சொல்லையும் சேர்த்துக்கூறினார் என்பது.

அ+இருதிணை என்பதே ஆயிருதிணை என நீண்டது. தொல்காப்பியத்தில் உடம்படுமெய்யைப் பற்றிய நூற்பா உளதேயன்றி இன்ன இன்ன உயிர்முன், இன்ன இன்ன உயிர்வரின் இன்னமெய் இடையே வரும் என்னும் வரையறைகூறவில்லை. (இளம்பூரணரே இவ்வரையறையை நன்கு காட்டுகின்றார்.) எனினும், ஆசிரியர் வரையறுத்தோதாமையின் ஈண்டுயகர உடம்படுமெய் வந்தது என்றார்.

'ஆயிருதிணையின் இசைக்குமனசொல்லே' என்புழி, ஆயிருதிணை யின் என்பதைச் சேனாவரையர் ஆயிருதிணையின் கண்ணும் என விரித் தார். இளம்பூரணர் ஆயிருதிணையை என விரித்தார். சேனாவரையர் இதனை இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) சாரியை, உருபுகளை இயைவிக்கவும் வரும்; உருபுகளின்றித் தனித்தும் வரும். ஆனால் இரண்டாம் வேற்றுமைபற்றி ஆசிரியர் கூறுமிடத்துச்'சாரியை உள் வழித் தன்னுருபு நிலையலும்' என்று கூறுவதால் சாரியை நிற்புழி இரண்டனுருபும் விரிந்து நிற்க வேண்டுமெனத் தெரிகிறது. ஆதலின் ஈண்டு இரண்டனுருபை விரிப்பது ஆசிரியர்க்கும் கருத்தாயின், இச்சாரி யையோடு இரண்டனுருபையும் விரித்துக் கூறியிருப்பர். அங்ஙனம் கூறாமையே இரண்டனுருபு ஈண்டு விரித்தற்கேற்புடையதன்று என்பது பெறுதும். (உ) 'செலவினும் வரவினும் தரவினும் கொடை யினும்' என்புழியெல்லாம் இச்சாரியை வருங்கால் ஏழனுருபையே இளம்பூரணர் விரித்துக் கூறியிருப்பதால், ஈண்டும் அவ்வேழனுருபு விரித்தலே பொருத்தம் உடைத்து என்பர்.

எனினும், நச்சினார்க்கினியர் தக்க மேற்கோளுடன் இவரை மறுத்து, இரண்டனுருபையே விரிப்பர். கல்லாடரும் இவரைத் தழுவுவர். இத் திறமெல்லாம் அவரவர் உரை நோக்கி அறிக.

'ஆயிருதிணையினும்' என்பது இனத்தென்றறி பொருளாதலின் உம்மை பெற வேண்டும். ஈண்டுத் தொகுக்கும் வழித்தொகுத்தலால் அது தொக்கு நின்றது.

இந்நூற்பா சொல் வரையறுக்க வந்ததா? அன்றிப் பொருள் வரையறுக்க வந்ததா? எனில், சொல் வரையறுக்கவே வந்தது என்றனர் சேனாவரையர். ஆதலினாற்றான் இந்நூற்பாவில் கருத்துரை கூறுங்கால் 'எனவே உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எனச்சொல் இரண்டு என்றவாறும்' என்றனர். அங்ஙனமாயின் உயர்திணை, அஃறிணை என இருவகைப்படும் என்று கூறினமையும்; அவற்றை விளக்கியதேன் எனில், ஆடூஉ, மகடூஉ என்பன உலக வழக்கில் இயல் பாக ஆண், பெண் எனப் பொருளுணர நின்றாற் போல, உயர்திணை, அஃறிணை என்பன வழக்கொடுபடுத்துப் பொருளுணர இயலாமையின் அவற்றை விளக்கினார் என்பது.

சொல்வரையறுத்தல், பொருள் வரையறுத்தல் ஆகிய இரண்ட னுள் ஒன்றையே இதற்குக் கருத்தாகக் கொள்ளாது, இரண்டையுமே இதன் கருத்தாகக் கொள்ளின், வடநூலார் ஒருநூற்பா ஒருஇன்றி யமையாத கருத்தையே உணர்த்த வேண்டும் என்றும், இருகருத்து உணர்த்தில் வாக்கிய பேதம் என்னும் குற்றம் தங்கும் என்றும் கூறுவ ராதலின், இது ஒருபொருள் (அதாவது சொல்வரையறுத்தல் ஒன்றுமே) உணர்த்த வந்ததாகவே கொள்ள வேண்டுமென்பதாம். இளம்பூரணர் சொல், பொருள் இரண்டையும் இந்நூற்பா வரை யறுத்தது எனக் கொண்டனர் ஆதலின், சேனாவரையர் குறிப்பாக அவரை இங்ஙனம் மறுத்துள்ளார். எனினும் நச்சினார்க்கினியர், இளம் பூரணர் கருத்தையே தழுவுவர்.

உ ஆம் நூற்பா: எழுத்ததிகாரத் தொகைமரபில் (கரு)இரண்டாம் வேற்றுமைக்குத் திரிபு கூறப்படுகின்றது. அதன்கண் 'உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்' என்று கூறப்படுவதால், இரண்டாம் வேற்றுமையுருபு உயர்திணைக்கண் விரிந்தே வரவேண்டும் எனத்தெரி

கிறது. ஆனால் அவ்விடத்து 'ஒழியாது வருதலும்' என்ற விதியினால் சிறுபான்மை தொக்குவரலாம் எனக்கொண்டு, ஈண்டுத் தொக்கு வருமென்றார் சேனாவரையர். எனவே இது விரியுங்கால் ஆடூஉவை யறியுஞ் சொல் மகடூஉவை அறியுஞ்சொல் என விரியும் என்பது கருத்து.

ஆடூஉ+அறிசொல்=ஆடூஉவறிசொல் என்றாயிற்று. இது இயல்பு புணர்ச்சியாம். மகன்+பெற்றான்=மகட்பெற்றான் என ஆகும் விகாரப் புணர்ச்சி (திரிந்தபுணர்ச்சி) போன்று இது இருப்பின் ஐயுருபு விகாரத்தால் தொக்கது எனலாம். இது இயல்பு புணர்ச்சியாதலான் விகாரத்தால் தொக்கது என்றல் பொருந்தாது என்றார்.

உயர்திணை+அ=உயர்திணைய என்றாயிற்று. ஆதலின் இதனை ஆறாம் வேற்றுமை ஏற்று நின்ற பெயர் என்றார். அது பெயராய் (அதாவது குறிப்பு வினையாலணையும் பெயராய்) நிற்புழி உயர்திணையினுடையன எனப் பொருள் தரும். அதுவே வினைக்குறிப்பாய் நிற்புழி உயர்திணையினுடையவாயிருந்தன எனப்பொருள் தரும். ஈண்டு அது வினைக் குறிப்பாய் நின்றது. நச்சினார்க்கினியரும் இக்கருத்தினரே.

சிவணி என்பது செய்தென் எச்சம். அது தனக்குரிய வினைமுதல் வினையைக் கொண்டு முடியும் என உ௲௰ ஆம் நூற்பாவால் ஆசிரியர் கூறுவர். இச்சிவணி என்னும் சொல் ஆடூஉவறிசொல் மகடூஉவறி சொல் என்ற இரண்டிற்கும் உரிய வினையாகும். 'உயர்திணைய' என்பது மூன்றுபாற்கும் உரியவினையாகும். ஈண்டுச் சிவணி என்பது உயர் திணைய என்பதனோடு முடிகின்றது. சிவணி என்பது தனக்குரிய வினை முதல் வினையைக் கொண்டு முடிய வேண்டியிருக்க ஈண்டு உயர்திணைய என்பதனோடு முடிதல் பொருந்துமா? என்பதே ஈண்டைய வினா. அதற்கு விடை: 'முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின' என்ற விடத்துச் செய்தெனெச்சம் தனக்குரிய வினைமுதல் வினையைக்கொண்டு முடியும் என்று கூறப்பட்டுள்ளதேயன்றி, தான்கொண்டுமுடியும் சொல் பிறிதொன்றற்கும் உரியதாக இருத்தல் கூடாது என்பது கருத்தில்லை. ஆதலின் சிவணி என்னும் இருபாற்கு உரிய எச்சம், உயர்திணைய என்னும் முப்பாற்கு உரிய வினையைக்கொண்டு முடியினும், அவ்வுயர் திணைய என்பது, இவ்வெச்சத்திற்குரிய வினையாயும் இருத்தலின் பொருந்து மென்பது. எனவே, அவ்வுயர்திணைய என்பது பலர்பாலுக்கும் உரிய வினையாயிருத்தல் பற்றிப், பிறவினை கொண்டு முடிந்தது எனக் கூறுதலாகாது. ஆடூஉ, மகடூஉவிற்கும் உயர்திணைய என்பது உரியதாயிருத்தலின், சிவணி என்பது தனக்குரிய வினைமுதல் வினையைக் கொண்டு முடிந்ததேயாம்.

எனவே, செய்தெனெச்சம் தனக்குரிய வினைமுதல் வினையைக் கொண்டு முடிய வேண்டுமெனில், அவ்விலக்கணத்தில் வழுவாது வந்ததா? என்பதைப் பார்க்க வேண்டுமேயன்றி அதற்குரிய வினைமுதல் வினை, பிறிதொன்றற்கும் உரியதா? அன்றா? என்பதைப் பார்க்க வேண்டுவதில்லை என்பது பெற்றாம். இங்ஙனம் கொள்ளாவிடின், இவளும் இவனும் சிற்றிலிழைத்தும் சிறுபறை யறைந்தும் விளையாடுப என்புழி இழைத்தும், அறைந்தும் என்னும் செய்தெனெச்சங்கள் முறையே இவள், இவன் என்பவற்றிற்குரிய வினையாயிருந்து, விளையாடுப என்னும் (இரண்டிற்கும்உரிய) பொதுவினையோடு முடிதல் அமையாவா மென்பது.

உயர்திணை இத்தனை வகைப்படும், அஃறிணை இத்தனை வகைப் படும் என்பதை உணர்த்தினல்லது அவ்வவற்றிற்குரிய ஈற்றை யுணர்த்துதல் பொருந்தாமையின், பின்னர்க் கூறப்படும் பாலுணர்த் தும் ஈறுகளே (ன், ள், ர், ப், மார் போல்வன) போதும்; இங்ஙனம் தொகுத்துச் சுட்டல் வேண்டாம் என்றல் பொருந்தாது.

முதல் நூற்பாவில் உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல் எனச் சொல் இருவகைப்படும் என்றார். அடுத்து இந்நூற்பாவில் அவ்வுயர் திணைச்சொல் மூன்று வகைப்படும் என்று கூறினால்தான் நூற்பாவின் அமைப்பு இனிதாக இருக்கும். ஆதலின் 'அம்முப்பாற் சொல் உயர் திணைய' என ஆசிரியர் கூறினாரேனும், உயர்திணைச்சொல் மூவகைப் படும் என்பது கருத்தாகக் கொள்க என்றார்.

௪ ஆம் நூற்பா: பேடர் என்பது மயிலைநாதர் உரையில் உள்ளது என்றும், அது ஈண்டு இருத்தற்கு இயைபில்லை என்றும் திரு. கணே சையர் கூறுவர்.

'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவி' என்பது பேடியைக் குறிக்க வந்த தொடராகும். இதனுள் 'பெண்மை சுட்டிய' 'ஆண்மை திரிந்த' என்ற இருதொடரும் இன்றி யமையாதனவா? என்பதை ஆராய்கின்றார் சேனாவரையர். 'பெண்மை சுட்டிய பெயர்நிலைக்கிளவி என்று மட்டும் குறித்திருப்பின், மகடூஉ வாகிய பெண்பாலையே குறிக்கும். 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி என்று மட்டும் குறித்திருப்பின், அலியைக் குறிக்கும். ஆதலின் ஈண்டுக் குறிப்பது மகடூஉவும் அன்று; அலியுமன்று; பேடியாதலின் அதனை இவ்வாற்றானல்லது குறித்தல் இயலாமையின் இவ்விரு தொட ரும் இன்றியமையாதனவே என்பது. 'ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக் காமனுடிய பேடியாடலும்' என்ற சிலப்பதிகாரப் பகுதி யானும், 'பெண் அவாய் ஆண் இழந்த பேடியணியாளோ' என்ற நாலடியார்ப் பகுதியானும் பேடியின் இலக்கணத்தை நன்கறியலாம்.

பெண்தன்மை குறைந்து ஆண்தன்மை மிக்கதை அலி என்றும், ஆண்தன்மை குறைந்து பெண்தன்மை மிக்கதைப் பேடி என்றும், இவ்விரு தன்மையில் ஒன்றேனும் மிகுதல் குறைதலின்றி ஒரு வகை யானும் கூறப்படுதற்குரிய தல்லாததாய் இருப்பதைப் பேடு என்றும் கூறுவர். ஆசிரியர் 'பெண்மை சுட்டிய' என்று கூறுவதால் ஈண்டு அலியேயன்றி இப்பேடு என்பதும் ஒழிக்கப்பட்டது என்றார் சேனாவரையர்.

இடைநிலை—இடைப் பிறவரல். தன்மை திரிபெயர் என்பதில் பெயர், தன் தன்மையினின்றும் திரிதலில்லை; அப்பெயருடைய பொருளே திரியும். அதுபோல ஆண்மைதிரிந்த என்புழியும், பெயருக்கு ஆண்மையோ பெண்மையோ இன்மையின் அப்பெயர் திரிதலில்லை. அப்பெயருடைய பொருளே திரியும் என்க. இங்ஙனம் பொருள் திரி தலைச் சொல்மேல் ஏற்றிக் கூறுவது சொற்கும், பொருட்கும் உள்ள ஒற்றுமை கருதியேயாம்.

பேடியும் தெய்வமும் உயர்திணை முப்பாலுக்குரிய எழுத்துக்களைப் பெற்று வழங்கும். எனவே அவை தமக்கெனத் தனித்துப்பால் உணர்த் தும் ஈறுகளையுடையனவல்ல என்பது பெறப்படுகின்றது. அங்ஙனமாக 'இவ்வென அறியும் அந்தந்தமக்கிலவே' என்று கூறவேண்டாமே எனில்,

அற்றன்று. மாணாக்கர்களுள் நூல்நிலையப் புத்தகங்களைப் பயன்படுத்து வோர் பலர். அங்ஙனம் பயன்படுத்துவோரிற் பலர், தமக்கெனப் புத்தகங்கள் இல்லாதவராகவே இருப்பர். சிலர் தமக்குச் சொந்தப் புத்தகங்கள் இருப்பினும் அவற்றைப் பயன்படுத்தாது நூல்நிலையப் புத்தகங்களையே பயன்படுத்துவர். அதுபோல, பேடியும் தெய்வமுமாய சொற்கள் பாலுணர்த்துதற்குத் தமக்கெனத்தனி ஈறுகளை உடைய வாய் இருந்தும் உயர்திணைப்பாற்குரிய ஈறுகளைக்கொண்டு வழங்குமோ, அன்றித் தமக்கென உரிய ஈறுகளின்றியே உயர்திணை ஈறுகளைக் கொண்டு வழங்குமோ என்று ஐயம் ஏற்படும். அவ்வையம் நீங்க, இவை தமக்கென தனித்தனி ஈறுகள் இன்றியே உயர்திணையிடத்து வழங்கப்படும் என்றற்கு 'இவ்வென அறியும் அந்தம் தமக்கிலவே' என்றார் என்பது.

சுட்டிய என்பதைப் பெயரெச்சம் என்பர் சேனாவரையர். வினை யெச்சம் என்பர் இளம்பூரணர். அதனைச் சேனாவரையர் மறுக்கின்றார். செய்யிய என்னும் வினையெச்சம் இறந்தகாலத்தில்வரின், அது காரண காரியப் பொருட்டாயே வரும் (சொல்-௲ள உரை காண்க). எனவே சுட்டிய என்பதைச் செயவெனச்சமாகக் கொள்ளின், பெண்மையைச் சுட்ட வேண்டி ஆண்மையினின்றும் திரிந்தது என்று பொருள் காண நேரும். ஆனால் பேடி என்பதோ பெண்மையைச் சுட்டுவதற்காக ஆண் தன்மையினின்றும் திரிந்ததல்ல; அதற்கு அது இயல்பாகும். ஆதலின் இதனை வினையெச்சமாகக் கொள்ளல் பொருந்தாது என்றார்.

ஆண்மை திரிதல் பொருளுக்கேயன்றிச் சொற்கின்றேனும், சொல் லொடு பொருட்குள்ள ஒற்றுமை கருதி அங்ஙனம் கூறினர் என்பது சேனாவரையர் கருத்து. ஆனால் இளம்பூரணர் ஆண்மை திரிதல் சொற் கின்மையின் ஆகுபெயரால் பொருள்மேல் (அதாவது பேடி என்ற பொருள்மேல்) நின்றதென்பர். அதனையும் சேனாவரையர் மறுக்கின்றார். ஆசிரியருக்குப் பேடி என்னும் பொருளே கூறுதல் கருத்தாயின், 'பெண்மை சுட்டிய..........பெயர் நிலைக்கிளவியும்', 'தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்' என்றெல்லாம் நீளச் சொல்லியிருக்கமாட்டார். பேடியும் தெய்வமும் எனத் தாம் கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்கிய சொல்லால் சொல்லியிருப்பர். ஆதலின் அதுவும் கருத்தன்று.

ஆசிரியர் தொல்காப்பியர் முதல்நூற்பாவானும், இந்நூற்பா வானும் மக்களும் தெய்வமுமே உயர்திணை என்று கூறுகின்றார். நன்னூலார் இளம்பூரணர் கருத்தைத் தழுவி நரகரையும் உயர்திணை யென்பர். நச்சினார்க்கினியரும் இதனைத் தழுவுவர். எனினும் தெய்வச் சிலையார் இது பொருந்தாதென மறுப்பர். அதனை அவருரையானறிக.

ரு ஆம் நூற்பா: அறங்கள் பலவற்றினும் அழுக்காறின்மை சிறப்புடைத்தாதல்பற்றி, அறமாவது அழுக்காறின்மை என்றனரே யன்றி, அழுக்காறின்மையொன்றே அறம், ஏனைய அறமல்ல என்றாரல்லர். அதுபோல னகர ஒற்று ஏனைய பகுதி முதலியவற்றுடன் வந்தே ஆண்பாற் பொருளை உணர்த்துமேனும், பாலுணர்த்தும் சிறப்பு நோக்கி 'னஃகான் ஒற்றே ஆடூஉவறிசொல்' என்றார். எனவே இங்ஙனம் கூறுவது கொண்டு னகர வொற்றொன்றே தனித்து நின்று ஆண்பாற்பொருளை யுணர்த்தும் எனக் கொள்ள லாகாது என்பது கருத்து.

உயர்திணை மூன்று பாகுபடும் எனக்கூறி அவற்றை இந்நூற்பா முதல் வகுத்துக் கூறுகின்றாராதலின், 'னஃகான் ஒற்றே ஆடூஉவறி சொல்' என்றாரேனும், 'ஆடூஉ வறிசொல் னஃகான் ஒற்றாகும்' என்று கருதுதலே பொருத்தம் உடைத்து என்பதாம்.

'னஃகான் ஒற்றே' என்பதிலுள்ள ஏகாரம் அசைநிலை என்றார் சேனாவரையர். இளம் பூரணர் பிரிநிலை என்றார். இதனைப்பிரிநிலை யாகக் கொள்ளின் பதினெட்டொற்றுக்களில் னகாரவொற்றொன்றே ஆண்பாலையுணர்த்தும், ஏனைய உணர்த்தா எனப் பொருள்பட்டு அந்த னகர ஒற்றின் சிறப்பைக் கூறுவதுபோல ஆகிவிடும்; ஆடூஉ வறிசொல்லின் இலக்கணம் கூறுவதாக அமையாது; ஆதலின் பிரிநிலை யென்றல் பொருந்தாது என மறுத்தனர் சேனாவரையர்.

எனினும் இளம்பூரணர், உண்டான் என்னும் சொல்லில் நான்கு எழுத்துக்களிருப்பினும் னகர ஒற்றொன்றே ஆண்பாலுணர்த்தலின், அது நோக்கியே அதனைப்பிரிநிலை என்றார் ஆதலின், சேனாவரையர் கருத்துப் பொருந்துவதன்றாம்.

எ ஆம் நூற்பா: பலர்பாலுக்குரிய ஈறுகள் மூன்று. அவை ர், ப, மார் என்பன. ரகர ஒற்றையே அர், ஆர் என விரித்துக் கூறுவர். ஆர் ஈறு எதிர்காலம் காட்டும். மார் ஈறும் எதிர்காலம் காட்டும். ஆதலின் ஆர் ஈற்றுள் மார் ஈற்றையும் அடக்காததற்குக் காரணம் என்னை? என வினவிக்கொண்டு அதற்கு விடை கூறுகின்றார் சேனாவரையர். (க) கொண்மார் என்பதை ஆர் ஈறாகக் கொள்ளின் கொள்+ம்+ஆர் எனப் பிரிக்கவேண்டும். அங்ஙனம் பிரிப்பின் 'ம்' என்பது இடை நிலையாகும். இடைநிலைகள் எல்லாம் முதனிலைக்கேற்ப (பகுதிக்கேற்ப) வேறுபட்டுவரும் நிலைமையுடையது. எடுத்துக் காட்டாக உண்ப, வருவ என்ற சொற்களைக் காண்போம். உண் என்னும் முதனிலைக்கு ஏற்ப வரும் பகர இடைநிலை, வா என்ற முதனிலைக்கு வாராமையும், வா என்னும் முதனிலைக்கு ஏற்ப வரும் வகர இடைநிலை உண் என்னும் முதனிலைக்கு வாராமையும் காண்க. எனவே கொண்மார் என்பதிலுள்ள மகர இடை நிலையும் முதனிலைக்கேற்ப வேறுபட வேண்டும். ஆனால் இம்மார் என்பதோ கொண்மார், சென்மார், வருமார் என எல்லா முதல்நிலைகளுக்கும் ஏற்ப வருகின்றது. ஆதலின் இதனைத் தனித்து மார் ஈறு என்றே கொள்ளவேண்டும். (உ) எல்லா முற்றுக்களும் பெயர்கொண்டு முடியின் முற்றென்றும், வினைகொண்டு முடியின் எச்சமென்றும் பெயர் பெறும். ஆனால் இம்மாரீற்று வினைமுற்றோ வினைகொண்டு முடியினும் முற்றென்றே பெயர்பெறும். இவ்வேற்றுமையானும் இதனைத் தனியீறாகக் கொள்ள வேண்டும் என்பதாம்.

நேரத்தோன்றும்—நிரம்பத்தோன்றும். தன்மை, உயர்திணைக்கே யுரியது என்பது ஆசிரியர் கருத்து. எனவே தன்மைப் பன்மைக்கு வரும் வினைமுற்று விகுதிகளையும் (கும், டும், தும், றும் முதலியன) பலர்பால் விகுதியொடு உடன் கூறியிருக்கலாமே? என்பது வினா. இவை தன்மைப் பன்மையில் வருங்கால் உயர்திணையை உளப்படுத்தலே யன்றி அஃறிணையையும் (யானும் என்னெஃகமும் சாறும் என்பது போல) உளப்படுத்தி வருதலின், உயர்திணைப் பலர்பாலுக்கேயுரிய இவ்வீறுகளுடன் அவற்றையும் உடன் கூறாராயினர் என்பது விடை.

அங்ஙனமாயின் தன்மையொருமை விகுதிகளாய கு, டு, து, று, என்பனவற்றை, உயர்திணை ஆண்பால், பெண்பால், வினைமுற்றுக் களோடு உடன் கூறாதது என்னையெனின், தன்மையில் ஒருமை,பன்மைப் பாகுபாடே யன்றி, ஆண், பெண் பகுப்பு இன்மையானும், டு, து, று என்பன அஃறிணைக்கும் வருதலானும் கூறாராயினார் என்க.

அ ஆம் நூற்பா: கிடக்கை முறை—நெடுங்கணக்கு முறை. அது ட, த, ற என்பது. பிறப்பு முறை—காலமுணர்த்தும் முறை.

கூ ஆம் நூற்பா: உண்ப என்பது பலர்பால், அஃறிணைப் பலவின்பால் ஆகிய இரண்டிற்கும் வரும். எனினும் இதனை விரிக்கும் முறையில் வேற்றுமை உண்டு. பலர்பால் எனில், உண்+ப எனப் பிரிக்கப்படும். அஃறிணைப்பலவின்பாலெனில், உண்+ப்+அ எனப் பிரிக்கப்படும். ஈண்டு தகைப்ப கொடுப்ப என்பன பகரம் ஊர்ந்து நின்ற அகர ஈறாய் (தகை+ப்+ப்+அ=தகைப்ப, கொடு+ப்+ப்+அ =கொடுப்ப) அஃறிணைப் பலவின்பாலை யுணர்த்துதல் போல, உண்ப என்பதும் பகா மூர்ந்து நின்ற அகர ஈறாய் (உண்+ப்+அ=உண்ப) அஃறிணைப்பலவின்பாலையுணர்த்தி நின்றது என்பதாம்.

தகைப்ப, கொடுப்ப என்ற சொற்கள் இயல்பான சொற்கள் அல்ல. தகைப்பன, கொடுப்பன என்பனவே செய்யுள் விகாரத்தால் அங்ஙனம் நின்றன. ஆனால் ஈண்டுக் கூறப்படும் உண்ப என்பதோ இயல்பான சொல்; அதுவும் வழக்குச் சொல். ஆதலின் இதற்கு அவற்றை உவமை யாகக் கூறல் பொருத்தமில்லை என்று ஒரு மாணாக்கன் தடை நிகழ்த்த, அதற்கு விடை கூறுவதுபோல் கூறுகின்றார் சேனாவரையர். ஈண்டுக் காட்டப்பட்ட தகைப்ப, கொடுப்ப என்பன செய்யுட்சொற்களா யினும், வழக்கிலும் இச்சொற்கள் தகைத்தன, தகையாநின்றன, தகைப்பன; கொடுத்தன, கொடா நின்றன, கொடுப்பன என முக்காலத்தும் அன்பெற்றும், தகைத்த, தகையா நின்ற, கொடுத்த, கொடா நின்ற என அன்பெறாதும் வருவனவேயாம். ஆதலின் இங்ங னம் காட்டப்பட்ட சொற்கள் செய்யுட்கே உரியனவென்றோ, அவை செய்யுள் விகாரத்தாலேயே அங்ஙனம் நின்றனவென்றோ கருதுதல் தகாது என்றனர் சேனாவரையர்.

இன்னொரு மாணாக்கன் கலித்தொகையில் காட்டப்பட்ட இரு சொற்களில் கொடுப்ப என்பது பெயராக (அதாவது வினையாலணையும் பெயராக) அன்றோ உளது; ஈண்டுக் கூறப்படும் உண்ப என்பது வினை முற்றன்றோ?அதற்கு இது காட்டலாகுமா?வென்று வினவினன். அதற்கு விடை கூறுவதாக அமைந்துள்ள வரியே, 'கொடுப்பன யாவை' என்று தொடங்கும் வரியாகும். கொடுப்ப என்பது கொடுப்பவைகளைப் போல எனப் பொருள்பட்டால் பெயராகும். ஈண்டுச்சினையவும் சுனைய வும் ஆய பொருள்கள் தாமே கொடுப்பன போல எனப் பொருள்பட்டு அச்சொல் முற்றாய் நிற்றலின், அதுவும் உண்ப போன்றதேயாம் என்று விடை கூறினர் சேனாவரையர்.

இப்பலவின்பாலுக்கு அ, ஆ, வ என்ற மூன்று ஈறுகள் உள்ளன. இவற்றுள் வகரத்தை அகரத்தில் அடக்கி இரண்டாகக் கூறினும் அமைவதாயிருக்க, அங்ஙனம் கூறாததேன்? என்பது அடுத்த வினா. அதற்கு, மார் ஈறு ஆரீற்றில் அடங்காமைக்கு உரைத்த இரு காரணங் களில் முன்னையதை மட்டும் இதற்கு விடையாகக்கொள்க என்றார்.

உண்குவ என்பதை அகர ஈருகக் கொள்ளின், உண்+கு+வ்+அ எனப் பிரிக்க வேண்டும். அங்ஙனம் பிரிப்பின் 'வ்' இடைநிலையாகும். இடைநிலைகள்எல்லாம் பகுதிக்கேற்ப வேறுபட்டு வரும். இதுவோ உண்குவ, நின்குவ, வருகுவ என எல்லா முதனிலையின் மேலும் வகர ஈருகவே வருகிறது. ஆதலின் இதனை வகர ஈறென்றே கொள்ளவேண்டுமென்பதாம்.

ஆனுல், குகரம் இன்றி வருவ, செல்வ என வருமிடத்து வகர இறுதியாகவும் கொள்ளலாம்; அகர இறுதியாகவும் கொள்ளலாம். நன்னூலார் இந்நிலைமை கருதியே அ, ஆ என்ற இரண்டையுமே கொள்வர். எனினும், தெய்வச்சிலையார் வகர விகுதியின் இன்றியமையாமையை விளக்குவது மிகவும் சுவைதருவதாகும். 'உண்கு என நின்ற எதிர் காலச்சொல் பன்மையை யுணர்த்தும் அகரம் ஏறியவழி உண்க என வியங்கோட்பொருண்மைப்படும் ஆகலின், ஆங்கு உண்குவ என வகர வுயிர்மெய் கொடுக்க வேண்டுதலின் வகரமென வோதல் வேண்டும் என்க' என்பர்.

கo ஆம் நூற்பா: திணையிரண்டென்பது முதல்நூற்பாவானும், பால் ஐந்தென்பது உ, ௩ ஆம் நூற்பாக்களாலும் முன்னரே அறியப் படுதலின், மீண்டும் 'இருதிணை மருங்கின் ஐம்பால்' என்பது மிகையன்றே எனின், திணையிரண்டே பால் ஐந்தே என வரையறுத்தற்காக அதனை மீண்டும் கூறினுராதலின் அது மிகையன்ரும் என்ருர் சேனுவரையர்.

கல்லாடர், மேல் உயர்திணையில் மக்களேயன்றித் தெய்வம், பேடி என்பனவும் அடங்குமெனக் கூறலின், இவையனைத்தும் சொற்பகுதியால் உயர்திணை முப்பாலுள் அடங்கினும், பொருள் வகையால் வேறு திணையாகவும், வேறு பாலாகவும் இசைக்குமோ என ஐயுற்ற மாணுக்கனுக்கு, இருதிணையும் ஐம்பாலுமல்லது வேறில்லை எனக் கூறற்காகவும், விரிந்தது தொகுத்தல் என்ற உத்திபற்றியும் இங்ஙனம் கூறினுர் என்பர்.

ஞாபகம்—அறிவிப்பது. ன, ள, ர, மார் என்பன இறுதியில் வரும் என அவ்வந் நூற்பாக்களில் கூறவில்லை. அவை இறுதியில் நின்று பாலுணர்த்துமென்பதை முதன் முதலாக இந்நூற்பாவே அறிவித்தலின் அவற்றிற்கு 'ஈற்றில் நின்றிசைக்கும்' என்பது ஞாபகமாயிற்று. ஏனைய (ப, து, று, டு, அ, ஆ, வ ஆகிய) ஏழும் அவ்வந்நூற்பாவிலும் இறுதியில் வரும் என்று கூறுவதால், 'ஈற்றில் நின்றிசைக்கும்' என்பது அநுவாதமாயிற்று. அநுவாதம்—முன்சொல்லியவற்றை மீண்டும் கூறல்.

கக ஆம் நூற்பா: வினைப்பாலறிசொல்—வினைச்சொற்கள். இவை திணையும் பாலும் இடமும் காலமும் உணர்த்தும். பெயர்ப்பாலறி சொல்—பெயர்ச் சொற்கள். இவை திணையும் பாலும் இடமும் உணர்த்தும். பெயர்ப்பாலறி சொல்லுள் ஒரு சாரன—வினையாலணையும் பெயர். இவை வினைச்சொற்கள் போலவே திணையும் பாலும் இடமும் காலமும் உணர்த்தும்.

யோகம்—கூட்டம். விபாகம்—பிரித்தல். ஒரு தொடரை முன்னர்க் கூட்டியும், பின்னர்ப் பிரித்தும் பொருள்காணின் அது யோக விபாகம் ஆகும். மயங்கல்கூடா தம்மரபினவே—(வினைபற்றிவரும் சொற்களும், பெயர்பற்றிவருஞ் சொற்களும் தம்முள் தொடருங்கால்) ஒருபாற் சொல்லொடு ஏனைப்பாற் சொல் மயங்குதல் தொடரா; இவை தத்தம்

இலக்கணப்படியே வரும். இங்ஙனம் 'மயங்கல் கூடா' என்பதும் தம் மரபினவே என்பதும் தொடர்ந்து நிற்க, அதனை ஒரு பொருளாகக் கொள்ளல் யோகமாம். 'மயங்கா' என்பதற்கு இவ்விருசொற்களும் மயங்குதலைப் பொருந்தா என உரை கூறி முடித்துவிட்டுப், பின் 'தம்மரபினவே' என்பதற்குச் சொற்கள் தத்தம் மரபு நிலையினின்றும் திரியா என வேறொரு பொருளைக் கூறுவதாகக் கொள்ளின் அது விபாகமாம்.

செப்பு வழாநிலை, வினு வழாநிலை ஆகிய இரண்டையுமே சேனா வரையர் இந்நூற்பாவில் அடக்கிக் காட்டவில்லை. ஏனைய ஐந்தையும் அடக்கிக் காட்டியுள்ளார்.' எனினும், இந்நூற்பாஉரை யிறுதியில் திணை, பால், கால வழாநிலைகளே இந்நூற்பாவால் காத்தார் எனக் கூறியிருப்பது ஆராயத் தக்கதாம்.

கஉ ஆம் நூற்பா: இந்நூற்பாவில் 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி' என்பது ௪-ஆம் நூற்பாவில் கூறப்பட்ட 'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி' என்பதே யாம். எனவே பேடி என்னும் சொல் உயர்திணையில் வரும் என்பதை ஆண்டும், அது பெண்பாற் சொல்லால் முடியும் என்பதை ஈண்டும் கூறினாராயிற்று. நன்னூலார் இதனை 'ஆண்மை விட்டு அல்லதவாவுவ பெண்பால்' எனச் சுருங்கக் கூறுவர்.

கங ஆம் நூற்பா: செவ்வனிறை - நேர்விடை. இறை பயப்பது - நேர்விடையன்றாயினும், ஒருவாற்றான் விடையை உணர்த்துவது. வயிறு குத்திற்று - வயிறு வலிக்கின்றது.

சொல் எப்பொருளுணர்த்தும்? எனின், ஒரு பொருளும் உணர்த் தாது என விடை கூறுவதும் செப்பு வழுவாம். எப்பொருள் உணர்த் தும்? என்ற வினாவே அச்சொல் பொருளுணர்த்தும் என்பதைத் தெரி விக்கின்றது. அங்ஙனமாக அவ்வினாவிற்கு விடையாக இப்பொருளு ணர்த்தும் எனச் சொல்லவேண்டியிருக்க (தான்குறித்த பொரு ளாகிய) ஒரு பொருளும் உணர்த்தாது எனக்கூறலின் செப்புவழு ஆயிற்று. தற்காலத்தில், ஏதேனும் ஒரு பொருளைக் குறித்து நீவிர் அறிந்ததை எழுதுக எனில், அதைப்பற்றி எனக்கு ஏதும் தெரியாது என எழுதினும் மதிப்பெண் வேண்டுமென்றும், அது நேர்விடையே யென்றும் சிலர் வாதிக்கின்றார்கள். நீவிர் அறிந்ததை எழுதுக என்ற வினாவே அப்பொருளை நிரம்ப அறிந்திருக்க வேண்டுமென்றும், முழுமை யும் அறியவில்லையேனும் அறிந்தவரையிலேனும் எழுதுக என்பதும், தானே விளக்கலின் அதற்கு ஏற்ற விடைதாராது 'ஒன்றும் தெரியாது' என விடை யெழுதுவது செப்பு வழுவாம்.

செப்பு என்பதற்கு ஒருவன் வினவிய வினாவிற்கு விடைதருவது என விளக்கம் கண்டனர் சேனாவரையர். ஆனால் உலகில், இரவலர்கள் நாம் அவர்களைக் கேளாமலேயே தம் குறையைச் சொல்லி இரப்பதைக் காண்கிறோம். வினவிய பொருளுக்கு விடைதருவதுதான் செப்பு எனில், இத்தகைய இரப்புரைகளை எதன்கண் அடக்குவது? என்று ஐயம் வரும். அதனையும் செப்பின்கண்ணேயே அடக்கி விடுக என்கின்றார். இவ் விடர்ப்பாடு கருதிச் செப்பு என்பதற்கு வினவிய பொருளுக்கு விடை தருவது என விளக்கம் தாராது, அறிவுறுப்பது செப்பு என்று மட்டும் விளக்கம் காணில் அமையாதோ எனில், அமையாது. என்னை? (க)

அறிய வேண்டுவதை அறிவுறுத்த வருவதே வினாவாகும். எனவே வினாவாவது அறிவுறுத்த வருவது என்பது பெறப்படும். இவ்விலக்கணத்தையே செப்பிற்கும் கூறின் அது பொருத்தமின்றாம். (உ) செப்பு என்ற தமிழ்ச்சொல்லிற்கு நேரான வடசொல் உத்தரம் என்பதாகும். வினவிய பொருளுக்கு விடை தருவதே உத்தரம் என விளக்கம் காண்பர் வடநூல் வல்லார். எனவே அதற்கொத்த தமிழ்ச் சொல்லாகிய இதற்கும் அங்ஙனம் விளக்கம் காண்பதே முறையாகும்.

செப்பு, வினாஎதிர்வினாதல், ஏவல், மறுத்தல், உற்றது உரைத்தல், உறுவது கூறல், உடம்படுதல் என அறுவகைப்படும் என்றார் இளம்பூரணர். அதனை இருகாரணங்களால் மறுக்கின்றார் சேனாவரையர். (க) உயிர் எத்தன்மைத்து என்று வினாயவழி உணர்தல் தன்மைத்து என விடை கூறின் அதனை இவ்வறுவகையில் எவ்வகையிலும் அடக்க இயலாதாகின்றது. (உ) உண்டியோ என்று வினாயவழி உண்ணமாட்டேன் என மறுத்தோ அல்லது, உண்டேன் உண்கின்றேன் என உடன்பட்டோ விடை கூறுவதையும் காணலாம். நீ இது செய் என்று ஏவியவழி அவ் ஏவலைக் கேட்டான் செய்யமாட்டேன என மறுத்தோ, அல்லது செய்கின்றேன் என உடன்பட்டோ கூறுவதையும் காணலாம். ஆதலின் மறுத்தல், உடன்படல் என்பன செப்புவான் கூற்றாக வருவதன்றியும் ஏவப்பட்டான் கூற்றாகவும் வருதலின், இவ்விரண்டையும் செப்பலின் வகையாக அமைத்தல் பொருந்தாது.

செப்பு அறுவகைப்படும் என்பதில் மறுத்தல், உடன்படல் என்ற இரண்டையும் சேனாவரையர் மறுப்பினும், கச, கடு ஆம் நூற்பாக்களில் அவர்காட்டும் எடுத்துக்காட்டுக்களைநோக்க, ஏனைய நான்கும் அவருக்கு உடன்பாடாதலைத் தெளியலாம். ஆனால் அவற்றை இளம்பூரணர் கூறியவாறு வகைப்படுத்தாது இறைபயத்தலில் அடக்கி விடலாம் என்பது அவர் கருத்து.

ஒருபுடையானும் அறியப்படாத பொருள் - ஒரு சிறிதும் அறியப்படாத பொருள். சேனாவரையர், வினாவை மூவகைப்படுத்தினர். இளம்பூரணர் ஐவகைப்படுத்தினர். இளம்பூரணர் கூறும் அறிவொப்புக் காண்டல், அவனறிவுதான் காண்டல், மெய்யவற்குக் காட்டல் என்பன, தாம் கூறும் அறிபொருள் வினாவில் அடங்கும் ஆதலின், மூவகைப்படுத்துவதே சிறப்புடைத்தென்றனர் சேனாவரையர்.

செப்பு, வினா ஆகிய இரண்டனுள் செப்பு வழுவிவரினும் ஏற்றுக் கொள்க என்பதை ஆசிரியர் கடு ஆம் நூற்பாவில் கூறுகின்றார். ஆனால் வினா வழுவிவரினும் இழுக்கில்லை என்பதை யாண்டும் கூறவில்லை. ஆதலின் வினாவழுவுதல் இல்லை யென்றும், அதனால் அது வழுவி வருதலை வழுவமைதியாகக் கொள்வதற்கில்லை யென்றும் இளம்பூரணர் கூறினர். வினாவழுவிவரினும் ஏற்றுக்கொள்க என ஆசிரியர் செப்பிற்குக் கூறியது போல் வினாவிற்கு வெளிப்படையாகக் கூறவில்லையாயினும் ௯௨, உ௪௪-ஆம் நூற்பாக்களில் வினாவழுவமைதிகளைக் கூறுகின்றார் ஆதலின், வினாவும் வழுவி வரலாம் என்பது விளங்குகின்றது. ஆதலின் இக்கருத்து ஏற்புடைத்தன்று என மறுத்தனர் சேனாவரையர்.

செப்பு, வினா ஆகிய இவைபற்றி நச்சினார்க்கினியர் சேனாவரையர் கருத்தினோடொப்பர். தெய்வச்சிலையார், துணிந்து கூறல், கூறிட்டு மொழிதல், வினாவி விடுத்தல், வாய்வாளாதிருத்தல் எனச் செப்பு நான்கு வகைப்படும் என்பர். பிறவகைப்படுதலை இவர் கூறிற்றிலர்.

கல்லாடரும், பழைய உரையாசியரும் செப்பு, மறுத்தல், உடம்படுதல் என இருவகைப்படும் என்பர். கல்லாடர் வினாபற்றிக் கூறுவன, சேனாவரையரும் இளம்பூரணரும் கூறும் கருத்தைத் தழுவியன. பழைய உரையாசிரியர், மறுத்தல், உடம்படுதல், வினா எதிர் வினாதல், ஏவல், உற்றதுரைத்தல் என வினா ஐவகைப்படும் என்பர். மறுத்தல், உடம்படுதல் என்பன செப்பு வினா ஆகிய இரண்டற்கும் வரும் என்பது இவர் கருத்து.

கச, கரு ஆம் நூற்பாக்கள்: ஒரு வினாவிற்கு விடையாக வருவது வினா வாய்பாட்டால் இருப்பினும், அதுவும் விடையாக வருதலின் ஏற்றுக்கொள்க என்பது ௧௪-ஆம் நூற்பாவின் கருத்து.

ஒரு வினாவிற்குரிய விடை நேராக இல்லாது, இறைபயத்தலாக இருப்பினும், அதனையும் விடையாக ஏற்றுக் கொள்க என்பது கரு-ஆம் நூற்பாவின் கருத்தாகும்.

கசு ஆம் நூற்பா: 'அவன் கோலினும் தண்ணிய தடமென் றோளே' என்பது உறழ் பொருள். செங்கோல் - முதல்; தோள் - சினை. 'துளிதலைத் தலைஇய தளிரன் னோளே' என்பது ஒப்பு. தளிர் - சினை. அன்னோள்-முதல். 'வினைபயன் மெய்யுரு என்ற நான்கே வகைபெற வந்த உவமத்தோற்றம்' என்ற உவமையியல் இலக்கணத்தால் இவை யெல்லாம் அமைவனவாம். ஆதலின் ஈண்டு அமைக்கப்படா என்றார்.

இந்நூற்பாவிற்குப் பழைய உரையாசிரியர் தரும் இலக்கிய மேற் கோள்கள் சிறப்புடையன. அதனை அவருரையானறிக.

கள ஆம் நூற்பா: ஒரு பொருளைக் கூறும் பொழுது அப்பொரு ளுக்குரிய சொல்லைச் சொல்வதன்றி, அச்சொல்லிற்குச் சார்பான பிற சொற்களைச் சொல்லி அவற்றின் மூலம் அப்பொருளை விளங்க வைத்த லும் உண்டு. அங்ஙனம் உரிய சொல்லைச் சொல்லாது, பிறசொற்களைச் சொல்லுதற்குக் காரணம்: ஒன்று தகுதி நோக்கியதாயிருக்கும்; அன்றி வழக்கு நோக்கியதாயிருக்கும் என்பது இந்நூற்பாவின் பொருளாகும்.

பக்கச் சொல்-உரிய சொல்லிற்குச் சார்பாக வரும் சொல். வெண் களமர்-வேளாளர்; கருங்களமர்-புலையர் என்பர் பழைய உரையாசிரி யர். திரு. பூவராகம் பிள்ளையவர்கள் இவற்றிற்கு முறையே உழவர் என்றும், போர்வீரர் என்றும் பொருள் காண்பர். வெள்ளாடு என்பது காரணப்பெயர் போன்று இருப்பினும், அது யாட்டினத்துள் ஒரு வகையையே குறிக்கின்றதாதலின், அது காரணமின்றி வழங்கற் பாடே பற்றி வழங்கி வருவதாயிற்று. வழங்கற்பாடேபற்றி—வழங்குவது ஒன்றையே நோக்கி. வண்ணக்கர் - நாணயத்தின் தகுதியைஅளவிட் டுரைப்போர்.

தகுதியை மங்கலம், குழூஉக்குறி, இடக்கரடக்கல் என மூவகைப் படுத்தும், வழக்கை இலக்கணம், இலக்கணத்தோடு பொருந்தின மரூஉ என இருவகைப்படுத்தும் கூறுவர் இளம்பூரணர். சேனாவரையர் தகுதி, வழக்கு என்பனவற்றைப் பாகுபடுத்தாது, ஆசிரியர் கூறியவாறே கொள்வர். சேனாவரையர் தகுதிக்குக் காட்டியிருக்கும் எடுத்துக் காட்டுக்கள் இளம்பூரணர் கூறிய மங்கலத்துள் அடங்கும். வழக்கிற்குக் காட்டியிருக்கும் மீயடுப்பு என்பது, இளம்பூரணர் கூறிய இலக்கணத் தோடு பொருந்திய மரூஉவில் அடங்கும்.

இளம்பூரணர் கூறிய மங்கலம், குழூஉக்குறி, இடக்கரடக்கு ஆகிய மூன்றனுள், தாம் காட்டியன மங்கலத்தைச் சார்தலின், அதனை விலக்காது ஏனைய இருவகைகளையே மறுக்கின்றார் சேனாவரையர். வழக்கிலும் இவ்வாறே இளம்பூரணர் காட்டிய இலக்கண வழக்கைத் தாம் ஏற்றலின் மரூஉவை மட்டுமே மறுப்பாராயினர். மறுக்குமாறு :- (க) குழூவின் வந்த குறிநிலைவழக்கு சான்றோர் வழக்கிலோ அன்றிச் செய்யுளிலோ வருதல் இல்லை. ஆதலின் அதனை ஈண்டுக் கொள்ளவேண்டாம். (உ) இடக்கரடக்கலை ஆசிரியர் ௪௪௨, ௪௪௩ ஆம் நூற்பாக்களால் பின்னர்க் கூறுவர். ஆதலின் அதனையும் ஈண்டுக் கூறுவது வேண்டுவதின்றாம். (௩) மரூஉ முடிபை எழுத்ததிகாரத்து ஆசிரியர் ௧௧௧, உ௫௦, உ௫௧, ௩௫௫, ௪௮௩ ஆகிய நூற்பாக்களால் முன்னர்க் கூறியிருத்தலின் அதனை ஈண்டும் கூறின் கூறியது கூறலாம்.

இம்மறுப்பிற்குப் பின்னிருக்கும் மறுப்புரைகளால், இளம்பூரணர் கருத்துக்களாகச் சிலவற்றை உய்த்துணர வேண்டியிருக்கிறது. ஆனால் இளம்பூரணர் உரையில் இக்கருத்துக்கள் இல்லை. எனினும், இவை அவ்வுரையில் இருக்கவேண்டுமென யான் கழகவழிப் பதிப்பித்துள்ள இளம்பூரணருரையுள்ளும் விளக்கியுள்ளேன். இளம்பூரணர் கருத்தாகத் தெரிவன. (க) காக்கையிற் கரிது களம்பழம் என்புழிக் காக்கையினும் களம்பழம் கரிது என்று பொருள்படும். இங்ஙனம்படவே காக்கை வெண்ணிறம் உடையது என்றும் பொருள்படுதலின் இது வழுவாயிற்று. (உ) கும்பகோணத்திற்கு வடக்கு கங்கைகொண்ட சோழபுரம், அரியலூருக்குத் தெற்கு கங்கைகொண்ட சோழபுரம் எனில், கங்கைகொண்ட சோழபுரம் என்ற ஒன்றே வடக்கும் தெற்குமாகக் கூறப்படுகின்றது. இங்ஙனம் கூறுதல் வழுவாம். (௩) சிறுவெள்வாய் என்பது சிறிய வெள்ளிய வாய் எனப் பொருள் படும். எனவே சினைக்கு இரு அடைமொழி கொடுக்கப்பட்டுள்ளமையின் இது வழுவாம். இம்மூன்று கருத்துக்களையும் சேனாவரையர் மறுக்கின்றார். (க) கருமை என்பதில் முழுக்கருப்பு, இலேசான கருப்பு எனப் பல நிலையுள. இந்நிலையில் காக்கையினும் மிகமிகக் கரிது களம்பழம் எனக்கூறிக் களம்பழத்தின் கருமை மிகுதியை உணர்த்தினரேயன்றி, இதனால் காக்கை வெண்மையுடையது எனப் பொருள்படுமாறில்லை. (உ) கிழக்கு மேற்கு என்பன ஒன்றையொன்று சார்த்தியே பெறப் படுவதல்லது தனித்துக் கூறற்கில்லை. அந்நிலையில் கங்கை கொண்ட சோழபுரத்தையே, குடந்தையை நோக்க வடக்கு என்றும், அரியலூரை நோக்கத் தெற்கு என்றும் கூறியதல்லது வேறில்லை. ஆதலின் அதுவும் வழுவன்று. (௩) சிறுவெள்வாய் என்பது இடுகுறியாக ஒரு பொருளை யுணர்த்துவதல்லது சிறிய வெள்ளியவாய் எனப் பொருள்படுமா றில்லை. ஆதலின் அதுவும் வழுவன்று.

சிறுவெள்வாய்-ஒருவகைச் செடியின் பெயர். கல்லாடர், கரிய மயிர் என்பர்.

தெய்வச்சிலையார்மட்டும் இந்நூற்பாவிற்கு வேறு பொருள் கூறுவர். அதனை அவருரையானறிக.

௧௮ ஆம் நூற்பா: இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப் படுதல் இல்லாத பண்படுத்து வழங்கப்படும் பெயரை ஒருபொருட்குக் கொடுத்தல் வழக்கு நெறியல்ல; செய்யுள் நெறி என்பது நச்சினார்க்

கினியர் இந்நூற்பாவிற்குத் தரும் விளக்கமாகும். எனவே நூற்பாவில் கொடை என்னும் சொல், ஒரு பொருட்குக் கொடுத்தல் என்றும் பொருள்படும்.

பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என்பன வழக்காற்றில் இனஞ்சுட்டாது வந்தன என்பது இளம்பூரணர் கருத்து. இதனையே சேனாவரையர் பெயர் குறிப்பிடாது மறுக்கின்றார். இவை இனஞ்சுட்டாமையின் வழுவாயின அல்ல; பெருமையில்லாத இவர்களுக்குப் பெருமை கொடுத்ததே வழுவாம் என்பது அவர் கருத்து.

௧௯ ஆம் நூற்பா : இற்று-இப்படிப்பட்டது. இட்டிகை-செங்கல். நிலம் இயற்கைப் பொருள். அதன் இயல்பு வன்மை. எனவே நிலம் வலிது என்றே சொல்ல வேண்டும். அங்ஙனமின்றி நிலம் வலிதாயிற்று என ஆக்கச்சொல் கொடுப்பின் அது வழுவேயாம். எனினும் சேனாவரையர் இங்ஙனம் கூறப்பட்ட சொற்றொடரை மட்டும் கருதி வழுவென்றல் தவறு; சொல்லப்பட்ட சூழ்நிலையையும் நோக்கி முடிபு கூறவேண்டும் என்கின்றார். (க) 'நிலம் வலிதாயிற்று' என இயற்கையான நிலத்தில் நில்லாது கல், செங்கல் ஆகியவற்றையெல்லாம் இட்டு, கட்டையால் அடித்து வன்மை செய்யப்பட்ட நிலத்திலிருந்து கூறியிருப்பானாயின் அது வழுவில்லை. காரணம், அவன் நிற்கும் நிலம் இயற்கைநிலம் அன்று, செயற்கை நிலம் ஆதலான். (உ) இயற்கை நிலத்தில் நின்றே 'நிலம் வலிதாயிற்று' என்பானாயின் அப்பொழுதும் வழுவென்று கூறுதற்கில்லை. காரணம், அவன் முன்பு சேற்று நிலத்தில் இருந்துவிட்டுப் பின்பு, தன்னியல்பாக விருக்கும் நிலத்தை மிதித்து அந்நிலையிலும் கூறியிருக்கலாம். எனவே அவன் கூற்றில் 'ஆயிற்று' என்பதற்குப் பொருள் நிலத்தின் திரிபு அல்ல. நிலத்தது வேறுபாடேயாகும். சேற்று நிலத்தினை நோக்கத் தன்னியல்பில் இருக்கும் நிலம், வன்மையாகத்தானே இருக்கும். ஆதலின் அதுவும் வழுவில்லை. (ங) செயற்கை நிலத்திலுமின்றி, முன் சேற்றுநிலம் மிதித்தலுமின்றித், தன்னியல்பில் இருக்கும் நிலத்தில் நின்று கொண்டே, அதன் இயல்பு கூறுங்கால் 'நிலம் வலிதாயிற்று' எனில், அதுவே 'திங்கள் கரிது என்றாற்போல' பிறழ உணர்ந்தார் வழக்காம் என்பர்.

இங்ஙனம் இலக்கண விதிக்கு மாறாக இருக்கும் ஒருசொற்றொடரை எடுத்துக் கொண்டு, அதனைக் கண்ட மாத்திரத்திலேயே வழுவென்று ஒதுக்கிவிடாது, அத்தொடர் எழுந்த சூழ்நிலையையும் நோக்கி வழு, வழுவின்மை கூறவேண்டும் என்னும் சேனாவரையர் கருத்து மிகவும் நுட்பமானது. எதனையும் பரபரக்காது வரவரக் கண்டாராய்வதே அறிவுடைமையாம் என்பதை இதன்மூலம் சேனாவரையர் விளக்கும் திறம் மிகவும் அருமையாகவுள்ளது.

இயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறலாகாது என்பது விதி. அதற்கு மாறாக வந்த இதற்கு இவ்வளவு அமைதி கூறுமாறு போலவே, 'செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல்' என்ற விதிக்கு மாறாக மயிர்நல்ல, பயிர் நல்ல எனவரும் எடுத்துக்காட்டுக்களையும் எடுத்துக் கொண்டு. அவை சொல்லப்பட்ட சூழ்நிலை நோக்கி அமைதிகாண வேண்டுமென்கின்றார் சேனாவரையர். உக-ஆம் நூற்பாவில் இவ்வருமை யறிந்து மகிழ்க.

உ௦ ஆம் நூற்பா : 'திரிபு கூறுங்கால்' என்று பொருள் கூறற்கான சொற்றொடர் நூற்பாவிலில்லை. ஆதலின் அத்தொடரை 'ஆக்கமொடு

கூறல்' என்பதனுல் பெற்றேன் என்கின்ருர் சேனுவரையர். ஒரு பொருள் தன்னிலையினின்றும் மேன்மேல் உயர்ந்துவரினும், அல்லது தாழ்ந்துவரினும் அதனைத் திரிந்தது என்போம். எனினும், ஈண்டு ஆக்கம் என்பதால் அப்பொருள் தன்னிலையினின்றும் மேன்மேலுயர்ந்து வருதலாகிய திரிபே கொள்ளப்படும். ஆக்கம்-மேன்மேலுயர்தல் என்பர் பரிமேலழகரும்.

௨௧ ஆம் நூற்பா : கடு-கடுக்காய்.

செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறவேண்டும் என்பது முன்னைய நூற்பாவின் கருத்து. அவ்வாக்கச் சொல்லிற்குமுன் காரணம் கொடுத்துக் கூறவேண்டும் என்பது இந்நூற்பாவின் கருத்து. இவ்விரு கருத்துக்களையும் ஒருங்கு ஒரே நூற்பாவில் கூருது, இரு நூற்பாவாகக் கூறியதேன்? என்ற வினுவைத் தாமே எழுப்பிக்கொண்டு, அதற்கு விடை கூறுகின்ருர் சேனுவரையர். (க) செயற்கைப் பொருளுக்கு ஆக்கமும் காரணமும் கொடுத்துச் சொல்லவேண்டுமென்பது இவ்விருநூற்பாக்களாலும் பெறப்படும் கருத்தாகும். இவற்றை ஒரே நூற்பாவால் கூறின், செயற்கைப் பொருளுக்கு ஆக்கம் எத்துணை இன்றியமையாததோ, அத்துணை இன்றியமையாதது காரணமும் என்பது பெறப்படும். ஆனுல் அடுத்த நூற்பாவிலோ செயற்கைப் பொருள் ஆக்கச் சொல்லொடு வருங்கால், காரணமின்றியும் வரலாம் என்று கூறப்படுகிறது. எனவே ஆக்கச் சொல்லிற்குரிய இன்றியமையாமை, காரணத்திற்கில்லை என்பது பெறப்படுகின்றது. இங்ஙனமாக, முதலில் கூறப்பட்ட கருத்திற்கு முரணுக இக்கருத்துப்படும். ஆதலின் செயற்கைப் பொருளுக்கு ஆக்கமொடு கூறலை முற்கூறி, அவ்வாக்கந்தானும் காரணச்சொல்லை முன்னர்க்கொண்டு வருமென அதனைப் பிற்கூறினுர் என்பது. (உ) அன்றியும் செயற்கைப் பொருளுக்கு ஆக்கமும் காரணமும் கொடுத்துச் சொல்லுக என ஒரே நூற்பாவில் கூறிவிடின் காரணம் அச்செயற்கைப் பொருளுக்கோ அன்றி அவ்வாக்கத்திற்கோ என்றையுறவும் நேரும். ஆதலின் காரணம் ஆக்கத்திற்கேயாம் என்பதைத் தனித்து 'ஆங்கந்தானே காரணமுதற்றே' எனப் பிரித்துக் கூறல் இன்றியமையாததாயிற்று. இந்நுண்மை பிறருரையில் காணுதது.

இயற்கைப் பொருள், செயற்கைப் பொருள் பற்றிய (௧௯, ௨௦, ௨௧, ௨௨) இம்மரபுகள் ௧௧-ஆம் நூற்பாவில் கூறப்பட்ட 'தம்மரபினவே' என்னும் தொடரே விளக்குவதாயிருக்க, ஈண்டுக் கூறியதென்னை?யெனில், அத்தொடரிலேயே இக்கருத்துக்களைத் தெரிந்துகொள்வது நுண்ணுணர்வினுர்க்கு இயலுமேயன்றி ஏனையோர்க்கு விளங்கத் தெரியாதாம்; ஆதலின் வேருகக் கூறினுர் என்பது.

௨௨ ஆம் நூற்பா: போக்கு-குற்றம். பாயிரத்துள் 'போக்கறு பனுவல்' என்றவிடத்தும் இப்பொருட்டாதலறிக. குக்கில் - செம்போத்து. சிரல்-சிச்சிலிப் பறவை.

௨௩ ஆம் நூற்பா : பாற்பகுப்புடையது பொருளே யன்றிச் சொல்லில்லை. ஆதலின் ஐயக்கிளவி என்ருரேனும், ஐயத்திற்கிடமான பொருளையே குறிக்கும் என்ருர்.

௨௪ ஆம் நூற்பா : இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், நச்சினுர்க்கினியர், கல்லாடர், பழைய உரையாசிரியர் ஆகிய நால்வரும் ஒருவிதமாகவும், சேனுவரையர் ஒருவிதமாகவும், தெய்வச்சிலையார் ஒருவிதமாகவும் பொருளுரைப்பர்.

ஐயப் புலப் பொதுச்சொல் - ஐயத்திற்திடமாயவழிக் கூறப்படும் பொதுச்சொல். அஃதாவது உருபு, பெற்றம் போல்வன.

உருபு எனில், அது வேற்றுமை உருபு, உவம உருபு முதலிய உருபுகளையே குறிக்கும் என்றும், உருவு எனில் அது வடிவைக் குறிக்கும் என்றும், ஈண்டுவடிவையே ஆசிரியர் குறித்தலின் உருவு என்றே பாடங் கொள்ளவேண்டும் என்றும் கூறி, அதற்குத்தக்க மேற்கோளுங் காட்டி நிறுவுவர் நச்சினார்க்கினியர். அப்புலமை நலத்தை அவருரை யான் அறிக.

அஃறிணைப் பிரிப்பு என்பது அஃறிணைப் பொதுச்சொல்லைக் குறிக்கும். அதாவது பெற்றம் 'போல்வன. இது அஃறிணையில் ஒருமையும் பன்மையுமாகப் பிரித்தற்கேற்புடைய பொதுப்பெயராக நிற்றல் காண்க. இதனைப் பால்பகா அஃறிணைப்பெயர் எனலாம்.

சென்ற நூற்பாவில் 'பால்மயக்குற்ற......பன்மை கூறல்' என்பது இன்ன திணைக்கு என ஆசிரியர் விதந்தோதாராயினும் உயர்திணைக்கண்வரும் பால் மயக்கத்திற்கே பன்மை கூறவேண்டுமென்பது இளம்பூரணர் கருத்தாகும். எனவே ஒருவன் கொல்லோ, ஒருத்தி கொல்லோ என ஐயம் தோன்றிய விடத்துத் தோன்றுவார் என்ற பன்மையால் கூறுக என்பது கருத்தாகும். இவர் கருத்தின்படி ஈதொரு எடுத்துக்காட்டே இங்குக் காட்டற்குரியது. அதே போன்று இந்நூற்பாவிலும் 'உருபெனமொழிதல்' எதற்கு என ஆசிரியர் விதந்து ஓதாராயினும், திணைமயக்கத்திற்கு மட்டுமே உருபு என்ற சொல்லைப் பயன்படுத்த வேண்டும் என்பது இளம்பூரணர் கருத்தாகும். எனவே குற்றி கொல்லோ மகன் கொல்லோ எனத் திணையையம் தோன்றிய பொழுதே உருபு என்ற சொல்லைப் பயன் படுத்தவேண்டும் என்பது இவர் கருத்தாகும்.

இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) முன்னைய நூற்பாவில் (௨௩) கூறப்பட்ட கருத்து உயர்திணைப் பால் ஐயத்திற்கேயாகவும், இந்நூற்பாவில் கூறப்பட்ட 'உருபெனமொழிதல்' திணையையத்திற்கேயாகவும் கூறல்ஆசிரியர் கருத்தாயின், இந்நூற்பாவில் அஃறிணைப் பிரிப்பு என விதந்தோதினாற்போல அவற்றையும் அவ்வாறே விதந்தோதியிருப்பர். ஆனால் ஆசிரியர் அங்ஙனம் கூறவில்லை ஆதலின் அவை அவற்றிற்கே உரியவென்றல் பொருந்தாது. (௨) வழக்கில் மேற்கூறிய நியதியின்றிப் 'பன்மை கூறல்' உயர்திணைப் பன்மை மயக்கத்திற்கே யன்றி, அஃறிணைப்பால் மயக்கத்திற்கும், 'உருபென மொழிதல்' திணையையத்திற்கேயன்றி, ஏனைய உயர்திணை அஃறிணைப்பால் மயக்கத்திற்கும் வருதலால் இங்ஙனம் வரையறைப் படுத்தலும் பொருத்தமின்று. நடை-வழக்கு.

இளம்பூரணர் கருத்தே, நச்சினார்க்கினியர், கல்லாடர், பழைய உரையாசிரியர் ஆகிய மூவர்க்கும் கருத்தாகும். சேனாவரையரும், தெய்வச்சிலையாரும் ஒரே கருத்தினர் ஆவர்.

௨௫ ஆம் நூற்பா : அன்மைக் கிளவி தன்மை சுட்டலும் உரித்து வேறிடத்தான எனக் கொண்டுகூட்டிப் பொருளுரைத்துள்ளார் சேனாவரையர்.

குற்றியோ, மகனோ என்று ஐயுற்றுப், பின் மகன் என்று துணிந்த வழி அத்துணிபொருள் அல்லாத குற்றி என்பதன்கண் அன்மைச்

சொல்லை வைத்துச் சொல்ல வேண்டும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். இதன்கண் துணிந்துதழீஇக் கொள்ளப்பட்ட பொருள் மகன். அதனின் வேறுய பொருள் குற்றி.

உசூ ஆம் நூற்பா : அடை - ஒரு பொருளை யடுத்து நிற்கும் குணச்சொல். செய்யுளுள் இம்முறை வழுவி வந்ததற்கு எடுத்துக் காட்டாகப் பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கண் பேதை என்பதைக் காட்டினர் இளம்பூரணர். ஆனால் சேனவரையர் இது இம் முறை வழுவி வந்தன்று; வழுவின்றியே வந்தது எனச்சாதிக்கின்றார். இதற்கு அவர் காட்டும் காரணங்கள் மூன்று. (க) ஒரு தொடரில் பல சொற்கள் சேர்ந்துவரின் அவற்றை ஏற்றவாறு ஒருசொன்னீர்மைப் படுத்தி நிலைமொழி வருமொழியாகப் புணர்த்தல் மரபு. செம்பொன் பதின்றெடி, நூற்று முப்பத்தேழு என்பன இம்முறையில் வருதல் காண்க. பெருந்தோள் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பதில் பெருமை, தோள் என்பன வண்ணமும் சினையுமாகும். அடுத்து நிற்க வேண்டிய வழுதி என்னும் முதற்சொல் பல்யாகசாலை, முதுகுடுமி என்னும் சொற்களோடு இயைந்து ஒருசொன்னீர்மைப் பட்டு நிற்கின்றது. இங்ஙனம் வழுதி என்பது ஒருசொல் நீர்மையாய்ப் பிறசொல்லோடு இயைந்ததேனும் மூன்றுமிடத்து முதற்சொல் இருந்ததெனவே படும். அதுபோலவே இத்தொடரையும் கொள்ள வேண்டும் என்கிறார் சேனவரையர். இறுதியிலுள்ள பேதை என் னும் முதற்சொல்லை அதனையடுத்துள்ள பேரமர்க்கண் என்னுஞ் சொல்லோடு வேற்றுமைப் பொருள்படப் பேரமர்க்கண்ணையுடைய பேதை என்றாக்க அது ஒருசொல் நீர்மைப்படும். பின் அச்சொல்லும் சிறுநுசுப்பு என்னுஞ் சொல்லோடு சேர்ந்து ஒருசொல் நீர்மைப்பட நின்றது. இவற்றில் உட்டொடர்கள் பல இருப்பினும் ஒருசொல் நீர்மைத்தாகவே நிற்றலின் பேதை என்னும் முதற்சொல் பெருந் தோள் என்பதையடுத்து மூன்றுமிடத்து முறைப்படி நின்றதாகவே கொள்ளப்படும் என்பது. எனவே ‘பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கண் பேதை’ என்பதில் பெருமை வண்ணச் சொல்லாகும். தோள் சினைச்சொல்லாகும். சிறுநுசுப்பின் பேரமர்க்கண் பேதை என்பது ஒருசொல் நீர்மைத்தாய முதற்சொல்லாகும். ஆதலின் வண்ணச் சினைச்சொல் முறைப்படியே வந்துள்ளது. (உ) அன்றி, இத் தொடரை உம்மைத் தொகையாகக் கொண்டு பெருந்தோளும் சிறு நுசுப்பும் பேரமர்க்கண்ணும் என விரித்து, இவற்றை ஒருசொன்னீர் மைப்படுத்திப், பின் பேதை என்னும் முதற்சொல்லோ டியையக் கொள்ளினும் வண்ணச் சினைச்சொல்லிலக்கணத்தில் வழுவி வரவில்லை எனக் கொள்ளலாம். இம்முறையில் பெருந்தோள், சிறுநுசுப்பு என்பன பேரமர்க்கண் என்பதனேடு ஒருசொல் நீர்மைப்பட இயைத்து இறுதியிலுள்ள பெருமை என்பதை வண்ணச் சொல்லாய் அமர்க்கண் என்பதைச் சினைச்சொல்லாய், பேதை என்பதை முதற் சொல்லாய்க் கொள்ள வேண்டும். (ங) அன்றிப் பெருந்தோள் பேதை, சிறுநுசுப்பின் பேதை, பேராமர்க்கண் பேதை எனத் தனித்தனியே கூட்டி அமைத்துக் கொள்ளினும் வண்ணச் சினைச்சொல் லிலக்கணத்தில் வழுவாது நிற்கும். எனவே இத்தொடர் எவ்வாற்றானும் வழுவாத லின்றாம் என்பது.

இம்மூன்று முறையையும் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம். முதல்முறையில் பெருந்தோள் என்பதை நிலைமொழியாக நிறுத்தி,

ஏனையவற்றை ஒருசொல் நீர்மைத்தாகக் கொண்டு வருமொழியாக நிறுத்தி அமைதி காண்கின்றார். இரண்டாவதுமுறையில் பெருந்தோள் சிறுநுசுப்பின் பேரமர்க்கண் என்பதை ஒருசொல் நீர்மைத்தாகக் கொண்டு அதனை நிலைமொழியாக நிறுத்திப், பின் பேதை என்பதை வருமொழியாகக் கொண்டு அமைதி காண்கின்றார். மூன்றாவதுமுறையில் பெருந்தோள், சிறுநுசுப்பு, பேரமர்க்கண் ஆகிய மூன்றையுமே தனித்தனியே நிலைமொழியாகக் கொண்டு, ஒவ்வொன்றுக்கும் பேதை என்பதை வருமொழியாகக் கொண்டு அமைதி காண்கின்றார்.

எனினும் இது பொருந்துவதன்று. முன்னைய இருமுறையிலும், மூன்றாவதாகக் கூறுவது ஏற்றுக்கொள்ளத்தக்கதாய் இருப்பினும், இம் மூன்று நிலையும் வழுவை அமைதிப்படுத்துமுகமாக நிற்பதன்றி, வழுவற்றதாகக் கோடற்குச் சிறிதும் இடன் அளிக்கவில்லை. ஆதலின் பிற உரையாசிரியர்களனைவரும் (நன்னூலுரையாசிரியர்கள் கூட) இத்தொடர் வழுவி வந்ததெனவே கொள்கின்றவாறு போல, வழுவி வந்தது எனக் கோடலே பொருத்தமுடைத்தாம்.

சினையொடு குணம் இரண்டடுக்கல் செய்யுட்குரித்து என்றும், முதலொடு குணம் இரண்டடுக்கல் வழக்கிற்குரித்தென்றும் இளம்பூரணர் கூறுவர். அதனையே சேனாவரையர் மறுப்பாராக இளம்பூரணர் பிறர்கொள்கையாக இதனைக் கூறினாரேயன்றித் தம் கருத்தாகக் கூறவில்லையென்றார். எனினும் பழைய உரையாசிரியரும், நன்னூலாரும் இளம்பூரணர் கருத்தையே ஏற்றனர்.

உ௭ ஆம் நூற்பா : உயர்சொல் கிளவி என்பதில் உயர்சொல் என்பதற்கு உயர்வு என்றும், கிளவி என்பதற்குச் சொல் என்றும் பொருள் காணவேண்டும் என்பர் சேனாவரையர். இதனை ௪௪௬ ஆம் நூற்பா உரையிலும் காண்க.

பிறர் ஏவிய தொழிலைச் செய்வோனைத் தொண்டன் என்பவர்களின் அவ்விழிந்த சொல்லிற்கு ஆர் விகுதியும், தாம் வந்தார் என்னும் பன்மை உயர்பும் கொடுத்தல் வழுவன்றோ எனின், அன்று. சொல்லுவான் கருத்தினால் அச்சொற்கள் அவ்விழிநிலை விளக்கிற்றல்லது, அவை உயர்சொல்லே யாகலின், அதனால் வழுவன்று என்பதாம்.

வழக்கின்கண் ஒருவரையும் ஒன்றையும் பன்மையாற் கூறல் உயர்த்துச் சொல்லப்படும் பொழுதே வரும். எனவே, இலக்கணத்தில் இங்ஙனம் சொல்லப்படா என்பது நன்கு தெரியும்; அன்றி இவை இலக்கண வழக்கில் சொல்லப்படா எனவே, வழக்கில்தான் சொல்லப்படும் என்பது நன்கு தெரியும்; ஆதலின் 'வழக்கினாகிய உயர்சொற் கிளவி', 'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' என்ற இரு தொடரில் ஒன்றேயமையுமே. இரண்டுங் கூறுவானேன்? என்ற வினாவைத் தாமே எழுப்பிக் கொண்டு, அதற்கு விடை காணுகின்றார் சேனாவரையர், 'வழக்கினாகிய உயர்சொற் கிளவி' என்றே கூறியிருப்பின், இவை செய்யுட்கு வாரா என்பது மட்டுமே பெற்றுவிடும்; அன்றி 'இலக்கண மருங்கின் சொல்லாறல்ல' என்று மட்டும் கூறியிருப்பின், இங்ஙனம் கூறல் வழுவென்று பெறப்படுமேயன்றி, வழுவமைதியாகும் என்னும் கருத்துப் பெறப்படாதாம். ஆதலால் இவை இலக்கண வழக்கல்ல ஆயினும், வழக்கில் வருதலின் வழுவமைதியாதலும், வழக்கு, செய்யுள் ஆகிய இரண்டிலும் இவ்வழுவமைதி வருதலைக் கூறவுமே இவ்விரு தொடர்களையும் கூறினர் என்பர்.

உஅ ஆம் நூற்பா: இயங்குதல், ஈதல் போல்வன இன்னவிடத்திற்குரிய என்னும் வரையறையில்லை. ஆதலால் அவற்றைக் கூறாது வரையறையுடைய செலவு, வரவு முதலிய நான்கு சொற்களையே ஈண்டுக் கூறியுள்ளார் ஆசிரியர். செலவு, வரவு என்பனவற்றிற்குப் பொதுவாயசொல் இயங்குதலும், தருதல், கொடுத்தல் என்பனவற்றிற்குப் பொதுவாய சொல் ஈதலும் ஆம்.

முற்றும் எச்சமும் தொழிற் பெயருமாகி அத்தொழில்பற்றி வரும் வாய்பாடு பல என்பது:— செலவு முதலாயின முற்றாய் வருங்கால் சென்றான், வந்தான், தந்தான், கொடுத்தான் எனவும்; வினையெச்சமாங்கால் சென்று, வந்து, தந்து, கொடுத்து எனவும்; பெயரெச்சமாங்கால் சென்ற, வந்த, தந்த, கொடுத்த எனவும், தொழிற்பெயராங்கால் செல்லல், வருதல், தருதல், கொடுத்தல் எனவும் வரும். இங்ஙனம் பலவிகற்பமாய் வரினும் இவற்றிற்கெல்லாம் அடிப்படைச் சொல்லாக இருப்பன செலவு, வரவு, தரவு, கொடை ஆகிய நான்குமேயாகலின், ஆசிரியர் 'அந்நாற் சொல்லும்' எனக் கிளந்தோதினர்.

வரையறைக்குரியன இந்நான்குமே என முன்னறியப் படுதலின், 'அந்நாற் சொல்லும்' என முற்றும்மை கொடுத்தார். தன்னிடம் வந்தவனை இங்கு வந்தான் என்றும், சாத்தன் இடத்துச் சென்றான் என்பதனை அங்குச் சென்றான் என்றும் கூறுதல் வழக்கிலும் காணப்படுதலின், இங்கு, ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும், அங்கு, ஆங்கு முதலாயின படர்க்கைக் கண்ணும் அடக்கப்பட்டன என்றார்.

செலவு முதலிய நான்கும் வினைச்சொற்களேயாதலின், வினையியலில் இடவரையறை யுணர்த்துமிடத்து இவற்றையும் கூறலாமே எனில், வினையியலில் இடவரையறை கூறப்படுவன வெல்லாம், வினைச்சொற்களின் ஈறு (விகுதி) பற்றியே யாகும்; ஆனால் ஈண்டோ செலவு முதலிய பகுதிகளே விகுதியின் துணை வேண்டாது இடவரையறை யுணர்த்துதலின், ஆண்டுக்கூறாது ஈண்டுக் கூறினர் என்பது.

உகூ, ௩௦ ஆகிய நூற்பாக்களாலேயே செலவு முதலிய நான்கும் இன்னின்ன இடத்திற்குரிய எனத் தெரிய முடிகின்றது. ஆதலின், இத்தொகைச் சூத்திரம் வேண்டாமெனில், அவ் வகைச் சூத்திரங்களால் செலவு, வரவு என்பன தன்மை முன்னிலைக்கும், தரவு கொடை என்பன படர்க்கை யிடத்திற்கும் உரிய எனத் தெரியினும், 'இடம் வரையறுத்துணர்த்தும் முதனிலைகள் இந்நான்குமே' என்னும் வரையறையை அறிய முடியாதாகலின், இத்தொகைச் சூத்திரமும் வேண்டும் என்பது

போதல் என்பது படர்க்கைக்கும், புகுதல் என்பது தன்மைக்கும் உரியதாய் வருமேனும், ஆசிரியர் காலத்து இவை மூவிடத்திற்கும் உரியதாய் இருத்தலின், இவற்றை வரையறைப் படுத்தாராயினர்.

உகூ ஆம் நூற்பா: ஈற்றானன்றி-விகுதியானன்றி. முதனிலைகளே இடங்குறித்து வரும் என்பது கருத்து.

தன்மை முன்னிலைக்குரிய தருசொல் வருசொல் என்ற இரண்டும் படர்க்கைக்கண் வருதல் வழுவமைதியாதல் போல, படர்க்கைக்குரிய செலவு, கொடை ஆகிய இரண்டும் தன்மை முன்னிலைக்கண் வருதலும், அவற்றை வழுவமைதியாகக் கொள்ளுதலும் இல்லையோ எனின்; உண்டு. அதுபற்றி எச்சவியலுட் பெறப்படும் என்றார் சேனாவரையர்.

ஆயினும் எச்சவியலில் 'கொடு' என்னும் சொல்பற்றிக் (சொல்-சசஅ) கூறப்பட்டுள்ளதே தவிர, ஏனைய செலவுச் சொல்பற்றி ஒன்றும் கூறப்படவில்லை.

தருசொல், வருசொல் ஆகிய இரண்டும் தன்மை முன்னிலை களுக்கே உரிய ஆதலின், அவன்கண் வந்தான், ஆங்கு வந்தான் என்பன வழுவன்றோ எனில்; வழுவன்று. ஆங்கு, அவன்கண் என்பன பொது வகையால் நோக்கின் படர்க்கையாகத் தெரியினும், அதற்கும் தொலைவான இடத்தை நோக்க, அதுவும் தன்மையாய் அமைதலின் வழுவன்று என்றார்.

ருரு ஆம் நூற்பா: 'ஐந்தலை நாகம் உடன்றது, நான்மறை முதல்வர் வந்தார் என்புழிச்சினைச் சொல்லும், முதற்சொல்லும் இனைத்தென அறியப்பட்ட வேனும் உம்மை பெறுமைக்குக் காரணம், அவை முடிக்கும் சொல்லோடியையாமையே யாகும். உடன்றது, வந்தார் என்னும் முடிக்கும் சொற்கள் முறையே நாகத்திற்கும், முதல்வர்க்கும் உரியனவேயன்றி, ஐந்தலை, நான்மறை என்பனவற்றிற் குரிய வல்ல; ஐந்தலை, நான்மறை என்பன நாகத்திற்கும், முதல்வர்க் கும் அடைமொழியாய் நின்றனவேயாம். எனவே, உம்மை கொடுத்துக் கூறவேண்டும் என்ற நியதி இனைத்தென அறியப்பட்டால் மட்டும் போதாது; அவை முடிக்கும் சொல்லொடு தொடர்தலும் பெற்றுழியே உம்மை பெறும் என்பது கருத்தாயிற்று.

அற்றேல், 'பன்னிருகையும் பாற்பட வியற்றி' என்பதிலும், இயற்றி என்னும் முடிக்கும் சொல், கைக்குரியதாக, பன்னிரு என்பது கைக்கு அடைமொழியாக வந்ததன்றோ? அது மட்டும் தொகை பெற்றதேன்? எனில், பன்னிருகையும் என்பது பன்னிரண்டாகிய கை என விரிதலின், கையும் பன்னிரண்டும் வெவ்வேறுதலின்றி ஒன்றே யாதலின், கைக்குரிய இயற்றி என்னும் முடிக்கும்சொல் பன்னிரண்டு என்பதற்கும் உரியதேயாகும். ஆதலின், அவ்வொற்றுமையால் அது உம்மை பெறுவதாயிற்று. ஆனல் ஐந்தலை நாகம், நான்மறை முதல் வர் என்பனவோ, ஐந்தலையை உடைய நாகம், நான்மறையிலும் வல்ல முதல்வர் என விரிதலின், அவை ஒவ்வொன்றும் வெவ் வேருய் நின்று, நாகத்திற்கும், முதல்வர்க்குமுரிய முடிக்கும் சொல்லைத் தாமும் பெருவாயின. ஆதலின்,இவை உம்மை பெருவாயின. ஐந்தலை நாகம் உடன்றது, நான்மறை முதல்வர் வந்தார் என்பன வற்றில் ஐந்தலைக்கும், நான்மறைக்கும் உரிய முடிக்கும்சொல் (உடைய, வல்ல என்பன) இடையே வரின் உம்மை பெறும் என்பதாயிற்று.

முரி—நொண்டி. கதி—குதிரை செல்லும் செலவு நிலை.

ருச ஆம் நூற்பா: மன்னப் பொருள் என்பதற்கு 'இல்லாப் பொருள்' என இளம்பூரணர், சேனவரையர், கல்லாடர், பழைய உரை யாசிரியர் ஆகிய நால்வரும் உரை கண்டனர்.

தெய்வச்சிலையார் 'பொருந்தாப் பொருள்' என்றும், 'நிலையாப் பொருள்' என்றும் உரை காண்பர். அவர் இதற்கு எடுத்துக்காட்டும் காட்டுக்கள் சமயச் சார்புடையன. அதனை அவருரையான் அறிக. 'இல்லாப் பொருள்' என உரை காண்டலை இவர் மறுப்பர். நச்சினர்க் கினியர் 'நிலையாப் பொருள்' என உரைகண்டு, 'இல்லாப் பொருள்' என்றலைத் தக்க மேற்கோள் காட்டி மறுப்பர். இத்திறமெல்லாம்

அவருரை நோக்கி அறிக. நன்னூலார் இல்லாத பொருள், நிலையாத பொருள் இரண்டையும் தழுவுமாறு 'உலகினி னிலாப் பொருள்' என்றார்.

முன் நூற்பாவில் இனைத்தென்றறி பொருள் உம்மை பெற வேண்டும் என்றார். இந்நூற்பாவில் இல்லாத பொருளும் இடம், காலத்தொடு படுத்துக் கூறுங்கால் அவ்வாறே உம்மை பெறும் என மாட்டெறிகின்றார். இங்ஙனம் உம்மை பெறுதல் வகையால் இதனையும் அதனோடு மாட்டெறியினும், முன்னைய நூற்பாவிலுள்ள உம்மை முற்றும்மையாகும்; இந்நூற்பாவிலுள்ள உம்மை எச்சவும்மையாகும். எனினும் உம்மை பெறுதல் பற்றி 'அன்ன இயற்றே' என மாட்டெறிந்தார். இங்ஙனம் மாட்டெறியப்பட்ட ஒப்புமையை நினைந்தே நன்னூலார் இவ்விரு பொருளையும் வேறுவேறாகக் கூறாது 'இனைத்தென்றறி பொருள் உலகினி னிலாப் பொருள், வினைப்படுத்துரைப்பின் உம்மை வேண்டும்' என ஒன்றாகவே இணைத்துக் கூறினார்.

சாதவாகனன்–இந்திரன்; ஐயனார் என்றலும் ஒன்று. உறுவர்-தவமுடையோர். பொருள் பெற்றோர் எனினும் ஆம்.

௩௫ ஆம் நூற்பா: 'அல்லதில்' என்பதை வாய்பாடாகக்கொண்ட சேனாவரையர் பிறபொருள் என்பதற்குப் 'பிறிது பொருள்' என உரை கண்டார். இளம்பூரணர், அல்லது - தன்னிடத்துஉள்ளதல்லதை; இல் எனில் - இல்லையெனின் என உரை கண்டனர். உள்ளதல்லது-இல்லாதது. எனவே தன்பால் இல்லாததை இல்லையெனின் என்றும், பிறிது பொருள் என்பதற்கு 'இனப் பொருள்' என்றும் உரைகண்டனர் இளம்பூரணர்.

ஒருவன் ஒரு பொருளைத் தன்னிடத்துக் கேட்பின் அது உள்ளதாயின் அதுவுள்ளது எனக் கூறி விற்று விடலாம். ஆனால் அவன் தன்னிடத்துக் கேட்கும் பொருளில்லையாயின், அவ்வில்லாமையை 'அல்லதில்' என்னும் வாய்பாட்டால் இல்லையெனக் கூறவிரும்பின், அவன் கேட்ட பொருளல்லாத பிற பொருளின்கண் அவ் 'அல்லதில்' என்னும் வாய்பாட்டை வைத்து இல்லையெனக் கூறுக என்பர் சேனாவரையர். இளம்பூரணர், 'ஒருவன் ஒரு பொருளைத் தன்னிடத்துக் கேட்பின், அது தன்பால் இல்லையாயின், அவன் கேட்டதற்கு இனமாய பொருளைக் கூறி இதுவல்லது இல்லை யென்க' எனப் பொருள் கண்டனர். சேனாவரையர், இளம்பூரணர் உரையை நான்கு காரணங்களால் மறுக்கின்றார். (௧) ஒருவன் ஒரு பொருளைக் கேட்பின், அது தன்னிடத்து இல்லையாயின் இல்லையென்றே கூறிவிடலாம். இனப்பொருள்தான் கூற வேண்டும் என்ற நியதில்லை. (அற்றேல், சேனாவரையர் கருத்தின்படி பிற பொருளின்கண் அல்லதில் என்னும் வாய்பாட்டை வைத்துக் கூற வேண்டுவதுதான் என்ன நியதி எனில், கூறுதும். சேனாவரையர் இவ்வினா வருமென்றே மிகவும் விழிப்பாகத் தன்பால் இல்லாத பொருளை யில்லையென்னும் ஒருவன் அல்லதில் என்னும் வாய்பாட்டால்இல்லையென விரும்பின், இங்ஙனம் பிற பொருளின் மேல் வைத்துக் கூறுக வென்றார். எனவே 'அல்லதில்' என்னும் வாய்பாட்டால் வைத்து இல்லையென விரும்பாது, இல்லாத பொருளை யில்லை யென்றே கூற விரும்பின் அங்ஙனமே கூறிவிடலாம்; அதனால் இழுக்கில்லை என்பது சேனாவரையர் கருத்து.) (௨) 'அல்லதில்' என்னும் சொல் தன்னிடத்துள்ள தல்லதை இல்லெனின் என்னும் பொருளைக் குறிக்காது.

குறிக்குமேல், ஆசிரியர் அச்சொல்லை மயங்கக் கூறலாகச் சூத்திரித்துள் ளார் என்னும் குற்றம் தங்கும். (௩) பாம்புணிக்கருங்கல்லும் பயறும் விற்பானிடத்துச் சென்று பயறு உண்டோ எனின், அவன் பாம்புணிக் கருங்கலல்லது இல்லை யென்று கூறுவானாயின், அங்ஙனம் கூறியமை யால் வரும் வழு இல்லை. (௪) இனப்பொருள் கூறுக என்பதே ஆசிரியர் கருத்தாயின், 'அப்பொருளல்லா இனப்பொருள் கூறல்' என்றே யாத் திருப்பர். அங்ஙனம் யாக்காமையின், ஆசிரியர்க்கும் இனப்பொருள் கூறுக வென்பது கருத்தன்றாயிற்று.

எனினும், இக்கருத்துப் பொருந்துவதன்றாம். ஆசிரியர் தொல் காப்பியர் வழக்கு செய்யுளாகிய இரண்டையும் நன்கு ஆய்ந்து இந் நூலைச் செய்தவராதலாலும், இந்நூற்பா மிகுதியும் வணிகரையே நோக்கிக் கூறியது ஆதலாலும், வாணிகர்தம்மிடத்து இல்லாத பொருளை இல்லையென்னாது அதற்கு இனப்பொருளைக்கூறலே மரபாகக் கொண்டவராதலாலும், சேனாவரையர் கூறுமாறுபோல பாம்புணிக் கருங்கல்லும் பயறும் விற்பார் ஒரோவழி யாண்டேனும் அருகியிருப் பினும், அவ்வருகிய வணிகரை நோக்கி இந்நூற்பா செய்தாரென்றல் பொருந்தாமையானும், இனப்பொருள் கூறலை மறுக்கும் சேனாவரைய ரும், தாம் எடுத்துக்காட்டும் எடுத்துக்காட்டில் பயறுளவோ என்று வினாவினார்க்கு உழுந்தல்லதில்லை, கொள்ளல்லதில்லை என இனப்பொரு ளைக் காட்டுகின்றாரேயன்றிப், பயறுளவோ என வினாவினார்க்குப் பாம் புணிக் கருங்கலல்லது இல்லை என்றலை எடுத்துக்காட்டாமையானும், தொல்காப்பிய உரையாசிரியர்கள் அனைவர்க்கும், நன்னூலார்க்கும் இனப்பொருள் கூறலே கருத்தாதலானும், சேனாவரையர் கூறும் மறுப்பு எட்டுணையும் பொருந்துவதன்றாம்.

அகப்பட-குறித்த பொருள் விளங்காது மயங்கக் கூறலாக. பாம் புணிக் கருங்கல்-பாம்பின் நஞ்சை எடுக்கும் கல்.

௩௬ ஆம் நூற்பா: மேல் 'அல்லதில்' என்னும் வாய்பாட்டால் இல்லையெனக்கூறின், கேட்பான் கேட்கும் பொருளல்லாத பிற பொரு ளில் வைத்துக் கூறுக என்றார். இந்நூற்பாவில் கேட்பான் கேட்கும் பொருளிலேயே அவ்வாய்பாட்டை வைத்துக்கூறின், சுட்டிச் சொல் லுக என்று கூறுகின்றார்.

பயறுளவோ என்று வினாயவழி 'அல்லது இல்' என்னுஞ் சொல்லை அவன் கேட்கும் பொருளிலேயே வைத்துச் சொல்ல நினையின், இப் பயறல்லதில்லை என்க. இங்ஙனம் கூறுதற்குப் பயன், வினாயினான் பயற்றின் நன்மையும் தீமையும் உணர்ந்து கோடற்கும்; தவிர்தற்கும் ஆம் என்பர் நச்சினார்க்கினியர்.

இவ்விரு நூற்பாக்களிலும் கூறப்பட்ட பொருள் வினாவுதற்கு விடையாகக் கூறும்போது ஏற்படும் மரபுநிலைபற்றியதாகும். ஆதலின் இவை, மேல் 'செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்' என்பதன் கண்ணேயே யடங்குமே, விதந்து கூறியதென்னை? என்று வினவிக் கொண்ட சேனாவரையர், அதற்கு இருமுறையில் விடைகாண்கின்றார். (௧) இப்பொருண்மை அதன்கண் அடங்குமேனும், அப்பொருண்மை பற்றிய இக்கருத்துக்கள் எல்லாம் விதந்து கூறினாலன்றி நன்கு விளங் காது. ஆதலின் விளங்கக்கூற வேண்டும் என்பது. (௨) இந்நூற்பாவில் 'அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்' என்ற ஆசிரியர், அடுத்த நூற்பா வில் அச்சுட்டினைப் பொருளொடு புணர்த்துச் சொல்லுதலேயன்றி,

பொருளொடு புணர்க்காது தனித்தும் கூறலாம் எனக் கூறப்போகின்ருர். ஆதலின் அவ்வழுவமைதிக்கு முன்பு, வழாநிலையாய இதனைக் கூறினல்லது அது இனிது விளங்காது. ஆதலின் வேறு கூறினர் என்பது. இந்நுண்மை பிறருரையில் காணுதது.

௩௭ ஆம் நூற்பா: சுட்டுத் தான் குறிக்கும் பெயரொடு இயைந்து நிற்பின், அது பொருளொடு புணர்ந்தசுட்டாம். தான்குறிக்கும் பொருளொடு இயையாது தனித்து நிற்பின், அது பொருளொடு புணராச் சுட்டாம். இவற்றுள் முன்னையது பொருளை வரையறுத்து உணர்த்தும்; பின்னையது பொருளை வரையறுத்துணர்த்தாது. இப்பயறு என்புழிச் சுட்டுப் பயற்றையே யுணர்த்தும்: இது எனக்குறிப்பின் எப்பொருளும் வரைந்து சுட்டாது நிற்கின்றது. தான்கூறும் பொருளைக் காட்டி இது அல்லது, இவையல்லது என்றலின், இவையும் பொருளொடு புணர்ந்த சுட்டுப் போன்றதேயாயின.

௩௫ ஆம் நூற்பாவில் 'பிறிது பொருள்' என்றும், ௩௬ ஆம் நூற்பாவில் 'அப்பொருள்' என்றும் கூறப்படுகின்றது. இவை யிரண்டு பொருளில் இப்பொருளைக் குறிக்கும் என்னுது, பொதுப்படக் கூறியதனால், இவ்விரண்டிற்குமே இச்சுட்டு உரிய என்பதாம்.

ஒரு பொருளைக் காட்டி இது அல்லது, இவையல்லது போன்ற சுட்டுக்களால் கூறின், அவை பொருளொடு புணராவாயினும், பொருளொடு புணர்ந்த சுட்டுப் போலவே கொள்ளப்படும் என்பது சேனுவரையர் கருத்து. இதுஅல்லது இவையல்லது எனச் சுட்டும்வழி சுட்டு, பொருளொடு புணராவாயினும் அப்பொருள் சொல்லுகின்றவனுக்கும் காண்கின்றவனுக்கும் எதிரில் உள்ளதாயுள்ளது. பிறர் கருத்தாகக் கூறுங் கருத்து இந்நிலைக்கு மாருயது. யானை அடிச் சுவட்டைக் கண்டு, யானை அவ்விடத்து இல்லாத போதும் 'இஃது' என்பதும், தன்மகன் எதிரில் இல்லையாயினும் அவனைக் குறித்து 'இஃதோர் செல்வன்' என்பதும் பொருளொடு புணராச்சுட்டு என்பார் பிறர். இவ்வீருரையினும் சுட்டுக்கள் பொருளொடு புணராவாயினும், முன்னையதில் பொருளைக் காண முடிந்தது; பின்னையதில் பொருளையும் காண இயன்றிலது. இவை தம்முள் வேற்றுமை.

சுட்டு தனக்குரிய அஃறிணைப் பொருளையுணர்த்தாது உயர்திணைப் பொருளையுணர்த்துவதும், சில பொருட்பெயர்கள் சுட்டுப் பெயரால் கூறப்படாதிருப்பினும் சுட்டுப்பெயரால் கூறப்பட்டது போன்றே பொருள் தருவதும் ஆகிய பொருண்மையை உணர்த்த வந்தது இந் நூற்பா என்பர் நச்சினர்க்கினியரும், பழைய உரையாசிரியரும்.

அரசு உவா—அரசர்கள் ஏறிச் செல்லுதற்கேற்ற தலைமையமைந்த யானை.

௩௮ ஆம் நூற்பா: இயற்பெயர் — சாத்தன் கொற்றன் என வழங்குதற் பயத்தவாய் நிமித்தமின்றிப் பொருளே பற்றிவரும் பெயர் என்பர் சேனுவரையர் (பெயரில் ௨௦-ஆம் நூற்பா காண்க). எனவே மக்கள் தமக்குக் குழந்தை பிறந்தால், காரணமின்றி அவ்வக் குழந்தைகட்கு இட்டுவழங்கும் பெயரே இயற்பெயர் என்பதாயிற்று.

'இயற்பெயர் சினைப் பெயர்' என்னும் (பெயர்-௨௦) நூற்பாவில் இயற்பெயரை விரவுப்பெயரில் ஒருவகையாகக் கொண்டுள்ளார்

ஆசிரியர். ஆதலின், ஈண்டு அவ்வியற்பெயரேயன்றி, ஏனை விரவுப் பெயரும் கொள்க என்றார்.

முறை—கொள்.

௯௯ ஆம் நூற்பா: இந்நூற்பாவிலுள்ள பாடல் 'தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல்' என்ற துறையைச் சேர்ந்தது. இதன் பொருள்:- அழகிய அணி அணிந்த தோழியே! அவன் (தலைவன்-அவன் இயற் பெயர் சேந்தன்) யான் வருந்தும்படியான நோயைச் செய்தான். எனினும் அன்னை அதனை அறியாது, வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்விக்க இருக்கின்றாள். அவ்வெறியாட்டின்படி வேலன்வரின், வெற்றி பொருந்திய சேந்தன் (முருகன்) பெயரை வாழ்த்துவன். சேந்தன் என்பது முருகனுக்குரிய பெயராதலபற்றி அவன் வாழ்த் தினும் அதுவே என்னுடைய தலைவன் பெயருமாதலின், யானும் ஒருவாற்றான் மகிழ்வேன் எனினும், அவ்வேலன் முருகன் மீதுள்ள கடப்ப மலரை யான் அணியும் பொருட்டுப் பின்னர் என் அன்னைக்குத் தருவன். அவளும் எனக்கு அணிந்து கொள்ளத் தருவள். அங்ஙனம் தரின் யான் அணிதல் மரபன்றாதலின், பின் என்செய்வேன்! அந்தோ! அதன் விளைவு என்னாகுமோ? எனத் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்கு முகமாக, இவ்வாறெல்லாம் நிகழாது நீ தலைவனை வரைவுகடாவ வேண்டும் என்னும் குறிப்பினளாய்க் கூறினாள் என்பதாம்.

செய்யுளாதலின் இதன்கண் சேந்தன் என்னும் இயற்பெயர் பின்னும், சுட்டுப்பெயர் முன்னும் வந்தமை காண்க.

௪௦ ஆம் நூற்பா: சுட்டு முதலாகிய காரணக்கிளவி 'அதனால்' என்பது. மூன்றாம் வேற்றுமை யேற்று நின்ற சுட்டுப் பெயரும் 'அதனால்' என்பதே. இவ்விரண்டிற்கும் வேற்றுமை யென்னை?யெனின், முன்னையது பிரிக்க இயலாதது; பின்னையது (அது+அன்+ஆல் எனப்) பிரிக்க இயலுவதாம். இது, செயற்கு என்னும் வினையெச்சத்திற்கும், நான்கனுருபு ஏற்று நின்ற செயல் என்னும் (செயற்கு) சொல்லிற்கும் உள்ள வேற்றுமை போன்றதாம். செயற்கு என்னும் வினையெச்சம் சுட்டு முதலாகிய காரணக்கிளவி போலப் பிரிக்க முடியாதது. நான்க னுருபு ஏற்று நின்ற செயல் என்னும் சொல், மூன்றனுருபு ஏற்று நின்ற அதனால் என்பது போலப் பிரித்தற்குரியதாம்.

'சாத்தன் கையெழுதுமாறு வல்லன், அதனால் தந்தை யுவக்கும்' என்பதில் 'அதனால்' என்னும் சுட்டுமுதலாகிய காரணக்கிளவி கையெழுதுமாறு உள்ள வல்லமையைக் குறித்தலின், அது தொடர் மொழிப்பொருளைக் குறித்தது. இதுபோன்றே, 'சாத்தன் வந்தான் அஃது அரசற்குத்துப்பாயிற்று' என்பதிலும் 'அஃது' என்னும் சுட்டுப் பெயர் சாத்தன் வருதலாகிய தொடர் மொழிப் பொருளை யுணர்த்து கின்றது. எனவே தொடர்மொழிப் பொருளை யுணர்த்துவது சுட்டுப் பெயர்க்கும் உரியதாதல்பெற்றாம். அதனை ஆசிரியர் கூறாராயினும், 'தன்வின முடித்தல்' என்பதனால் அமைத்துக்கொள்க என்றனர்.

சுட்டுப் பெயரியற்கையின்—சுட்டுப் பெயரின் இயல்பு போல. அது பெயராயும், இச்சுட்டு முதலாகிய காரணக்கிளவி இடைச்சொல்லாயும் நிற்பினும், ஈண்டுச் 'சுட்டுப் பெயர் போல வரும்' என்றது, அச்சுட்டுப் பெயர் வழக்காயின் இயற்பெயர்க்குப் பின்னும், செய்யுளாயின் இயற் பெயர்க்கு முன்னும் வருதல் போல, இதுவும் வருதலாகிய ஒப்புமை கருதியேயாம்.

சுட்டு முதலாகிய காரணக் கிளவி செய்யுட்கண் முன்னிற்றலை 'ஆக்கமும் கேடும் அதனால் வருதலால், காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு' (குறள்-௬௪௨) என்பதனானும் அறிக.

௩எ, ௩அ ஆம் நூற்பாக்களில் கூறப்பட்ட சுட்டுப்பெயரும், இந் நூற்பாவால் கூறப்பட்ட சுட்டு முதலாகிய காரணக்கிளவியும் ஓரிலக் கணத்தவாயினும், முன்னையது சுட்டுப் பெயராகவும், பின்னையது இடைச்சொல்லாகவும் இருத்தல் பற்றி ஆசிரியர் தனித்தனியே கூறு வாராயினர் என்பது சேனாவரையர் கருத்து.

௩அ ௩௯ ஆம் நூற்பாக்களில் கூறப்பட்ட சுட்டு, பொருளைக் குறித்து வரும் சுட்டு என்றும், இந்நூற்பாவில் கூறப்பட்ட சுட்டு பண் பைக் குறித்துவந்த சுட்டு என்றும், அது பற்றியே ஆசிரியர் வெவ் வேறாகக் கூறினர் என்றும் இளம்பூரணர் கூறுவர். அதனைச் சேனாவரை யர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) இளம்பூரணர் கருத்தின் படி அதனால் என்பது பண்பு பற்றி வந்த சுட்டாகும். இது மூன்றாம் வேற்றுமையை மட்டுமே ஏற்றுவரும். சுட்டுப்பெயர் வழக்காயின் இயற் பெயர்க்குப் பின்னும், செய்யுளாயின் முன்னும் வருதல் போலவே, இப் பண்பு குறித்த (அதாவது மூன்றாம் வேற்றுமையை ஏற்றுவந்த) சுட்டும் வருகின்றது. ஆதலின் ஆசிரியர் வேறு கூறினர் என்பது இளம்பூரணர் கருத்து. ஆனால் இவ்விலக்கணப்படி இப்பண்பு குறித்த சுட்டு மட்டும் வருவதில்லை. 'சாத்தன் வந்தான் அஃது அரசற்குத் துப்பாயிற்று' என் புழி அஃது என்பது எழுவாயாயும், 'கிழவன் பிரிந்தான் அதனைக் கிழத்தி உணர்ந்திலள்' என்புழி அதனை என்பது இரண்டாம் வேற்றுமை ஏற் றும், ஏனைய சுட்டுப்பெயர்களும் கூட இவ்விலக்கணப்படி வருகின்றன. அவற்றையெல்லாம் கூறாது, இப்பண்பு குறித்த (மூன்றாம் வேற்றுமை யேற்ற) சுட்டுப்பெயரை மட்டும் கூறினர் எனில், அது குன்றக் கூற லாகும். (உ) அதனால் என்பதும் சுட்டுப்பெயராயின், ஆசிரியர் அதனைச் 'சுட்டு முதலாகிய காரணக்கிளவி' என்றும், இதனைச் 'சுட்டுப்பெயரியற் கையின் செறியத்தோன்றும்' என்றும் கூறற்குக் காரணமில்லை.

சேனாவரையர் இங்ஙனம் மறுப்பினும், கல்லாடர் இளம்பூரணரு ரையையே தழுவுவர். துப்பு - வலிமை. அஃது அன்னதாதல், 'அரிமா அன்ன அணங்குடைத்துப்பின்' [பட்டினப்பாலை] என்பதனானும் அறிக. சாந்து-சந்தனம்.

௪௧ ஆம் நூற்பா: கண்ணன் + தந்தை = கண்ணந்தை என்றாயிற்று; ஆதன் + தந்தை = ஆந்தை என்புழிப்போல.

திருவீரன் + ஆசிரியன் = திருவீரவாசிரியன். மாந்தக்கொங்கன் + ஏனாதி = மாந்தக்கொங்கேனாதி. இவ்விரு பெயர்களும் இருபெயரொட் டுப்பண்புத் தொகையாகும். இவ்விரு பெயர்களும் ஒருபொருள்மேல் நின்று, வேழக்கரும்பு, கேழற்பன்றி என்பன போலப் பிரிக்க முடியாது ஒட்டி நின்றனவாதலின், இயற்பெயர் இது, சிறப்புப்பெயர் இது எனப் பிரித்துக்காணப்படாது என்பதாம். பிரிக்கப்படாததாகவே, சிறப்புப் பெயர் பின்வந்தது என்ற ஆராய்ச்சிக்கே இடமில்லாததாயிற்று. இக் கருத்தினைப் பண்புத்தொகையாராய்ச்சிக்கண் (௪௧௯) சொல்லுதும் என்றாரேனும் ஆண்டு இதுபற்றி ஒன்றும் கூறிற்றிலர். உய்த்துணரவே முடிகின்றது. நச்சினார்க்கினியர் இங்ஙனம் சிறப்புப் பெயர்கள் பிற் கூறப்படுதல் இக்காலத்தார் மயங்கக்கூறுவன என்றும், இவற்றைக் 'கடி

சொல் இல்லை' என்னும் புறனடையால் அமைத்துக்கொள்ள வேண்டும் என்றும் கூறுவர். கல்லாடரும் இவரைத் தழுவுவர்.

சா௩ ஆம் நூற்பா: தன்மை உயர்திணைக்கே உரியது என்பது தொல்காப்பியர் கருத்து. ஆதலின் தன்மைச் சொல்லையும், அஃறிணைச் சொல்லையும் சேர்த்து எண்ணி, அவற்றிற்கு முடிபு கொடுக்குங்கால், உயர்திணைமுடிபு கொள்ளினும் இழுக்காகும்; அஃறிணைமுடிபு கொள்ளினும் இழுக்காகும். ஆதலின் அதனைத் தன்மைப்பன்மை வினையால் முடிக்க என்பது இந்நூற்பாவின் கருத்தென்பர் சேனாவரையர். தன்மைப்பன்மை வினையும் உயர்திணையேயாகலின், அதனுடன் அஃறிணைச் சொல்லும் சேர்ந்து உயர்திணைமுடிபு கொள்ளல் பொருந்தாதேனும் அதனைத் திணைவழுமைதியாகக் கொள்க என்பர் சேனாவரையர். இளம்பூரணர், தன்மைச்சொல் உயர்திணையேயாயினும் எண்ணுதற்கண் அச்சொல் அஃறிணைச்சொல்லுடன் விரவிவருதல் இழுக்கில்லை என்பர். உயர்திணைச்சொல்லையும் அஃறிணைச்சொல்லையும் உடன் எண்ணுதல் வழுவாயினும் அமைக என்பர் இவர். எனவே இவருக்கு எண்ணுதற்கண்ணது ஆராய்ச்சி என்பதும், சேனாவரையருக்கு முடிபு கொளலுதற்கண் ஆராய்ச்சி என்பதும் விளங்குகின்றது.

நூற்பாவில் 'எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்' என்றிருக்கின்றதேயன்றி, தன்மைப்பன்மை வினையால் முடிக எனப் பொருள் கொள்ளுதற்கேற்றசொல் இல்லையே எனில், அதனை நுண்மையாகவே அறியவேண்டும் என்று கூறுகின்றார் சேனாவரையர். அங்ஙனம் அறிதற்குக் கருவியாகக் கூறுவன இரண்டு. (க) இந்நூற்பாவில் 'தன்மைச்சொல்லே' என எடுத்தோதியிருப்பதால் அது தன்மை வினையே கொள்ளும் என்பது பெறப்படுகின்றது. (இதனுள் தன்மைவினைகொள்ளும் என்பது பெறப்படினும், தன்மைப் பன்மைவினை என்பது எங்ஙனம் பெறுதுமெனில், அதனை அடுத்த காரணத்தால் நன்கு விளக்குகின்றார்.) (உ) 'பன்மையுரைக்கும் தன்மைக்கிளவி, எண்ணியல் மருங்கில் திரிபவை யுளவே' என்பது உ௪௧-ஆம் நூற்பாவாகும். தன்மைப்பன்மை வினைமுற்று எண்ணுதற்பொருளுக்கு முடிபாய் வருங்கால் திணை திரிந்துவரினும் இழுக்கில்லை என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். ஆதலின், ஈண்டுத் தன்மைப்பன்மையாகிய உயர்திணைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும் விரவி வருங்கால் தன்மைப்பன்மை வினையால் முடியினும் வழுவில்லை எனக் கருத்துக் கூறப்பட்டது என்பர்.

அற்றேல் மேற்கூறிய சொல் - உ௪௧ ஆம் நூற்பாவிலேயே தன்மைச்சொல்லும் அஃறிணைச்சொல்லும் விரவி வருதலும், அவை தன்மைப்பன்மை வினையான் முடிதலும் பெறப்படுதலின், ஈண்டுத் தனியே கூறவேண்டாமெனில், உய்த்துணர்வென்பது ஒன்றனைக் கூறுதபொழுது வேண்டுவதல்லது, வெளிப்படையாகக் கூறியிருக்கின்றபொழுது வேண்டுவதின்று. ஆதலின் அக்கருத்தினை உய்த்துணர்ந்து இடர்ப்பட வேண்டாம் என்றனர். கல்லாடரும், பழைய உரையாசிரியரும், தெய்வச்சிலையாரும், இளம்பூரணர் கருத்தினர். நச்சினார்க்கினியர், சேனாவரையர் கருத்தினர்.

சச ஆம் நூற்பா: ஆசிரியர், 'பொதுப்பிரிபாற் சொல், ஒருமைக்கல்லது எண்ணுமுறை நில்லாது' எனச்சொல்மேல் வைத்துக் கூறினும், அச்சொற்களின் இறுதிநிற்கும் னகர ஒற்றும், இகர

விகுதியுமே ஈண்டுக் கொள்ளப்படும். காரணம், அவ்வீறுகளே மேல் எண்ணுதற்கண் வாராதாகின்றன.

ஒருவன், ஒருத்தி என்ற சொற்களைக் குறிக்க ஆசிரியர் இரு தொடர்களைப் பயன்படுத்துகின்றார். ஒன்று, ஒருமை எண்ணின் வருவது என்பது. மற்றொன்று, பொதுப்பிரிபாற் சொல் என்பது. இவ்விரு தொடர்களும் இன்றியமையாதனவே என்பதைச் சேனாவரையர் நன்கு விளக்குகின்றார். 'பொதுப்பிரிபாற் சொல்' என்று மட்டுமே கூறியிருப்பின், மகன், மகள் என்ற சொற்களையும், (மக என்னும் ஆண் பெண் ஆகிய இருபாற்கும் உரிய பொதுச் சொல்லினின்றும் இவை பிரிந்தன) குறித்துவிடும். அன்றி 'ஒருமை யெண்ணின் சொல்' என்று மட்டுமே கூறியிருப்பின் இவ்வொருவன், ஒருத்தி என்ற சொற்களேயன்றி, ஒன்று என்ற சொல்லையும் குறித்துவிடும். ஆதலின், இவ்விரு தொடர்களுமே இன்றியமையாததாயின.

'பொதுப்பிரிபாற் சொல்' என்பது, ஒருவன், ஒருத்தி என்ற இரண்டையும் குறித்தலின் பன்மையன்றோ? அங்ஙனமாக 'நில்லாது' என்னும் ஒருமையோடு அச்சொல் இயைந்தவாறு என்னை? யெனின், பொருள் நிலையால் அவ்விரு சொற்களையும், அச்சொல் குறிக்குமேனும், சொல்நிலையால் ஒருமையாகவே நிற்றலின் 'நில்லாது' எனக் கூறினர் என்பது. நன்னூலாரும் 'ஒருவன் ஒருத்திப் பெயர்மேல் எண்ணில' என்றல் காண்க.

௪௰௯ஆம் நூற்பா: உயர்திணையும் அஃறிணையுமாக விரவி எண்ணப் படும் பெயர்ச் சொற்கள் வியங்கோள் வினைகொண்டு முடியினும் இழுக்கில்லை என்பது இந்நூற்பாவின் கருத்தென்பர் சேனாவரையர்.

வியங்கோள் இருதிணைக்கும்(சொல்-உஉ) பொதுவாதலின் இரு திணையும் விரவி வருங்கால், வியங்கோள் முடிக்கும் சொல்லாக வருத லின் இழுக்கில்லையேனும், ஒரு திணைக்கு முடிக்கும் சொல்லாக வரும் அமையத்தேயே, இன்னொரு திணைக்கும் முடிக்கும் சொல்லாக வருதல் வழுவாதலின் அதனை அமைக்க வேண்டும் என்றார் சேனாவரையர். எ-டு: 'ஆவும் ஆயனும் செல்க' என்பதில், செல்க என்னும் வியங் கோள் உயர்திணையாகிய ஆயனுக்கு முடிக்கும் சொல்லாக வரும் பொழுதே, அஃறிணையாகிய ஆவிற்கும் முடிக்கும் சொல்லாக வருதல் வழு; ஆயினும் அமைத்துக்கொள்க என்பது கருத்து.

பெயர்ச்சொற்களை எண்ணினாலும் சரி, அல்லது ஒன்றின் ஒன்று உயர்ந்ததென்றோ, அன்றி இழிந்ததென்றோ உறழ்ந்து கூறினாலும் சரி, அப்பெயர்களை இனமாகவே எண்ணவும் வேண்டும்; இனப்பொருள் களினிடையேதான் உறழவும் வேண்டும் என்பது இலக்கணம். (இவ் விலக்கணத்தை ௧௬-ஆம் நூற்பாவையும் அதன் உரையையும் நோக்கி அறிக). ஆதலின் மேல் ௪௪-ஆம் நூற்பாவில் கூறப்பட்ட 'யானும் என் எஃகமும் சாறும்' என்பதிலும், இந்நூற்பாவில் கூறப்பட்ட 'ஆவும் ஆயனும் செல்க' என்பதிலும், முடிபுகொள்ளுதலைப்பற்றிய ஆராய்ச்சி யில்லை. இவ்விரிடத்தும் இனன் அல்லாதன (உயர்திணையும் அஃறிணை யும்) சேர்த்து எண்ணப்பட்டிருப்பதே வழு; ஆயினும் அமைவாகக் கொள்க என்பது இளம்பூரணர் கருத்து. (எனவே, எண்ணுங்காலும் உறழுங்காலும் உயர்திணைக்கு உயர்திணையாகவும், அஃறிணைக்கு அஃறி ணையாகவுமே எண்ணவும், உறழவும் வேண்டும் என்பது இவர் கருத் தாகின்றது.) இதனைச் சேனாவரையர் நான்கு காரணங்களால் மறுக்

கின்றார். (௩) இவ்வெடுத்துக்காட்டுக்களில் திணையியைபு இன்றேனும், 'யானும் என்னெஃகமும்' என எண்ணுமிடத்து, வினைமுதலும் கருவியு மாகிய இயைபும், 'ஆவும் ஆயனும்' என்னுமிடத்து மேய்ப்பானும் மேய்க்கப்படுவதுமாகிய இயைபும் இருத்தலின் இவையும் இனமாகவே எண்ணப்பட்டனவாம். ஆதலின் வழுவன்று. (எனவே சேனாவரை யருக்குத் திணையொடு திணை சேர்தல் மட்டுமன்றி, எண்ணப்படும் பொருட்கு வேறு பிற இயைபுகளிருப்பினும், அவ்வாற்றான் இனமான வையே என்பது கருத்தாகின்றது.) (உ) திணைவிராய் எண்ணலை ஈண்டு வழுவென்பவர், இடையியல் சஎ-ஆம் நூற்பாவில் யானை, தேர், குதிரை, காலாள் எறிந்தார் என் எடுத்துக்காட்டுகின்றார். ஈண்டு இதனை வழுவெனில், அதுவும் வழுவாகும். (சேனாவரையருக்காயின், போர்க்குரிய கருவிகள் என்னும் இயைபால் ஒன்றற்கொன்று இன மாகும்.) (௩.) இவ்விடத்தும் சரி, 'எண்ணுத்திணை விரவுப்பெயர் அஃறிணை முடிபின' (சொல்-டு௩) என்ற விடத்தும் சரி, ஆசிரியருக்கு முடிபுகோடற்கண் ஆராய்ச்சியேயன்றி, இனனல்லாதன உடன் எண் ணப்படுதலில் ஆராய்ச்சியில்லை. (௪) அன்றித்திணை விரவி எண்ணலே வழுவென்பது கருத்தாயின், 'நெடுநல் யானையும் தேரும் மாவும் படை யமை மறவரும் உடையம் யாம்' என்ற விடத்தும், 'இருமனப் பெண் டிரும் கள்ளும் கவறும்' என்றவிடத்தும் உயர்திணைப் படர்க்கைப் பெயர்களோடு அஃறிணைப் படர்க்கைப் பெயர்களும் சேர்ந்து (இளம் பூரணர் கருத்தின்படி) இனனல்லன உடனிற்றலின், அவற்றையும் வழுவமைதியாகக் கொள்க என்று கூறவேண்டும்; அப்படிக் கூறாது மேல் சஎ-ஆம் நூற்பாவில் (உயர்திணைக்குரிய) தன்மைச் சொல்லொடு அஃறிணைச்சொல் சேர்ந்து நிற்றற்கு மட்டுமே வழுவமைதி கூறியுள் ளார். இளம்பூரணர் கருத்தே ஆசிரியருக்கும் கருத்தாயிருக்குமாயின் இந்நூற்பா குன்றக்கூறலாய் முடியும்.

மேல்சஎ-ஆம் நூற்பாவில் ஆசிரியர் மூவிடப்பெயர்களில், தன்மைப் பெயருடன் அஃறிணைப் பெயரையும் சேர்த்துக் கூறற்கு மட்டுமே வழு வமைதி கூறியுள்ளார். எனினும், ஏனைய முன்னிலை, படர்க்கைக்குரிய உயர்திணைப் பெயர்களுடனும் அஃறிணைப்பெயர் சேர்ந்து வருமேல் அவற்றையும் வழுவமைதியாகக்கொள்க என்றனர் ஏனைய உரையாசிரி யர்கள். இளம்பூரணரும், கல்லாடரும், பழைய உரையாசிரியரும் அந்நூற் பாவிலுள்ள 'மருங்கு' என்றமிகையால் இக்கருத்தினைக் கொள்வர். தெய்வச்சிலையார் இக்கருத்தினை மிகையால் கொள்ளாராயினும் எடுத் துக்காட்டால் உய்த்துணர வைப்பர். இத்திறமெல்லாம் அவரவர் உரைநோக்கி அறிக.

மேல் (சொல்-உஉஉ) விரவுவினைக்குரியனவற்றை நான்கு வகை யாகக் கூறுவர். அவற்றில் முற்றாக வருவன வியங்கோள், வேறு, இல்லை, செய்யும் என்ற நான்குமேயாகும். இவற்றுள் வியங்கோளொடு தொடர்தல் மட்டுமே ஈண்டுக் கூறப்பட்டது. ஏனையவற்றை ஒன்றென முடித்தலால் கொள்வர் சேனாவரையர். கல்லாடரும் இதனைத் தழுவுவர்.

நச்சினார்க்கினியர் 'ஆவும் ஆயனும் செல்க' என்பதில், சேறல் தொழில் இரண்டிற்கும் எய்துதலில் வழுவின்றேனும், அஃறிணை ஏவற் றொழிலை முற்ற முடியாமை கருதி வழுவமைத்தார் என்பர்.

சகூ, சஎ ஆம் நூற்பாக்கள்: 'ஊன்துவை, கறிசோறு உண்டு வருந்துதொழிலல்லது, பிறிதுதொழில் அறியாவாகலின்' [புறம்-கச]

என்றவிடத்து 'உண்டல்' என்ற பொதுவினை உளது. இதுபற்றி உரையாசிரியர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகக் கருதுகின்றனர். அவற்றை ஆராய்வோம்.

இளம்பூரணர் உண்டல் என்பதுசிறப்பு வினையாதலையும் அது, ஊன், துவை, கறி, சோறு ஆகிய நான்கிற்கும் பொதுவாய் வருதல் வழுவாதலையும் கருதி அதனைப் பாடம் அறிந்து திருத்திக்கொள்க என்றனர். எனவே இவர் கருத்தின்படி உண்டு என்பதற்கு மாறாக அயின்று அல்லது மிசைந்து என்ற சொல் இருக்கவேண்டுமென்று தெரிகின்றது. சேனாவரையர் இச்சொல்லை வழுவென்று கூற மனமில்லாது, இருவகையாகச் சமாதானம் கூறினர். (௧) உண்டலென்பது உண்பன தின்பன. எனப் பிரித்துக் கூறும் வழிச்சிறப்பு வினையாம்; பசிப் பிணி தீர நுகரப் படும் பொருளெல்லாம் உணவெனப்படுமாகலின் பொது வினையுமாம். ஆதலால் அது வழுவன்றென்பது. (உ) கறியொழித்து ஏனையவற்றிற் கெல்லாம் உண்டல் தொழில் உரித்தாகலின், பன்மைபற்றிக் கூறினார் எவினும் அமையும் என்பது. புறநானூற்று உரையாசிரியரும் இதற்கு இருவகையாகச் சமாதானம் கூறினர். (௧) சேனாவரையர் இரண்டாவதாகக் கூறிய சமாதானத்தை முதற்கண் கூறினர். (உ) இத்தொடருக்கு உண்துவை கறியோடு கூடிய சோற்றை உண்டு எனப் பொருளுரைப்பின் பொருந்தும் என்பது. (இவ்வுரையில் 'பொதுவினை என்று உரைப்பாரும் உளர்' என்ற குறிப்பும் காணப்படுகின்றது.) இவ்வாற்றான் மூவருடைய உரையையும் காணும்போது உண்டலென்பது சிறப்பு வினையே என இளம்பூரணர் அழுத்தமாகக் கூறியது போல, ஏனைய இருவரும் கூறாராயினும், அவர்களுடைய மனமும், உண்டலென்பதைச் சிறப்பு வினையாகக் கொள்ளுதலே பொருத்தமெனக் கருதிற்று எனத் தெரிகின்றது.

ஆனால், தெய்வச்சிலையார் தம்புலமை தோன்ற உண்டலென்பது பொது வினையே என்று கூறி அதற்குத் தக்க மேற்கோள்களையும் காட்டுவர். அது வருமாறு :— ஊன்துவை கறிசோறுண்டு வருந்துதொழில் அல்லது பிறிது தொழிலறியாவாகலின் (புறம்-௧௪) என்ற வழி, உண்டு என ஒரு வினையான் வந்ததால் எனின், அது பொதுவினை என்று கொள்க. என்னை? 'உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு' (கலி - குறி ஞ்-௧௫) எனவும், 'பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு' (அகம்-௪௮) எனவும், 'கலைப்புற வல்குல் கழூ குடைந்துண்டு (மணி-௬:-௧௧௨) எனவும், 'கள்ளுண்ணாப்போழ்து' (குறள்-௯௩௦) எனவும், 'உண்ணாமை வேண்டும் புலாஅல்' (குறள்-௨௫௭) எனவும் வருதலின். இனி நச்சினார்க்கினியர், 'உண்டற்குரிய அல்லாப் பொருளை, உண்டன போலக் கூறலும் மரபே' (பொருளியல்-௧௬) என்னும் பொருளியற் சூத்திரத்தான் உண்டற்றொழில் எல்லாவற்றிற்கும் பெரும்பான்மை வருதல் பெற்றும் என்பர். எனவே 'உண்டு' என்பது பொதுவினையாதல் இவர்க்கும் கருத்தாகும். ஆதலின் இவர்கள் கருத்தே பொருத்தமுடைத்து.

௪௮ ஆம் நூற்பா: கொறுகொறுத்தார் - கோபித்தார். அஃது அப்பொருட்டாதல், 'இனிச்சிறிது எழுந்து வீங்கின் இட்டிடை கோறும் நாங்கள் எனக் கொறு கொறுப்ப' (சிந்-உ௦௪௦) 'கொறுகொறுத்தார் என்றொருவர் கூறுங்கால் உள்ளம் துடிதுடித்து நீங்கிவிடும்' (நன்-

நகூடு மயிலே-மேற்) என்பனவற்றானறிக. மொறுமொறுத்தார்-முனு முனுத்தார்.

குறுகுறுத்தது என்பது, குறுத்தது குறுத்தது எனப் பிரிந்து வருதலின் 'இரட்டைக் கிளவி காட்டிற் பிரிந்திசையா' என்றல் எங்ஙனம்? என்ற வினவை எழுப்பிக் கொண்டு, அதற்கு அழகாக விடை கூறுகின்றார் சேனாவரையர். குறுகுறுத்தது என்பது மிகக் குறுமையுடையது என்ற பொருளைத் தரும். எனவே, இது இருசொல் லாயின் முதற்கண் உள்ள குறு என்பது மிகுதியை யுணர்த்த வேண்டும்- அடுத்தாற் போலுள்ள குறுத்தது என்பது குறுமையுணர்த்தவேண்டும். ஆனால் குறு என்பது மிகுதியை உணர்த்தாமையின், இது இருசொல் லன்று. ஒரு சொல்லாகவே நின்று இப்பொருள் உணர்த்திற்று என்பது பெறுதும்.

அக்குறுமை மாத்திரம் உணர்த்தி நிற்பது குறுத்தது குறுத்தது என்பது. இது குறுகியது குறுகியது எனப் பொருள்படுவதாகும். ஆதலின் குறுத்தது குறுத்தது என்ற சொற்களிலிருந்துதான் குறு குறுத்தது என்பது வந்ததெனக் கருதற்க; அதுவேறு, இதுவேறு என்பது கருத்தாம்.

குறுகுறுத்தது, கறுகறுத்தது என்பன ஒருசொல்லேயாயின், இதனை இரட்டைக் கிளவி என்பது ஏன்? என்பதற்குத் தக்கவுமை காட்டி விளக்குகின்றார் சேனாவரையர். ஈண்டு 'இரட்டைக் கிளவி' என்பது மக்களினத்திலோ, அல்லது விலங்கினத்திலோ உள்ள இரட்டைகளைக் குறிப்பனபோலவன்று. இலையிலும், பூவிலும் உள்ள இரட்டை போன்ற தாகும் என்றனர். வில்வம் போன்ற இலைகள் பார்ப்பதற்கு மூவிலை போலத்தெரியினும், அது ஒரு இலையே யாகும். அதுபோல இவ்வி ரட்டைக் கிளவியும் பார்ப்பதற்கு இருசொல் போல இருப்பினும், சொல்ஒன்றேயாம். பார்ப்பதற்கு இருசொற்கள் போல் இருத்தலின் இதனை 'இரட்டைக்கிளவி' என்றார்.

பாம்பு பாம்பு என அடுக்கிலும் இருசொற்கள் அடுக்கி வருகின் றன. இவ்விரட்டைக் கிளவியும் கொறுகொறுத்தார் என அடுக்கி வருகிறது. எனவே இவ்விரட்டைக் கிளவிக்கும் அதற்கும் வேற்றுமை யாது? எனில், அடுக்கு ஒரு சொல்லே திரும்பவும் அடுக்கிவரும்; இரட் டைக் கிளவியிலோ முன்னையது குறைச் சொல்லாய்ப் பின்னையது முழுச் சொல்லாய் வரும். ஆதலின் வேறாயின. நச்சினார்க்கினியரும் 'ஒரு சொல் முழுவதும் இருமுறை வாராமையின் அடுக்கு அன்று' என்றல் காண்க. தெய்வச்சிலையார் இதற்கு ஒன்றொன்றாக வந்தன, இரண்டிரண் டாக நீக்குக என்பனவற்றை எடுத்துக் காட்டுவர். அவை பொருந்துமா என்பது ஆராயத்தக்கதாம்.

௬௩ ஆம் நூற்பா: 'ஒருபெயர்ப் பொதுச்சொல்' என்னும் தொடரில், 'ஒருபெயர்' என்னாது, 'பொதுச் சொல்' என்றே கூறியிருப் பின், அது பலபொருள் ஒருசொல்லையும் குறிக்குமாகலின், அதனை நீக்குதற்கு 'ஒருபெயர்' என்ற சொல்லையும் உடன் கூறினார்.

பல பொருள்களுக்கும் பொதுவாகியதொரு இடத்தைச் சிறப்பாக ஒரு பொருளுக்கே உரிய பெயரால் கூறப்படுதல் பற்றித் தொல்காப் பியர் கூறுகின்றார். சேனாவரையர், ஒன்றற்கே உரிய பெயரால் கூறப் படும் சொற்கள், ஏனைய பொருளுக்கும் உரியதாய் வருதலை 'உத்தியால்'

அடக்குகின்றார். எ-டு: அரசர் பெருந்தெரு என்பது அரசர்களுக்கேயுரிய தெருவாதல் போலக் கூறினரேனும், ஏனையோரும் அத்தெருவில் இருக்கலாம். ஆயினும், அரசர் பெருந்தெரு என்றே கூறப்படுதல் இவ்விலக்கணத்தின் படியாம்.

ஆதீண்டுகுற்றி—பசுக்கள் தினவு எடுக்குங்கால் உராய்தற்கு ஏற்ற வாறு அமைக்கப்பட்ட மரக்கட்டை, ஏருத்தில்-எருத்துமாடு (காளை மாடு)கட்டுதற்குக் கட்டப்பட்ட கொட்டில்.

சேரி என்பது, பல இனத்தார் (சாதியினர்) இருப்பது என்றும், தெரு என்பது ஒருவகையினத்தாரே யிருப்பது என்றும் வேற்றுமை காண்பர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும். இக்காலத்தில் தாழ்த் தப்பட்டோர் இருக்கும் இடத்திற்கே சேரி என்ற பெயர் உளது. சிலப்பதிகாரத்தில் சேரி என்பது ஒழுக்கந்தவறிய பார்ப்பனர்கள் இருக்கும் இடத்தையும் குறித்து வருகிறது.

ருo ஆம் நூற்பா: 'இருதிணை ஆண்பெணுள் ஒன்றனை யொழிக் கும், பெயரும் வினையும் குறிப்பினானே' என்பது இந்நூற்பாவின் கருத்தாகும்.

இருதிணையின்கண்ணும் ஆண், பெண் என்ற இருபாற்கும் பொதுவாகிய பெயர்கள், ஒருபாலை ஒழித்து ஏனைய பாலைக் குறிப் பால் காட்டும். இங்ஙனம் காட்டுதற்குக் கருவியாக இருப்பன அவ் வப் பெயர்களும் வினைகளுமேயன்றிப் பிறிதில்லை. இதைப் போன்றே பலபொருள் ஒருசொற்களும் (சொல் - ருஙு), பால்பகா அஃறிணைப் பெயர்களும் (சொல் - கஎக), விரவுப் பெயர்களும் (சொல் - கஎஉ) பொதுவாக நின்றும் ஒன்றனையே விளக்கும். ஆனால் அவையெல் லாம் இனம், சார்பு முதலிய பிற கருவிகளையும் (ருஙு), வினைச் சொல்லாகிய கருவியையும் (கஎக, கஎஉ) துணையாகக் கொண்டே ஒன்றையொழித்து ஒன்றைக் காட்டும். அதனால் இவை பிறசொல் லாற் பிரிவனவாயின. ஆனால் இதுவோ பிறசொற்களின் துணை வேண்டாது அவ்வச்சொல்லால் வரும் பெயரும் வினையுமே குறிப் பாய் ஒன்றை ஒழித்து ஒன்றைக் காட்டுதலின், இது தம்மாற்றும் பிரிந்ததாயிற்று.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் உள்ளிட்ட உரையாசிரியர்களனை வரும் இதுவே பொருளாகக்கூறத், தெய்வச்சிலையார் மட்டும் வேறு உரை கூறுவர். அதனை அவருரையானறிக.

ருக ஆம் நூற்பா: பல்வயினானும் - பல்லாற்றானும்; எனவே பெரும்பாலும் என்பது பொருள்.

'பாணன், பறையன், துடியன், கடம்பன்' என்பன அவ்வப் பெயர்களைக் குறியாது குடியைச் சுட்டி நிற்றலின் வழுவில்லை என இளம்பூரணரைச் சேனாவரையர் மறுத்தனர். ஆனால் நச்சினார்க்கினியர் இவை குடியைச் சுட்டி நில்லாது, பாணன் பறையன் எனப் பால் காட்டி நிற்றலின், இளம்பூரணர் கருத்தே பொருத்தமுடைத்து எனத் தழுவினர்.

ருஉ ஆம் நூற்பா: பண்டைக் காலத்தில் பசுக்கள் தினவெடுப் பின் உராய்வதற்கு ஆங்காங்கு மரக்கட்டைகளை நட்டிருப்பர். அவற்றில் பசுக்களே யன்றி ஏனைய விலங்குகளும் தினவெடுப்பின்

உராய்ந்து தினவைப் போக்கிக்கொள்ளும். ஏனைய விலங்குகளும் அக் கட்டையைப் பயன்படுத்தினும் பசுக்கள் சிறப்புடைமையின் 'ஆதீண்டு குற்றி என அப்பெயரால் கூறுவர். பலபொருள் ஒரு சொற்களுக்குத் தாம் குறிக்கும் பொருள் இன்னதென அறிதற்குக் கருவியாவன மூன்றும். அவை (க) வினை (உ) இனம் (௩) சார்பு என்பன. இம்மூன்றனுள், வினை சிறப்புடைமையின் 'வினை வேறுபடூஉம் பல பொருள் ஒருசொல்' என்றார். வேறுபடுத்தற்கு இனம், சார்பு முதலிய பிற இருப்பினும், வினையை மட்டும் கூறினர்: ஆதீண்டு குற்றி என்பது போல.

'இனமும் சார்பும்பற்றிவரும் அவையிற்றை வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல் என்றது என்னை? யெனின், அவ்வின முஞ்சார்பும் அவ்வினைச் சொல்லை வேறுபடுக்கும்வழி அதனோடு கூடி நின்று வேறு படுப்பின் அல்லது, தாமாக நில்லாதது நோக்கி, அவையிற்றையும் 'வினை வேறுபடூஉம் பலபொருள் ஒருசொல்' லென்ப' என்பர் கல்லாடர்.

௫௩ ஆம் நூற்பா: குருகு—உலைமூக்கு.

உலகத்தில் பல உயிர்கள் இருப்பினும் ஒவ்வொன்றிற்கும் இருக்கும் இயைபு நோக்கி, அவற்றைப்பல பிரிவுகளாகப் பிரித்துள்ளனர்: அப்பிரிவுகளே 'இனம்' அல்லது 'சாதி' எனப்படும். எடுத்துக்காட்டாக மனிதஇனம், விலங்கினம், தாவரஇனம் என்றல் காண்க. மக்களுள் மொழி, நடை, உடை, பாவனைகளால் பற்பல வேற்றுமைகள் காணப்படினும், அவர்களனைவருக்கும் பல பொதுத்தன்மைகளும் இருக்கின்றன. அவற்றையே 'இனம்' என்பர். 'தெண்கடல் வளாகம் பொதுமையின்றி, வெண்குடை நிழற்றிய ஒருமையோர்க்கும், நடு நாள்யாமத்தும் பகலுந்துஞ்சான், கடுமாப்பார்க்கும் கல்லா ஒருவர்க்கும், உண்பது நாழி உடுப்பவை யிரண்டே, பிறவுமெல்லாம் ஓரொக்குமே' (புறம் - ௧௮௯) என்றல் காண்க.

எனவே இனம் என்பது, ஒருபொருளுக்கும் பிறிதொரு பொருளுக்கும் உள்ள இயைபு நோக்கி வரும்; சார்பு என்பது ஒரு பொருளுக்கும் பிறிதொரு பொருளுக்கும் எவ்வித இயைபுமின்றி சந்தர்ப்பத்தால் இயைபுடையதாகி வரும் என்பது பெறப்படும். எ - டு: மாவும் மருதும் ஓங்கின என்புழி, மாவிற்கும் மருதத்திற்கும் மரம் என்ற இயைபிருத்தலையும், கவசம் புக்கு மாக்கொணா என்றவழி கவசத்திற்கும், குதிரைக்கும் எவ்வித இயைபும் இன்றேனும் அச்சந்தர்ப்பத்தால் ஒராற்றான் இயைபிருத்தலையும் காண்க.

௫௪ ஆம் நூற்பா: பலபொருள் ஒருசொற்களை இன்னதென விளங்கிக்கொள்வதற்குப் பின்வரும் வினை, இனம் சார்பு ஆகிய மூன்று சொற்களுமே கருவியாகும். அப்பல பொருள் ஒருசொற்கள் இவற்றைக்கொண்டு இன்னதென விளங்கும்பொழுது அவை வினை வேறு படூஉம் பலபொருள் ஒருசொல் எனப்படும். எடுத்துக்காட்டாக, மாப் பூத்தது என்புழி, மா என்னும் பலபொருள் ஒருசொல், பூத்தது என் னும் வினையால் மா என்பது மரம் எனத்தெரிதலின், அது 'வினைவேறு படூஉம் பலபொருளொரு சொல்'லாம். இங்ஙனமே பிறவற்றையும் காண்க. இப்பலபொருள் ஒரு சொற்களுக்குப் பின்னே வினை கொடுத்தும், அவை இன்னபொருள் குறித்தன எனத்தெரியாதாயின் அவை வினை வேறுபடா' பல பொருளொரு சொல்லாம். எடுத்துக்காட்டாக,

மாவீழ்ந்தது என்புழி, வீழ்ந்தது என்னும் வினை, வண்டு, விலங்கு, மரம் முதலியவற்றிற்கும் பொதுவாதலின், வீழ்ந்தது என்னும் வினைகொண்டும் அம் மாஎன்பது இன்னதெனத்தெரியாதிருத்தலின், அது வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்லாம். எனவே பலபொருள் ஒரு சொற்களில் இவையே 'வினை வேறுபடூஉம் பலபொருள் ஒருசொல்' இவையே 'வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்' எனப் பிரித்தறிதற்கில்லை என்பதும், பின்வரும் வினை, இனம், சார்பினால் பொருள் விளங்குமேல் அவையே வினைவேறுபடும் பலபொருள் ஒருசொல் என்றும், அவற்றானும் விளங்க முடியாத சொற்களை வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல் என்றும் கொள்ள வேண்டும் என்பதும் பெற்றாம்.

இங்ஙனம் வினை, இனம் சார்பு கொண்டும் அச்சொற்கள் பொருள் விளங்காதாயின், அவற்றை இன்னதென விளங்கும்படியாகவே சொல்லுக என்பது இந்நூற்பாவின் கருத்தாகும்.

இந்நூற்பாவில் 'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித்தோன்றும்' என்ற தொடருக்கு விளக்கம்:— ஒன்று வினை-பல பொருட்கும் பொருந்தும் வினை. மாவீழ்ந்தது என்புழி, வீழ்ந்தது என்னும் வினை மரம், விலங்கு, வண்டு முதலிய பல பொருள்களுக்கும் பொருந்தி வருதலின் இது ஒன்று வினையாம். ஒன்றித்தோன்றும்-(இங்ஙனம் ஒன்றற்கேயுரிய சிறப்பு வினை கொடுக்காது பொதுவினை கொடுப்பின்) பல பொருளுக்கும் பொருந்தித் தோன்றும். இது 'வினை வேறுபடாப் பலபொருள் ஒரு சொல்' எனப்படும்.

'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்' என்ற தொடரைத் தனித்து ஒரு நூற்பாவாக்கிக் கூறுவர் இளம்பூரணர் உள்ளிட்ட ஏனைய உரையாசிரியர்கள். இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) இதற்கு முன்னைய நூற்பா வினைவேறுபடூஉம் பல பொருள் ஒருசொல்லைக்குறிப்பதாகும். இந்நூற்பா, வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல்லைக் குறிப்பதாகும். இதற்கு இடையில் இத்தொடர் தனி நூற்பாவாக இருப்பின், இதுவும் இதற்கு முன்னைய நூற்பாவாகிய வினை வேறுபடூஉம் பல பொருள் ஒருசொற்கே இலக்கணமாய், அவ்விலக்கணத்தோடு இந்நூற்பாவின் பொருள் இயையாததாய் விடும். (உ) பலபொருள் ஒருசொற்களில், சிறப்பு வினை கொடுத்தவழி வினைவேறுபடூஉம் பலபொருள் ஒருசொல் என்றும், பொது வினை கொடுத்த வழி அதுவே வினை வேறுபடாப் பலபொருள் ஒரு சொல் என்றும் கூறப்படும் என்ற கருத்து இதனைத் தனி நூற்பாவாகக்கொள்ளின் கிடைக்காது.

நச்சினார்க்கினியர், இங்ஙனம் பொருள் கொள்ளின் 'ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்' என்பதனோடு மாறுபடும் எனச் சேனாவரையரை மறுத்து இதனைத் தனி நூற்பாகவே கொள்வர்.

ருரு ஆம் நூற்பா: தெரித்து மொழியாமையை (குறித்த பொருள் விளக்கத்தக்க சொற்கள் இல்லாமையை) வடநூலார் 'நேயம்' என்பர். செயலை யந்தளிர்-அசோகந்தளிர்.

'ஒல்லேங் குவளைப்புலால்' என்ற தொடருக்குச் சேனாவரையர் கூறும் உரைநயமாக இருப்பினும், குவளை புலால் நாறுதற்கும், எருக்

கங்கண்ணி நறிதாதற்கும் காரணம் அத்தொடரில் இல்லாமையால் இந்நூற்பாவின்படி வழுவேயாம்.

இப்பாடற்பகுதி இவருரையில் குறையுடையதாய்க் காணப்படுகிறது. இளம்பூரணர் உள்ளிட்ட உரையாசிரியர்கள் அனைவரும்,

'பல்லார்தோள் தோய்ந்து வருதலால் பாய்புனல்
நல்வய லூரநின் தார்புலால்—புல்லெருக்கம்
மாசில் மணிப்பூண்எம் மைந்தன் மலைந்தமையால்
காதற்றாய் நாறும் எமக்கு'

என்ற முழுப்பாடலைக்காட்டி, இதுவே தெரிந்து மொழிந்தது என்பர். நேமிநாத உரையாசிரியரும் இவர்கள் கருத்தையே தழுவுவர். இதுவே பொருந்தமுடைத்தாம்.

இளம்பூரணர் இதற்கு ஈருரை தருவர். தெய்வச்சிலையார் இவர்களனைவருக்கும் வேறுபட உரை காண்பர். இத்திறமெல்லாம் அவரவர் உரை நோக்கி யறிக.

௫௬ ஆம் நூற்பா: தன்மை திரிபெயர் — தன்தன்மையினின்றும்திரிந்த பெயர்; அது அலி என்பது. அதனோடு ஒரு பொருட்கிளவியாய் வருவன அழிதூஉ, மகண்மா முதலியன.

செறற்சொல்—வெகுண்டு கூறும்சொல். பொறியறை—பொறியற்றவன். ஐம்பொறிகளில் காது, மூக்கு போன்ற உறுப்புக்கள் இல்லாதவனைப் பொறியறை என்ப. இனிப்பொறி என்பது ஊழைக் குறிக்கும் எனக்கொண்டு, பொறியறை—ஆகூழ்இல்லாதவன் என்றுரைப்பினும் பொருந்தும். 'பொறி ஊழாதல், பொறியின் மையார்க்கும் பழியன்று' (குறள் ௬௧௮) என்பதனாலும் அறிக. கெழீஇயிலர்-பிறரொடு தொடர்பில்லாதவர்; அதாவது நட்பில்லாதவர்.

இந்நூற்பாவில் கூறப்பட்ட சொற்கள் பதினெட்டு. இவற்றுள் முன்னைய பன்னிரண்டும் அவ்வச்சொல்பற்றி நின்றன. பின்னைய ஆறும் பொருள்பற்றி நின்றன. ஆதலின் அவ்வாறும் பற்பல சொற்களைத் தன்னகத்து அடக்கி நிற்பனவாம். எனினும் பொருள் வகையால் ஆறாயின என்றார்.

இப்பதினெட்டுச் சொற்களும் உயர்திணைப் பொருள்மேல் நிற்பினும், அஃறிணை முடிபே கொள்ளும் என ஆசிரியர் கூறலின், இவற்றுள் சிலவற்றை ஆகுபெயராயல்லது வாராவென்றும், ஏனைய இருதிணைக்கும் ஒத்த உரிமைய என்றும் சேனாவரையர் கூறல் பொருந்தாது. நச்சினார்க்கினியர் இச்சொற்கள் உயர்திணையிருபாற்கண்ணும் பெரும்பான்மை நிலைபெற்றனவாயினும், அஃறிணைமுடிபே கொள்ளும் என உரைத்து அவற்றிற்குத்தக மேற்கோளும் காட்டுவர். அத்திறமெல்லாம் அவர் உரை நோக்கியறிக.

௫௭ ஆம் நூற்பா: காலக்கடவுள்—இமயன். பால்வரைதெய்வம்-உயிர்கள் தாம் தாம் செய்யும் நல்வினை தீவினைகட்கு ஏற்ப இன்ப துன்பத்தை வரையறைப்படுத்தி ஊட்டுவிக்கும் தெய்வம். அதுவே பரம்பொருள் என்றும், இறைவன் என்றும் குறிக்கப்படும். எனவே அவரவர் செய்த நல்வினை தீவினைகட்டு ஏற்ப அவரவர்களுக்கு இன்ப துன்பத்தை ஊட்டுதற்கு இறைவன் வேண்டப்படுவன் என்பது தெரிகின்றது. இதுவே சைவசித்தாந்தக்கருத்து ஆகும். சமணர் முதலா

ஞோர் வினை, தாமே செய்தவனைச் சென்றடையும் என்பர். 'நம்மால் முன், செய்தவினைக்கு ஈடாகச்சிவனருள் செய்விப்பதென்ருல் எய்தவனை நாடியிரு' என்ற சிவபோகசாரமும் இதன் உண்மையை உணர்த்தல் காண்க. திருவள்ளுவனாரும், 'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தலரிது' என்று கூறுவர்.

தெய்வச்சிலையார், 'பால்வரை தெய்வம்' என்பதற்கு ஆணும் பெண்ணும் அலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள் என்பர். இவர் கருத்தின்படி பால் என்பது ஆண் பெண், அலியாகிய பாற்பகுப்பைக் குறிக்கும். அறம்-அறத்தெய்வம். என்றது, 'என்பிலதனை வெயில் போலக் காயுமே அன்பிலதனை அறம்' என்று கூறப்பட்ட அறத் தெய்வத்தை. இன்னும் அவர், உடம்பென்பது மனம், புத்தி, ஆங்கார மும் பூத தன்மாத்திரையுமாகி வினையினுல் கட்டப்பட்ட நுண்ணிய உடம்பு என்றும், சொல் என்பது எழுத்தினுல் இயன்று பொருள் உணர்வது; அச்சொல்லினுல் இயன்ற மந்திரம், விடம் முதலாயின தீர்த்தலின் தெய்வமாயிற்று என்றும் விளக்கம் கூறுவர்.

இதற்கு முன்னைய நூற்பாவில் கூறப்பட்ட குடிமை, ஆண்மை முதலிய சொற்களும், இந்நூற்பாவில் கூறப்பட்ட காலம், உலகம் முதலிய சொற்களும் உயர்திணைக்கு உரியனவே; ஆயினும் அவை அஃறிணையாய் இசைக்கும் எனில், ஒரே நூற்பாவில் கூறியிருக்கலாம்; அங்ஙன்மின்றி வேறு கூறியது என்னை? எனில், அவை இருதிணைக் கண்ணும் சேறன் மாலைய: இவை அன்னவல்லவாதலின் வேறு கூறினுர் என்பர் சேனுவரையர். அதன் விளக்கம்: இவ்விரு நூற்பாக் களிலும் கூறப்பட்டன உயர்திணைக்குரியவாய் அஃறிணையில் இசைப் பினும், குடிமை ஆண்மை முதலியன ஈறு திரியாமல் நின்றவாறு நின்றே உயர்திணையாயும் இசைக்கும், அஃறிணையாயும் இசைக்கும். ஆனுல் காலம் முதலிய சொற்களோ தன்னீறு திரிந்துழி உயர் திணை யாய் இசைக்கும்; ஈறு திரியாதவழி அஃறிணையாயே இசைக்கும். இவ்வேற்றுமையுடைமையான் வேறு கூறினுர் என்பது.

கல்லாடர் குடிமை யாண்மை முதலியன பண்படியாக வந்த பொருட்பெயர்கள் என்றும், காலம் முதலிய சொற்கள் இயல்பாய பொருட்பெயர்களென்றும் வேற்றுமை காண்பர். பழைய உரையாசிரி யர் குடிமை ஆண்மை முதலாயின சொல்லால் உயர்திணையல்லனவாய், பொருளால் உயர்திணையாய், ஆனுல் அவை அஃறிணையாய் இசைக்கும் எனக் கூறப்பட்டது என்றும், காலம் முதலிய சொற்கள் இயல்பாகவே உயர்திணையாய் உள்ளன, அவை அஃறிணையாய்க் கூறப்பட்டன என்றும் வேற்றுமை காண்பர்.

காலம், உலகம் முதலிய சொற்களில், உயிர் உடம்பு என்பன மக்களைக் குறித்து நிற்பன; ஏனையவெல்லாம் தெய்வத்தைக் குறித்து நிற்பன என்பது இளம்பூரணர், நச்சினுர்க்கினியர், கல்லாடர், பழைய உரையாசிரியர் ஆகிய அனைவர்க்கும் கருத்தாகும். நச்சினுர்க்கினியர் 'உலகம்' என்பதும் மக்களையே உணர்த்தும் என்பர்.

வடசொற்களை எடுத்தோதி ஆசிரியர் இலக்கணம் செய்யார் ஆகலின் காலம், உலகம் என்பன வடசொற்களல்ல என்பர் நச்சினுர்க் கினியர்.

'உலகம்' என்பது இடத்தைக் குறிப்புழியும் உரிய பெயரே; மக்களைக் குறிப்புழியும் உரியபெயரே, எனவே இடத்தையுணர்த்தும்

உலகம் என்ற சொல்லும், மக்களையுணர்த்தும் உலகம் என்ற சொல்லும் வெவ்வேறேயாம். இங்ஙனமே விலங்கு, மரம், வண்டு முதலிய பல பொருளைக் குறித்துவரும், 'மா' என்ற சொல்லும் அவ்வப்பொருளைக் குறித்து வருங்கால், அவ்வச்சொல்லும் வெவ்வேறேயாகும். இங்ஙனம் கொள்ளின், பலபொருள் குறித்த ஒரு சொல் என்ற பாகுபாடே சொல்லுதற்கில்லையே; அங்ஙனமாக ஆசிரியர் அப்பாகுபாட்டை ஏற்றதேன்? எனின், கூறுதும். பலபொருள் ஒரு சொல் என்றது உலகம் மா போன்ற சொற்கள் ஒவ்வொரு பொருளைக் குறிக்கும் பொழுதும் ஒவ்வொரு சொல்லாகவே இருப்பினும், அவையெல்லாம் எழுத் தொப்புமையால் ஒருசொல்லாகவே காணப்படுகின்றன. ஆதலின் இவற்றைப் பல பொருள் ஒருசொல் என்றார்.

௫அ, ௫௯ ஆம் நூற்பாக்கள்: காலம் முதலிய சொற்கள் ஈறு திரிந்தவழி உயர்திணையாயும், ஈறு திரியாதவழி அஃறிணையாயும் இசைக்கும் என்பது இவ்விரு நூற்பாக்களின் கருத்தாகும். காலம் முதலிய சொற்களின் இயல்பை இங்ஙனம் கூறவே, குடிமை, ஆண்மை முதலியன ஈறு திரிந்தும் திரியாமலும் உயர்திணையாயும் அஃறிணை யாயும் இசைக்கும் என்பது பெறப்படுகின்றது. 'அங்கண் வானத் தணிநிலா விரிக்கும் திங்களஞ் செல்வன் யாண்டுளன் கொல்லென' (சிலம்பு-4:3,4) என்றவிடத்தும் திங்கள் என்னுஞ்சொல் ஈறுதிரிந்து நிற்பது காண்க.

௬0 ஆம் நூற்பா: இனப்பொருளுள்ள பொருள்களில் ஒன்றனைச் சிறப்பாக எடுத்துக் கூறிய வழி, அப்பொருள் தனக்கு இனமாகிய பொருளைக் குறித்தலும் உண்டு; அன்றிக்குறியாமையும் உண்டு என்பது இந்நூற்பாவின் கருத்தாகும்.

அறம், மறம்; துறக்கம், நரகம்; அளவறிந்துண்டல், கழிபேர் இரையனாய் உண்டல்; இன்பம், துன்பம் ஆகிய இவை போல்வன இனப்பொருளாம். அறம் செய்தான் துறக்கம் புகுவன் என ஒன்றனை எடுத்துக் கூறவே, அதற்கு இனமாக மறம் செய்தான் நரகம் புகுவன் என்ற கருத்தும் பெறப்படும் என்பதாம். இங்ஙனம் இனப்பொருளைக் குறிக்கும் என்றது, சொல்லுவார்க்கு அக்கருத்துள் வழியேயாம். இன்றேல், அவ்வினப் பொருள் உணர்த்தா என்பது சேனாவரையர் கருத்து.

இளம்பூரணர் உலகத்துக் கூறப்படுகின்ற சொற்றொடர்களில் இனம் செப்புவனவும் உள; இனம் செப்பாதனவும் உள எனக் கூறி, முன்னையதற்கு மேலைச்சேரிக் கோழி அலைத்தது, குடம் கொண்டான் வீழ்ந்தான் என்பனவற்றையும், பின்னையதற்கு ஆவாழ்க, அந்தணர் வாழ்க என்பனவற்றையும் எடுத்துக் காட்டினர். இவற்றைச் சேனாவரை யர் இருகாரணங்களால் மறுக்கின்றார். (க) மேலைச்சேரிக் கோழி அலைத்தது (வென்றது) எனவே, கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டது (தோற்றது) என்பதும், குடம் கொண்டான் வீழ்ந்தான் எனவே, குடம் வீழ்ந்தது என்பதும் சொல்லாற்றலானன்றிப் பொருளாற்றலாற் பெறப்பட்டனவாதலின், அவை ஈண்டுக் கூறற்குரியனவல்ல. பொரு ளாற்றலால் பெறப்பட்ட இதனையெல்லாம் சொல்லாற்றலால் பெறப் பட்டன எனக்கூறின், புகையுண்டு என்றவிடத்து நெருப்புண்டு எனப் பொருளாற்றலால் பெறப்பட்டதையும், சொல்லாற்றலால் பெறப் பட்டது எனக் கூறல் வேண்டும். அங்ஙனப் ஒத்துக் கொள்ளல்

யார்க்கும் கருத்தன்று. ஆதலின், மேற்கூறியனவும் சொல்லாற்றலால் பெறப்பட்டன என்பதும் பொருத்தமின்று. (2) ஆ வாழ்க அந்தணர் வாழ்க என்பன இனம் செப்புவன என்றோ, இனம் செப்பாதன என்றோ கூறற்கில்லை. சொல்லுவார்க்கு அது இனஞ்செப்பாதாயின் இனம் செப்பாதனவே; சொல்லுவார் ஏனைய இனத்தவரும் ஏனைய விலங்குகளும் சாக என்னும் கருத்தோடு அவற்றைக் கூறின், அவையும் இனம் செப்புவனவேயாகும். ஆதலின் இவை இனம்செப்புவன, இவை இனம்செப் பாதன என வரையறைப்படுத்தல் வழுவாம்.

ஒருசொல் தனக்கு இனமான சொல்லைக் குறிப்பால் உணர்த்தின் அது சொல்லாற்றல் என்றும், ஒரு பொருள் தனக்கு இயைபான பொருளை உணர்த்தின் அது பொருளாற்றல் என்றும் சேனாவரையர் கருதுவர். எ-டு: 'அறம் செய்தான் துறக்கம் புகும்' என்னும் தொடர், 'மறம் செய்தான் நிரயம்புகும்' என்னும் தொடர்மொழியைக் குறிப் பாலுணர்த்தலின் அது சொல்லாற்றலாற் பெறப்பட்டதாகும். புகை யென்னும் பொருள் தனக்கியைபான நெருப்பைக் காட்டுவது பொரு ளாற்றலாகும்.

இங்ஙனம் ஒன்றனதாற்றலால் ஒன்றுபெறப்படுவதை 'அருத்தா பத்தி' என்பர். 'புகைதன் ஆதியாய அனல் காட்டலாகும்' என்பதை அருத்தாபத்தி என சிவஞானசித்தியாரும் கூறும்.

எடுத்த மொழிக்கு இனம் ஒன்றாக இருப்பின் அது இனம் சுட்டும் என்றும், இனம் பலவாயிருப்பின் இனம் செப்பா என்றும் இலக்கணம் கூறினர் நச்சினார்க்கினியர். பின்னர் வந்த சிவஞான முனிவரும் பஃறா ழிசைக்கொச்சகம் என்பதற்கு இனம் ஒன்றேயாதலின், அது சில்தா ழிசைக்கொச்சகம் என்ற இனத்தையும் குறிக்கும் என்றும், பஃறொடை வெண்பா என்பதற்கு (நேரிசை, இன்னிசை, குறள் வெண்பா என) இனம் பலவாகலின் அது இனம் செப்பா என்றும் கூறுதல் காண்க.

பழைய உரையாசிரியர் இளம்பூரணர் கருத்தையும், ஏனையோர் சேனாவரையர் கருத்தையும் தழுவுவர்.

௬௧ ஆம் நூற்பா: தம் வினைக்கியலும் எழுத்தலங்கடையே - (சினைச் சொற்கள்) தம் வினையாகிய அஃறிணை வினையொடு முடியாது, உயர் திணையொடு முடிவுழி. எனவே, தம் வினை என்பது அஃறிணை வினை யைக் குறிக்கும். அஃதல்லாதது உயர்திணை வினையாம். இதனை இங் ஙனம் கொள்ளாது தம் என்பது, சினைவினை என்றும், அஃதல்லாதது முதல்வினை யென்றும் கொள்ளின், ஈண்டுக்கூறப்பட்ட சினைச்சொற் கள் உயர்திணை, அஃறிணையாகிய இரு திணையின்கண்ணும் உள்ளவற் றைக் குறிக்குமே! அங்ஙனம் கூறாதது ஏன்? என்பது வினா. அஃறிணைச் சினைகளுக்குத் தமக்குரிய வினையும், தம்முதல் வினைக்குரிய வினையும் இரண்டும் ஒன்றே. அஃதாவது அஃறிணையே. ஆதலின் அமைக்க வேண்டுவதின்று. உயர்திணைச் சினைகளோ, தமக்குரிய வினை அஃறிணை வினையாயும், தம் முதலுக்கு உரிய வினை உயர்திணை வினையாயும் வரும் வேறுபாடுடைய ஆதலின் அதனையே ஈண்டு அமைக்க வேண்டும் என்பது.

## உ. வேற்றுமையியல்

௬௨ ஆம் நூற்பா: பெயர்ப் பொருளைச் செயப்படுபொருள் முத லாக வேற்றுமை செய்தலின் வேற்றுமை எனப் பெயர்பெற்றதென்பர்

சேனாவரையர். வேற்றுமை என்பது எதைக்குறிக்குமென்பதில் பலரும் கருத்து வேறுபடுவர். வேற்றுமை உருபையும் அது ஏற்கும் பெயரையும் வேற்றுமை என்பர் தொல்காப்பியர். வேற்றுமை உருபையே வேற்றுமை என்பர் நன்னூலார். வேற்றுமை கொண்டு முடியும் சொல்லையும் வேற்றுமை என்பர் பிரயோக விவேக நூலார். உருபேற்றதனையும், உருபையும், உருபு நோக்கி வந்ததனையும் வேற்றுமை என்பர் இலக்கணக்கொத்து ஆசிரியர்.

கிளவியாக்கத்திற்குப்பின் வேற்றுமையியல் வைத்திருப்பதுபற்றி உரையாசிரியர்கள் கொள்ளும் கருத்து பல திறத்தன. அவை வருமாறு :-

(க) இளம்பூரணர்:- நான்கு சொற்களுக்கும் உரிய பொதுவிலக்கணத்தைக்கிளவியாக்கத்துள் உணர்த்திய ஆசிரியர், அடுத்து அந்நால் வகைச் சொற்களில் முதற்கண்ணதாயிருக்கும் பெயரது சிறப்பிலக்கணத்தைச் சொல்ல வேண்டும். அங்ஙனம் பெயரது இலக்கணத்தைச் சொல்லுகின்றவர் இயைபுபட்டமையால் வேற்றுமையிலக்கணத்தையும் ஈண்டே கூறினர் என்பர். எனவே இவர் கருத்தின்படி வேற்றுமையியல் தொடங்கி பெயரியல் வரையிலுமே பெயரிலக்கணம் கூறப்படுகின்றது என்பது தெளிவாகின்றது.

(உ) கல்லாடர்;- இவரும் இளம்பூரணர் கருத்தினரேனும், அதனை விளக்குமுறை அழகாக உள்ளது. அதுவருமாறு;— 'மேலோத்தினோடு இவ்வோத்தியைபு என்னையோ எனின், மேல் ஓத்தினுள் நானகு வகைப் பட்ட சொற்களையும் பொருள்கண் மேலாமாறு சொல்லிப் போந்தார். அவற்றுள் முதலது பெயர்ச்சொல்; அதற்கு இலக்கணம் உணர்த்திய எடுத்துக்கொண்டார் என்பது. யாங்ஙனம் உணர்த்தினரோ எனின், எல்லாப் பெயர்களும் எழுவாயாகிப் பயனிலை கோடலும், ஒருவழி எழுவாயாகாது வேறோர் நிலைமையவாய் நிற்றலும் உருபேற்றலும், ஒருவழிச் சில பெயர் உருபேலாது நிற்றலும், காலந்தோன்றாமை நிற்றலும், ஒருவழித் தொழிற் பொருளொடு கூறியக்கால் காலம் தோன்றி நிற்றலும், விளியேற்று நிற்றலும், சிலபெயர் விளியாது நிற்றலும் இன்னோரன்ன பிறவும் பெயரது இலக்கணமென உணர்த்தினரென்பது. பொது இலக்கணமேயன்றி உருபிலக்கணம் உணர்த்தினரால் எனின்;. அவ்வாராய்ச்சி பெயரது இலக்கணமாய்விடுதல் உடைமையின் அமையும் என்பது.'

(௩) சேனாவரையர்:- கிளவியாக்கத்துள் நான்கு சொற்களுக்கும் பொதுவிலக்கணமுணர்த்தினர் ஆசிரியர். அடுத்துப் பெயாது சிறப்பிலக்கணத்தை இவ்வியலுள் உணர்த்தல் வேண்டும். அதனையுணர்த்தாது வேற்றுமை இலக்கணத்தை உணர்த்துதற்குக் காரணம் மூன்றாகும். (க) இவ்விடத்தில் வேற்றுமை இலக்கணம் உணர்த்தவில்லையெனின் வேறுயாண்டுமுணர்த்துதற்கு இடனில்லாது போகின்றது. (உ) வேற்றுமையாவது உருபும், உருபேற்ற பெயருமாதலின் இதுவும் கிளவியாக்கம் போன்று பொதுவிலக்கணமாகவே உள்ளது. கிளவியாக்கம் நால்வகைச் சொற்களுக்கும் பொதுவிலக்கணம் கூறுகின்றது. வேற்றுமையுருபு இடைச்சொல் ஆதலானும் அதனையேற்பது பெயராதலானும், இவ்வேற்றுமையியலும் பெயர்ச்சொல், இடைச்சொல் ஆகிய இரண்டின் பொதுவிலக்கணமாகின்றது. (௩) பெயரதிலக்கணங்களில் உருபேற்றலுமொன்று. அவ்வுருபின் இலக்கணத்தை முன்னர் உணர்த்தி,

இவ்விலக்கணங்களையுடைய உருபினையே பெயர் ஏற்று வரும் எனப் பின்னர்க்கூறின், முறையாகவும் தெளிவாகவும் இருக்கும். ஆதலின் கிளவியாக்கத்தின் பின் இவ்வியல் வைக்கப்பட்டதென்பது.

(௪) நச்சினார்க்கினியர்:- இவர் இரு காரணம் கூறுவர். (௧) வேற்றுமையாவது பெயரும் ஒருசார்வினைச் சொல்லும் இடைச் சொல்லும் உரிச்சொல்லும் ஆகும். எனவே இதுவும் நால்வகைச் சொற்களுக்குமுரிய பொதுவிலக்கணமாதலின் கிளவியாக்கத்தின் பின் வைக்கப் பட்டதென்பர். (௨) பெயரது பொதுவிலக்கணமாகிய பயனிலை கோடல், உருபேற்றல், காலந்தோன்றாமை ஆகிய மூவிலக்கணமும் கூறுதலின், நால்வகைச் சொற்களுக்குமுரிய பொதுவிலக்கணம் கூறிய கிளவியாக்கத்தை அடுத்துப் பெயரது பொதுவிலக்கணமுணர்த்து மிவ்வியலை அதன்பின் வைத்தார் என்பது.

(௫) தெய்வச்சிலையார் :- அவ்வழி இலக்கணத்தைக் கிளவியாக் கத்துட் கூறிய ஆ சி ரி ய ர், வேற்றுமையிலக்கணத்தை இவ்வியலிற் கூறினார் என்பர்.

இளம்பூரணர் கருத்தைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுப்பர். (௧) இவ்வியல் பெயரிலக்கணமே சொல்ல வந்ததாயின் பெயரதிலக்கணமாய உருபேற்றல், பயனிலை கோடல், காலந்தோன்றாமை ஆகிய மூன்று இலக்கணங்களையுமே முதன்முதல் உணர்த்த வேண்டும். அடுத்து இயைபுபட்ட காரணத்தால் வேற்றுமை இலக்கணமுணர்த்தினாராயின், வேற்றுமை இலக்கணத்தை இடையில் உணர்த்திப் பின்னும் பெயரதிலக்கணமே உணர்த்தி (வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல், விளிமரபு, பெயரியல் ஆகிய) இந்நான்கியல்களையும் பெயரியல் என ஓரியலாகவே அமைத்திருக்க வேண்டும். ஆனால் தொல்காப்பியரோ இவ்வியலில் 'வேற்றுமை தாமே ஏழென மொழிப' என வேற்றுமையிலக்கணத்தையே முன்னர் உணர்த்தி, எழுவாய் வேற்றுமை பயனிலை கொண்டு முடியும் எனக் கூறுமுகமாகப் பெயர்கள், பயனிலை கொள்ளுமென்பதையும், உருபுகள் பெயர்களின் இறுதியில் வரும் எனக்கூறும் முகமாகப் பெயர்கள் உருபேற்கும் என்பதையும் உய்த்துணர வைத்துள்ளனரேயன்றிப் பெயரதிலக்கணத்தைச் சிறப்பாக எடுத்துக்கூறினாரல்லர். அன்றியும் இவ்விரு இலக்கணங்களும் இடையே உய்த்துணரும் முகமாகப் பெறப்பட்டனவேயன்றிப், பெயருக்குரிய தலைமையே ஈண்டுக் கொடுக்கப்படவில்லை. அதற்கு மாறாக, வேற்றுமைக்கே தலைமை கொடுத்து இவ்வியலை 'வேற்றுமையியல்' என்றும், வேற்றுமை மயக்கம் உணர்த்த வரும் அடுத்த இயலை 'வேற்றுமை மயங்கியல்' என்றும், சிறப்பில்லாத விளிவேற்றுமை உணர்த்தும் இயலை 'விளிமரபு'என்றும் கூறிப் பெயரதிலக்கணமுணர்த்தும் இயலுக்குப் 'பெயரிய'லென இம்மூன்றற்கும் வேறாகப் பெயரும் கொடுத்து அமைத்துள்ளார் ஆசிரியர். ஆதலால், இயைபுபட்டமையான் வேற்றுமையிலக்கணம் உணர்த்தினர் என்பதைக் காட்டிலும், இயைபுபட்டமையான் பெயரிலக்கணமும் உய்த்துணர வைக்க முயன்றார் ஆசிரியர் எனக்கூறுவதே பொருத்தமாகும். (௨) பெயரியலில் முதற்கண் உள்ள ஐந்து நூற்பாக்களும், நான்கு சொற்களுக்குமுரிய பொதுவிலக்கணம் கூறுவன. இளம்பூரணர் கருத்தின்படி இவ்வியலிலிருந்தே பெயரிலக்கணமுணர்த்தப்படுமாயின், இப்பொதுவிலக்கணத்தைப் பெயரிலக்கணம் கூறும் இவ்வியலின் முதற்

கண் வைத்திருக்க வேண்டுமேயன்றி இடையில் வைத்தல் பொருந்தாது. ஆதலின் இயைபுபட்டமையான் வேற்றுமையிலக்கணமுணர்த்தினர் என்ற கருத்துச் சிறிதும் பொருந்தாதாம்.

அங்ஙனமாயின் இவ்வளவு தெளிவாக வேற்றுமையிலக்கணமுணர்த்தும் இயல்களைப் பெயரிலக்கணம் உணர்த்திற்று என இளம்பூரணர் கூறுவதற்குக் காரணந்தான் என்னையெனிற் கூறுதும். இவ்வியலில், 'பெயர்நிலைக்கிளவி காலந்தோன்றா தொழில்நிலை யொட்டும் ஒன்றலங் கடையே' என்ற நூற்பாவுளது. இது வேற்றுமை இலக்கணம் உணர்த்தவந்ததன்று. பெயரிலக்கணமே உணர்த்தவந்தது. ஆயினும் ஆசிரியர் இவ்வியலில் இதனை வைத்துள்ளார். இது கருதியே இவ்வியல் முதல், பெயர் இலக்கணமே உணர்த்த வந்தது என இளம்பூரணர் கருதினர்.

இதற்குச் சேனாவரையர் தரும் காரணம்:— பெயரிலக்கணம் மூன்று: (க) பயனிலைகோடல் (உ) உருபேற்றல் (ங) காலந்தோன்றாமை. இம்மூன்றனுள் முன்னைய இரண்டும் வேற்றுமை இலக்கணம் கூறுமுகமாகப் பெயரதிலக்கணமாகப் பெறப்பட்டன. எஞ்சிய இலக்கணம் காலந் தோன்றாமையாகிய ஒன்றுமேயாதலின், இயைபுபட்டமையான் அதனையும் ஈண்டே கூறினர் என்பர் சேனாவரையர். பெயரிலக்கணமுணர்த்த வந்த ஆசிரியர், அவ்விலக்கணங்களுள் உருபேற்றலும் ஒன்றாகலின் அவ்வியைபு பற்றி இம்மூன்றியல்களையுமே (வேற்றுமை இயல், வேற்றுமைமயங்கில், விளிமரபு) கூறினார் என்றுகூறும் இளம்பூரணர் கருத்தைக் காட்டிலும், இவ்வொரு நூற்பாவை இயைபு பட்டமையான் ஈண்டுக் கூறினார் என்று கூறும் சேனாவரையர் கருத்து எத்துணையோ சிறப்புடையதாகும். இவர் கருத்தும், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் கூறும் கருத்துக்களும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவே யாம்.

பெயர்ப் பொருளை ஐ முதலிய உருபுகள் வேற்றுமை செய்தலின், அவற்றை வேற்றுமை என்றல் பொருந்தும். எழுவாய் வேற்றுமை பெயர்ப்பொருளாகவே இருத்தலின், அதனை வேற்றுமை என்றல் எங்ஙனம் பொருந்தும்? என்ற வினாவிற்குச் சேனாவரையர் மிக அருமையாக விடை தருகின்றார். (க) ஏனைய உருபுகளெல்லாம் பெயர்ப் பொருளை வேறுபடுத்தல் போல இவ்வெழுவாயும் ஏனைய செயப்படு பொருள் முதலியவற்றினின்றும் தான்வேறுபடுதலின் வேற்றுமையாயிற்றென்பது. (உ) அன்றி, வேற்றுமை என்ற பெயர் எழுவாய்க்கு ஒவ்வாதேனும் ஏனைய ஆறற்கும் இப்பெயர் ஒத்தலின், பன்மை பற்றிய வழக்காய் அமைந்ததெனினும் ஒக்கும் என்பது.

சங்கரநமச்சிவாயரும் 'வினைமுதற் பொருண்மையாகத் தன்னைத் தானே வேற்றுமை செய்தலின் எழுவாயும், வேற்றுமையாயிற்றென்பர்' (நன்-உகரு). எ-டு:— வாழை என்ற சொல் பொதுவாக நிற்கும் பெயர்ப் பொருளாம். அதனையே 'வீழ்ந்தது' என்ற வினையொடு சேர்ப்பின் வாழை வினைமுதலாகின்றது. அதனையே 'வெட்டினான்' என்ற சொல்லொடு சேர்ப்பின் அவ்வாழை செயப்படு பொருளாகின்றது. இங்ஙனம் எழுவாயும் தன்னைத் தானே வேற்றுமை செய்தலைக் காண்க.

கூங-ஆம் நூற்பா: வேற்றுமை ஏழென்பர் பிரகற்பதி, எட்டென்பர் அகத்தியர். தொல்காப்பியர் இவர் கருத்தினரேயாவர். ஆதலின் இந்நூற்பா வுரையில் வேற்றுமை தாமே 'ஏழென மொழிப' எனப் பிறர்

மதம் கூறி இச்சூத்திரத்தால் தந்துணி புரைத்தார் என்றனர் சேனு வரையர். இளம்பூரணரும் கல்லாடரும் முதல் ஏழு வேற்றுமையும் சிறப்புடையன; இவ்விளி வேற்றுமை சிறப்பிலது ஆதலின் வேறு கூறி னர் என்பர்

௬௪ஆம் நூற்பா: இந் நூற்பாவிற்குப்பயன், வேற்றுமைகளின் பெயரும், அவற்றின் முறையும் உணர்த்துவதேயாமென்பது. ஆனல் தெய்வச்சிலையார் வேற்றுமைக்குரிய உருபுகளையே கூறிற்றென்றும் அவை பெயர்களின் ஈற்றில் வருமென்றும் கூறி, இவையே இந்நூற்பா வின் பயன் என்பர்.

இவ்வுருபுகள் இம்முறையே வைத்தற்குரிய காரணத்தை நச்சினர்க் கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், சிவஞான முனிவர் ஆகிய நால் வரும் விளக்குவர்.

(க) நச்சினர்க்கினியர்: 'இதனை (பெயரை) முற்கூறியது என்னை? எனின், சாத்தன் குடத்தைக் கையால் வனைந்து கொற்றற்குக் கொடுத் தான் என வினைமுதல் நின்று, ஏனையவற்றை நிகழ்த்துதல் வேண்டுத லின் அவ்வினை முதலாகிய எழுவாயை முற்கூறினர். அன்றியும், மேல் இரண்டாவது மூன்றாவது என்று ஆளுமிடத்து இதனை முதல் வேற் றுமை என்றே ஆளவேண்டுதலின்.'

(உ) தெய்வச்சிலையார்: 'அஃதற்றாக, பெயரை முதல் வேற்றுமை என்னது, எட்டு வேற்றுமையுள்ளும் யாதானும் ஒன்றை முதல் வேற் றுமை எனினும் அமையும் எனின்; ஒருவன் ஒன்றை ஒன்றானே யியற்றி ஒருவற்குக் கொடுப்ப, அவன் அதனை அவனினின்றும் தனது ஆக்கி ஓரி டத்து வைத்தான் கொற்றா என்ற வழி, செய்கின்றான் முதல் வேற் றுமையாகி இம்முறையே கிடத்தலின் அமையாது என்க. யாதானும் ஒரு தொழிலும் செய்வான் உள்வழியல்லது நிகழாமையின் அது செய்து முடிக்கும் கருத்தன்முன் வைக்கப்பட்டான். அவன் ஒருபொருளைச் செய்து முடிக்குங்கால் செய்யத் தகுவன இது எனக் குறிக்க வேண்டுத லின் செயப்படு பொருள் இரண்டாவதாயிற்று. அவ்வாறு அப்பொரு ளைச் செய்து முடிக்குங்கால் அதற்காங்கருவி தேடுமாதலின் அக்கருவி மூன்றாவதாயிற்று. அவ்வாறு, செய்து முடித்த பொருளைத் தான்பயன் கோடலேயன்றிப் பிறர்க்கும் கொடுக்கும்; ஆதலின் அதனை ஏற்று நிற் பது நான்காவதாயிற்று. அவ்வாறு கொடுப்புழி அவன் கையினின்றும் அப்பொருள் நீங்கி நிற்பது ஐந்தாவதாயிற்று. அவ்வாறு நீங்கின பொருளைத் தனதென்று கிழமைசெய்தலின் அக்கிழமை ஆறாவதா யிற்று. ஈண்டுக் கூறப்பட்ட எல்லாவற்றிற்கும் இடமும் காலமும் பொதுவாகி நிற்றலின் அவை ஏழாவதாயின. இவையிற்றோடு ஒத்த வியல்பிற்று அன்றி எதிர்முகம் ஆக்குதற்பொருட்டு ஆகலின், விளி என்பது எல்லாவற்றினும் பிற்கூறப்பட்டது.'

(௩) கல்லாடர்: 'எழுவாய் வேற்றுமை ஏனைவேற்றுமைக்கும் சார்பாதல் நோக்கி முன்வைக்கப்பட்டது. விளி வேற்றுமை எல்லா வற்றினுஞ் சிறப்பின்மை நோக்கிப் பின்வைக்கப்பட்டது. ஐயினை இரண்டாவதென்றும், ஒடுவினை மூன்றாவதென்றும், இவ்வாறே இவை கூறுதற்குக் காரணம் இல்லையேல் வேண்டியவாறு கூறினும் அமையு மெனின், அமையாது; முன்னூலுள் ஓதிய முறை அது வென்பது.'

(ச) சிவஞான முனிவர் : இவை இம்முறையாவதற்குரிய காரணத்தை நன்னூல் உ௬௬ முதல் ௩௦௧ வரையுள்ள நூற்பாக்களில் விளக்குவர். அதனை ஆண்டுக் காண்க.

௬௫ஆம் நூற்பா : பிறிதொன்றனொடு தொகாது - முடிக்குஞ் சொல்லொடு சேராது. நன்னூலாரும் 'எழுவாய் வேற்றுமை திரிபில் பெயரே' என விளக்குவர். பிறிதொன்றனொடு தொகாது என்பதற்குப் பிறிதொரு பெயர்ச் சொல்லொடு சேர்ந்து நில்லாது எனப்பொருள் காண்பர் திரு பூவராகம் பிள்ளையவர்கள். நச்சினார்க்கினியர் உரையில் 'உருபும் விளியும் ஏலாது இருக்கும் நிலை' என்றே இருத்தலின் பிறிதொன்றனொடு தொகாது' என்ற தொடர் சேனாவரையத்திலும் இல்லாதிருப்பின் நன்று என்பர் அவர். எனினும் அது பொருந்தாது.

'பெயர் தோன்று நிலை' என்பதற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர், கல்லாடர், ஆகிய மூவரும், அடுத்த நூற்பாவில் கூறியிருக்கும் அறுவகைப் பயனிலைகளையும் பெயர்கள் தன்கண் தோன்ற நிற்கும் நிலை எனப் பொருள் கூறினர். தெய்வச்சிலையார் வேறு விதமாக விளக்குவர். அது வருமாறு :- 'அஃதேல் பெயரென அமையும், 'தோன்றும் நிலை என்றதனாற் பயன் என்னையெனின், பெயர் கண்டுழியெல்லாம் வேற்றுமையென்று கொள்ளற்க என்பது அறிவித்தற்கெனக் கொள்க. அஃது யாதோ எனின், ஆயன் சாத்தன் வந்தான் என்ற வழி, ஆயன் என்பது சாத்தற்கு அடையாகி நிற்றலானும், வருதற்றொழில் சாத்தனொடு முடிதலானும், இருபெயரும் ஒருபொருட்கண் வருதலின் இரண்டினையும் வேற்றுமை எனப்படாது ஆகலானும் இறுதி நின்றதே வேற்றுமை எனப்படுவது என்று கொள்க.'

௬௬ ஆம் நூற்பா : ஆ இல்லை; ஆ அல்ல என்பனவற்றுள் இல்லை, அல்ல என்பன வினைக்குறிப்பாதலை உ௨௦-ம் நூற்பாவால் அறிக. ஒரு தொடர்மொழியில் முடிக்குஞ் சொல்லாக வருவது எதுவோ, அதில் தான் அத்தொடர் மொழியின் பொருள் விளங்கி நிற்கும். ஆதலாற்றான் அம்முடிக்குஞ் சொல்லைப் பயனிலை என்றார். பயனை நிலை பெறுத்துவது பயனிலையாயிற்று.

பொருள் வேறு; பொருண்மை வேறு. முன்னையது பொருளைக் குறிக்கும். பின்னையது பொருளின் தன்மையைக் குறிக்கும். எ-டு: ஆ என்பது பொருளாகும். ஆவுண்டு என்பது பொருண்மையாகும். ஆவுண்டு என்பது தனித்த ஒரு பசுவைக் குறிக்காது, பொதுவாக ஆவினது சாதித் தன்மையைக் குறித்தது. தனித்த ஒருபொருள் என்றும் அழியும். ஆனால் அப்பொருளினது தன்மையோ என்றும் அழியாது. இதனையே 'பொய்ப் பொருட்கும் மெய்ப்பொருட்கும் வேற்றுமை யுண்மையின் அவ்வுண்மையைப் பொருண்மை என்றார்' என்று விளக்கினர் சேனாவரையர்.

வியங்கொள வருதல் : ஏவலினைக் கொள்ள வருதல். ஆ செல்க என்புழிச் செல்க என்னும் ஏவலை, ஆ கொண்டு நிற்றலின் அது வியங்கோள் வருதலாயிற்று. 'அன்றி' என்பது அவ்வாறும் எனப்பொருள் படுதலின் அது சுட்டாயிற்று. இங்ஙனமே ௧௩௭, ச௨௫, ச௨௬-ஆம் நூற்பாக்களிலும் வருதல் காண்க.

௬௭ ஆம் நூற்பா : பெயரொடு பெயர் சேரினும் தொகையாம். பெயரொடு வினை சேரினும் தொகையாம். இவற்றுள் பெயரும் பெய

ரும் சேர்ந்த பெயர்த் தொகைகள் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொண்டு முடியும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். எ-டு: யானைக்கோடு கிடந்தது என்புழி, யானைக் கோடு என்பது பெயர்த் தொகையாய் அது எழுவாய் வேற்றுமையாயிற்று. அது, பின் கிடந்தது என்னும் பயனிலை கொண்டு முடிந்தது

'பெயரினாகிய தொகையும்' என்ற உம்மையால் 'வினையினாகிய தொகையும்' உள என்பதும், அது நிலங்கடந்தான் என்றாற்போலப் பெயரும் வினையும் சேர்ந்த தொகையைக் குறிக்குமென்பதும் சேனாவரையர் கருத்தாகும். 'அவ்வுமுரிய அப்பாலான' என்ற தொடரில் 'அப்பாலான' என்ற சுட்டு பெயரினாகிய் தொகைகள் எழுவாய் வேற்றுமையாய் வரும்; அவை பயனிலை கொண்டு முடியும் என்ற இரு கருத்துக்களையும் தழுவிற்றென்பது சேனாவரையர் கருத்தாகும். எனவே 'அப்பாலான' என்ற சுட்டு ௬௫, ௬௬ ஆகிய இரு நூற்பாக்களின் பொருண்மையையும் தழுவும் என்பது இவருக்குக் கருத்தாயிற்று. நச்சினார்க்கினியரும் இக்கருத்தினரே.

'பெயரினாகிய தொகையும்' என்பதில் உள்ள உம்மைக்கும், 'அப்பாலான' என்ற சுட்டிற்கும் பொருள்கொள்வதில் இளம்பூரணர் வேறுபடுவர் அவற்றைச் சேனாவரையர் மறுப்பர். உம்மைக்கு அவர் கூறும் பொருள் வருமாறு :- பெயரினாகிய தொகையும் என்ற உம்மையால் வினையினாகிய வினைத்தொகையும் தழுவப்பட்டது என்பது. வினையின் ஆகிய வினைத்தொகை எனவே வினைத்தொகைக்கு நிலைமொழி வினையென்பது இவருக்குக் கருத்தாயிற்று. கல்லாடரும் இக்கருத்தினரே.

சேனாவரையர் மறுப்பு :— (க) உண்டான், கொன்றான் என்ற தொடக்கத்தனவான வினைச்சொற்களுக்கும், உண்டல் கொல்லல் போன்ற வினைப்பெயர்களுக்கும் முதனிலையாக இருக்கும் உண், கொல் என்பனவெல்லாம் பெயராகுமேயன்றி வினையாகா. இங்ஙனம் முதனிலைகளாக இருப்பனவற்றை முதனிலைத் தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்தாகும். எனவே கொல்யானை என்ற வினைத்தொகையில் கொல் என்ற நிலைமொழி பெயராகுமேயன்றி வினையாகாது. எனவே வினையின் ஆயது (வினைச்சொல்லை நிலைமொழியாகக் கொண்டியங்குவது) வினைத்தொகை என்ற கருத்துப் பொருந்துவதன்றாம். (உ) ஆகுபெயரிலக்கணமுணர்த்தும் சூத்திரத்து 'இருபெயரொட்டும்' எனவரும் தொடர் வினைத்தொகையையும் குறிப்பதாகும். வினைத்தொகைக்கு நிலைமொழி வினையென்பதாயின் அதனை இருபெயரொட்டென்றல் பொருந்தாதாம்,

எனவே வினையின் ஆகிய தொகையெனின், நிலங்கடந்தான் என்பதுபோல வருமொழி வினையாக நிலைமொழி பெயராக வந்து தொக்க் தொகை எனப் பொருள்கொள்ள வேண்டுமேயன்றி, நிலைமொழி வினையாக வருமொழி பெயராக வரும் தொகையென்றல் கூடாது என்பதாம். இங்ஙனம் கொள்ளவே வினைத்தொகைக்கு நிலைமொழி வினையென்றெலும் கூடாதாயிற்று.

இனி, 'அப்பாலான' என்ற சுட்டிற்கு இளம்பூரணர் கூறும் பொருள் வருமாறு :— 'அப்பாலான' என்ற சுட்டு பயனிலையொடு முடியும் எனக்கூறிய இதன் முன்னர்ச் சூத்திரத்தை மட்டுமே சுட்டும் என்பதாகும். ஆகவே தொகைச்சொற்கள் எல்லாம் பயனிலை

கொண்டு முடியும் என்பது மட்டுமே ஈண்டுக் கொள்ளப்பட வேண்டும் என்பது இவருக்குக் கருத்தாயிற்று. அங்ஙனமாயின் பெயரிறுதிய தொகை எழுவாய் வேற்றுமையாகும் என்ற கருத்து இவருக்கு இல்லையாலோவெனில்; அற்றன்று. 'எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய' என்ற நூற்பாவான், இத்தொகைகளெல்லாம் எழுவாய் வேற்றுமையாகும் என்ற கருத்தை ஆசிரியர், பின்னர்க் கொள்கின்றாராகலின், ஈண்டுப்பயனிலை கொண்டு முடியும் என்ற ஒன்றை மட்டுமே கொள்ளவேண்டும் என்பது இவர்தம் கருத்தாகும்.

சேனாவரையர் மறுப்பு :— (க) 'எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய' என்ற நூற்பாவிற்கு, எல்லாத் தொகைச்சொற்களும் ஒரு சொல் நடையவாம் (ஒரு மொழிபோல் நடப்பனவாம்) என்பது கருத்தாகுமன்றித் தொகைச்சொற்களெல்லாம் எழுவாய் வேற்றுமையவாம் என்ற கருத்துப் பெறப்படுதற்குச் சிறிதும் இடனில்லை. (உ) அன்றி, அந்நூற்பாவிற்குத் தொகைச் சொற்களெல்லாம் எழுவாய் வேற்றுமையாகும் என்னும் கருத்தே உண்டெனினும், இந்நூற்பாவிற்கு முந்திய நூற்பாவில் 'அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையே' என்று கூறியுள்ளதால், பயனிலை கோடல் அத்தொகைக்கும் எய்துமாகலின், இந்நூற்பாவில் 'அப்பாலான' என மீண்டும் கூறுதல் கூறியது கூறிற்றாய் முடியும். (ங) பெயரிறுதிய தொகைகளெல்லாம் எழுவாய் வேற்றுமையாயும், பயனிலை கொண்டும் முடிதல் பற்றியே அவ்விரு இலக்கணங்களையும் கூறும் ௬௫, ௬௬ ஆம் நூற்பாக்களை யடுத்து ஆசிரியர் இதனை வைத்தார் என்பது.

'பெயரிறுதிய தொகையும் உள', 'அவையும் எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொண்டு முடியும்' என இரு தொடராக நூற்பா யாக்காமல், 'பெயரிறுதிய தொகையும் எழுவாய் வேற்றுமையாம்' என ஒரே தொடராக யாத்திருக்கலாமன்றோ? அங்ஙனம் கூறாதது ஏனெனில், இங்ஙனம் ஒரே தொடராகக் கூறின், பெயரொடு பெயர் சேர்ந்த ஒன்றே தொகையாகும், பெயரொடு வினையும் சேர்ந்ததும் தொகையாம் என்னும் கருத்துப் பெறப்படாதாம். ஆதலின் ஆசிரியர் 'பெயரிறுதிய தொகையுமாருளவே' எனச் சூத்திரஞ் செய்து, அவ்வும்மையால் வினையிறுதிய தொகையும் உண்டென அதனைத் தழுவுவாராயினர்.

'பெயரிறுதிய தொகை' என்பதில் பெயரும் பெயரும் தொக்க தொகைஎன ஆசிரியர் பொதுவகையாகக் கூறினும் 'பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்' என்பதனால் பலபொருள் குறித்த பெயரே கொள்ளப்படும் எனக்கூறி யானை, குதிரை உள என எடுத்துக் காட்டுக்கள் தருவர் தெய்வச்சிலையார்.

யானைக்கோடு கிடந்ததென்ற தொகை யானையினது கோடு கிடந்தது எனப் பொருள்படுதலின் யானை, கோடு என்பன ஒரு பொருளேயாம். யானை, குதிரை உள என்ற தொடரில் யானையும் குதிரையும் வேறுவேறு பொருளனவேயாம். இங்ஙனம் பலபொருள் குறித்துவரும் பெயர்த் தொகைகளே, இங்குக் குறிக்கப்பட்டதென்பர் தெய்வச்சிலையார். யானைக்கோடு கிடந்ததென ஒரு பெயரே பயனிலைகொள்ளுமெனின் கோடு என்பதே பயனிலைகொள்ள யானை என்பது பயனிலை கொள்ளாது நிற்றலின் அது காட்டலாகாது என்பர் தெய்வச்சிலையார். இந்நுண்மை பிறருரையில் காணாதது.

சூஅ ஆம் நூற்பா: 'பயனிலைக்கு இருநிலைமையும் ஓதாது' என்ற தொடரில், இருநிலைமையும் என்பது பயனிலை தோன்றி நிற்றலையும், தோன்றாது நிற்றலையும் குறிக்கும். எழுவாய் தோன்றியும் வரலாம், தோன்றாமலும் வரலாம் என அதற்கு இருநிலையும் ஓதினாற்போலப் பயனிலைக்கும் ஓதான்மையின், பயனிலை வெளிப்பட்டே நிற்குமென்பர் சேனாவரையர்.

பெயர் தோன்றாது வருதலைத் 'தோன்றா எழுவாய்' என்பர். எல்லாப் பெயர்களும் வெளிப்படையாகத் தோன்றி நின்று பயனிலை கோடல் பெரும்பான்மையாம். எனவே சிறுபான்மை பெயர்கள் தோன்றாது நின்று, பயனிலை மட்டும் வருவது உண்டு என்பது பெறப் படும் என்பர் சேனாவரையர். தெய்வச்சிலையாருக்கும் இதுவே கருத்தாம்.

இளம்பூரணர் கருத்து:—பெயரது இலக்கணம் மூன்று. அவற்றுள் எல்லாப் பெயர்களும் பயனிலை கொண்டு வரும் என்பதையே இந் நூற்பா வற்புறுத்துகின்றது. இங்ஙனம் பயனிலை கொள்ளலை வற் புறுத்தவே, உருபேற்றலாகிய இலக்கணம் அவ்வளவு சிறப்புடைத் தன்றாய்ச், சில பெயர்கள் உருபேற்றும், சில பெயர்கள் உருபேலா தும் வரும் என்பது கருத்தாயிற்று என்பது. கல்லாடரும் இக் கருத்தினரே.

அங்ஙனம் உருபேலாத பெயர்கள் அவ்வாய், நீயிர் என்பன. (இவ்விரு பெயர்களுள் அவ்வாய் என்ற பெயர் இளம்பூரணர் உரை யில் காணப்படவில்லை. எனினும் சேனாவரையர் கூற்றிலிருந்து அவ் வாய் என்ற சொல்லும் இளம்பூரணர் உரையில் இருந்திருக்க வேண்டுமெனத் தெரிகிறது. இதனை நச்சினார்க்கினியர் உரையானும் அறியலாம்.)

இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) சாத்தன் அவ்வாய்க் கொண்டான் என்றவிடத்து அவ்வாய் என்பது அங்கு என்னும் பொருள்பட நிற்கும்பொழுது அது இடைச்சொல் லாகி விடுகின்றது. எனவே இது இளம்பூரணர் கூறுமாறு போல உருபேலாததே யன்றிப் பயனிலையும் ஏலாதாகின்றது. ஆதலின் இச் சொல்லை உருபு ஏற்காமைக்கு மட்டுமே காட்டல் பொருந்தாதாம்: (உ) நீயிர் என்பது நும்மின் திரிபா? அல்லது நும் என்பது நீயிர் என்பதன் திரிபா? என்பதைப் பற்றி ஆசிரியர் கருத்தறிதல் அரிதாக இருக்கின்றது. எழுத்ததிகாரத்தில் ௩உசு-ஆம் நூற்பாவில் நும் என்பதே நீயிர் எனத் திரிந்து நின்றதென்றனர். ஆனால் விரவுப் பெயர்களை விரித்துக் கூறுங்கால், முன்னும் பின்னும் இயற்பெயரை வைத்து 'எல்லாம், நீயிர், நீ எனக் கிளந்து' (சொல் -கஎ௪) என இதனை யும் இடைவைத்து ஒருங்கு கூறுகின்றார். இவ்விடத்தை நோக்கின் நீயிர் என்பதையும் இயற்பெயர் எனக்கருதினரோ எனத் தோன்று கின்றது. நீயிர் என்பதனை இயற்பெயராகக் கொள்ளினும், திரிந்த பெயராகக் கொள்ளினும் இளம்பூரணர் கூறுவதுபோல உருபேலா தென்றற்குக் காரணமில்லை என்பது சேனாவரையர் கருத்தாகும். அம்மறுப்பு வருமாறு:- நீயிர் என்பதைத் திரிந்த பெயராகக் கொண்டு உருபேலாது என்றிருப்பாராயின், நீ என்பதன் திரிபாகிய நின் என்னும் திரிந்த பெயரையும் பெயராகக்கொண்டு பயனிலை கொள்ளாதென்று கூறல் வேண்டும். இங்ஙனம் கொள்ளின் எல்லாப்

பெயர்களும் பயனிலை கொண்டு வருமென இளம்பூரணர் கூறிய கருத்திற்கு இது மாறுக நிற்கின்றது. நீயிர் என்பதை இயற்பெயராகக் கொண்டு உருபேலாதென்றிருப்பாராயின், அது நும் எனத் திரிந்து உருபேற்பதால், உருபேலாதென்றல் எங்ஙனம்? ஆதலின் அதுவும் பொருந்தாது என்றனர்.

நச்சினார்க்கினியர், இளம்பூரணரும் சேனவரையரும் தரும் இரு கருத்துக்களையுமே தன் கருத்தாக ஏற்றனர் பழைய உரையாசிரியர் இந்நூற்பாவிற்கு உரிய கருத்தை விளக்கினரேயன்றி, இதனாற்பெறப் படும் கருத்தாக ஒன்றையும் கூறிற்றிலர்.

௬௯ ஆம் நூற்பா: வினைச்சொல்லிலுள்ள பகுதி நீங்கலாக ஏனைய இடைநிலை, சாரியை, விகுதிகள் எல்லாம இடைச்சொற்களே. இவை போன்றே பெயரின் இறுதியில் வரும் வேற்றுமை உருபுகளும் இடைச் சொற்களே. இவற்றுள் முன்னைய, வினைச்சொல்லின் அகத்து உறுப்புக் களாக நிற்பன. இவ்வேற்றுமை யுருபுகளோ பெயரின் புறத்தே தன் நிலை திரியாது நிற்பன. ஆதலின் இவற்றை 'நிலை திரியாது' என்றார் ஆசிரியர். வேற்றுமை உருபுகள் எல்லாம் இடைச்சொற்களே. இடைச் சொற்கள் ஈறுதிரியுமெனப் பின்னர்க் (உ௫௯) கூறப்படுகின்றது. ஆதலின் இவையும் திரியுமோ என்றார்க்குத் திரியா என விளக்குவார் 'நிலைதிரியாது' என்றார். அன்றியும் இவ்வுருபுகள் செய்யுட்கண் திரியுமெனப் பின்னர்க் (௧0அ) கூறலின், வழக்கின்கண்ணும் திரியுமோ என்றார்க்கு அவை திரியா என்பார் 'நிலைதிரியாது' என்றார் என்பர் இளம் பூரணர்.

'உருபுகள் பெயர்களின் இறுதியில் வரும்' என்பதையே இந்நூற்பாவிற்குக் கருத்தாகக் கொண்டனர் இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்கள் அனைவரும். எனினும் தெய்வச்சிலையார் மட்டும் ௬௪ஆம் நூற்பாவிலேயே இக்கருத்தினைக்கொண்டு, இந்நூற்பாவிற்கு வேறு உரை கூறுவர். அவர் வடமொழிக்கண் எழுவாயாகிய பெயர் ஈறு கெட்டு உருபேற்கும்; அவ்வாறன்றித் தமிழ்மொழிக்கண் ஈறுகிரியாது எழுவாயாகிய பெயரின்மேலே உருபுநிற்கும் என்பதை அறிவித்தற்காக இந்நூற்பா எழுந்ததென்பர்'.

எ0 ஆம் நூற்பா: தொழில் நிலை ஒட்டும்-வினைச்சொல்லை ஒக்கும். உண்டான், தில்லுன் என்பன வினைச்சொல் போன்றிருப்பினும், படுத்துச் சொல்லப்படுதலின் இவை வினையாலணையும் பெயராயின. பெயர், தொழில் என்னுது பெயர்நிலை, தொழில்நிலை எனக் கூறுதலின் பெயராகிய நிலையையுடையது, தொழிலாகிய நிலையையுடையது எனப் பொருள்படும். எனவே இவை அன்மொழித்தொகை ஆயிற்று.

எ௧ ஆம் நூற்பா: வினை, வினைக்குறிப்பு இவ்விரண்டின் காரணமாக வருவது எதுவோ, அதுவே இரண்டாம் வேற்றுமைக்குப் பொருள் என்று ஆசிரியர் கூறினரேனும், செயப்படுபொருளே அதன் பொருளாகக்கொள்ளப்படும். வினை-தொழில். முதல்-காரணம். எனவே வினை, வினைகுறிப்பாகிய அவ்விரண்டின் காரணமாகத் தோன்றுவது என்பது தொழிற்குக் காரணமாக உள்ளதையே குறிப்பதாகும். தொழிற்குக் காரணம் வினை முதலிய எட்டும் இலப்பினும் (௧௧௨), இரண்டாம் வேற்றுமைக்கேற்பன செயப்படுபொருளே ஆதலானும், தொழிற்குக் காரணமாய எட்டனுள் இதுவும் ஒன்றுகலானும் செயப்படுபொருளே கொள்ளப்பட்டது.

ஒருவன் யாதானும் ஒரு தொழில் செய்யின், அதன் பயனை எது உறுகின்றதோ அதுவே செயப்படுபொருளாம். குடத்தை வனைந்தான் என்றவிடத்து வனைந்தவன் குயவனாகும். அவனது தொழில் வனைதலாகும். அத்தொழிலின் பயனைப்பெற்றது குடமாகும். எனவே குடம் என்பது செயப்படுபொருளாயிற்று. இது தெரிநிலை வினையின் காரணமாக வந்த செயப்படுபொருளாம். குழையையுடையன் என்பதோ, குறிப்பு வினையின் காரணமாக வந்த செயப்படுபொருள் ஆகும். செயப்படுபொருளின் இலக்கணம் தெரிநிலைக்குக் காட்டப்பட்ட எடுத்துக் காட்டிற்குப் பொருந்துவதுபோல, இக்குறிப்பு வினைக்குக் காட்டியிருக்கும் இவ்வெடுத்துக்காட்டில் பொருந்தவில்லையே என வினவிக் கொண்டு, அதற்கும் சேனாவரையர் சமாதானம் கூறுகின்றார். குறிப்பு வினையும் காலமொடு தோன்றும் என்பதும், அதுவும் தொழிற்பயனை உறும் என்பதும் ஆசிரியர் துணிபாகலின் அதுவும் செயப்படுபொருளே யாகுமென்பர். சங்கரநமச்சிவாயர், குழையையுடையவன் என்பதில் அகனை உடைமையாகிய வினையின்பயனைக் குழை பெறுதலின், குறிப்பு வினையால் வரும் இதுவும் செயப்படுபொருள் ஆதற்கேற்றதாம் என்பர் (நன் – ௨௯௯).

இரண்டாம் வேற்றுமைக்குப் பொருள் செயப்படுபொருள் என்பதே கருத்தாயின் அங்ஙனமே கூறிவிடலாம். அவ்வாறன்றி வினை, வினைக்குறிப்பு ஆகிய இரண்டின் காரணமாகத் தோன்றுவது எதுவோ, அதுவே பொருளாக வரும் எனக் கூறுதற்குக் காரணம் என்னை? யெனின், செயப்படுபொருள் என்பது வினை, வினைக்குறிப்பு ஆகிய இரண்டின் காரணமாகத் தோன்றுமாதலானும், பொதுவாகச் செயப்படுபொருளே இவ்வேற்றுமைக்குப் பொருளாம் என்று கூறிவிடின், தெரிநிலை வினையினால் வரும் செயப்படுபொருளைக் கூறினரோ, அல்லது குறிப்பு வினையினால் வரும் செயப்படுபொருளைக் கூறினரோ என்று ஐயம் ஏற்படும் ஆதலானும், அவ்வையம் நீங்க வினை, வினைக்குறிப்பு ஆகிய இரண்டின் வாயிலாகவும் வரும் செயப்படுபொருளும் இதற்குப் பொருளாம் என ஆசிரியர் விளக்கமாகக் கூறினராம். இந்நுட்பமெல்லாம் இவருரையில் மட்டுமே கண்டு மகிழத்தக்கதாகும். தெய்வச்சிலையார் 'வினையே வினைக்குறிப்பு' என்பதற்குச் செயலும் செயப்படுபொருளும் என உரை கூறுவர்.

எ௨ ஆம் நூற்பா: இந்நூற்பாவில் கூறப்படுகின்ற 'இன்' என்பன வெல்லாம் புணர்ச்சி நோக்கி வந்தனவல்ல; எண்ணின்கண் வந்தன. நிலைமொழியும் வருமொழியுமாகிப் புணர்க்கப்படுங்கால் இடையிலே வருஞ்சாரியைகள் அவை எவ்வெத்திணைக்குரிய வென்பதைக் காட்டும். அச்சாரியைகளே புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்குதவுவனவாம். ஆனால் இங்குக் கூறப்படுகின்ற இன் என்பனவெல்லாம் அவ்வாறு வந்தன அல்ல. ஆதலின் 'எண்ணின்கண் வந்தன' என்றார்.

எ௩ ஆம் நூற்பா: முதல்—காரணம். 'பிறபொருளும் உளவேனும்' என்பது அடுத்த நூற்பாவில் கூறப்படும் உடனிகழ்ச்சி, ஏது முதலியவற்றைக் குறிக்கும்.

எ௪ ஆம் நூற்பா: வாயால் தக்கது வாய்ச்சி—இது தச்சர்கள் பயன்படுத்தும் கருவி. அதன்கண் வாய் என்பது செதுக்குதற்கேதுவாக இருக்கும் நுனியை. காணம்-பொன்; 'கையிலொன்றும் காண

மில்லை கழலடி தொழுது உய்யினல்லால்' எனவரும் சுந்தரர்தேவாரத்தும் இஃது இப்பொருளாதல் காணலாம்.

ஒப்பல் ஒப்புரையாவது—உவமை கூறத்தகாத தொன்றினை உவமை கூறுதலாம். 'பொன்னுக்கு இரும்பு உவமை கூறத்தகாதது போல, நின்னொடு பிறரையும் உவமை கூறத்தகாது' என்று கூறுதல் இதற்கு எடுத்துக்காட்டாம். 'விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல் கற்றாரோ டேனை யவர்' (குறள்-௪௱௰) என்பதும் ஒப்பல் ஒப்புரையாம்.

காரகம்-தொழிலை இயற்றுவிப்பது. ஞாபகம்-அறிவிப்பது. 'வாணிகத்தானாயினான்' என்புழி வாணிகத் தொழிலை இயற்றியதனால் இவ்வாக்கத்தைப் பெற்றான் என்பது கருத்தாகலின் இது ஞாபகஏதுவாயிற்று. 'முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது' என்புழி ஒலி முயற்சியிற் பிறத்தலான் அது நிலையாததாம் என அறிவிப்பதன் காரணமாக வருதலின் ஞாபக ஏதுவாயிற்று. 'அவையல பிறவின் அறிவது ஞாபகம்' எனப்பிறரும் கூறுதல் காண்க.

காரணம் மூன்று வகைப்படும். அவை முதல், துணை, நிமித்தம் என்பன. முதற் காரணமாவது காரியத்தோடு ஒற்றுமையுடையது. அதாவது காரணம் காரியமாகவே மாறிவிடுவதாம். துணைக் காரணம் என்பது காரியம் முடியும்வரை துணையாக நிற்பதாம். நிமித்த காரணம் என்பது இம்முதல், துணைக் காரணங்களைக் கருவியாகக் கொண்டு அத்தொழில் முடிதற்கு நிமித்தமாக நிற்பதாம். குடத்தை வனைந்தான் என்புழி மண் முதற்காரணம், தண்ட சக்கரம் முதலியன துணைக் காரணம், குயவன் நிமித்த காரணம். இதனைச் சிவஞான சித்தியார்,

'காரியங் காரணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்
பாரின்மண் திரிகை பண்ணு மவன்முதல் துணைநிமித்தம்
தேரின்மண் மாயையாகத் திரிகைதன் சத்தி யாக
ஆரியன் குலால னாய்நின் றாக்குவன் அகிலமெல்லாம்'

என நன்கு விளக்கல் காண்க.

'அதனினியறல்' என்பதற்கு மண்ணானியன்றகுடம் என்பதையும், 'இன்னான் ஏது' என்பதற்கு முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாதென்பதையும் காட்டினர் சேனாவரையர். எனவே சேனாவரையர் அதனினியறல் என்பதற்கு முதற்காரணமாக வரும் காரியத்தையும், இன்னான் ஏது என்பதற்கு இன்னும், ஆனும் காரணமாக வருகின்ற ஞாபக ஏதுவையும் பொருளாகக் கருதினர் எனத் தெரிகிறது. ஆனால் இளம்பூரணர் 'அதனினியறல்' என்பதற்குத் 'தச்சன் செய்த சிறுமா வையம்' என நிமித்த காரணத்தை உதாரணமாகக் காட்டினர். 'இன்னானேது' என்பதற்கு இதனால் இப்படிப்பட்டவனாயினான் என்பதைப் பொருளாகக் கொண்டனர். இதனைச் சேனாவரையர் மறுக்கின்றார். (க) சிறுமா வையத்தைச் செய்தவன் தச்சன் ஆதலின், அது வினைமுதலில் அடங்கும். ஆதலின் ஈண்டுக் கூறவேண்டுவதின்றாம். (உ) கண்ணாற் கொத்தை, காலான் முடவன் என்பன கண்ணின்மையால் குருடன், காலின்மையால் முடவன் என்னும் பொருளைத் தருவனவாம். எனவே கண்ணும் காலுமாகிய இருசினைகளுக்குமுள்ள விகாரத்தை முதற்பொருளுக்கு ஏற்றிக்கூறும் இப்பொருண்மை இன்னான் என்பதனால் பெறப்படாது. ஆதலின் அவர் கூற்றுப் பொருந்தாது என்றனர்.

மூன்றும் வேற்றுமைக்குரிய உருபு 'ஒடு' என முன்னர்க் கூறப்படினும், இந்நூற்பாவால் 'ஆன்' என்பதும் உண்டெனத் தெரிகின்றது.

இங்ஙனம் இரண்டுருபுகள் ஒரு வேற்றுமைக்கண் இருத்தலாகாது; அங்ஙனம் ஈருருபுகள் இருப்பின் அவற்றை இரு வேற்றுமையாகவே கொள்ளல் வேண்டும் என ஒரு மாணாக்கன் சேனாவரையரிடத்துக் கேட்க; அதற்குள் இன்னொரு மாணாக்கன் இது வேற்றுமை மயக்கமாக இருக்கலாம் எனக்கூற; அதன்பின் சேனாவரையர் தரும் அமைதியாக இப்பகுதி அமைந்துள்ளது. ஆதலால்தான், 'ஒடுவும் ஆனும் இரணடு வேற்றுமை யாகற்பாலவெனின், அற்றன்று' எனக் கூறியவர், உடனே 'வேற்றுமை மயக்கமாவது' யாதென விளக்கந் தருகின்றனர். இனி, அவர்தம் விளக்கம் வருமாறு:—ஒடு, ஆன் என்பனவற்றை ஒவ்வொரு வேற்றுமையாகக் கொண்டால், அவ்விரண்டு உருபுகளும் வேறுவேறு பொருளிலேயே வருதல் வேண்டும். ஆனால் இவ்விரு உருபுகளுமோ ஒரு பொருளிலேயே வருகின்றன. அதனால் இவ்விரு உருபுகளுள் யாதே னும் ஒன்றை இம்மூன்றும் வேற்றுமைக் குரியதாக்கிப், பிறிதோருரு பைப் பிறிதோர் வேற்றுமைக் குரியதாக்கி, அது இதன்கண் வந்து மயங்குதலின் வேற்றுமை மயக்கமாயிற்று என்று கூறலாம் என்பது மாணாக்கனின் நினைவு. இதற்குச் சேனாவரையர் இரண்டுவிதமாக விடை தருகின்றார். (க) வேற்றுமை மயக்கமாவது, ஓருருபு ஒருபொரு ளிலோ, அன்றிச் சிலபொருளிலோ வரினும் அவ்வுருபு ஏனையவேற் றுமைக்குரிய பொருளையும் உணர்த்தல் வேண்டும். ஆனால் இவ்வீருருபு களும் பெரும்பாலும் ஒருருபு உணர்த்துகின்ற பொருளையே பிறிதோ ருருபும் உணர்த்துதலின் இது வேற்றுமை மயக்கமன்றாம். (உ) ஒவ் வொரு உருபும் ஒவ்வொரு பொருளை உணர்த்தின், அவற்றை இரு வேற்றுமையாகக் கொள்ளலாமேயன்றி, ஈருருபுகளும் சேர்ந்து ஒரு பொருளையே உணர்த்தின், அவற்றை இரண்டு வேற்றுமையாகக் கொள்ளுதல் வடமொழியிலும் இல்லை.

இங்ஙனம் சேனாவரையர் கூறவே, பிறிதொரு மாணாக்கன் எழுந்து, வடமொழியில் பொருள்வேற்றுமை கருதியல்லது, உருபுவேற்றுமை கருதி ஒவ்வொரு வேற்றுமையாகக் கூறாராயினும், தமிழ்நூலில் அங்ஙனம் கூறினால் இழுக்கென்னை? என்று வினவினன். அதற்குச் சேனாவரையர், தொல்காப்பியருக்கு வட நூலொடு மாறுகொள்ளாது கூறலே கருத்தாதலின், உருபு வேற்றுமை கருதி ஒவ்வொரு வேற்றுமையாகக் கொள்ளவில்லை என்றனர். அதனைக்கேட்ட மாணாக் கன் வடநூலொடு மாறுகொள்ளாமைக் கூறலே ஆசிரியருக்குக் கருத் தாயின், விளி வேற்றுமையையும் எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கி, வேற்றுமை ஏழென்றே கொண்டிருப்பர். அங்ஙனம் அடக்காது எட்டென்று கூறியிருத்தலே வடநூலொடு மாறுபடவும் நூல் செய்தல் ஆசிரியருக்குக் கருத்தெனத் தெரிகிறது என்று கூறினன். அதற்கும் இறுதியாகச் சேனாவரையர் விடை தந்தனர். அது வருமாறு :— வடமொழியின்கண் விளி வேற்றுமையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கி வேற்றுமை ஏழென்று கூறுபவரும் உண்டு. அதன்கண் அடக்காது வேற்றுமை எட்டென்பாரும் உண்டு. இவற்றுள் முன்னைய கருத்தைச் சேர்ந்தவர் பிருகற்பதி. பின்னைய கருத்தைச் சேர்ந்தவர் ஐந்திர நூலார். தொல்காப்பியர், ஐந்திர நூலார் கொள்கையைத் தழுவி வேற்றுமை எட்டென்றாராகலின், வடநூலொடு மாறுகொண்டு தொல்காப்பியர் நூல் செய்தார் என்றல் பொருந்தாதாம். இவ்வைந்திர நூலைத் தழுவி ஆசிரியர் நூல் செய் திருத்தல் பற்றியே பாயிரத்துள் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்'

எனக் கூறப்பட்டுள்ளது என்றனர். இதனைச் சிவஞானமுனிவர் மறுப்பர். அது வருமாறு:— 'அற்றேல் 'அகத்தியம் நிறைந்த தொல்காப்பியன்' என்னாது 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்றது என்னையெனில்; அகத்தியம் நிறைந்தமை எல்லாரானும் தெளியப் பட்டமையின் வடமொழியிலும் வல்லனாயினான் என்பது விளக்கிய அங்ஙனம் கூறினாரென்பது; இவ்வாறன்றி 'ஐந்திரத்தின் வழித்தோன்றிய நூல் என்பது விளக்கிய 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என்றார்' என்பாரை, ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனவே ஐந்திரம் முதனூல் என்பது அமைந்திருப்ப 'முந்துநூல் கண்டு' எனக் கூறியது எற்றுக்கெனக் கூறி மறுக்க'.

எ௫ ஆம் நூற்பா: மாணாக்கர்க்கு அறிவு கொடுத்தான் என்புழி, ஆசிரியன் அறிவைக் கொடுத்ததாகவும், மாணாக்கர்கள் அதை ஏற்றுக் கொண்டதாகவும் காட்சி வகையான் புலப்படாதாயினும், கருத்து வகையால் அவை நிகழ்தல் உண்டேயாம். இதனையே பின் வந்த இலக்கணக்கொத்தாசிரியர் 'ஏலாதேற்றல்' என்றனர். 'பிறபொருள்' என்றது, அடுத்த நூற்பாவில் கூறப்படும் உபகாரம் முதலிய பொருளையே யாகும்.

எ௯ ஆம் நூற்பா: கடிசூத்திரம் — அரைஞாண். இந்நூற்பாவில் 'அப்பொருட் கிளவியும்' எனவரும் தொடர், சொல்லப்பட்ட பொருளையே யன்றி. அவைபோன்ற பிற பொருள்களையும் குறிக்கும். அப்பொருள் என்பது சுட்டன்று. அவை போன்ற என்னும் பொருளைக் குறிக்கும். இதற்குச் சேனாவரையர் வழக்கிலிருந்து எடுத்துக்காட்டும் உவமை மிகவும் சுவை பயப்பதாகும். ஒருவன் ஒரு ஆடையை உடுத்திவர, இன்னொருவனும் அதே போன்ற ஆடையை உடுத்தி வருவானாயின், இருவரும் காண்புழி இருவராடையும் ஒன்றையொன்று ஒத்திருப்பதைக் காண, இவ்வாடையும் அந்நூலாலியன்றதென்றே ஒவ்வொருவரும் கூறுவர். இங்கு 'அந்நூல்' என்பது அவரவரும் உடுத்தியிருக்கும் ஆடையிலுள்ள நூலையன்றி, அந்நூலைப் போன்ற, ஆனால் அதே தரத்திலுள்ள பிற நூலாலாகிய ஆடையையே குறிப்பதாகும். இதைப் போன்றே 'அப்பொருள்' என்பதும் அவை போன்ற என்ற பொருளையே உணர்த்திற்று என்றார்.

அ௧ ஆம் நூற்பா: 'அனைவகைக் குறிப்பின்' என்றது கண் முதலிய உருபுகள் யாண்டுவரினும் அவ்விடமெல்லாம் ஏழாம் வேற்றுமை என்று கருதற்க; இடம், நிலம், காலம் ஆகிய பொருள்களை இடமாகக் குறித்து வருகின்றபொழுதே, அவை வேற்றுமை யென்று கருதுக என்பதாம். இவை ஏனை வேற்றுமைக்கும் ஒக்குமென்பர் சேனாவரையர். இரண்டாம் வேற்றுமை ஐ என்று கூறப்பட்டமை கருதி, 'ஐகான் யவ்வழி' என்றவிடத்து வரும் ஐ என்பதையும் உருபாகக் கொள்ளற்க என்பது கருத்து. தட்டுப்புடை - நெல் கொழிக்கின்ற இடம்; ஒருவகை விளையாட்டிடமுமாம்.

அஉ ஆம் நூற்பா: இந்நூற்பாவில் கூறப்படுஞ் சொற்களெல்லாம் 'உரு'பென்பர் இளம்பூரணர், நச்சினார்க்கினியர், கல்லாடர், பழைய உரையாசிரியர் ஆகியோர். சேனாவரையர் 'உருபின் பொருள் பட வரும் பிறசொற்கள்' என்பர். கண் முதலாயினவற்றை உருபெண்

பாரைச் சேனுவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) இந் நூற்பாவிற் கூறப்படும் கண் முதலாயினவெல்லாம் உருபெனின், இதற்கு முன்னைய நூற்பாவிலும் கண்ணென்பது கூறப்பட்டிருத்தலின் கூறியது கூறிற்றாம். ஆதலின் இவை உருபல்ல. (உ) பெயர்ச் சொற்கள் எல்லாம் உருபேற்குங்கால் சாரியை பெறுமாயின், அச் சாரியை பெயர்ச் சொல்லிற்கும் வேற்றுமை உருபிற்கும் இடையிலும், அவ்வுருபு ஈற்றிலும் வரும். 'மகத்தால் கொண்டான்' என்புழி மகம் என்ற பெயர்சசொல் ஆன் என்னும் உருபினை ஏற்குங்கால், அத்துச் சாரியை பெற்றவாறும், அது இடையில் வந்தவாறும் காண்க. ஆனால் 'ஊரகத்திருந்தான்.' 'ஊர்ப்புறத்திருந்தான்' எனவரும் எடுத்துக்காட்டுக்களில் அகம் புறம் என்பன உருபாயின், அவற்றிற்குப் பின்னரும் அத்துச்சாரியை வருதற்குக் காரணமில்லை. எனவே இவை உருபன்றாம்.

இங்ஙனம் கூறினாரேனும், இதன்கண்ணும் ஓர் ஐயம்வர, அதற்கும் அழகாக அமைதி காணுகின்றார் சேனுவரையர். யான், அது, தாம் என்பன உருபேற்கும்பொழுது, யான் என்பது என் என்றும், அது என்பது அன்சாரியை பெற்று அதன் என்றும், தாம் என்பது தம் என்றும் ஆகும். ஆனால் அவை, இந்நூற்பாவிற் கூறுகின்ற வேற்றுமையுருபு அல்லாத உழை, பொருட்டு, உடைய என்பன வந்துழியும், உருபேற்குங்கால் ஏற்படும் புணர்ச்சி விதியையே ஏற்கின்றன. ஆதலின் இவையும் உருபேயாம் எனின், இச்சொற்கள் உருபு புணர்ச்சியின் போதுதான் இங்ஙனம் மாறவேண்டும் என்பதன்றி, ஏனைய சொற்களை ஏற்கும்பொழுதும் இம்மாறுதலைப் பெறும் ஆதலின், இது பற்றி இவைகளை உருபென்றல் கூடாதாம் என்பர்.

தெய்வச்சிலையார், இவையெல்லாம் பெயரைச் சார்ந்து தனித் தனிவரின் பெயராகி உருபேற்குமென்றும், பெயரைச்சாராது இடமும் காலமும் ஆகிய பொதுமை உணரவரின் உருபு மாத்திரமாகி நிற்கு மென்றும், இடம் வேறு உணரவரின் உருபு புலப்படாது பொருளுணர வரும் என்றும் கூறி அவற்றிற்கு எடுத்துக்காட்டுத் தந்து விளக்குவர்.

அரு ஆம் நூற்பா: வேற்றுமைத் தொகையை விரிப்புழி இடையில் சில சொற்கள் விரிந்து நின்று பொருள்படுதல் போல, அன்மொழித் தொகையை விரிப்புழியும் இறுதியில் சிலசொற்கள் விரிந்து நின்று பொருள் உணர்த்தும் என்பது சேனுவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகிய மூவர்க்கும் கருத்தாகும்.

இளம்பூரணரும், கல்லாடரும் இந்நூற்பாவைப் பிரிப்பதிலும், பொருள் காண்பதிலும் ஒன்றுபடுவர். எனினும், சிவஞானமுனிவர் இவ்வுரைகளை மறுத்து வேறுரை கூறுவர். அதுவே பொருத்தமுடைத் தாம் (சூத்திரவிருத்தி:பக்-ருஅ காண்க).

அநுவாதம்- வழிமொழிதல் என்று பொருள்படும். 1 முன்னோர் பலர்க்கும் ஒப்ப முடிந்ததொரு கருத்தைப் பின்வந்தோர் எடுத்துக் கூறினும், 2. ஒரு நூலிலேயே முன்னர்க் கூறப்பட்ட கருத்தொன்றைக் காரணம்பற்றிப் பின்னரும் எடுத்துக் கூறினும் அநுவாதமாம். இக் கருத்தினுள் முன்னைய கருத்தினைச் சிவஞான முனிவர் தம் சூத்திர விருத்தியில் 'அகரம் முதலிய முப்பதும் நெடுங்கணக்கினுட் பெறப்படு

தலின் அவற்றை விதந்தோதாது 'எழுத்தெனப் படுப அகர முதல் னகர இறுவாய்' என முதலும் இறுதியும் எடுத்தோதி அநுவதித் தார்' என்ற பகுதியில் விளக்கியுள்ளார். பின்னைய கருத்து அனைவர்க் கும் தெரிந்ததே. அன்மொழித் தொகையில் சொற்பெய்து விரிக்க லாம் என்ற கருத்தினை ஆசிரியர் இதற்குமுன் எங்கும் சொல்லவில்லை. இந்நூற்பாவில்தான் முதன்முதல் கூறுகின்றார். எனினும் இதனைச் சேனாவரையர் அநுவாதம் என்றது, ஈண்டுக் கூறப்பட்ட முன்னைய கருத்தை இலக்கணமாகக் கொண்டேயாகும்.

## உ. வேற்றுமை மயங்கியல்

வேற்றுமை மயங்கியலில் வேற்றுமைகள் எவ்வெவ்வாறு மயங்கி வரும் என்பதை நான்கு வகையாகப் பிரித்துக் கூறுவர் சேனாவரையர். எனினும் கல்லாடர் இவ்வியலிற் கூறப்படும் மயக்கங்களை வேறுவிதமாக விரிவாக விளக்குவர். அதனை அவர் உரையானறிக.

அ௬ ஆம் நூற்பா: இரண்டாம் வேற்றுமைக்குரிய வாய்பாடு களைச் சேனாவரையர், இயற்றப்படுவது, வேறுபடுக்கப்படுவது, எய்தப் படுவது ஆகிய மூன்றற்கும் வகைப்படுத்தினர். அவற்றுள் புகழ்தல், பழித்தல் போன்றன வெல்லாம் எய்தப்படுவதற் குரியனவாம். அறுத் தல், குறைத்தல் என்பனவெல்லாம் வேறுபடுத்தற் குரியனவாம். இந்நூற்பாவில் 'வினை' எனப் பொதுப்படக் கூறினும் வேறுபடுத்தற் குரிய வாய்பாட்டு வினைகளே கொள்ளப்படும் என்பது.

இரண்டாம் வேற்றுமைக்குரிய சார்புச்சொல் சினைச்சொல் ஆகிய இரண்டின்கண்ணும் ஏழாம் வேற்றுமை சென்று மயங்கும் என்றலின், இவ்விரு நூற்பாக்களையும் சேர்த்து ஒரே நூற்பாவில் கூறியிருக்க லாமே! வேறுவேறாகக் கூறியது ஏன்? என்னும் வினாவைச் சேனாவரை யர் தாமே எழுப்பிக் கொண்டு, அதற்கு அமைதியுங் காண்கின்றார். அவ்வமைதி வருமாறு:— முன்னைய நூற்பாவில் கூறப்பட்ட 'கரும மல்லாச் சார்பென் கிளவிக்கு' ஏழாம் வேற்றுமை சிறுபான்மையே வரும். ஆதலால்தான் ஆசிரியர் 'உரிமையும் உடைத்தே' என எதிர் மறை உம்மை கொடுத்துக் கூறினார். ஆனால் சினைநிலைக் கிளவிக்கோ இரண்டாம் வேற்றுமை எத்துணை உரிமை உடைத்தோ, அத்துணை உரிமை ஏழாம் வேற்றுமைக்கும் உரித்து. ஆதலின், இவற்றைத் தனித்தனியே கூறினார் என்பது

அ௭ ஆம் நூற்பா: சினைச்சொல்லிற்கு ஐயும் கண்ணும் வரும் என்பது அ௬ ஆம் நூற்பாவில் கூறப்பட்டது. அச்சொல் முதலொடு தொடர்ந்து முதற்சினைக் கிளவியாக வருவுழியும் அவ்வீருருபுகளும் வருமோ என்று ஐயம் வரும். அவ்வையத்தை நீக்கி முதற்சினைக் கிளவிக்கண் வரும் உருபுகளை இந்நூற்பாவும், அடுத்த நூற்பாவும் வரையறைப்படுத்தி நியமித்தலின் இவ்விரு சூத்திரங்களும் நியமச் சூத்திரங்கள் ஆயின.

அ௮ ஆம் நூற்பா: அ௬ ஆம் நூற்பா முதல், இந்நூற்பா வரை சினைக்கிளவிபற்றிக் கூறப்படுகின்றது. எனினும், இவற்றிடையே 'கன்றலும் செலவும்' என்னும் நூற்பாவை வைத்ததற்குரிய கார ணத்தை ஆராய்ந்து அமைதி கூறுகின்றார் சேனாவரையர். கன்றலும் செலவும் ஐ, கண் ஆகிய ஈருருபுகளையும் ஏற்று வருவன. இந்நூற் பாவைத் தனித்துக் கூறின், இவ்வீருருபுகளையும் ஏற்றுவரும் என

எடுத்துக் கூறவேண்டியிருக்கும். சினைநிலைக்கிளவிக்கு ஐயும் கண்ணும் வரும் எனக் கூறி, அதனை அடுத்துக் கன்றல் செலவு ஆகிய சொற்களைக் கூறின், அதிகாரத்தால் இவற்றிற்கும் ஐயும் கண்ணும் வரும் என்பது பெறப்பட 'ஒன்றுமார் வினையே' எனச் சுருங்கக் கூறிவிடலாம். ஆதலின் சூத்திரம் சுருங்குவதற்காகச் சினைக்கிளவியது மயக்கம் உணர்த்தும் அதிகாரத்திடையே கன்றல் செலவைக் கூறினர் என்பது சேனாவரையர் கருத்து.

கூ0 ஆம் நூற்பா: பலபொருள் சேர்ந்த தொகுதியைப் பிண்டமென்பர். அதனினின்றும் பிரிக்கப்பட்ட பொருளைப் பிண்டித்த பொருள் என்பர். இப்பிண்டமும், பிண்டித்தபொருளும் முதலும், சினையும் போன்றதேயாதலின் இவற்றை வேறு கூறவேண்டாமே என்பது வினா. அதற்குச் சேனாவரையர் நுண்மையாக விடை தருகின்றார். பலபொருள் தொகுதியே பிண்டமாகும். அது போன்று பல சினைப்பொருள்கள் சேர்ந்தே முதலாகும். எனினும் முதலெனப்படுவது பல சினைப்பொருள் களாலியன்றதேனும் அவையனைத்தும் சேர்ந்தபொழுது தனக்கொரு பெயரையும் பெற்று நிற்கும். குதிரை என்பதை எடுத்துக்கொள்வோம். குதிரை என்பது முதற்பொருள். அதன் காது, கண், வால், கால் என்பனவெல்லாம் சினையாகும். அச்சினைகள் தனித்த நிலையில் இப்பெயர் பெறினும், இவையனைத்தும் சேர்ந்த நிலையில் குதிரை என்றே பெயர் பெறுகின்றது. ஆனால் பிண்டப் பொருளிலோ, பல பொருள் சேர்ந்த தொகுதிப் பெயராய்ப் பிண்டமெனப் பெயர்பெறுவதல்லது, பிண்டிக்கப்பட்ட பொருள்களுக்குத் தனித்தனிப் பெயர் கூறப்படுவது போலத் தனக்கெனப் பெயர் கூறப்படும் நிலை இல்லை. ஆதலின் இதை வேறு கூறினர் என்பர்.

உரையில், 'அவற்றின் வேறாய் அவற்றானியன்று தான் ஒன்றெனப் படும் பொருள்' என்பது, முதற் பொருளாவது யாது? என்பதை விளக்க வந்ததாகும். முதற்பொருள் சினைப்பொருளின் வேறானது; ஆனால் அச்சினைப் பொருளானியன்றது; அச்சினைப் பெயர்களினின்றும் தனக்கொரு பெயரைத் தனித்துடையது என்ற மூன்றிலக்கணத்தை இத்தொடர் விளக்கி நிற்கின்றது. அவற்றின் வேறாய்—சினைப்பொருள் களின் வேறாக. அவற்றானியன்று—சினைப்பொருள்களாலாக்கப்பட்டு. அதாவது ஒன்று சேர்க்கப்பட்டு என்பதாகும். தான் ஒன்றெனப் படுவது—இச்சினைகளால் இயன்ற முதலாகிய தான் தனித்தொரு பெயர் பெறுதலாம்.

கூக ஆம் நூற்பா: ஒருபொருளொடு ஒருபொருளை இயைத்து அதற்கு வினை கொடுக்குங்கால் 'ஒடு' உருபு வரும். அங்ஙனம் இயைந்து வரும் பொருள்களில், எப்பொருள் சிறப்புடையதோ அப்பொருளிலேயே, ஒடு உருபு வைத்துச் சொல்லப்படும் என்பதே இதற்குப் பொருளாக இளம்பூரணர் முதல், பழையஉரையாசிரியர் ஈறாக அனைவரும் கருதினர். ஆனால் தெய்வச்சிலையார் மட்டும் இவ்வொடு உருபு சிறப்பில்லாத பொருளிலேயே வைத்துச் சொல்லப்படுமென்பர். ஏனையோர் கொண்ட உரைபோல அவர் கூறாததற்குக் காரணம், பாணினியார் கருத்தைத் தாம் தழுவியதேயாம் என்பர் அவர். எனினும் இது தமிழ் மரபிற்கு ஒவ்வாததாம்.

'நாயொடு நம்பி வந்தான்' என்ற விடத்து நம்பியைக் காட்டிலும் இழிந்த, நாய் என்ற சொல்லொடு ஒடு உருபு வந்ததன்றோ? அது எங்ங

னம் பொருந்தும்? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு சேனாவரையர் இருவிதமாக அமைதி காண்கின்றார். (க) நம்பியைக் காட்டிலும் நாய் நன்றியறிதல் போன்ற காரணங்களால் உயர்ந்திருக்கவேண்டும். ஆதலால்தான் நம்பியினும் நாய் உயர்ந்ததாதல்பற்றி நாயொடு நம்பி வந்தான் என்று கூறினர். (உ) நாய் நம்பியினும் இழிந்ததாய் இருந்து அந்நிலையில் ஒடு உருபு கொடுத்துச் சொல்லப்பட்டிருப்பின், அங்கு வந்த உருபும் ஒடு உருபு அன்று; அதற்குப் பொருளும் அதுவன்று. 'கைப் பொருளொடு வந்தான்' என்றவிடத்துக், கைப்பொருள் தனக்குண்டாக வந்தான் எனப் பொருள் கொள்ளுமாறு போல, நாயொடு நம்பி வந்தான் என்றவிடத்தும் நாய் தனக்குண்டாக வந்தான் என்றே பொருள் கொள்ளவேண்டும். எனவே ஆசிரியர் கூறியபடி இவ்வொடு வுருபு உயர்பொருள் உணர்த்தும் பெயர்வழித் தோன்றுவதல்லது, இழி பொருட்கண் வைத்துச் சொல்லக்கூடாது என்பது சேனாவரையரின் முடிந்த கருத்தாகும்.

இந்நூற்பா, வேற்றுமையியலில் மூன்றாம்வேற்றுமை உருபும் பொருளும் கூறியவிடத்தே இருத்தற்குரியதாகும். எனினும் இவ்வியலில் இதனைப் பொருள்மயக்கம் அதிகாரப்பட்ட இடத்துக் கூறுதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் ஆராய்கின்றார். வேற்றுமை இயலில் ஒவ்வொரு வேற்றுமைக்குரிய உருபும் பொருளும் கூறப்பட்டதன்றி, இன்ன இன்ன உருபுகள் இவ்விவ்வாறுதான் வரும் என்னும் சிறப்பிலக்கணத்தை ஆண்டுக் கூறவில்லை. ஆதலின் அச்சிறப்பிலக்கணத்தை இவ்வியலில் கூறினார் என்பர். அங்ஙனம் கூறுகின்றவர் இவ்விடத்துக் கூறியதென்னை? யெனின், அடுத்த நூற்பாவில் ஆக்கமொடு புணர்ந்த ஏதுச்சொல் மூன்றற்கும் ஐந்தற்கும் உரியதென மூன்றாம் வேற்றுமை கூறப்படுதலானும், இதுவும் மூன்றாம் வேற்றுமையது உருபாதலானும், அதனோடியைய ஈண்டு வைத்தார் என்பது. அன்றியும் ஆக்கமொடு புணர்ந்த ஏதுச்சொல் எவ்வெவ் வேற்றுமையில் வரும் என அதன் சிறப்பிலக்கணம் கூறுதல் போல, இவ்வொடு உருபும் எவ்வெப்பொருளில் வருமென அதன் சிறப்பிலக்கணம் கூறலின், அதனோடியைய இதனையும் வைத்தார் என்பது. இந்நுண்மை அனைத்தும் பிறருரையில் காணாதது.

அடுத்த நூற்பாவில் கூறப்படும் 'ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி' மூன்றாம் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் ஒப்ப உரியதெனக் கூறப்படுகின்றது. எனவே இது ஒருபொருளில் ஈருருபு சென்று இயைதலாகிய பொருள்மயக்கம் பற்றியதாம். ஆதலின் இதனை இவ்வியலிற் கூறுவது பொருத்தமுடைத்து. ஆனால் இவ்வொடு வுருபோ பொருள்மயக்கத்திற்குச் சிறிதும் இயைபின்றி உள்ளது. ஆதலின் இந்நூற்பா ஈண்டிருத்தல் பொருந்துவதன்று என்றே தோன்றுகின்றது. அறிஞர்கள் ஆராய்வார்களாக.

௬உ ஆம் நூற்பா: ஆக்கத்தோடு கூடிய ஏதுச்சொல்லிற்கு மூன்று, ஐந்து ஆகிய இருவேற்றுமைகளும் உரிய என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். இக்கருத்து வேற்றுமையியலில் மூன்றாம்வேற்றுமை ஐந்தாம்வேற்றுமை ஆகிய இருநூற்பாக்களுக்கும் கூறப்பட்டிருக்கும் இலக்கணங்களாலேயே பெறப்படுதலின், அவற்றையே மீண்டும் கூறுதல் கூறியது கூறல் ஆகாதா? என்பது வினா. அதற்கு விடை :— 'பிரிநிலை ஏகாரம், பிரிநிலை ஓகாரம்' ஆகியன இடைச்சொல்லில் ஆராயப்

பட்டுள்ளன. அவற்றையே எச்சமாதல்பற்றி எச்சவியலில் மீண்டும் கூறுகின்றார் ஆசிரியர். அதைப்போன்றே 'ஆக்கமொடு புணர்ந்த இவ் வேதுப் பொருண்மை' மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரியதென வேற்றுமை இயலில் கூறப்பட்டதாயினும், ஒரு பொருளில் ஈருருபு சென்று மயங்குதலாகிய மயக்க வொப்புமையால், அவற்றையே ஈண்டும் கூறுவாராயினர். ஆதலின் இது கூறியது கூறலன்று. இங்ஙனமே 'அச்சக் கிளவி' என்பதும், வேற்றுமை இயலில் இரண்டாம் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் உரியவெனக் கூறப்பட்டிருப் பினும், ஒருபொருளில் ஈருருபு சென்று மயங்குதலாகிய ஒப்புமையால் மீண்டும் இவ்வியலிற் கூற நேர்ந்ததாம். ஆதலின் அதுவும் கூறியது கூறலன்றாம். இந்நுண்மை பிறருரையில் காணாதது.

அடுத்து, இந்நூற்பாவில் கூறப்பட்ட கருத்துப், பொருள்மயக்க மாதல் எங்ஙனம்? என்பதை ஆராய்கின்றார் சேனாவரையர் வேற்றுமை மயக்கம் என்றால், ஒரு வேற்றுமைக்குரியபொருள், பிறிதொரு வேற் றுமையின்கண் சென்று மயங்குதலாகும். ஆனால் இங்குக் கூறப்பட்ட 'ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவியோ' மூன்றாம வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் ஒப்ப உரியதாகும். ஆதலின் இது பொருள் மயக்கமாமாறு என்னை? என்ற வினாவைத் தாமே எழுப்பிக்கொண்டு அதற்கு இருவிதமாக அமைதி காணுகின்றார். (க) ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி மூன்றாம் வேற்றுமைக்கு உரியதாக வைத்துக் கொண்டு, அது ஐந்தாம் வேற்றுமைக்கண் வந்து மயங்கிற்றென்று கருதுக. அல்லது இப்பொருண்மை ஐந்தாம் வேற்றுமைக்கு உரியதென வைத்துக்கொண்டு, அது மூன்றாம் வேற்றுமைக்கண் மயங்கி வந்த தெனக் கருதுக. எவ்வாறேனும வேற்றுமை மயக்கத்திற்கேற்ப இந் நூற்பாவின் கருத்தை அமைத்துக்கொள்ள வேண்டுமென்பது. (உ) ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவியாகிய ஒருபொருளின்கண் மூன்றும் ஐந்துமாகிய ஈருருபும் வந்து மயங்குதலின் இது பொருள் மயக்கமா யிற்று என்று கருதுக என்பது. இவ்விரு காரணங்களுள் முற்கூறியதிற் பிற்கூறியதே சிறப்புடையதாகத் தெரிகின்றது.

தன்பொருளிற்றீராது பிறிதொரு பொருட்கண் சேறலும், ஒரு பொருளில் ஈருருபு சென்றிணைதலும் பொருள் மயக்கமாம் என்பது சேனாவரையர் கருத்து. பொருள் மயக்கமாகக் கூறப்பட்ட நூற்பாக் களை இவ்விரு வகையாகச் சேனாவரையர் கருத்தின்படி பிரித்துக் கொள்ளல் வேண்டும்.

ஞாபக ஏது, காரக ஏது ஆகிய இருவகையில், இங்குக் கூறப்பட்ட ஆக்கமொடு புணர்ந்தஏது, காரக ஏதுவின்பாற்படும். ஆக்கமொடு புணர்ந்த காரக ஏதுப்பொருண்மைக்கே மூன்றனுருபும் ஐந்தனுருபும் ஒப்பவரும். ஏனைய ஞாபக ஏதுப் பொருண்மைக்கோ பெரும்பான்மை ஐந்தனுருபும், சிறுபான்மை மூன்றனுருபும் வரும்.

௬௩ ஆம் நூற்பா: 'வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்ன வன், கோனோக்கி வாழுங் குடி' என்புழி உயிரும் குடியும் முறையே, வானையும் கோலையும் நோக்குவது அவற்றானாய பயன் பற்றியும், அவற்றை இன்றித் தாம் வாழமுடியாமையாகிய இன்றியமையாமை பற்றியும் ஆகும். எனவே வானும் கோலும் செயப்படுபொருளும், ஏதுப் பொருளும் ஆயின. கண்ணால் பார்த்தான் என்றவிடத்துக், கண்

கருவியாகப், பார்க்கப்பட்ட பொருள் பிறவாக அமைந்துள்ளது. அங்ஙனமே வாளால் நோக்கும், கோலால் நோக்கும் என்பனவும் வாளும் கோலும் கருவியாக, அவற்றால் நோக்கப்படும் பொருள் பிறவாக அமைதல் வேண்டும். அங்ஙனம் கூறவே வாளும் கோலும் ஏதுப் பொருளாவதல்லது செயப்படுபொருளாதற்கில்லை. ' ஆகவே இவை, ஏதுப்பொருளோடு செயப்படுபொருளும் ஆகும் என்பது என்னை? எனில், கண்ணுட்குத்தினான் என்றவிடத்துக் கண் இடமாகவும், குத்தப்படுதலின் செயப்படுபொருளாகவும் கூறப்படுதல் போல, வாளும் கோலும் தாம் நோக்குதற்குக் காரணமாவதால் ஏதுப்பொருளாவதோடு நோக்கப்படு பொருளாயுமிருத்தலின் செயப்படுபொருளும் ஆயிற்று என்பதாம்.

௬௯ ஆம் நூற்பா : 'நம்பி மகன்' என்ற தொடரில் ஆறனுருபு இல்லையேனும் அவ்வேற்றுமைக்குரிய கிழமைப்பொருள் உளதாதல் நன்கு விளங்கும். ஆறனுருபு அஃறிணைக்கே உரியதாகும். அந்நிலையில் 'நம்பியது மகன்' என விரிப்பதே தவறாகும். ஆதலின் ஆறுவதன் பொருண்மைக்குரிய இத்தொடரை அதற்குச் சிறிதும் இயைபில்லாத நான்கனுருபில் வைத்து விரித்தலின் இது உருபு மயக்கமாயிற்று. இதனைப் பொருள் மயக்கமெனச் சேனாவரையர் கருதினும், நச்சினார்க்கினியரின் கருத்துப்படி ' உருபு மயக்கமே 'யாம்.

௯௧ ஆம் நூற்பாவில் 'அளனப் பிறத்தல்' என்பதற்கு அளனத்திரிதல் என உரை செய்தது போலவும், ௬௬ ஆம் நூற்பாவில் 'அன்றியனைத்தும்' என்பதில் அன்றி என்பதைச் சுட்டாகக் கொண்டு பொருள் செய்தது போலவும், ஈண்டும் ' அதுவென் உருபு கெட ' என்பதில் ' கெடுதல் ' என்பதற்கு ' வாராமை ' என உரை செய்கின்றார் சேனாவரையர்.

' ஆறனுருபால் அஃறிணைப்பால் தோன்றலாவது ' சாத்தனது, சாத்தன என்பன சாத்தனுடையது, சாத்தனுடையன எனப்பொருள் பட்டு அஃறிணை ஒருமைப் பன்மைப்பால் தோன்ற நிற்பதாம்.

௯௦ ஆம் நூற்பாவில் 2, 3, 5, 6, 7, ஆகிய வேற்றுமைக்குரிய பொருள்களில் சில, நான்காம்வேற்றுமையிலும் வரும் எனக்கூறப்படுகின்றது. இந்நூற்பாவிலும் ஆறும் வேற்றுமைக்குரிய முறைப்பெயர் நான்காம் வேற்றுமையில் வரும் எனக் கூறப்படுகின்றது. ஆதலின் இதனையும் ௯௦ ஆம் நூற்பாவிலேயே சேர்த்துக் கூறவேண்டியிருக்க, ஈண்டுத் தனித்துக் கூறுவானேன் ? என்பது வினா. ௯௦ ஆம் நூற்பாவில் கூறப்பட்ட 2, 3, 5, 6, 7, ஆகியவற்றிற்குரிய பொருள்கள் அவ்வவ்வுருபுகளிலும் கூறப்படலாம்; நான்காம் வேற்றுமையிலும் கூறப்படலாம். ஆனால் ஈண்டுக்கூறிய ஆறும் வேற்றுமைத்தொகையோ நான்காம் வேற்றுமையில் விரித்துக் கூறப்படுவதல்லது, ஆறும் வேற்றுமையில் விரித்துக்கூறல் எஞ்ஞான்றும் தகாது. ஆதலின், இதனைத் தனித்துக் கூறவேண்டும் என்பது விடை. இந்நுண்மை பிறருரையில் காணாதது.

௯௫, ௯௬ ஆம் நூற்பாக்கள் : 'புலிகொல் யானை' என்ற தொடரில், கொல் என்பது வினையாம்; அதாவது தொழிலாம். இச்சொல், முன்னர் இருக்கும் புலி என்னும் பெயர்க்கே யுரியதாகாது, பின்னர் இருக்கும் யானை என்னும் பெயர்க்கும் உரியதாயிருத்தலின் அது நடுமாறு தொழிலாயிற்று. அச்சொல்லொடு பெயர்களும் தொடர்ந்திருத்தலின் நடுமாறு தொழிற்பெயராயிற்று.

எடுத்துக் காட்டில் 'புலி கொல் யானை' என்ற ஒன்றே பொருத்த முமு, தேவையும் உடையதாகும். பிறவுரையாசிரியர்கள் அனைவரும் ஈதொன்றையே காட்டினர்.

இத்தொடரில் 'புலியைக் கொன்ற யானை' என்று இரண்டனுருபு வைத்து விரிப்பின், யானை வினைமுதலாகி புலி செயப்படு பொருளாகும். 'புலியால் கொல்லப்பட்ட யானை' என்று மூன்றனுருபு வைத்து விரிப்பின், புலி வினைமுதலாகி யானை செயப்படுபொருளாகும். இங்ஙனம் ஒவ்வோருருபை விரிப்புழியும் ஒவ்வொரு பொருள் படுதலின் இதன்கண் மயக்கம் என்பதே இல்லையெனில்; அற்றன்று. ஒரு வேற்றுமைக்குரிய பொருட்கண் பிறிதொரு வேற்றுமை சென்று மயங்குதலாகிய பொருள்மயக்கம் இதன்கண் இன்றேனும், தடுமாறு தொழிலாகிய ஒருபொருட்கண் இரண்டும் மூன்றுமாகிய ஈருருபுகள் சென்றியைதலின் அவ்வகையான் மயக்கமாயிற்று என்பதாம்.

'புலிகொல் யானை' என்ற தொடரில் இரண்டனுருபையோ அல்லது மூன்றனுருபையோ வைத்து விரிப்புழியல்லது, எது வினைமுதல்? எது செயப்படுபொருள்? எனத் தெரிதற்கில்லை. அங்ஙனம் உருபு விரியாத பொழுதும் அதன் பொருளை அறிய வேண்டும் எனில், இத் தொடருக்குப் பின்னே வரும் சொல்லைக் கொண்டேயறிய முடியும் என்பது கூசு-ஆம் நூற்பாவின் கருத்தாகும். மெய்யறி பனுவல் - பொருள் வேறுபாடு அறியவரும் சொல். ஈற்றுப் பெயர் - யானை.

கூஎ ஆம் நூற்பா: 'நோக்கல் நோக்கமும்' (கூங), இவ்வோம்படைச் சொல்லும் இரண்டாம் வேற்றுமைக்குரியன. ஆதலின் இவ்விரு பொருண்மையையும் ஒருங்கு கூறலாமெனில், அற்றன்று. முன்னையது தனக்குரிய இரண்டாம் வேற்றுமைப் பொருளோடு மூன்றற்கும் ஐந்தற்கும் உரியதாகி வருவது; பின்னையது தனக்குரிய இரண்டாம் வேற்றுமைப் பொருளோடு மூன்றும் வேற்றுமைக்கு மட்டுமே வருவது; ஆதலின் வேறு கூறினர் என்பது. அல்லது. ஓம்படைப் பொருள் இரண்டற்கும் மூன்றற்கும் உரிய என்பதைக் கூறவே இந்நூற்பாவைத் தனியே கூறினர் என்றலுமாம்.

கூஅ ஆம் நூற்பா: உறைநிலப் பெயர்-யானை வாழும் இடம் (காடு). காட்டது யானை என்புழி, காட்டது என்பது உறைநிலப் பெயராம். அதனோடு 'அது' என்ற ஆறனுருபு வந்தது.

க00 ஆம் நூற்பா: 'பழியினஞ்சும்' என்பது ஏதுப் பொருளாகவும், 'பழியை அஞ்சும்' என்பது செயப்படு பொருளாகவும் இருத்தலின் மயக்கமின்றேனும், அச்சக்கிளவியாகிய ஒருபொருளில் ஐந்தும் இரண்டுமாகிய ஈருருபுகள் சென்று மயங்குதலின் இதுவும் மயக்கமாயிற்றும்.

க0க ஆம் நூற்பா: இந்நூற்பா பொருள் மயக்கத்திற்குக் கூறப்பட்ட புறனடையாகும். பொருள் மயக்கத்தை இருவகையாகச் சேனாவரையர் பிரித்துக் கூறுவர். ஒன்று, தன்பொருளில் தீராது பிறிதொன்றன் பொருட்கண்சேருவது. பிறிதொன்று, ஒருபொருளில் ஈருருபு சென்று மயங்குவது. அச, அசு, கூஉ, கூங, கூஎ, கூஅ, கூகூ, கக0 ஆகிய நூற்பாக்கள் முன்னைய வகையைச் சேர்வன. அரு, அஎ, அஅ, அகூ, கூ0, கூரு, கூசு, க00 ஆகிய இவை பின்னைய வகையைச் சேர்வன. இந்நூற்பா முன்னையதற்குக் கூறிய புறனடையாம். 'வழிபோயினு

ரெல்லாம் கூறை கோட்பட்டார்' என்புழிப் பொதுவாக வழிபோயினா ரெல்லாம் எனக்கூறப்படினும், கூறை (ஆடை) கோட்படுதல் கடவு ளர்க்கு எய்தாதவாறு போல, இப்புறனடையும் பொதுவாகப் பொருள் மயக்கத்திற்கு உரியதாகக் கூறப்பட்டதேனும் பொருள்மயக்கத்தில் முன்னையதற்கேயாகும் என்பது சேனாவரையர் கருத்து.

௧0௨ ஆம் நூற்பா: 'உருப் தொடர்ந்தடுக்கிய' என்பதற்குப், பல உருபும தம்முள் தொடர்ந்தடுக்கி எனப் பொருள் கூறினும், எடுத்துக் காட்டில் ஒருருபே அடுக்கி வருமாற்றிற்கு இலக்கியம் காட்டினர் சேனாவரையர். ஏனைய உரையாசிரியர்களனைவரும் ஒருருபு தொடர்ந் தடுக்குதற்கும், பல உருபுகள் தொடர்ந்தடுக்குதற்கும் இலக்கியம் காட்டுவர். இவர்களுள் தெய்வச்சிலையார்மட்டும் இரண்டு முதல் (ஆறு நீங்கலாக) ஏழுவரை உள்ள உருபுகள், ஒவ்வொன்றும் அடுக்கி வருதற்கு ஒவ்வொரு இலக்கியம் காட்டுவர். அப்பாடல்கள் மிக்க சிறப்புடையன. அதனை யான் கழகவழிப் பதிப்பித்துள்ள தெய்வச்சிலை யார் உரையில் விளக்கியுள்ளேன். ஆண்டுக் காண்க.

உருபு பல அடுக்கி வந்ததற்கு இளம்பூரணர் 'கோட்டை நுனிக்கட் குறைத்தான்', 'தினையில் கிளியைக் கடியும்' என்பனவற்றை எடுத்துக் காட்டினர். 'சாத்தன் தாயைக் காதலன்' 'நாய் தேவனாயிற்று' என்பன வற்றில் தாயை, தேவன் என்பன பயனிலைக்கு அடைமொழியாய் நின்றாற்போல, இவற்றிலும் நுனிக்கண், கிளியை என்பன பயனிலைக்கு அடைமொழியாய் நிலறனவாகலின், இவை பல உருபு தொடர்ந்து அடுக்கியமைக்கு எடுத்துக்காட்டு ஆகா என மறுத்தனர் சேனாவரையர். எனினும் நச்சினார்க்கினியர் இவற்றை அடைமொழி என்றல் பொருந் தாது என மறுப்பர்.

இந்நூற்பா முதல் (௧0௬ ஆம் நூற்பா நீங்கலாக) ௧௧௪ ஆம் நூற்பா வரை வேற்றுமை இலக்கணத்தில் பிறழ்ந்து வழீஇ வருவன வற்றை ஆசிரியர் கூறுகின்றார் என்பது சேனாவரையர் கருத்து.

௧0௩ ஆம் நூற்பா: எல்லா உருபுகளும் இடையிலும், இறுதி யிலும் விரிந்துவரும் என்றாரேனும், ஆறும் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் இறுதிக்கண் விரியா என்று கொள்க. ஆடை சாத்த னது, கூகை குன்றத்துக்கண் என இறுதிக்கண் விரிப்பின் ஆடை சாத்த னதாயிற்று, கூகை குன்றத்துக்கண் உள்ளது எனப் பொருள்படுத லின், அங்ஙனம் விரித்தல் பொருந்தாதாம். ஆனால் ஆடை சாத்தனது என்புழி சாத்தனுடையது என வினைக்குறிப்பாகப் பொருள் கூறின், ஆறனுருபும் இறுதிக்கண் விரிக்கப்படும்.

உருபுகள் இறுதியில் வரும் என்ற கருத்து ௬௬ ஆம் நூற்பாவி லேயே பெறப்படுதலின், ஈண்டு இடையில் வருவதை மட்டும் ஆசிரியர் கூறியிருக்கலாம். 'இறுதியும்' என்று கூறியது மிகையன்றோவெனின்; அற்றன்று உருபுகள் இடையிலும் இறுதியிலும் விரியும் என்பது எல்லா உருபுகளுக்கும் ஒக்குமேனும், அறன் உருபிற்கும் ஏழன் உருபிற் கும் இறுதியில் விரிதல் பொருந்தவில்லை. இவ்வரையறையைப் பின்னர் (௧0௫ ஆம் நூற்பாவில்) ஆசிரியர் கூறுகின்றாராதலின், அதற்கு முன் னர் உருபுகளனைத்தும் இறுதியிலும் இடையிலும் விரிந்து வருமென ஈண்டுக் கூறினாலன்றி, பின்னர்க் கூறும் விதிவிலக்கு இனிது ஏலாதாக லின் 'இறுதியும்' என்று ஈண்டுக் கூறவேண்டியது இன்றியமையாத

தாயிற்று. கல்லாடரும் இதனைத் தழுவுவர். தெய்வச்சிலையார் மட்டும் இந்நூற்பாவிற்கு வேறு உரை கூறுவர். அதனை அவருரையான் அறிக.

௧௦௪ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் மட்டும் வேறு உரை கூறுவர். ஆறும வேற்றுமையுருபு பிறவுருபுகளை ஏற்று வரும் என்ற கருத்தைத் தெய்வச்சிலையாரும், சிவஞானமுனிவரும் வன்மையாக மறுப்பர். அதனை அவரவர் உரையான் அறிக.

௧௦௫ ஆம் நூற்பா: சேனாவரையர் கருத்தின்படி ஈதொன்றே உருபு மயக்கமுணர்த்தும் நூற்பாவாகும். 'கிழங்கு மணற்கு ஈன்ற' என்புழி, கு என்ற நான்காம் வேற்றுமை உருபு, தன் பொருளாகிய கொடைப் பொருளின் நீங்கி, 'மணற்கண் ஈன்ற' என ஏழாம் வேற்றுமை இடப் பொருளிலேயே வைத்துச் சொல்லப்படுதலின் உருபு மயக்கமாயிற்று. பொருள் மயக்கத்திற்கும் உருபு மயக்கத்திற்கும் உரிய வேற்றுமையை இவ்வியலின் தொடக்கத்தில் சேனாவரையர் கூறியிருப்பினும், இங்கும் அதனை வேறுவகையாக விளக்குகின்றார்.

'கரும மல்லாச் சார்பென் கிளவிக்கு, உரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை' (அச) என்ற நூற்பாவில் அரசரைச் சார்ந்தான் என்ற கருமமல்லாச் சார்பு, அரசர்கட் சார்ந்தான் என ஏழாம் வேற்றுமையிலும் வரும் எனக் கூறப்பட்டது. இங்கும் 'மணற்கீன்ற' என நான்கனுருபில் வைத்துச் சொல்லப்பட்ட சொல். 'மணற்கண் ஈன்ற' என ஏழாம் வேற்றுமையில் வரும் எனக் கூறப்பட்டுள்ளது. ஆதலின் இவற்றிற்குரிய வேற்றுமை என்னை? என்பது வினா. அரசரைச் சார்ந்தான என்பது, அரசர்கட் சார்ந்தான் என வரினும் அச்செயப்படு பொருட்கும் இடப்பொருட்கும் இயைபு இருக்கின்றது. அவ்வியைபு, முதற்பொருள் சினைப்பொருளுக்கு ஆதலும், சினைப்பொருள் முதற் பொருளுக்கு ஆதலுமாகிய 'தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணும் ஆகுபெயர்' போன்றது. இங்குக் கூறப்பட்ட உருபு மயக்கத்திலோ மணற்கீன்ற என்புழியுள்ள குவ்வுருபு மணற்கண் ஈன்ற என ஏழனுருபாகவே திரிந்து வருகின்றது. இக்குவ்வுருபிற்குரிய கோடற் பொருட்கும், கண்ணுருபிற்குரிய இடப்பொருட்கும் சிறிது இயைபில்லை. இவ்வியைபின்மை, இடப்பெயர் அவ்விடத்திற்குரிய பொருளுக்காகும் இடவாகு பெயர்போன்ற 'ஒப்பில் வழியாற் பொருள் செய்யும் ஆகுபெயர்' போன்றது ஆகும் என்பது விடை.

சேனாவரையர் முன்னர்ப் பாகுபாடு செய்து கொண்டபடி, ௧௦௨ முதல் ௧௧௧ வரையுள்ள நூற்பாக்கள் வேற்றுமை யிலக்கணத்தில் பிறழ்ந்து வழீஇ வரும் அதிகாரத்தைச் சார்ந்தது. அவர் கருத்தின்படி இந்நூற்பா உருபு மயக்கத்திற்குரியது. ஆதலின் இது ௧௧௧ ஆம் நூற்பாவை அடுத்து இருத்தலே முறைமையாம். ஆயினும் இவ்விடத்து இருப்பதற்குக் காரணம என்ன? என்பதே ஈண்டைய ஆய்வு. இதற்குச் சேனாவரையர் தரும் அமைதி மிகவும் நுண்மையுடையது. 'எந்த வுருபில் எந்தச்சொல் வைத்துக் கூறப்பட்டதோ அந்தச்சொல்லின் அவ் வுருபையே மாற்றி, வேறுருபை வைத்துக் கூறுதல் இவ்வுருபு மயக்கத்தின் இலக்கணமாகின்றது. ஆதலின் இது இலக்கணத்திற்குப் பொருத்த முடையதன்று. ஆயினும் இதுவே உருபுமயக்கத்திற்குரிய இலக்கணமாக இருத்தலின் இது வழுவமைதியாயிற்று. ஆதலின் இவ்வதிகாரத்தில் கூறப்பட்டது என்பது.

எனவே, பொருள் மயக்கம் போன்று, உருபு மயக்கத்தை இலக்கணமாக ஏற்றுக்கொள்வதற்கில்லை என்பது தெளிவாகின்றது. இந் நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் வேறுரை கூறுவர். அதனை அவர் உரையான் அறிக.

ஆகுபெயர் என்பது, யாதானும் ஒரு இயைபுப்பற்றி ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆகுவதாம். இடவாகுபெயரும் இத்தகையதே. ஆதலின் யாதொரு இயைபுமில்லாத உருபு மயக்கத்திற்கு ஒப்பில்வழியால் பிறிது பொருள் சுட்டும் ஆகுபெயரைச் சேனாவரையர் உவமை காட்டுவது பொருந்துவதன்றாம்.

கஎ ஆம் நூற்பா: 'மரத்தைக் குறைத்தான், வேலான் எறிந்தான் என உடன்பாட்டில் வருகின்றபொழுது, ஐயுருபும் ஆனுருபும் முறையே செயப்படுபொருளையும், கருவிப்பொருளையும் உணர்த்துகின்றன. ஆனால் மரத்தைக் குறையான், வேலான் எறியான் என எதிர்மறைச் சொல்லில் கூறுங்கால் செயப்படுபொருளோ, கருவிப் பொருளோ தோன்றுமாறில்லை. எனினும் அவை எதிர்மறைச் சொல்லில் வரும் பொழுதும் திரியாது வரும் என்று ஆசிரியர் கூறுகின்றார். இதற்குக் காரணம் என்ன? என்பதே வினா. சேனாவரையர், 'எதிர்மறைவினையும் விதிவினையோடொக்கும்' என்பது நூல் முடிபாகலின், ஆசிரியர் இவ்வாறு கூறினார் என்பர். நச்சினார்க்கினியரும், பிரயோகவிவேக நூலாரும் ஆசிரியர் ஆணையால் கொள்க என்பர். சங்கரநமச்சிவாயர் ஒருவினை நிகழ்வுழி அவ்வினைக்குக் கருத்தாவும், செயப்படுபொருளும் முதலியவாக பெயர்ப்பொருளை வேற்றுமை செய்து நின்ற வேற்றுமை உருபுகள், அவ்வினை நிகழா வழியும் அவ்வாறு நிற்றலால் இங்ஙனம் கூறப்பட்டதென்பர். எனினும் இதன் உண்மை ஆசிரியர்க்குப் புலனாவதல்லது நம்மனோர்க்குப் புலனாகவில்லை.

கஅ ஆம் நூற்பா: 'ஐ, ஆன், கு' என்பதே முறை. ஆயினும் 'கு, ஐ, ஆனென' கூறியிருப்பதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் மிக நுட்பமாக ஆராய்கின்றார். இம்மூன்றுருபுகளுமே அகரத்தொடு பொருந்துமியல்பின. ஆயினும் குகரமும் ஐகாரமும் ஈறுகெட்டு அகரம் பெறுவதும், ஆன் என்பது ஈறுகெடாது அகரம் பெறுவதுமாகிய வேறுபாடுடைமையின், கு, ஐ என்பனவற்றை முன்னரும், ஆன் என்பதைப் பின்னரும் வைத்தார் என்பது. அங்ஙனம் கு, ஐ என்பனவற்றை இயைய வைப்பவர் ஐகாரத்தை முன் வையாதது செய்யுளின்பம் நோக்கியேயாம் என்பது. இந்நுண்மை பிறருரையில் காணாதது. ஆனால் நன்னூலார் உருபு நின்ற முறை ஒன்றையே நோக்கி 'ஐ, ஆன் குச் செய்யுட்கு அவ்வு மாகும்' (நன்-ஙகஅ) என்றனர்.

உருபுகள் எல்லாம் இடைச் சொற்களே. இடைச்சொற்களெல்லாம் திரியுமென்று இடையியலுள் (சொல்-உருக) கூறப்படுகின்றது. ஆதலின் அவ்விதியின்கண்ணேயே இம்மூன்றுருபுகளும் (இடைச் சொற்களும்) திரியுமென்பது பெறப்படுமே எனின், அற்றன்று. அங்குக் கூறப்பட்ட திரிபு பொதுப்படக் கூறியிருப்பினும், அவ்வியலில் உணர்த்தப்படும் இசைநிறை, அசைநிலை, தத்தம் குறிப்பில் பொருள் செய்குந ஆகிய மூன்றற்குமேயாம் என்பது ஆண்டுக் கூறப்படும். ஆதலின் இவ்வுருபுகளுக்குரிய சிறப்பு இலக்கணத்தை ஈண்டுக் கூறுதலே பொருத்தமுடைத்தாம். அன்றியும் அங்குக் கூறப்படும் பொது இலக்கணத்தால் இச்சிறப்பிலக்கணமும் அடங்குதல் ஆசிரியர்க்குக் கருத்

தாயின் 'பிறிது பிறிதேற்றலும்' (க0ச), அங்குக்கூறப்படும் 'பிறிதவண் நிலேயல்' (உருக) என்ற பொதுவிலக்கணத்தில் அடங்குமெனக் கூறுது விட்டிருப்பர். அங்ஙனம் ஆசிரியர் கூறுது அதனைத் தனித்துக் கூறு தலின், இதனையும் தனித்தே கூறவேண்டு மென்பதாம்.

கக0 ஆம் நூற்பா: இரண்டு மூன்று, ஐந்து, ஆறு ஏழாம் வேற்றுமைக் குரிய பொருண்மைகள் தத்தம் உருபுகளில் வைத்து விரிக்கப் படுதலோடு, நான்காம் வேற்றுமை உருபிலும் வைத்து விரிக்கப்படும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். எனவே இது தன்பொருளில் தீராது பிறிதொன்றன் பொருட்கண் சேரும் பொருள் மயக்கமாகும். எனவே அவ்வதிகாரத்திடையே (அச முதல் க0க வரையுள்ளன) இதனையும் வைத்தல் பொருத்தமாம். எனினும் இதனை ஆண்டு வையாது, வேற்றுமை யிலக்கணத்தில் பிறழ்ந்து வழீஇ வரும் இவ் வதிகாரத்திடை வைத்தற்குரிய காரணத்தைச் சேனவரையர் நன்கு விளக்குகிருர். முன்னர்க் கூறப்பட்ட பொருள் மயக்கம் (அச முதல் க0க வரையுள்ளன) தொகைக்கண் மயங்குவன; இதுவோ தொடர் மொழிக்கண் மயங்குவன; ஆதலின் இதனை வேறு கூறினர் என்பது.

ககஉ ஆம் நூற்பா: இந்நூற்பா முதல், இவ்வியல் முடிய உள்ள நூற்பாக்கள் சேனவரையர் கருத்தின்படி 'பிறவும் இயைபுடையன' என்ற தலைப்பில் கூறப்படுவதாகும்.

தொழில் நிகழ்தற்குக் காரணமாக இருப்பன எட்டாம். அவற் றுள் வினை என்பது ஒன்று. வினை, தொழில் என்பன ஒரு பொருள னவே. அங்ஙனமாகத் தொழிற்குக் காரணம் (அதாவது வினைக்குக் காரணம்) வினை என்பது எங்ஙனம் பொருந்தும்? என்பது வினு. வனைந் தான் என்பது வனைதலைச் செய்தான் எனப் பொருள்படும். எனவே வனைதல் செயப்படு பொருளாகின்றது. செயப்படுபொருள் தொழிற் குக் காரணமாதலின் வனைதல் என்ற வினையும் தொழிற்குக் காரண மாயிற்ரும். வனைதலைச் செய்தான் என்பதில் வனைதல் சிறப்புத் தொழி லும், செய்தல் பொதுத் தொழிலுமாம். பொதுத் தொழிலுக்குச் சிறப்புத் தொழிலைக் காரணமாகக் கூறல் மரபாதலின், வினைக்கு (பொதுத் தொழிலுக்கு) வினை (சிறப்பு) காரணமாயிற்று. இம்மரபு பற்றியே 'கொளலோ கொண்டான்' என்ற தொடர், கொள்ளு தலையோ செய்தான் என விரிக்கப்பட்டுக் கொள்ளுதல் என்பது செயப்படுபொருள் நீர்மைத்தாய், செய்தான் என்னும் பொதுவினைக் குக் காரண மாயிற்றென்க.

இத்தொழில் முதனிலை எட்டும் வேற்றுமையியலில் கூறப்பட்டன வாக இருக்க, அவற்றை ஈண்டும் கூறுவானேன்? என்ற வினவை எழுப்பிக் கொண்டு, அதற்கு விடை கூறுகின்றூர் சேனவரையர். அவ்விடையைக் காண்பதற்கு முன், இவ்வெட்டும் வேற்றுமை யோத் துள் கூறப்பட்டனவா என்பதை ஆராய்தல் வேண்டும். இதனை நச்சினர்க்கினியர் மிக அழகாக விளக்குகின்றூர். அது வருமாறு:— செய்வது-முதல் வேற்றுமையில் அடங்கும். வினை, செயப்படுபொருள்- இரண்டாம் வேற்றுமையில் அடங்கும். வினைமுதல், கருவி-மூன்றும் வேற்றுமையிலடங்கும். இன்னதற்கு, இது பயன்-நான்காம் வேற்றுமை யிலடங்கும். நிலம், காலம்—ஏழாம் வேற்றுமையிலடங்கும். (எனி னும் சேனவரையருக்கு இவ்வெட்டனுள் வினை என்பது மட்டும் வேற்

றுமையியலுள் கூறப்படவில்லை என்பது கருத்து.) இனி வேற்றுமையியலுள் பெறப்பட்ட இவ்வெட்டும், ஈண்டும் கூறியதற்குரிய காரணத்தைக் காணலாம். (க) இரண்டாவதற்கு இயற்றப்படுவது, வேறுபடுக்கப்படுவது, எய்தப்படுவது என மூன்று வகையாகப் பிரித்துப் பொருள் கூறப்பட்ட போதிலும், அவையெல்லாம் செயப்படுபொருள் என்ற ஒன்றிலேயே அடங்கிவிடும். (உ) ஏதுப்பொருள் மூன்றும் வேற்றுமைக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கும் உரியதாகக் கூறப்படினும், அதனை மூன்றாம் வேற்றுமையது கருவிக்கண்ணேயே அடக்கிவிடலாம். (ங) ஏழாம் வேற்றுமைக்கு வினைசெய் இடமும், காலமும் பொருளாகக் கூறப்பட்டிருப்பினும், வினைசெய்யிடத்தைக் காலத்தின்கண் அடக்கிவிடலாம். (ச) தொழில் நிகழ்ச்சிக்குக் காரணமாய எட்டனுள் வினை நீங்கலாக மற்ற எழுமே வேற்றுமையியலுள் கூறப்பட்டனவன்றி வினையென்பது ஆண்டுக் கூறப்படவில்லை. அதனால் தொழில் முதனிலைக்கு வினையும் இன்றியமையாததே என்பதை ஈண்டுக் கூறவேண்டும். எனவே வேற்றுமையியலில் விரிந்து கிடந்தனவற்றைத் தொகுத்தும், ஆண்டுப் பெறப்படாத வொன்றைக் கூட்டியும் கூறுதற்காகவே இந்நூற்பா எழுந்தது என்பது பெறுதும். இங்ஙனம் தொகுத்துக் கூறுதலின் பயன், பின்னர் வினைச் சொற்கிலக்கணம் கூறுதற்கேயாம்.

இவ்வெட்டும் வினைக்குக் காரணமாயின் வினையியலுள் கூறுது ஈண்டுக் கூறுவானேன்? இவ்வினாவிற்கு உரையாசிரியர்களனைவரும் ஒவ்வொரு விதமாக விடை கூறியிருக்கின்றனர். நச்சினார்க்கினியர் 'வேற்றுமைப் பொருள்கள் தோன்றுவதற்கு இவ்வினைமுதனிலைகள் இடனாய் இருத்தலின் ஈண்டுக் கூறினார்' என்பர். கல்லாடர் 'வேற்றுமைகளைப் பெயர்க்கே உரிமை செய்து கூறுதலின் வினையோடென்னுமியல்பில வென்பதுபட்டு நின்றமையின், அவ்வினை வருங்காலும் வேற்றுமைகளோடு வருவது என்பது அறிவித்தற்கு ஈண்டுக் கூறப்பட்ட'தென்பர். பழைய உரையாசிரியர் 'தொழில் வருங்கால் வேற்றுமையோடல்லது வாராதென்பதற்கு ஈண்டுக் கூறினார்'என்பர்.

ககச ஆம் நூற்பா: ஆகுபெயரும் அன்மொழித்தொகையும் ஒன்றே என்பது, சேனாவரையருக்குக் கருத்தாகும். பரிமேலழகரும் இக்கருத்தினரே. ஆதலின், இவ்வன்மொழித்தொகை (ஆகுபெயர்) எச்சவியலில் கூறப்படுதலின் ஈண்டும் கூறுவானேன்? என்ற வினாவைத் தாமே எழுப்பிக் கொண்டு, அதற்கு விடை காண்கின்றார் சேனாவரையர். (க) பெயர் இயற்பெயர், ஆகுபெயர் என்று இருவகைப்படும். இவற்றுள் பொற்றொடி என்பது ஒரு பெண்ணின் இயற்பெயர் அன்று. ஆதலின் அது ஆகுபெயராம். எனினும் பொன், தொடி ஆகிய இவ்விரு பெயர்களும் சேர்ந்து இத்தொகை யாற்றலால் உடையளாகிய பெண்ணைக் குறித்தலின், இது அன்மொழித்தொகையும் ஆயிற்று. (எனவே பெயர் நிலையை நோக்கி ஆகுபெயர் 'என்றும், தொகை நிலையை நோக்கி அன்மொழித்தொகை என்றும் கூறுதல் இவர் கருத்தெனத் தெளியலாம்.) (உ) இங்ஙனமே வினையெச்சம் வினையாதல்பற்றி வினையியலுள்ளும், பிரிநிலையேகாரம் முதலாயின இடைச்சொல்லாதல்பற்றி இடையியலுள்ளும் கூறப்பட்டனவேனும், இவ்விரண்டும் எச்சமாகி வருதல்பற்றி எச்சவியலுள்ளும் கூறப்பட்டன. ஆதலின் ஒரு செய்தியே ஈரிடத்தும் கூறப்படினும், எடுத்துக் கூறும் நோக்கம் அவ்விரிடத்தும் வேறுவேறாயிருத்தலின் இவை போல்வனவெல்லாம் கூறியது கூறலன்றாம்.

தொல்காப்பியர் ஈண்டு ஒருமொழி யிலக்கணத்தைக் கூறவில்லை என்றார் சேனாவரையர். அதற்குச் சிவஞான முனிவர் காரணம் கூறுவர். அது வருமாறு:— 'அற்றேல், இவ்வொருமொழி முடிபிலக்கணம் ஆசிரியர் கூறாமை குன்றக்கூறலாம் பிறவெனின்; இந்திரனுக்குப் பிருகற்பதி இவை வழு, இவை வழுவில்லனவென வடமொழிகளைத் தனித்தனி யெடுத்தோதலுற்றார்க்குத் தெய்வயாண்டில் ஆயிரம் யாண்டு சென்றது; சென்றுஞ் சொற்கள் முடிந்திலவென மாபாடியத்துள் ஆசிரியர் பதஞ்சலியாரெடுத்தோதினார். தமிழ் மொழியுமவ்வாறு பெருகிக்கிடத்தலின், அவற்றை இவைவழு, இவை வழுவில்லனவெனத் தனித்தனி யெடுத்தோதப்புகின், முடிவு பெறாது. ஆசிரியருக் கொருவாற்றான் முடிவு பெறினும், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் அவற்றைக் கற்பதற்கே ஆயுள் போதாவாம். ஆகவே, அவற்றைக் கற்கப் பலருடன் பயின்று பிறர்க்குரைத்துக் கல்வி நிரப்புமாறில்லையாகலான், அவ்வாறு கூறாது, சிலவற்றைப் பொதுவிதியானும், சிலவற்றைச் சிறப்பு விதியானும், சிலவற்றை எடுத்தோத்தானும், சிலவற்றை இலேசானும், சிலவற்றைப் புறனடையானும், சிலவற்றை உத்திவகையானும், உணர்ந்து கொள்ளுமாறு தொகுத்து நூல்செய்தார் ஆசிரியராகலின், ஆகாதென்க'.

ஒரு வினைமுதலின் பெயர் அவனால் செய்யப்பட்ட பொருளுக்கு ஆகிவரின் அது கருத்தா வாகுபெயராம். இதனையே தொல்காப்பியர் 'வினைமுதலுரைக்கும் கிளவி' என்ற சொல்லால் விளக்கினர். இதற்குக் காட்டுத் தருவதில் இளம்பூரணரும் கல்லாடரும் ஒன்றுபடுவர். பழைய உரையாசிரியர் இவ்விருவர் கருத்துடன் சேனாவரையர் கருத்தையும் ஏற்பர்.

ஆகுபெயரின் வகைகளைக் கூறிய ஆசிரியர் அதன் இலக்கணத்தைக் கூறாமைக்குக் காரணம், அது அப்பெயரானே விளங்குதல்பற்றியாம். இதனையே, 'அனைய மரபினவே' என்பதால் ஆகுபெயரிலக்கணத்திற்குத் தோற்றுவாய் செய்தார் என்றார் சேனாவரையர். இங்ஙனம் தோற்றுவாய் செய்யப்பட்ட இலக்கணத்தை நன்னூலார் 'ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத் தொன்முறை உரைப்பன ஆகுபெயரே' என நூலான் விளக்கினர்.

வேற்றுமை மயக்கம் கூறும் இவ்வியலில், இவ்வாகுபெயர் இலக்கணம் கூறியிருப்பதற்குக் காரணம் என்ன? இதில் கருத்து வேற்றுமை காணப்படுகின்றது. இளம்பூரணர்: பெயர்கள் அனைத்தும் எழுவாய் வேற்றுமையே. இவ்வாகுபெயர்கள் தாம்தாம் கூறப்பட்ட பொருள் மேல் நில்லாமல் தமக்கு இயைபுபட்ட பிறபொருளை உணர்த்தலின் இவையும் மயக்கமாம் தன்மையை யுடையனவேயாம். ஆதலின் இதுவரை இரண்டாம் வேற்றுமைமுதல் ஏழாம் வேற்றுமைவரையுள்ள வேற்றுமை மயக்கங்களை உணர்த்திய ஆசிரியர், இந்நூற்பாவில் எழுவாய் வேற்றுமை மயக்கத்தை உணர்த்துகின்றார். ஆதலின் இதனை ஈண்டுக் கூறினர் என்பர். (இக்கருத்துத் தற்பொழுதுள்ள இளம்பூரணர் உரையில் இல்லை.) இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) ஆகுபெயர் எழுவாய் வேற்றுமையாய் நிற்பதன்றி ஏனை வேற்றுமையும் ஏற்று வருதலான் அதனை எழுவாய் வேற்றுமை மயக்கம் என்று மட்டும் கூறுதற்கில்லை. (உ) அன்றி, அதனை எழுவாய் வேற்றுமையாகவே கொண்டபோதிலும், அது

வேறுபிற வேற்றுமையோடும் மயங்கவில்லை; ஆதலின் எழுவாய் வேற்றுமை மயக்கம் என்று கூறுதற்கில்லை என்பது.

ஆகுபெயரிலக்கணம் ஈண்டிருப்பதற்குச் சேனவரையர் கூறும் காரணம்: வேற்றுமை மயக்கமாவது ஒரு வேற்றுமைக்குரிய பொருட்கண் இன்னொரு வேற்றுமை சென்று மயங்குதலாம். இவ்வாகுபெயர்ச் சொல்லும், ஒரு சொல் நிற்கவேண்டிய இடத்தில், பிறிதொரு சொல் சென்று மயங்குதலை இலக்கணமாக உடைமையின் ஈண்டுக் கூறுதற்கு இயைபுடைத்தாயிற்று. தெங்கு தின்றான் என்புழி, தெங்கினது காய் என்றே கூறவேண்டும். அங்ஙனம் கூறாது தெங்கு எனக் கூறுவதால் இதுவும் மயக்கமாயிற்று.

கக௫ ஆம் நூற்பா: யாதானும் ஓரியைபுபற்றி ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆகிவருதலே ஆகுபெயர் என்றும், அது முதலாகுபெயர்முதலாகப் பலவகைப்படும் என்பதும் முன்னைய நூற்பாவில்கூறப்பட்டது. இந்நூற்பாவில் அங்ஙனம் பலவகையாகக் கூறப்படும் ஆகுபெயர்களை இருவகையால் அடக்கலாம் என்று கூறப்படுகின்றது. (க) தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணல் - ஒரு பொருள் தம்பொருளின் வேறல்லாத பொருளைக் குறித்து வருவது. முதற்பெயர் சினைக்காதலும், சினைப்பெயர் முதற்காதலும், பண்புப்பெயர் அப்பண்பு உடையதனை உணர்த்தலும், ஒரு பொருள் தோன்றுதற்கு முதற்காரணமாக இருக்கும் பெயர் அக்காரணத்தினாய பொருளை உணர்த்தலும் இதன்கண் அடங்கும். இவ்வியைபு அவ்வப் பொருள்களினின்றும் பிரித்தற் கியலாதது. ஆதலின், பிற்காலத்தார் இதனை 'விடாத ஆகுபெயர்' என்பர். (உ) ஒப்பில் வழியால் பிறிதுபொருள் சுட்டல் - மேற்கூறியவாறு பிரிக்க இயலாத இயல்பின்றி பிரித்தற்கியலும் பெயர்களுள், ஒன்றன்பெயர் ஒன்றற்கு ஆகிவருவது. இடத்தின் பெயர் அவ்விடத்திலுள்ள பொருளையுணர்த்தும் இடவாகுபெயரும், இருபெயரொட்டாக வந்து அன்மொழிப் பொருளை யுணர்த்தும் இருபெயரொட்டாகு பெயரும், செய்தவனின் பெயர் அவனாற் செய்யப்பட்ட பொருளுக்கு ஆகிவரும் கருத்தா வாகுபெயரும் இதன்கண் அடங்கும். இவ்வாகு பெயர்கள் ஓராற்றான் இயைபுடைய பொருளைக் குறிப்பினும், முதலுக்கும் சினைக்கும் உள்ள இயைபு போன்றோ, பண்பிற்கும் பண்புக்கும் உள்ள இயைபு போன்றோ நெருங்கிய இயைபில்லாது இருத்தலின், இதனை 'விட்ட ஆகுபெயர்' என்ப.

இவ்வேற்றுமையை நன்குணர்தல் வேண்டும் என்பதற்காகவே ஆசிரியர் 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்' என்றார். இவ்வரியைப் பிரித்து வேறொரு நூற்பாவாகக் கொள்வர் இளம்பூரணர். இக்கருத்தை இரு காரணங்களால் மறுக்கின்றார் சேனவரையர். (க) இதனைத் தனி நூற்பாவாகக் கூறின் வேற்றுமை என்பது, எவற்றின் வேற்றுமை? என்பது இனிது விளங்காது. இந்நூற்பாவோடு இணைந்த வரியாக இருப்பின், தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும், ஒப்பில் வழியால் பிறிதுபொருள் சுட்டலும் ஆகிய இவற்றின் வேறுபாடு என்பது நன்கு விளங்கும். (உ) எழுத்ததிகாரம் கஉஎ-ஆம் நூற்பாவின் ஈற்றடி 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்' என்றே உள்ளது. மூன்றும் வேற்றுமைக்குரிய வினைமுதற் பொருள்கள் தம்மால் ஊளவாகிய வினைச்சொற்களில் உயிரீற்றின் முன்னரும், புள்ளியிறுதியின் முன்னரும் வருமாயின், அவை இயல்பாதலும் உண்டு; உறழத்

தோன்றுதலும் உண்டு. இயல்பாகின்ற இடம், உறழத் தோன்றுகின்ற இடம் ஆகிய இவற்றினது வேறுபாட்டைப் போற்றியறிதல் வேண்டும் என்பது அந்நூற்பாவின் பொருளாம். அவ்விறுதி அடியைப் பிரிக்காது அந்நூற்பாவோடு இணைத்துக்கூறியதனால்தான், வேற்றுமைஎன்பதற்கு இயல்பாதலும் உறழத் தோன்றலுமாகிய இவற்றது வேற்றுமை எனப் பொருள் காண்டற்கு இனிதாக, எளிதாக வுள்ளது. இளம்பூரணரும் அவ்வரியைப் பிரிக்காது இணைத்தே கூறியுள்ளார். ஆதலின் ஈண்டும் அதே போன்று இவ்வரியையும் இணைத்தே கூறவேண்டுமென்பதாம்,

எனினும், இவ்வரியைப் பிரித்துக்கூறிய இளம்பூரணர் முதலிய எல்லா உரையாசிரியர்களும் வேற்றுமை என்பதற்குச் சேனாவரையர் கொண்ட பொருள் கொண்டிலர். ஆகுபெயர்கள் ஐ முதலிய ஆறு வேற்றுமைப் பொருண்மையிலும் வரும் என்பது அவர்களின் கருத்து. எழுத்ததிகாரத்தும் 'வேற்றுமை மருங்கில் போற்றல்வேண்டும்' என்ற தொடரில் வேற்றுமை என்பதற்கு வேற்றுமைப் பொருட்புணர்ச்சி என உரை கூறினர் அல்லது சேனாவரையர் கொண்ட பொருள் கொண்டிலர்.

கக௬ ஆம் நூற்பா : அளவுப் பெயர்க்கும், நிறைப் பெயர்க்கும், இந்நெற்பதக்கு, இப்பயறுதூணி என்பன காட்டப்பெறுதல் ஈண்டுப் பொருத்தமில்லை. நெல் என முன்னிற்றலின் பதக்கு என்பதும், பயறு என முன்னிற்றலின் தூணி என்பதும், அளவைக் காட்டுமே யன்றி அளவையுடைய பொருளைக்காட்டா. ஆதலின் இவையெல்லாம் 'இசையெச்சம்' என்பர் சிவஞான முனிவர். எனவே பிற உரையாசிரியர்கள் காட்டுவது போலப் பதக்கு, தூணி என்பன அவ்வவ்வளவினையுடைய பொருளைக் காட்டிற்றென்றலே சாலும். இங்ஙனம் கூறவே கக௪ஆம் நூற்பாவில் கூறப்பட்ட இம்மணி நீலம், இப்பொன் குடம் என்பதும் பொருத்தமின்று என்பது தெளியலாம்.

அளவுப்பெயரும், நிறைப்பெயரும் ஆகுபெயராக வரும் எனக் கூறிய ஆசிரியர், எண்ணுப் பெயரும் ஆகுபெயராக வரும் எனக் கூறவில்லை. காரணம்: ஒன்று, இரண்டு என்பன எண்ணைக் குறிக்குங்கால் இயற்பெயராதல் போல, அவ்வெண்ணிக்கையையுடைய பொருளைக் குறிக்குங்காலும் இயற்பெயராகவே கருதப்படும் என்பது பற்றியாம் என்பர் சேனாவரையர். எனினும் எண்ணுப் பெயர்கள் எண்ணைக் குறிக்குங்கால் இயற்பெயராகுமே யன்றி, எண்ணப்படும் பொருளைக் குறிக்குங்கால் ஆகுபெயராகும் என்பதே பொருத்தம். எனினும் சேனாவரையர் எண்ணுப்பெயர் எண்ணப்படும் பொருட்கு உரியவாகும் போதும் இயற்பெயரே யாகுமென்றது க௲அ-ஆம் நூற்பாவில் இவ்வெண்ணுப் பெயரை இயற்பெயரோடு ஒருங்கு வைத்ததைக் கருதிப்போலும். எனினும், நன்னூலாரும், சிவஞானமுனிவரும் எண்ணுப்பெயர் ஆகுபெயர் ஆகுமென்பர். அதுவே பொருத்தமுடைத்தாம்.

## ௪. விளிமரபு

கக௮ ஆம் நூற்பா : பெயர்களுள் விளி ஏற்பனவும் உள; ஏலாதனவும் உள. இதனையே சேனாவரையர் 'கொள்ளும் பெயரோடு' எனவே 'கொள்ளாப் பெயரும் உள' என்றார். ஈண்டுக்கொள்ளும் பெயர், கொள்ளாப் பெயர் என்றது, விளி கொள்வனவற்றையும், அது கொள்ளாதனவற்றையும் குறித்து நின்றது. விளி கொள்ளாப்

பெயர்களை, இவ்வியலில் ௧௨௪, ௧௨௬, ௧௩௭, ௧௩௨, ௧௩௩, ௧௩௮, ௧௫௪ ஆம் நூற்பாக்களிற் காண்க.

௧௧௯ ஆம் நூற்பா : இந்நூற்பாவில் 'அவ்வே' என்ற சுட்டு, இதற்கு முன்னைய நூற்பாவில் உள்ள விளியைச் சுட்டுகின்றதா? அன்றிப் பெயரைச் சுட்டுகின்றதா? என்ற வினாவைத் தாமே எழுப்பிக் கொண்டு அதற்கு விடை கூறுகின்றார் சேனாவரையர். முன்னைய நூற்பாவில் விளிவேற்றுமையாவது யாது? என விளக்கிக் கூறினார் தொல்காப்பியர். ஆதலின், அடுத்த நூற்பாவாகிய இந்நூற்பாவில் 'அவ்வே' எனச்சுட்டுவதும், விளியையே சுட்டும் என்பதுதான் இயற்கை. ஆயினும் சேனாவரையர் 'அவ்வே' என்ற சுட்டு பெயரையே சுட்டுகின்றது என்று கூறி, அதற்கு இருகாரணமும் காட்டுகின்றார். (க) விளிவேற்றுமையாவது பெயரின் வேறன்று. ஆதலின் பெயரைச் சுட்டவே, விளியும் சுட்டப்பட்டதேயாம் என்பது. (உ) இங்ஙனமன்றி 'அவ்வே' என்ற சுட்டு விளியையே சுட்டி நின்றது என்று இந்நூற்பாவில் கூறிவிட்டால், அடுத்த நூற்பாவில் ஆசிரியர் 'அவை தாம்' என்ற பன்மைச் சொல்லால் கூறுதற்கும், உயர்திணையில் உயிரீற்றில் இ, உ, ஐ, ஒ என்னும் ஈறுகளை இறுதியாக உடைய பெயர்களே விளியேற்கும் என்று கூறுதற்கும் இயைபில்லாமல் போகும். இந்நூற்பாவிலேயே 'அவ்வே' என்னும் சுட்டு பெயரைக்குறிப்பதாக வைத்துக் கொண்டால், அதில் விளி கொள்ளும்பெயரும், விளி கொள்ளாப்பெயரும் உள ஆதலின், இரு திறனாக வகுத்துக்கொள்ளலாம். அடுத்த நூற்பாவில் 'அவைதாம்' என்ற பன்மைக்கும் ஏற்பதாக முடியும். ஆதலின் 'அவ்வே' என்ற சுட்டு பெயரையே குறிக்கின்றது என்றனர்.

'விளியைச் சுட்டிய பெயலரச் சுட்டுதல் இடருடைத்து' என்பது: 'அவ்வே' என்ற சுட்டு முன்னைய நூற்பாவில் உள்ள விளியையே சுட்டவேண்டியிருக்கப் பெயரைச் சுட்டுதல் தவறாகும் என்னும் பொருள்படும். சுட்டிய - சுட்டவேண்டியிருக்க.

இவ்வியலில் விளியேற்கும் பெயர்களைக் கூறுங்கால், ஆசிரியர் பெயர்களை நான்கு வகையாகப் பிரித்துக் கூறுகின்றார் என்பது சேனாவரையர் கருத்து. அவை உயர்திணைப் பெயர், உயர்திணை விரவுப் பெயர், அஃறிணைப் பெயர், அஃறிணை விரவுப் பெயர் என்பன. இவற்றுள் உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர் என்பன வெளிப்படை. அஃறிணைப்பெயர் ஆகுபெயராய் உயர்திணையை யுணர்த்தினும், விரவுப் பெயர் உயர்திணையாய் இசைப்பினும், அவை உயர்திணை விரவுப்பெயராகும். விரவுப்பெயர் அஃறிணையாய் வந்தியையின் அது அஃறிணை விரவுப்பெயராகும் என்பது சேனாவரையர் கருத்து..

ஆசிரியர் தொல்காப்பியர் விளியேற்கும் பெயர்களைக் கூறும் பொழுது உயர்திணைப்பெயர்களை முற்கூறுவர். அதன் இடையிடையே உயர்திணை விரவுப்பெயரையும் அடக்கிக் கூறுவர். அடுத்த இரு பெயர்களையும் (அஃறிணைப் பெயர், அஃறிணை விரவுப்பெயர்) தனித்தனியே கூறுவர். எனவே 4 பெயர்களையும் 3 பிரிவாக அடக்கிக் கூறுவர் என்பதாயிற்று. இந்நுண்மை நுண்ணுணர்வினோர்க்கே விளங்கும்; ஏனையோர்க்கு விளங்கா என்பார் 'இவ்வென அறிதற்கு' என்றார் ஆசிரியர்.

கஉ௦ ஆம் நூற்பா : இந்நூற்பாவில் 'அவைதாம்', 'விளிகொள்பெயர்' என்ற இரு எழுவாய்கள் உள்ளன. ஆனால், 'அப்பால் நான்கே' என்ற பயனிலை ஒன்றே உளது. இங்ஙனம் ஈரெழுவாய்களும் ஒரு பயனிலையும் இருப்பின், பயனிலையோடு அதற்கு அயலையும் ஒரு எழுவாயை முன்னர் இணைத்து, அவ்வெழுவாய் பயனிலை இரண்டையுமே பயனிலையாக்கிப் பிறிதொரு எழுவாய்க்கு முடிபாகக்கொள்ளுதல் மரபு ஆகும். அம்மரபுப்படி 'அப்பால் நான்கு' என்னும் பயனிலையை 'விளிகொள் பெயர்' என்ற எழுவாயொடு இணைத்து, இவ்விரண்டையுமே 'அவைதாம்' என்ற எழுவாய்க்குப் பயனிலையாகக் கொள்ள வேண்டும் என்கின்றார் சேனாவரையர்.

உயர்திணைப்பெயர், உயர்திணை விரவுப்பெயர், அஃறிணைப்பெயர், அஃறிணை விரவுப்பெயர் என்ற நான்கனுள், உயர்திணை விரவுப் பெயரை மட்டும் உயர்திணைக்கண் அடக்கி, ஏனையிரண்டையும் தனித் தனியே கூறி முடிப்பர். இங்ஙனம் மூன்று பிரிவாக விளிமரபில் வகுத்துக்கொண்டு, விளியேற்பனவற்றையும் விளியேலாதனவற்றையும் கூறுகின்றார் ஆசிரியர் என்பது முன்னர்க் கூறப்பட்டது. ஈண்டு அங்ஙனம் உயர்திணைவிரவுப்பெயரை உயர்திணைக்கண் அடக்கினார் என்பதற்கு மூன்று காரணங்கள் கூறுகின்றார் சேனாவரையர். அவை வருமாறு :— (க) ஆசிரியர் தொல்காப்பியர் அஃறிணைப்பெயரின் (கருக-ஆம் நூற்பா) வேறாக, அஃறிணை விரவுப்பெயர் (கரு௦-ஆம் நூற்பா) என்ற ஒன்றைக் கூறுவதால், உயர்திணைப்பெயரின் வேறாக உயர்திணை விரவுப் பெயர் என்ற ஒன்றும் உளதாக வேண்டும் என்பது. (உ) உயர்திணைப் பெயர்களில் விளியேற்பன இவை, விளியேலாதன இவை என்பதை கஉ௦ முதல் கசகூ-ஆம் நூற்பா வரை ஆசிரியர் கூறுகின்றார். இவற்றிடையே கஉசு-ஆம் நூற்பாவில் அன்னை, அத்தை என்ற சொற்களும், கருசு-ஆம் நூற்பாவில் மகன், மருமகன் என்ற சொற்களும், கசஎ-ஆம் நூற்பாவில் மகள், மருமகள் என்ற சொற்களும் விளி ஏற்குமாறு கூறுகின்றார். இவையெல்லாம் முறைப்பெயர்கள். முறைப்பெயர்கள் எல்லாம் விரவுப் பெயர்கள் ஆகும் என்பது கஎச - ஆம் நூற்பாவால் அறியப்படும். இவ்விரவுப் பெயர்கள் உயர்திணையைக் குறித்து வருங்கால் உயர்திணை விரவுப்பெயராம் என்பது சேனாவரையர் கருத்து. ஆதலின், உயர்திணையதிகாரத்து (கஉ௦ முதல் கசகூ ஆம் நூற்பா வரை), இவ்வுயர்திணை விரவுப்பெயர்களையும் (கஉசு, கருஎ, கசஎ ஆம் நூற்பாக்களில்) கூறியிருப்பதால், உயர்திணைப்பெயரில் உயர்திணை விரவுப்பெயரும் அடங்கும் என்பது ஆசிரியர் கருத்தாயிற்று என்பர். (ந) உயர்திணைப் பெயர்களில் விளியேலாதன இவை என்பதை ஆசிரியர் கருஎ, கசஉ, கசந, கசஅ ஆகிய நூற்பாக்களில் கூறுகின்றார். இவற்றில் கருஎ-ஆம் நூற்பாவில் கூறப்படும் 'தான்' என்னும் பெயரும், கசந-ஆம் நூற்பாவில் கூறப்படும் 'நீயிர்' என்னும் பெயரும் விரவுப் பெயர்கள். அஃதாவது உயர்திணை விரவுப்பெயர்கள். விளியேலாத உயர்திணைப் பெயர்களிடையே, விளியேலாத இவ்வுயர்திணை விரவுப் பெயர்களையும் ஆசிரியர் கூறியிருத்தலின், உயர்திணைப்பெயருள் உயர்திணை விரவுப்பெயரையும் அடக்கிக் கூறுதல் ஆசிரியர் கருத்து என்பது நன்கு விளங்கும்.

இங்ஙனம் உயர்திணை விரவுப்பெயரை உயர்திணைக்கண் அடக்கிக் கூறிய ஆசிரியர், அஃறிணை விரவுப்பெயரையும் அஃறிணைக்கண் அடக்கிக் கூறாது, தனித்துக் கூறியதென்னை? எனில், கூறுதும். உயர்

திணைக்கண் எவ்வெவ்விறுகள் எவ்வெவ்வாறு விளியேற்கின்றனவோ, அங்ஙனமே உயர்திணை விரவுப்பெயர்க்கண் உள்ள ஈறுகளும் விளியேற்றலின், உயர்திணை விரவுப்பெயரை உயர்திணைக்கண் அடக்க முடிந்தது. ஆனால் அஃறிணைப்பெயர் விளியேற்குமாறு போல அஃறிணை விரவுப்பெயர் விளியேற்காமையின், அதனை அதன்கண் அடக்கிக் கூறவில்லை. இக்கருத்தினால்தான் உயர்திணைப்பெயர் விளியேற்பதை யடுத்துக் 'கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர், விளம்பிய நெறிய விளிக்கும் காலை' என மாட்டேறுபெற நூற்பா யாத்ததும், இதனை யடுத்து இந்நெறியின் வேறாக விளியேற்கும் அஃறிணைப்பெயரை இறுதிக்கண் கூறியதுமாகும்.

எனவே உயர்திணை அதிகாரத்தில் ஆசிரியர் முறைப்பெயர்கள் விளியேற்குமாறு (கஉகூ, கங கூ, கசஎ) கூறியிருப்பதற்கும், தான் (கங எ), நீயிர் (கசங) என்ற பெயர்கள் விளியேலா என்று கூறியிருப்பதற்கும் காரணம், உயர்திணை விரவுப்பெயரை, உயர்திணைக்கண் அடக்கிக் கூறலே ஆசிரியர் கருத்தாதல்பற்றியாம். இது சேனாவரையரின் முடிந்த கருத்து.

ஆனால் இளம்பூரணர், ஆசிரியர் உயர்திணையதிகாரத்தில் முறைப்பெயர் விளியேற்குமாறு கூறியிருத்தற்குக் காரணம் வேறு என்பர். அவர் கருத்து வருமாறு :— உயர்திணைப்பெயர்கள் விளியேற்குமாறு (கஉ௦ முதல் கசகூ வரை) கூறிய ஆசிரியர், அடுத்து விரவுப் பெயர்கள் விளியேற்குமாறு கூறுகின்றார். அங்ஙனம் கூறுகின்றவர் விரவுப்பெயர்கள் எல்லாம், உயர்திணைப்பெயர்கள் எங்ஙனம் விளியேற்குமோ, அங்ஙனமே விளியேற்கும் (கரு௦ ஆம் நூற்பா) எனக் கூறுகின்றார். இங்ஙனம் கூறினும், விரவுப்பெயர்களில் எல்லாப் பெயர்களும் உயர்திணைப்பெயர்கள் போன்றே விளியேற்பன இல்லை எனக்கண்டு கரு௦ ஆம் நூற்பாவால் மாட்டெறிதற்கு ஏற்காத அன்னை, மகன், மகள் முதலிய சொற்களைமட்டும் உயர்திணையதிகாரத்திலேயே கூறிவிட்டு, இவை நீங்கலாக மற்றெல்லா விரவுப்பெயர்களையும், கரு௦-ஆம் நூற்பாவில் உயர்திணைப்பெயர்கள் போன்றே இவையும் விளியேற்கும் எனக்கூறுகின்றார். ஆதலின், உயர்திணையதிகாரத்து முறைப்பெயர் விளியேற்குமாறு கூறியதற்குக்காரணம், ஏனைய பெயர்கள்போல இம் முறைப்பெயர்கள் மாட்டேறு பெறுவதற்கு ஒவ்வாதிருப்பதேயாகும் என்பது இவர் கருத்து.

இங்ஙனம் கூறவே கரு௦ ஆம் நூற்பாவில் கூறும் 'கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்' என்பது விரவுப் பெயரையே குறிக்கும் என்பது இவர் கருத்தெனத் தெளியலாம். எனவே இவ்வதிகாரத்தில் விளியேற்கும் பெயர்கள் உயர்திணைப்பெயர், விரவுப்பெயர், அஃறிணைப்பெயர் என மூன்றே என்பதும், உயர்திணைப்பெயர் விளியேற்குமாற்றை கஉ௦ முதல் கசகூ-ஆம் நூற்பா வரையிலும், விரவுப்பெயர் விளியேற்குமாற்றை கரு௦-ஆம் நூற்பாவாலும், அஃறிணைப்பெயர் விளியேற்குமாற்றை கருக-ஆம் நூற்பாவாலும் ஆசிரியர் கூறுகின்றார் என்பதும் இவர் கருத்தாதல் பெறப்படும்.

இதனைச் சேனாவரையர் மிக அழகாக, மூன்று காரணங்களால் மறுக்கின்றார். அம்மறுப்பு வருமாறு :— (க) இளம்பூரணர் கருத்தே ஆசிரியருக்கும் கருத்தாயிருப்பின், கரு௦ ஆம் நூற்பாவில் 'அஃறிணை' என்னும் சொல்லை எடுத்துவிட்டுக் 'கிளந்த இறுதி விரவுப்பெயர்' என்றே

கூறியிருப்பர். அவ்வாறின்றி 'கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்' என்று விளங்கக் கூறியிருப்பதால், இவை அஃறிணை விரவுப்பெயர் என்பது நன்கு விளங்கும். (உ) முறைப்பெயர்கள் விளியேற்குமாறு கூறும் மூன்று நூற்பாக்களில், கஉகூ - ஆம் நூற்பா ஐகார ஈற்றிலும், கந௬ - ஆம் நூற்பா னகர ஈற்றிலும், கச௭-ஆம் நூற்பா ளகர ஈற்றிலும் இருப்பவை. இம்மூன்றிற்று விரவுப்பெயர்களும் விளியேற்பது போன்று, உயர்திணைப் பெயர்கள் விளியேற்பதில்லை. ஆதலின் பின்னர்க் கூறும் (கடு௦) மாட்டேற்றிற்கு ஏலாமையால்தான், இங்குக் (உயர்திணை அதிகாரத்து) கூறினர் எனில், இச்சிறப்பு விதிகளைப் பொது விதிக்குப் (கடு௦) பின்னர்க் கூறுவதே தெளிவும், சிறப்புமாகுமேயன்றி, இச்சிறப்பு விதிகளை முன்னர்க் கூறிப் பொதுவிதியைப் பின்னர்க் கூறுவது மயக்கத்திற்கேதுவாகும். அன்றியும், இச்சிறப்பு விதிகளைப் பின் கூறுவதால், ஐகார ஈற்றிற்கு மட்டும் தனி நூற்பா கூறி, னகர ளகர மாகிய இரு ஈறுகளுக்கும் தனித்தனியே விதி கூறுது. இரண்டையும் இணைத்துப் 'புள்ளி யிறுதி ஏயொடு வருமே' என நூற்பாவையும் சுருக்கியிருக்கலாம். இங்ஙனம் கூறாமையால் அவர் கருத்து வலிமையுடையதன்றென விளங்கும். (௩) இளம்பூரணர் உயர்திணை யதிகாரத்தில் முறைப்பெயர்கள் விளியேற்பதற்கு மட்டும் இத்தகைய காரணத்தைக் கூறினரேயன்றி, இவ்வதிகாரத்தில் தான், நீயிர் என்ற பெயர்கள் விளியேலா எனக் கூறியிருப்பதற்குக் காரணம் கூறவில்லை. ஆதலின், இதுவும் அவர் கருத்துவலிமையற்றது என்பதைக் காட்டுகின்றது.

## ௫. பெயரியல்

கடுடு ஆம் நூற்பா: இளம்பூரணரும், சேனாவரையரும், 'எல்லாச் சொல்லும்' என்பதற்குப் 'பெயர் வினை இடை உரி ஆகிய நான்கு சொல்லும்' எனப் பொருள் காண்பர். நச்சினார்க்கினியரும், கல்லாடரும் 'தமிழ்ச்சொல் எல்லாம்' எனப் பொருள் காண்பர். 'உலகத்தாரால் வழங்கப்பட்ட எல்லாச் சொல்லும்' எனப் பொருள் காண்பர் தெய்வச்சிலையார்.

இல்லோன் தலைவனாக வரும் தொடர்நிலைச்செய்யுள், கோவை போன்றனவாம். உள்ளோன் தலைவனாக வரும் தொடர்நிலைச்செய்யுள் சிலப்பதிகாரம், கம்பராமாயணம் போன்றனவாம்.

கசுக ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் உரையாகச் சேனாவரையர் கூறும் உரை இப்பொழுதுள்ள இளம்பூரணர் பதிப்பிலில்லை. அதற்கு மாறாகச் சேனாவரையர் உரையே உள்ளது. எனினும், சேனாவரையர் உரையால் மறுக்கப்படும் உரையே இளம்பூரணத்தில் இடம்பெறல் வேண்டும். இதனை யான் கழகவழிப் பதிப்பித்துள்ள இளம்பூரணர் உரையினுள்ளும் குறித்துள்ளேன்.

இளம்பூரணர் கருத்தைச் சேனாவரையர் இருகாரணங்களால் மறுக்கின்றார். (க) நஞ்சுண்டான் சாம் எனில், அந்நஞ்சுண்டவன் சாவான் என்னும் கருத்தே பெறப்படும். ஏனை நான்கு பாலையும் கூறல் அவனுக்குக்கருத்தில்லை. அன்றி அந்நான்கு பாலையும் கருத்தில் வைத்துக் கூறுவானாயின், அது பொருளியலில் கூறப்பட்ட 'ஒருபாற்கிளவி ஏனைப் பாற் கண்ணும் வருபவை தாமே வழக்கென மொழிப' என்ற நூற்பாவில் அடங்குவதன்றி ஈண்டைக் கடங்காதாம். (உ) கள்ளுண்ணாமை ஓரினத்திற்கே உரியதாகலின், பார்ப்பான் கள்ளுண்ணான் என்றால்

பார்ப்பனியும் கள்ளுண்ணுள் என்றே பொருள்படுவதல்லது, ஏனை இனத்தாரையோ, அஃறிணையையோ குறித்துச் சொல்லுவதன்று: ஆதலின் அது பொருந்தாது.

எனினும் நச்சினார்கினியர், இளம்பூரணர் உரையைத் தழுவிச், சேனாவரையர் கருத்தை மறுப்பர். அதனை அவருரையானறிக.

க௬௨ஆம் நூற்பா : இந்நூற்பாவில் கூறப்படும் பெயரனைத்தும் உயர்திணையில் இன்ன பாலென அறிதற்கு ஏற்புடையனவாம். ஆனால் 'யான்' என்பதோ ஆண், பெண் பாலறிய வாராதது. ஆயினும், அதனை ஏனைப் பெயரொடு கூறியதற்குக் காரணம், அது ஆண், பெண் பாகுபாட்டை உணர்த்தாதாயினும் அஃறிணை ஒருமை உணர்த்தலின் அவ்வாற்றான் பாலுணர்த்தும் பெயராகக் கருதப்படும் என்பதாம். அன்றிப் 'பாலறி வந்த' என்ற சொல் இதற்கு ஏற்காது, ஏனையவற்றிற்கு ஏற்றலின் 'பன்மைபற்றிக் கூறினார் எனினும் அமையும்' என்றார் சேனாவரையர். இவையேயன்றி அவர், இவர், உவர், யாம், நாம் என்பனவும் ஆண், பெண் பாகுபாடு உணர்த்தா என்பது அறியத்தக்கது.

க௬௩ஆம் நூற்பா : 'அவை முதலாகிய பெண்டென்கிளவி' என்பதற்கு அப்பெண்டு, இப்பெண்டு, உப்பெண்டு என இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும்; அவ்வாட்டி, இவ்வாட்டி, உவ்வாட்டி எனக் கல்லாடரும்; அத்தன்மையள், அத்தன்மையாள், அன்னாள், அனையாள் எனத் தெய்வச்சிலையாரும் எடுத்துக்காட்டுக்கள் காட்டுவர்.

க௬௫ ஆம் நூற்பா: யானை மேலேற்றும் அளவிற்கு நிதிக்குவை உடையாரை 'அத்திகோசத்தார்' என்பர். 'பட்டிபுத்திரர், கங்கை மாத்திரர்' என்பன சிறுவர் விளையாட்டின்கண் பகுதி பகுதியாகப் பிரிந்து கொண்டு, தத்தமக்கிட்டுக் கொள்ளும் பெயர்களாம். பட்டி புத்திரன் - இவன் உச்சயினி நாட்டு விக்கிரமாதித்தனின் அமைச்சன் என்றும், மதி நுட்பம் நூலோடுடையவன் என்றும் கூறுவர். கங்கை மாத்திரர் - கங்கையை அளவிடுபவர்.

க௬௭ ஆம் நூற்பா: அஃது, இஃது, உஃது என்னும் சுட்டு முதலாகிய ஆய்தப்பெயர் அது, இது, உது ஆகிய மூன்றினும் வேறன்று ஆதலின், அவற்றை 'அவை முதலாகிய ஆய்தப் பெயர்' என்றார். அவை, இவை, உவை என்பனவற்றின் அவ், இவ், உவ் என்பன வேறன்று ஆதலின், அவற்றை 'அவை முதலாகிய வகரப்பெயரும்' என்றார்.

க௬௮ ஆம் நூற்பா: அஃறிணைப் பெயராவன ஆ, நாய் முதலியன. இவை அத்திணையின்கண் வரும் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாதலின் பால்பகா அஃறிணை எனப்படும். இவை, கள் விகுதியொடு பொருந்தாதவழி அஃறிணையிருபாற்கும் பொதுவாம். 'பால்பகா அஃறிணைப் பெயர்கள்பால் பொதுமைய' என நன்னூலாரும் கூறல் காண்க.

இவை கள் என்னும் விகுதியொடு பொருந்தாதவழி அஃறிணையில் ஒருமைக்குரியதா? அல்லது பன்மைக்குரியதா? என்பதைத் தெரிய வேண்டின், அதன்பின் வரும் வினையைக் கொண்டே அறிய வேண்டும் என்பது௧௭௪ - ஆம் நூற்பாவின் கருத்து. இந்நூற்பாவோடு (க௬௮), அந்நூற்பாவும் (௧௭௪) தொடர்புடைத்தாய் இருத்தலினாலும், இந்நூற்பாவிற்கு அடுத்த நூற்பா புறனடை கூறுதலானும், இவ்விரு

நூற்பாக்களுக்குமிடையே புறனடைச் சூத்திரம் இருத்தல் பொருத்த மில்லையாதலானும், இப்பொழுதுள்ள எண்ணிக்கைப்படி கசுகூ-க்குப் பின் களக - ஐ வைத்து, களo - ஆம் நூற்பாவை களக-ஆக வைத்துக் கூறின் மிகவும் பொருத்தமுடையதா யிருக்கும். எனினும் களக-ஆம் நூற்பாவை ஆண்டு வைப்பதற்குச் சேனாவரையர் காரணம் கூறுவர். அதனை ஆண்டுணர்க.

களஉ ஆம் நூற்பா: 'தத்தம் மரபின் வினை' என்பது உயர்திணை அஃறிணைக்குரிய சிறப்பீற்று வினையாம். 'பொதுவினை' என்பது வேறு, இல்லை, உண்டு என்பனவாம். தத்தம் மரபின் வரும் வினைக்குரிய ஈறு களைக் கிளவியாக்கத்துள் காண்க.

விரவுப்பெயர்களெல்லாம் தத்தமக்குரிய வினைகொண்டவழித் திணைவிளக்கும் என்றாரேனும், இவற்றுள் முன்னிலைப் பெயர்மட்டும் வினைகொண்டவழியும் திணைவிளக்காதாம். இதனை கசுகூ ஆம் நூற்பா வில் ஆசிரியர் விளக்குவர். 'ஆறுபோயினாரெல்லாம் கூறை கோட் பட்டார்' எனப் பொதுவகையால் கூறினும், அந்நிகழ்ச்சி தேவர் களுக்கு எய்தாதவாறுபோல, விரவுப் பெயரெல்லாம் வினைகொண்ட வழித் திணை விளக்கும் எனப் பொதுவகையால் கூறினாரேனும், அவ் விலக்கணம் முன்னிலைப் பெயர்க்கு எய்தாதாயிற்று.

களஈ ·ஆம் நூற்பா : முன்னைய நூற்பாவில் விரவுப் பெயர்கள் எவ்வெத் திணைக்குரிய என அறிய வேண்டில், அவற்றின்பின் வரும் வினைச்சொற்களே கருவியாகுமென்றார். இந்நூற்பாவில் அவ்விரவுப் பெயர்களின் திணையை யறிய அவ்வினையே யன்றிச் 'செய்யும்' என் னும் முற்றுச்சொல்லும் கருவியாகும் என்று கூறுகிறார். 'செய்யும் என்னும் முற்றுச்சொல்' என வெளிப்படையாகக் கூறாது, அதற்கு இலக்கணமும் கூறுகின்றார் ஆசிரியர். நிகழ்காலத்திற்குரியதும், பலர் பாலுக்கு வாராததுமானது எதுவோ? அது, விரவுப் பெயருடன் இணைந்து வருமானால், அதனைக்கொண்டு அது உயர்திணை ஒருமைப் பாலை உணர்த்தும் என அறியலாம் என்பர்.

எனவே 'செய்யும்' என்னும் முற்று, நிகழ்காலம் குறித்து நிற்கும்; பலர்பால் ஒழிந்த நான்கு பாலில் வரும் எனத் தெரிகிறது. வினையிய லில் (உ௲எ) இம்முற்று படர்க்கையில் பலர்பாலுக்கேயன்றி, ஏனைத் தன்மை, முன்னிலைக்கு வாராது எனக் கூறப்படுகின்றது.

பலர்வரைகிளவி-பலர்பாலை வரைந்து (நீக்கி) உணர்த்தும் சொல். செய்யும் என்னும் முற்றால் உயர்திணையொருமை தோன்றும் என்றா ரேனும், செய்யும் என்னும் முற்றாய் வருவனவெல்லாம் அவ்வொரு மையைத் தோற்றுவிக்கும் என்று கருதற்க; சில உணர்த்தும், சில உணர்த்தா. உறங்கும், உண்ணும், ஓடும் என்பன செய்யும் என்னும் முற்றேனும் அவை பாலுணர்த்தாமை காண்க.

உயர்திணைப்பால் தோன்றுதற்குச் செய்யும் என்னும் முற்று மட்டும் கருவியன்று; முன்னிலைவினை, வியங்கோள், இருவகை யெச்சம் ஆகிய நான்கும் கருவியே. அங்ஙனமாக அவற்றைக் கூறாதது ஏன்? என்னும் வினாவைத் தாமே எழுப்பிக்கொண்டு அதற்கு விடை கூறுகின்றார் சேனா வரையர். (க) முன்னிலைப் பெயர் சொல்லுவான் கருத்தால் இன்னபால் என உணரமுடியும் என்பதை, இவ்வியல் ௲கக-ஆம் நூற்பாவால் உணர்த்துதலின் அதனை ஈண்டு உணர்த்தவேண்டுவதில்லை. (உ) வியம்-

ஏவல்; கோள் - கொள்ளுதல். எனவே வியங்கோளென்பது ஏவல் பொருண்மைத்தாம். ஆதலின் 'அங்ஙனம் ஏவியதை யுணர்ந்து செய்யும் ஆற்றல் உயர்திணைக்கே உரியதாகலின், அப்பெயரே பால் உணர்த்திவிடும். ஆதலின் அது வினையினால் உணர்த்தவேண்டுவதில்லை. ஆதலின் அதனையும் கூறவேண்டுவதில்லை. (ங.) வந்த சாத்தன் உண்ணும், வந்து உண்ணும் என்னும் பெயரெச்ச வினையெச்சங்கள் பொதுவினை கொண்டவழியன்றி யாழ் எழுப்பிய சாத்தன் வந்தான், யாழ் எழுப்பி வந்தான் எனச் சிறப்புவினை கொண்டவழி அப்பெயரெச்ச வினையெச்சங்களின் வினைகளே பால் விளக்குதலின் அவற்றையும், ஈண்டுக் கூற வேண்டுவதில்லை. ஆதலின் செய்யும் என்னும் முற்றையே கூறினார்.

முன்னிலைவினை என்று முற்கூறி, முன்னிலைப்பெயர் என்று பிற்கூறுவது ஆராயத்தக்கது. முன்னிலைப் பெயர் பாலுணர்த்துதல்பற்றி முன்னிலை வினையும் உண்டெனக் கருதினர் போலும்.

செய்யும் என்னும் சொல்லை விளக்க 'நிகழூஉநின்ற' 'பலர்வரை கிளவி' என்ற இருதொடர்கள் கூறப்படுகின்றன. இவற்றுள் ஒன்றே அமையுமெனின்: — அற்றன்று. நிகழூஉ நின்ற என்பது நிகழ்காலத்தை யுணரநின்ற என்று பொருள்படும். எனவே நிகழூஉ நின்ற கிளவி என்று மட்டும் கூறின், நிகழ்காலத்தை யுணர்த்திவரும் இம்முற்றையேயன்றி, ஆநின்று, கின்று, என்பன போன்ற இடை நிலைகளையும் குறித்துவிடும். ஆதலின் இவற்றை நீக்க ஆசிரியர் 'பலர்வரை கிளவி' என்ற சொல்லையும் சேர்த்துக் கூறினார். அற்றேல் 'பலர்வரை கிளவி' என்ற தொடரே இம்முற்றையுணர்த்த அமையும், 'நிகழூஉநின்ற' என்ற தொடர் வேண்டாமே எனின்; அதுவும் பொருத்தமின்று. 'பலர்வரை கிளவி' (பலர்பாலில் வாராத சொல்) என்று மட்டும் கூறின், அது பன்மை சுட்டிய பெயரையும் குறிக்கும். ஆதலின், 'நிகழூஉ நின்ற' என்ற தொடரும் இன்றியமையாததேயாம் என்பது.

புல் தின்றல் என்பது, புல்லரிசி தின்றல் என்னும் பொருள்படுதலின், அது உயர்திணைக்கும் ஏற்புடைத்தாயிற்று. ஒருமை வினையால் ஒரோவழி அஃறிணைப்பால் தோன்றல் சாத்தன் குரைக்கும், சாத்தி குரைக்கும் என்பன போன்ற வினைகளை நோக்கியாம்.

௧௮௨ ஆம் நூற்பா: பன்மை சுட்டிய பெயர் அஃறிணை யொருமை, அஃறிணைப் பன்மை, உயர்திணை (ஆண், பெண்) ஒருமைஆகிய மூன்று பாலுக்கும் உரியது. ஆதலின், 'என்றிப் பாற்கும்' என்னும் உம்மை முற்றும்மை என்றார்.

பன்மை சுட்டியபெயர் பன்மையையுணர்த்துவதன்றி, ஒருமையையும் உணர்த்துவது பொருந்துமா? என்ற வினாவை எழுப்பிக் கொண்டு அதற்கு இரு முறையில் விடை கூறுகின்றார் சேனாவரையர். (க) பெண்மைப் பெயரைப் பெண்மை சுட்டிய பெயரும், ஆண்மைப் பெயரை ஆண்மை சுட்டிய பெயரும், ஒருமைப் பெயரை ஒருமை சுட்டிய பெயரும் உணர்த்துவதல்லது அவ்வப்பெயரைப் பிறபெயர்கள் உணர்த்தா. அவற்றைப் போன்றே பன்மைப்பெயரும், பன்மை சுட்டிய பெயரானுணர்த்தப்படுவதல்லது பிறபெயரால் உணர்த்தப் படாமையின் இது பன்மை சுட்டிய பெயர் எனப்பட்டது. (இது பன்மை சுட்டிய பெயர் என்றற்குக் காரணமாவதல்லது, எடுத்துக் கொண்ட வினாவிற்கு உரிய விடையாவதன்று. ஆதலின், மீண்டும் பன்மை சுட்டிய பெயர்

எனில், பன்மையே யுணர்த்துவதல்லது ஒருமையைச் சுட்டுவது பொருந்துமா? என்ற பழைய வினாவையே எழுப்பிக் கொண்டு அதற்குரிய விடையை இரண்டாவதாகத் தருகின்றார்.) (உ) ஒரு பொருளைச் சிறப்பித்து வரும் அடைமொழியை வட மொழியில் 'விசேடணம்' என்பர். அது தன்னொடியையின்மை நீக்கிய விசேடணம், பிறிதோடியைபு நீக்கிய விசேடணம் என இருவகைப்படும். (அ) தன்னொடியையின்மை நீக்கிய விசேடணம்:— தன்னொடு—அடைமொழியாகிய தன்னொடு; இயையின்மை நீக்கிய—இயைபில்லாததை நீக்கிய; எனவே இயைபுடைமையைச் சொல்லுகின்ற; விசேடணம்—அடைமொழி. எனவே ஒரு பொருளுக்குக் கொடுக்கப்பட்ட அடைமொழி, மற்றவற்றிற்குள்ள இயைபை நீக்காது தனக்குரிய இயைபை மட்டும் குறிக்குமேல் அது தன்னொடியையின்மை நீக்கிய விசேடணமாம். எ-டு: 'வெண்குடைப் பெருவிறல் வழுதி' என்பதில் உள்ள வெண்குடை என்னும் அடைமொழி, வழுதிக்கும் தனக்குமுள்ள இயைபை மட்டும் குறித்து மற்ற குடைகள் அவனுக்குளவாகின்ற இயைபை நீக்காமையின் அது தன்னொடியையின்மை நீக்கிய விசேடணமாம். (ஆ) பிறிதோடியைபு நீக்கிய விசேடணம் :— ஒரு பொருளுக்குள்ள அடைமொழி தனக்கும் அப்பொருளுக்குமுள்ள இயைபை மட்டும் குறியாது, அப்பொருளுக்கும் பிறவற்றுக்குமுள்ள இயைபையும் நீக்குதற்காக வருமேல், அது பிறிதோடியைபு நீக்கிய விசேடணமாம். எ-டு: கருங்குவளை என்பதிலுள்ள கருமை என்பது, பிற குவளைமலர்களினின்று நீக்கிக் கருங்குவளை என்று குறித்தலின் இது பிறிதினியைபு நீக்கிய விசேடணமாம். இவ்விருவகை விசேடணங்களுள், பன்மை சுட்டிய பெயரென்பது முன்னைய வகையைச் சேர்ந்ததாம். வெண்குடைப் பெருவிறல் வழுதி என்பது போலப் பன்மை சுட்டிய பெயர் என்பதிலுள்ள 'பன்மை சுட்டிய' என்னும் அடைமொழியும் ஏனைய ஒருமைப் பெயருக்குள்ள இயைபை நீக்காது, இப்பெயர் பன்மையைச் சுட்டிவரும் என்ற அளவில் மட்டும் நிற்றலின், இது தன்னொடியையின்மை நீக்கிய விசேடணமாம்.

பல பாலையும் சுட்டி நிற்றலின், பன்மை சுட்டிய பெயராயிற்று என்ற கருத்துத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் எவருக்கும் இல்லை. எனினும், சிவஞான முனிவர் இக்கருத்தினை ஏற்பர். அதனை நன்னூல் உ௮௪ ஆம் நூற்பா உரையில் காண்க.

ஏனைய பெண்மை சுட்டியபெயர் முதலாயினவெல்லாம் தலைப் பிற்கேற்ப அவ்வப்பெயர்களையே இருதிணையிலும் விளக்கி நிற்க, இப்பன்மை சுட்டியபெயர் மட்டும் பன்மையே யன்றி, ஒருமையையும் உணர்த்துதற்குக் காரணம் அறிதற்கில்லை. நன்னூலார் பன்மை சுட்டிய பெயரென்பது இருதிணையிலும் வரும் பன்மையையே குறிக்குமென்பர். எனவே பன்மை சுட்டியபெயர் என்பதற்குத் தொல்காப்பியர் கூறும் இலக்கணம் வேறு. நன்னூலார் கூறும் இலக்கணம் வேறு. இதனைச் சங்கரநமச்சிவாயரும் ஒத்துக்கொள்வர். எனினும், சிவஞான முனிவர் இருவர் கருத்தும் ஒன்றென்பர். அது பொருந்தாதாம்.

க௮௭ ஆம் நூற்பா: தன்னுளுறுத்த பன்மை—தன்னையும் உளப்படுத்திய பன்மை; தன்மைப் பன்மை. 'எல்லாம்' என்னும் சொல் இருதிணைக்குமுரிய பெயராம். அது உயர்திணைக்கு வருங்கால் தன்மைப் பன்மைக்கு வருமேயன்றி ஏனை முன்னிலைப்பன்மைக்கும், படர்க்கைப்

பன்மைக்கும் வாராதென்பது சேனாவரையர் கருத்தாகும். இளம்பூரணர் எல்லாம் என்னும் சொல் தன்னுளுறுத்த பன்மைக்கு உயர்திணை மருங்கினல்லது ஆக்கமில்லை எனக் கொண்டுகூட்டி, எல்லாமென்ற சொல் தன்மைப்பன்மைக்கு வருங்கால் உயர்திணைக்கண் வருமே யன்றி அஃறிணையில் வாராது என்றனர் இங்ஙனம் அவர் கொள்ளு தற்குக் காரணம், எல்லாம் என்னும் சொல் உயர்திணையில் தன்மைப் பன்மைக்கே அன்றி ஏனைய படர்க்கையிலும் வருவதை நோக்கியேயாம். இதனைச் சேனாவரையர் மூன்று காரணங்களால் மறுக்கின்றார். (க) படர்க்கைக்கண் வருதலையும் கொள்ளுதற்காக இந்நூற்பாவை இங்ஙனம் வலிந்து கொண்டு கூட்டிப் பொருளுரைக்க வேண்டுவதில்லை. அங்ஙனம் படர்க்கைக்கண் வருதலை இடவழுவமைதி என்று கொண்டுவிடலாம். (உ) எல்லாம் என்னும் சொல் தன்மைப் பன்மைக்கு வருங்கால் உயர்திணைக்கல்லது வாராது எனப் பொருள்கொள்ளின் அதனாற் போந்த கருத்தாக அஃறிணைப் பன்மைத் தன்மைக்கு இச்சொல் வாரா தென்பது கிடைக்கும். 'தன்மைச் சொல்லே அஃறிணைக்கிளவி' (சொல் ௬௩.) 'யான்யாம் நாமென வரூஉம் பெயர்' (சொல்-௧௬௨) என்ற நூற்பாக்களான் தன்மைச்சொல் அஃறிணைக்கு இல்லை என்பது பெறப் படுதலின், தன்மைப் பன்மையும் அஃறிணைக்கு இல்லை என்பது கூற வேண்டாததாம். (௩) எழுத்ததிகாரத்துள் 'உயர்திணை யாயின் நம் மிடை வருமே' என்ற நூற்பாவில் இச்சொல் தன்மைக்கண் வருதலையும், அதற்குரிய 'நம்' என்ற சாரியை வருதலையும் ஆசிரியர் கூறுதலான், இச்சொல் தன்மைப் பன்மையில் அஃறிணைக்கண் வருதலில்லை என்பது அந்நூற்பாக்களிலேயே பெறப்படுகின்றது. ஆதலின் ஈண்டுக் கூற வேண்டுவதின்று.

எனினும் இச்சொல் முன்னிலைப் பன்மைக்கும், படர்க்கைப் பன்மைக்கும் வருதல் கண்டு, சிறுபான்மை அவ்விடத்திற்கும் உரித்தாம் எனக் கூறுவர் இளம்பூரணர். ஆனால் தெய்வச்சிலையார் ஆசிரியர் கூறிய நெறியின்றும் இது மாறுபட வருதலின், இலக்கண வழக்கல்லவென்றும், இதனைப் பிறநூல் முடிபெனத் தழீஇக் கொள்ளவேண்டுமேல் 'செய்யுள் மருங்கினும்' (சொல்-௪௬௩) என்ற அதிகாரப் புறனடையால் கொள்ள வேண்டுமென்றும் கூறுவர். இதுபற்றி அவர் எழுதியுள்ள உரை சுவையானது. அதனை அவருரையான் அறிக.

சேனாவரையரால் மறுக்கப்படும் இவ்விளம்பூரணர் உரை, அப் பதிப்பில் இல்லை. எனினும் யான் கழகவழிப் பதிப்பித்துள்ள இளம் பூரணர் உரையில் இவ்வுரையே இருக்கவேண்டும் எனக் கூறியுள்ளேன். அதனை அப்பதிப்பில் காண்க.

௧௯௧, ௧௯௨ ஆம் நூற்பாக்கள்: 'ஒருவர்' என்பது ஆண் பெண் என்னும் இருபாற்கு முரித்தாய்ப் பலர்பாலைக் கொண்டு முடியுமென் பது இவ்விரு நூற்பாக்களின் கருத்தாகும்.

ஆசிரியர் ௧௭௩-ஆம் நூற்பா தொடங்கி ௧௯௩-ஆம் நூற்பாவரை விரவுப்பெயரைக் கூறுகின்றார். இவ்விரு நூற்பாவானும் கூறப்பட்ட ஒருவரென்னும் பெயரோ உயர்திணைப் பெயராகும். ஆயினும் அதனை, ஈண்டுக் கூறுதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் ஆராய்கின்றார். இந்நூற்பாவிற்கு முன்னும் பின்னும் நீயிர், நீ என்னும் விரவுப்பெயர் களின் இலக்கணம் கூறப்படுகின்றது. அவை பாலுணர்த்தாமை ௧௮௮-ஆம் நூற்பாவாலும், சொல்லுவான் குறிப்பின்வழியே பாலு

ணர்த்தும் என்பதை ௧௬௫-ஆம் நூற்பாவாலும் கூறப்படுகின்றது. இவற்றினிடையே இவ்வொருவர் என்னும் சொல்லை வைப்பின், அவ்விரு இலக்கணமும் இதற்கும் எய்தும் என்பதுபற்றியே ஈண்டு வைத்தார் என்பது.

கல்லாடர் 'ஒருவர் என்னும் பெயர் ஒருபாற்கே உரித்தாகாது இருபாற்கும் விரவி வருதலின், விரவுப் பெயரிடையே வைக்கப்பட்டது' என்பர்.

௧௬௫ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் காட்டும் மேற்கோள்கள் மிகச் சிறந்தன. அவற்றை அவரவர் உரையில் காண்க.

௧௬௬ ஆம் நூற்பா: சொல்லால் உயர்திணை போன்றிருந்து, பொருளால் அஃறிணைப் பெயராக இருக்கும் விரவுப் பெயர்களும் சில வுள என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். எ-டு: கடுவன், மூலன் என்பன ஆண்பாற்குரிய னகரவீற்றைப் பெற்றிருப்பினும், பொருளால் குரங்கு என்னும் அஃறிணைப் பொருளையே உணர்த்தி நிற்றல் காண்க.

'குமாரி' என்னும் வடமொழிச்சொல்லே 'குமரி' என மருவிற்று.

௧௬௭ ஆம் நூற்பா: ஐவகை நிலத்தினும் உரிமை பூண்டு வழங்கும் மக்கட் பெயர்களிற் சில, சொல்லால் அஃறிணைபோன்று தோன்றினும் பொருளால் உயர்திணையையே உணர்த்தும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். எ-டு: காளை, விடலை என்னும் பெயர்கள் பாலை நிலத்து மக்கட்கே உரிய பெயர்கள். அவை ஏனை நிலத்து மக்கட்கன்றி, அத்திணைக்கேயுரிய பெயராய் இருத்தலின் அவை திணையொடு பழகிய பெயராயின. இவை சொல்லால் அஃறிணை போலத் தோன்றினும், திணைநிலைப்பெயராகும்வழி உயர்திணையையே உணர்த்தலின் இவையும் விரவுப்பெயராயின. இவை திணைநிலைப்பெயராதலின்றி சாதாரண பொருட்பெயராகக் கருதின் அஃறிணைப் பெயரேயாம்.

## ௬. வினையியல்

௧௬௮ ஆம் நூற்பா: வினைச்சொல்லின் இலக்கணம் இரண்டு. 1. வேற்றுமை கொள்ளாமை. 2. காலமொடு தோன்றுகின்றமை. இவ்விரண் டிலக்கணங்களுள் ஒன்றே யமையும்; இரண்டையும் கூறுவானேன்? என்பது வினா. இதற்கு நுண்மையாக விடை தருகின்றார் சேனாவரையர். 'வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது' என்றே நூற்பா செய்யில், வேற்றுமை கொள்ளாமை வினைச்சொல்லிற்கே யன்றி இடைச்சொல், உரிச்சொற்களுக்கும் கூட உளவாதலின், அவற்றையும் குறித்து விடும். ஆதலின் இவ்விலக்கணம் வினைச்சொற்களுக்கு மட்டுமே உரியதாதல் வேண்டி 'காலமொடு தோன்றும்' என்றும் கூறுவது இன்றியமையாததாகிறது. அற்றேல் 'காலமொடு தோன்றும்' என்பதே இன்றியமையாததாயின், 'வேற்றுமை கொள்ளாது' என்ற தொடரை நீக்கியிருக்கலாமே யெனில், அங்ஙனம் கூறின், இவ்விலக்கணம் வினைக்கே யன்றி வினையாலணையும் பெயர்க்கும் உளதாதலின் அதனையும் குறித்து விடும் ஆதலின் அதனை நீக்க 'வேற்றுமை கொள்ளாது' என்றும் கூறவேண்டியதாயிற்று.

ஆதலின் இவ்விரிலக்கணங்களும் இன்றியமையாததே யாம். வினையாலணையும்பெயர் காலமொடு தோன்றி வரும் என்பதை ௭௦-ஆம் நூற்பாவால் அறிக. இந்நுண்மை பிறருரையில் காணாதது.

தொழில்நிலை ஒட்டும் தொழிற்பெயர்-வினைச்சொல்லை ஒக்கும் வினையாலணையும் பெயர்.

உ௦௦ ஆம் நூற்பா: மூன்று காலத்திற்கும் சேனாவரையர் தரும் விளக்கம் இளம்பூரணருரையைப் பின்பற்றியது. 'நிகழ்வு என்பதொன்றில்லை' எனத்தொடங்கி ஆராயும் ஆராய்ச்சி இவர்க்கே உரியதாகும். உண்டல், தின்றல் என்பன சோற்றையோ, கறியையோ, ஒரு முறை சிறிது எடுத்துண்பதையும், தின்பதையும் குறிக்கும். ஆனால் உணவு உண்டான் என்றால், சோற்றையும் கறியையும் வயிறு நிரம்பும்வரை பலகாலும் உண்டலையே குறித்து வருகின்றது. இங்ஙனம் உண்டலாகிய ஒருநிகழ்ச்சியே பன்முறையும் நிகழினும் நாம் அதனை ஒரு நிகழ்ச்சியாகவே கொள்ளுதலின் நிகழ்வும் வேண்டுமென்றார் சேனாவரையர்.

வினைக்குறிப்புச்சொற்களின் காலம், சொல்லுவான் கருத்தொடு தழுவியே உணரப்படும். ஒருவன் இயல்பிலேயே கருநிறமுடையனாய் இருக்க அவனைக் கரியன் எனின், அது இயற்கை வினைக்குறிப்பாம். முன் செந்நிறமுடையவனாயிருந்து, பின்னர் ஏதோ ஒரு காரணத்தால் கருநிறம் உடையவனாகிய நிலையில் அவனைக் கரியன் எனின், அச்சொல் அவன் பண்டு செந்நிறமுடையவனாயிருந்த நிலைமை உணர்த்துதலின் இறந்தகால குறிப்புச் சொல்லாம். கரியனாகிக் கொண்டிருக்கும் நிலையில் கரியன் எனில், அது நிகழ்கால வினைக் குறிப்புச் சொல்லாம். பின் கரியனாதல் ஒருதலை என உணர்ந்து அந்நிலையில் கரியன் எனின், அது எதிர்கால வினைக் குறிப்புச்சொல்லாம். இங்ஙனம் சொல்லுவான் கருத்தைத் தழுவி அச்சொற்களுக்குக் காலம் குறிக்கப்படுதலின் அவை, வினைக்குறிப்பாயின. எதிர்காலத்தால் விரிக்கப்படும் வினைக்குறிப்பிற்கே ஆக்கச்சொல் கொடுக்க வேண்டும் என்றார் சேனாவரையர். பொதுவாகச் செயற்கை வினைக் குறிப்பிற்கெல்லாம் ஆக்கச்சொல் கொடுக்க வேண்டுமென்பர் நன்னூலார்.

உ௦௧ ஆம் நூற்பா: தொழிற் பொருண்மை - தெரிநிலைவினை. ஆசிரியர் 'வினைச்சொல் காலமொடு தோன்றும்' என ௧௯௮ ஆம் நூற்பாவில் கூறியிருக்க ஈண்டும் கூறியதேன்? என்னும் வினாவை எழுப்பிக்கொண்டு, அதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் விளக்குகின்றார். இவ்வியலில் ஆசிரியர் வினைச்சொற்களின் ஈறுகளைக் கூறுதலன்றி, அவை எவ்வெக் காலத்திற்குரியன என்பதைக் கூற வில்லை. அவற்றை வழக்கு நோக்கி உணர்ந்துகொள்க என்பதைத் தெரிவிக்கவே ஈண்டும் 'காலமொடு வருஉம்' என்றார் என்பது அவர் கூறும் சமாதானமாகும். நச்சினார்க்கினியரும், கல்லாடரும் குறிப்பிற்கும் காலமுண்டு என்பது வலியுறுத்தற்கு இங்ஙனம் மீண்டும் கூறினார் என்பர்.

வினைச்சொல் காலமுணர்த்தும்பொழுது சில எழுத்துக்களை அவ்வக்காலத்திற்கே உரியனவாக இடையே பெற்று வரும் என்பதை விளக்க 'நெறிப்படத் தோன்றி' என்றார் ஆசிரியர். ஈற்றுமிசை

நிற்கும் எழுத்து-வினைச்சொல்லின் விகுதிக்கு முன்பு நின்று காலத்தை விளக்கும் எழுத்துக்கள். இவற்றையே நன்னூலார் 'இடைநிலை' என்பர்.

இவ்விடைநிலைகளை ஆசிரியர் கூறாதது பற்றியும், நன்னூலாரும் சேனாவரையரும் கூறியிருப்பது பற்றியும் நச்சினார்க்கினியர் தரும் சுவையான கருத்துக்கள் ஈண்டு அறிந்தின்புறுதற்குரியன. அவை வருமாறு :— 'இம்முக்காலத்தும் உரிய காலங்காட்டும் எழுத்துக்களை ஆசிரியர் எடுத்து ஓதாராயினர், பின் உள்ளோர் காலங்கட்கு உரியவாக எடுத்தோதிய எழுத்துக்கள் தம்முள் மயங்கியும் வருதலின். ஆசிரியர், அங்ஙனம் மயங்குதல் பற்றி எடுத்தோதாமையின் உரையாசிரியரும் அவ்வெழுத்துக்களைச் சிறிதே காட்டினார். இனிப் பின்னுள்ளோர் கூறினார் என்பது பற்றியும், மாணாக்கர்க்கு உய்த்துணரும் உணர்வின்று என்பது பற்றியும் யாமும் அவ்வெழுத்துக்களைப் பிரித்துக் காட்டுதும். சேனாவரையர் அவ்வாறு பிரித்துக் காட்டுகின்றவர் 'நெறிப்படத் தோன்றி' என்பதனால் பிரித்துக் காட்டுவர். அது பொருந்தாது; ஆசிரியர் எடுத்தோதாமல் மயங்கும் என்று போதலின். இதனைச் 'செய்யுள் மருங்கினும்' என்னும் அதிகாரப் புறனடையில் 'பிரித்தனர் காட்டல்' என்பதனால் பிரித்துக்காட்டுதும். அது மேற் கண்டுகொள்க.

௨௦௨ ஆம் நூற்பா : இளம்பூரணரும் சேனாவரையரும், 'உம்மொடு வரூஉம் கடதற' எதிர்காலத்திற்கு வரும் என்பர்; தெய்வச்சிலையார் எதிர்வு, நிகழ்வு ஆகிய இருகாலத்திற்கும் வரும் என்பர்; நச்சினார்க்கினியர் எதிர்வு, இறப்பு ஆகிய இருகாலத்திற்கும், சிறுபான்மை நிகழ்காலத்திற்கும் வரும் என்பர்.

சேனாவரையர் நிகழ்காலத்தைக் குறிப்பனவாகக் காட்டியிருக்கும் உண்ணா நின்றனம், உண்கின்றனம் என்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் பயின்று வரவில்லை ஆதலின், இவை காட்டாகா என்பர் இக்கால ஆய்வாளர்கள்.

கும், டும், தும், றும் என்ற நான்கீறுகளையும், உம்மென ஓரீறாக அடக்காது, ஆசிரியர் நான்காகக் கூறியதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் ஆராய்ந்து, விடை காண்கின்றார். அவ்விடை வருமாறு :— இந்நான்கனுள் முதலில் இருக்கும் கும்மீறு வினைகொண்டு முடியும் சிறப்புடையது. ஏனைய பெயர்கொண்டு முடியும் இயல்பின ஆதலின், இதனை வேறு கூறினார். ஏனைய மூன்றிலும் இறுதியில் இருக்கும் 'உம்'மைப் பிரித்து விட்டால் நிற்கும் ட், த், ற் என்பன, காலங்காட்டும் இடைநிலைகளாதல் வேண்டும். அவை காலங்காட்டின் இறந்த காலம் காட்டும். கும், டும், தும், றும் என்பனவோ எதிர்காலங்காட்டும். ஆதலின் இவற்றையும் உம் என ஓரீறாகப் பிரித்தற்கில்லை. ஆதலால் கும், டும், தும், றும் என நான்கீறாகக் கூறினார். அடுத்த நூற்பாவில் (௨௦௩) குற்றியலுகரமென ஓரீறாகக் கூறாது, கு, டு, து, று என நான்காகக் கூறற்கும் இதுவே காரணமாகும்.

௨௦௩ ஆம் நூற்பா : இந்நூற்பாவில் கூறப்பட்ட ஏழு ஈறுகளுள், முதற்கண் உள்ள கு, டு, து, று என்பனவும், இறுதியிலுள்ள அல் என்பதும் எதிர்காலம் பற்றியே வருவன; வழக்குப் பயிற்சி இல்லா

தன. இடையிலுள்ள என், ஏன் என்ற இரண்டும் மூன்று காலத்திற்கும் ஒப்ப வருவன; வழக்குப் பயிற்சியுமுடையன. ஆதலின் கு, டு, து, று என்பனவற்றை இறுதியிலுள்ள அல் என்பதனோடு வைத்தலே முறை. ஆனால் ஆசிரியர் என், ஏன் என்பனவற்றிற்கு முன்னும், சென்ற நூற்பாவின் இறுதியில் கூறப்பட்டிருக்கும் கும், டும், தும், றும், என்பனவற்றிற்குப் பின்னும் கூறியுள்ளார். அதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் நுண்மையாக ஆய்ந்து கூறுகின்றார். அது வருமாறு :— அடுத்த நூற்பாவில் ஆசிரியர் செய்கு என்னும் சொல் வினையோடு முடியும் என்றும், ஆயினும் அது முற்றுந்தன்மையினின்றும் திரியாது என்றும் கூற இருக்கின்றார். அதைப் போன்றே செய்கும் என்பதும் வினையொடு முடிதலையும், முற்றென்றே பெயர் பெறுதலையும் இலக்கணமாக உடையது. இதனைப் பெறுதற்காகவே ஆசிரியர், இவ்வீறுகளை முறையன்றி வைத்துள்ளார் என்பது. நச்சினார்க்கினியரும் இக்கருத்தையே தழுவினர். இளம்பூரணரும் இக்கருத்தினரே எனினும், இக்கருத்தை அடுத்த நூற்பாவில் 'அவ்வியல் திரியா' என்பதனால் கொள்வர். நன்னூலாரும் 'செய்கென் ஒருமையும் செய்குமென் பன்மையும், வினையொடு முடியினும் விளம்பிய முற்றே' எனக் கூறுதல் காண்க. ஆனால் தெய்வச்சிலையார் 'செய்கு' என்னும் கிளவியை மட்டுமே கொள்வர்.

உ०௪ ஆம் நூற்பா : வினைமுற்றுக்கள் அனைத்தும் பெயர்கொண்டு முடிதலையே இலக்கணமாக உடையன. அதனை ஆசிரியர் 'எத்திறத்தானும் பெயர் முடிபினவே' (௪உ௧) எனப் பின்னர்க் கூறுவர். இம்முற்றுகள் பெயர்கொண்டு முடிவுழி முற்றென்றும், வினைகொண்டு முடிவுழி முற்றெச்சம் என்றும் பெயர்பெறும். என்னும் இவ்விலக்கணத்திற்கு மாறாக 'செய்கு' என்னும் வினைமுற்றோ, வினையொடு முடிவுழியும் முற்று என்றே பெயர் பெறுகிறது. அதனையே இந்நூற்பா உணர்த்துகிறது. இங்ஙனமே 'மார்' என்ற வினைமுற்றும் வினைகொண்டு முடிந்தும் முற்றென்று பெயர்பெறும் என்பர் ஆசிரியர். மார் பெயரோடு முடிதல் இல்லை (உ०௭ ஆம் நூற்பா காண்க).

இங்ஙனம் வினைமுற்றுக்களுள் ஒருசாரன (பெரும்பாலன) பெயர்கொண்டு முடிவுழி முற்றென்றும், வினைகொண்டு முடிவுழி முற்றெச்சம் என்றும் பெயர்பெற, இன்னொரு சாரன (செய்கு, செய்கும்) பெயர் கொண்டு முடிவுழியும், வினைகொண்டு முடிவுழியும் வினைமுற்றென்றே பெயர் பெறுதற்குக் காரணம் என்ன? என்பதைச் சேனாவரையர் நன்கு விளக்குகின்றார். அது வருமாறு :- (க) செய்கென் கிளவி வினையொடு முடியினும் முற்றென்றே பெயர்பெறும் என்பதற்குக் காட்டப்பட்ட எடுத்துக்காட்டு 'காண்கு வந்தேன்' என்பதாகும். இது எதிர்காலத்தைக் காட்டுவது. இதனை எச்சமாகத் திரிக்க வேண்டின், செய்தென் எச்சமாகத் திரிக்கவேண்டும். இன்றேல் செயவென் எச்சமாகத் திரிக்க வேண்டும். செய்தெனெச்சம் இறந்தகாலம் காட்டுதலின், அவ்வெச்சமாகத் திரித்தற்கு இயலாது. மூன்று காலத்திற்கும் உரிய செயவென் எச்சமாய்த் திரிக்கலாமெனில், காலத்தால் இடர்ப்பாடு நேரவில்லையாயினும், முடிவுநிலையால் மாறுபடுகின்றது. செயவெனெச்சம் வினைமுதல் வினையையும் பிறவினையையும் கொண்டு முடியும். ஆனால் இச்செய்கென் எச்சமோ வினைமுதல் வினையையே கொண்டு முடியும். எனவே, வேறு வகையாகத் திரித்தற்கும் இல்லை. ஆதலின் இது வினையொடு முடியினும் முற்

றென்றே பெயர் பெறும் எனக் கூறவேண்டியதாயிற்று. (உ) செய்கு, செய்கும் என்பன பெரும்பான்மையும் வினைகொண்டும், சிறுபான்மை பெயர்கொண்டும் முடிவன. ஏனைய முற்றுக்களோ பெரும்பான்மையும் பெயர்கொண்டும், சிறுபான்மை வினைகொண்டும் முடியும் இலக்கணத்தன. பெரும்பான்மையாக இருப்பனவற்றையே இயல்பாகவும் இலக்கணமாகவும் கூற இயலுமேயன்றிச், சிறுபான்மையாக உள்ளனவற்றை இலக்கணமாகக் கூற இயலாது. அவ்வாற்றானும் இங்குக் கூறியதே பொருந்துவதாகும். (௩) அன்றியும், ஆசிரியர் அகத்தியனாரும் இச்சொற்களையெல்லாம் அடக்கி 'முற்றுச் சொற்றாம் வினையொடு முடியினும், முற்றுச்சொல்லென்னும் முறைமையின் இறவா' எனக் கூறியிருப்பதாலும் இதுவே கருத்தாதல் தெளியலாம்.

உ௦அ ஆம் நூற்பா : கிளவியாக்கத்தில் ன ள ர எனக் கூறப் பட்டவையே ஈண்டு அன், ஆன், அள், ஆள், அர், ஆர் எனக் கூறப் பட்டன. இவ்வீற்றைக் கிளவியாக்கத்துட் கூறியதன் நோக்கம் பாலுணர்த்துதற் பற்றியாம். ஈண்டுக் கூறியதன் நோக்கம் இட முணர்த்துதற் பற்றியாம். திணையும் பாலும் உணரினல்லது, வழுவற்க என்றலும், வழுவமைத்தலும் இயலாமையின் கிளவியாக்கத்தில் இவை இடம்பெறுவனவாயின. வினையியலில் மூவிடத்திற்குரிய வினைமுற்றின் விகுதிகளைக் கூறவேண்டியது கடனாதலின், அவ்விடமுணர்த்துதல் பற்றி அவற்றை ஈண்டுக் கூறற்கும் இயைபுடைத்தாயிற்று.

கிளவியாக்கத்தில் வினையின் ஈறுகளைக் கொண்டு பாலறியுமாறு கூறினாரேயன்றி, பெயரைக்கொண்டு பாலறியுமாறு கூறினாரல்லர். அங்ஙனம் கூறாததற்குக் காரணம் பின்னர்ப் பெயரியலில் பெயரைக் கொண்டு பாலறிதலைக் கூற இருப்பதேயாகும். அதைப்போன்றே வினையைக் கொண்டு பாலறியும் முறைமையையும் வினையியலிற் கூறாது, ஆண்டே கூறியதற்குரிய காரணமென்னை? யெனின், கிளவியாக்கம் வழுவமைக்கும் இயலாதலானும், வினையிற்றோன்றும் பாலறி கிளவியை ஆண்டறிந்தாலன்றி, அவ்வழுவமைத்தலைக் கூற இயலாதாகலானும் ஆண்டுக் கூறினார் என்பது. வினையைக் கொண்டு பாலறிதலைப் போலப் பெயரைக் கொண்டு பாலறிதல் இயலாமையான், வினையைக்கொண்டு பாலுணர்த்தலைக் கிளவியாக்கத்துட் கூறியும், பெயரைக் கொண்டு பாலுணர்த்தலைப் பெயரியலிற் கூறியும் விளக்கினார் ஆசிரியர்.

உகக, உகஉ ஆம் நூற்பாக்கள் : ஆசிரியர், பெயரியல் சக ஆம் நூற்பாவில் 'ஆ ஓ ஆகும் பெயருமா ருளவே' என்றார். ஆனால் இன்ன பெயர் எனக் குறிப்பிடவில்லை. ஈண்டும் 'பாலறி மரபின் அம்மூவீறு' எனக்குறிப்பாகவே ஈறுகளைப் பெறவைத்துள்ளார். நன்னூலார், இவ்வீரிடத்தும் கூறிய கருத்துக்களைத் தொகுத்தே, 'பெயர்வினை யிடத்து னளரய ஈற்றயல், ஆ ஓ வாகும் செய்யு ளுள்ளே' (நன்-௩௫௩) என்றார்.

ஆய் என்னும் ஈறு முன்னிலைக்குரியது. முன்னிலை விரவுவினைக் குரிய அதனை உயர்திணை யதிகாரத்தில் கூறியதற்குக் காரணம், இவ் ஆய் என்னும் ஈறு உயர்திணையில் வந்தவழியே ஆ ஓவாகும் என்பதை அறிவித்தற்காம் என்பர் சேனாவரையர். கல்லாடரும் இக்கருத்தினரே யாவர். தெய்வச்சிலையார் 'பருந்தின் விழுக்காடாக' வந்ததென்பர்.

உகூ ஆம் நூற்பா: ‘உடைமை’ என்னும் சொல் உடைமைத் தன்மையையும், உடைப் பொருளையும் குறிக்கும். ‘சாத்தன் கச்சினன்’ என்புழிக் கச்சை உடைமையும், உடைமை எனப்படும்; அக்கச்சும் உடைமை எனப்படும். ஈண்டு ‘அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்’ என்றது, உடைப் பொருளாகிய உடைமையையே குறித்தது. உடைப்பொருள், உடையனாந்தன்மை என்ற இவ்விரண்டும்பற்றி நச்சினார்க்கினியர் தரும் விளக்கம் சுவையுடையது. அதனை அவருரை யானறிக. கருமையன் என்பது கருமையை உடையவன் எனப்பொருள் படின் அது உடைப்பொருளைக் குறித்து மேலதனோடு இயைந்துவிடும். ஆதலின், ‘பண்பினானும்’ என்பதற்குக் கரியன் என்றே காட்டவேண்டும் என்றார் சேனாவரையர். கரியன் - கருநிறத்தினன். கருமையன் - பண்புப் பெயர். கரியன் - பண்புபற்றி வந்த குறிப்புவினை.

‘உடைமையானும்,’ ‘நிலத்தினானும்’ என்றது, ‘அதுச்சொல் வேற்றுமை உடைமையானும்,’ ‘கண்ணென் வேற்றுமை நிலத்தினானும்’ என அவ்வவ்வுருபோடு தொடர்புபடுத்திக் கூறியது, எடுத்துக் கூறிய அச்சொற்களேயன்றி அச்சொற்கள் குறிக்கும் பொருள் பற்றிய பிற சொற்களையும் அகப்படுத்தவேயாம்.

கச்சினன் என்பது கச்சையுடையன் என ஐயுருபு விரிதலின் அது இரண்டாம் வேற்றுமைப் பொருளாகுமே; அங்ஙனமாக அதனை ஆசிரியர் ஆறும் வேற்றுமைப் பொருளாக ஓதுதற்குக் காரணமென்னை? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு அதற்கு விடைகாண்கின்றார் சேனாவரையர். கச்சையுடையன் என விரிக்கின்றுழி, ஐ என்பது, உருபு நோக்கிய சொல்லாகிய வருமொழியுடன் இயைவதல்லது சாத்தன் என்ற பெயரோடியைந்து இரண்டாம் வேற்றுமைப் பொருள்படுவதின்று. காரணம், இரண்டாம் வேற்றுமைப் பொருள்படுமேல் அது செயப்படு பொருளாகவேண்டும். அங்ஙனமாகாமையின் ‘ஐ’ என்பது வருமொழியோடு இயைய வந்தது என்பதே கருத்து என்பர். எனினும் நச்சினார்க்கினியர் உடையன் என்ற குறிப்பு வினையுள் செயப்படுபொருளும் அடங்கி நிற்பது அதன் இயல்பு என்றும், அதுபற்றியே ஆசிரியர் தொல்காப்பியனாரும் ‘ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி, எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு, அவ்விரு முதலிற் றோன்று மதுவே’ எனக்கூறினர் என்றும் கூறுவர். இவ்வமைதியே பொருத்த முடைய தாய்த் தோன்றுகிறது.

அவன் கச்சினன், அவன் இல்லத்தன் எனவரின் கச்சினன், இல்லத்தன் என்பன குறிப்பு வினையாம். கச்சினன் வந்தான், இல்லத்தான் வந்தான் எனவரின் கச்சினன், இல்லத்தான் என்பன குறிப்பு வினையாலணையும் பெயராம். இவ்விரண்டுமே காலங்காட்டுவதாயிருக்க, ஆசிரியர் ‘அப்பாற் காலங் குறிப்பொடு தோன்றும்’ எனக் குறிப்பு வினைமுற்றொன்றுமே காலமொடுவரும் எனக்கூறற்குக் காரணம் என்ன? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு, அதற்கு இருமுறையில் அமைதி கூறுகின்றார் சேனாவரையர். (க) பெயர்களுள் வினையாலணையும் பெயரல்லாதன காலந்தோன்றாமையை இலக்கணமாக உடையன. ஆனால் வினைச் சொற்களோ, காலத்தை வெளிப்படையாகவோ, அன்றிக் குறிப்பாகவோ காட்டுதலை இலக்கணமாக உடையன. ஆதலின் குறிப்பு வினை முற்றிற்குக் காலங்காட்டுதலை இலக்கணமாகக் கூறவேண்டுவதாயிற்று. (உ) அன்றியும், அவன் கச்சினன் என்றவிடத்துக் கச்சினையுடையனா

யினுன், உடையனுகின்ருன், உடையனுவான் என மூன்று காலத்துள் ஒரு காலம் காட்டுவதைச் சொல்லுவான் குறிப்பால் நன்கறியலாம். ஆனுல் கச்சினுன் வந்தான் என்றவிடத்துக் கச்சினுன் என்னும் குறிப்பு வினையாலணையும்பெயர் காலத்தைத் தெளிவாகக் காட்டவில்லை. கச்சினுன் என்பது 'இயற்பெயராகவும் இருக்கலாம்; அன்றிக் கச்சை உடைமையால் காரணப் பெயராகவும் இருக்கலாம். இயற்பெயரா யின் காலந்தோன்ருது; காரணப் பெயராயின் காலந் தோன்றும். இவ்விரண்டனுள் ஒன்று துணிதல் அரிதாதலின், குறிப்பால் காலங் கொள்ளுவன 'வினைக்குறிப்பே' என்ருர். குறிப்பு வினைமுற்றும் காலத் தைக் குறிப்பாகக் காட்டுமேனும், குறிப்பு வினையாலணையும் பெயரினும் தெளிவாகக் காலத்தைக் காட்டுதலானும், காலங்காட்டுதலை இலக்க ணமாக உடைமையானும் அதனை விதந்தோதினுர் என்பது.

உகசு ஆம் நூற்பா : 'பொதுப்படக் கூறியவதனுல்' என்பதில் 'பொதுப்பட' என்பது உண்மை, உடைமை ஆகிய இரண்டிற்கும் பொதுவாதலைக் குறிக்கும். 'சாத்தன் இலன்' என்புழி அது உண்மைக்கு மறுதலையாதலையும், 'சாத்தன் பொருளிலன்' என்புழி அது உடைமைக்கு மறுதலையாதலையும் காண்க. 'சாத்தன் இலன்' என்பதில் சாத்தன் என்பவனே இல்லை எனப்பொருள் படுகின்றது. 'சாத்தன் பொருளிலன்' என்றவிடத்து அவனது உடைமை இல்லை என்பது மட்டுமே கூறப் படுகின்றது.

இந்நூற்பாவில் கூறப்பட்ட அன்மை, இன்மை, உண்மை, வன்மை என்பன, சென்ற நூற்பாவில் கூறப்பட்ட 'பண்பினுனும்' என்பதன் கண்ணேயே அடங்கும். ஈண்டு வேறு கூறுவானேன்? என்பது வினு. இதற்கு விடை காணுமுன் பண்பு என்பதற்குச் சேனுவரையர் தரும் விளக்கத்தை முதற்கண் அறிதல் இன்றியமையாததாகும். பண்பு என் பதற்கு மூன்று வகையான இலக்கணம் தரப்படுகின்றது. (1) பொருளி னிடமாகப் பிறப்பது. (2) தனக்கோர் குணமின்றி இருப்பது. (பொரு ளுக்குப் பண்பு கூறுவதல்லது, பண்புக்குப் பண்பு கூறுவது இல்லை என் பது தருக்கநூற்றுணிபு.) (3) தொழிலின் வேருக இருப்பது. இவ் விலக்கணத்தை முன்னிறுத்திக்கொண்டு அன்மை முதலியவற்றை ஆராயின் அவை பண்பல்ல என்பது நன்கு விளங்கும். (க) இன்மை - இது பொருளை மறுத்தற்கு வரும். ஆனுல் பண்போ பொருளினிடமாகப் பிறப்பது. ஆதலின் இது பண்பாகாது. 'சாத்தன் இலன்' என்ற விடத்துச் சாத்தனே இல்லை எனப்படுதலின், இன்மை, பொருளையே மறுத்தல் காண்க. (உ) அன்மை, உண்மை ஆகிய இவை பொருளுக்கே யன்றிப் பண்பிற்கும் வரும்.' ஆனுல் பண்பிற்கோ பண்பில்லை என்பது தருக்கநூற்றுணிபு. 'பால் வெண்மையானது' என்றவிடத்துப் பாலின் பண்பை வெண்மை குறிக்கின்றது. அவ்வெண்மைக்கோ பிறிதொரு பண்பில்லை. ஆனுல் இந்த அன்மை, உண்மைகளோ 'இக்கருமை வெண்மை அன்று' 'இக்கருமையில் வெண்மை உண்டு' எனப் பண்பின் அன்மை இன்மைகளையும் உணர்த்திவருகின்றன. ஆதலின் இவை பண் பாகா. (ங) வன்மை - இது ஆற்றல் எனப் பொருள்படும். 'சாத்தன் வல்லன்' என்ற விடத்துப் பொருளை அடுத்து இச்சொல் வருதல்போல, 'அறிவு வல்லது' என்றவிடத்துப் பண்பை அடுத்தும் இச்சொல் வரு கின்றது. பண்பிற்குப் பண்பில்லை என்பது முன் கண்டதாகலின் இது வும் பண்பாகாது. அன்றி இச்சொல்லிற்கு 'ஊறு' எனப் பொருள் காணின், அதுவும் பண்பாயடங்குதலின் பண்பிற்குப் பண்பில்லை என்ற

இலக்கணப்படி இதுவும் பண்பாகாதாம். இவ்வாற்றான் இந்நான்கும் பண்பிற்கு வேறாக இருத்தலின் மேற்கூறிய 'பண்பினானும்' என்பதில் அடங்காவாயின.

ஆசிரியர் பொருளுணர்த்தும் சொற்களையன்றிப், பண்புணர்த்தும் சொற்களை நிலைமொழியாக வைத்துப் புணர்ச்சி விதி கூறார் என்பது சேனாவரையர் கருத்து. புள்ளிமயங்கியல் எஎஆம் நூற்பாவில் 'இல்' லென்ற சொல்லையும், குற்றியலுகரப் புணரியல் உருஆம் நூற்பாவில் 'உண்டு' என்ற சொல்லையும் நிலைமொழியாக வைத்துப் புணர்ச்சிவிதி கூறுகின்றார் ஆசிரியர். இவையிரண்டும் ஈண்டுக் கூறப்பட்ட இன்மை, உண்மை என்பனவற்றின் அடிப்படையாக வந்த சொற்களே. எனவே இவற்றை நிலைமொழியாக வைத்துப் புணர்ச்சிவிதி கூறினமையால் இவை பண்பல்ல என்பது ஆசிரியர்க்கும் கருத்தாயிற்று என்பது சேனாவரையர் கருத்து. எனினும் 'ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே' (எழுத் - உசரு) என்ற விடத்துப் புளியென்னும் பண்புப் பெயரை நிலைமொழியாக நிறுத்தி ஆசிரியர் விதி கூறுதலின் இக்கருத்து ஆராயத்தக்கதாம். நன்னூலார் 'செம்மை சிறுமை' என்னும் நூற்பாவில் உண்மையையும் பண்பாகக்கொள்வர். சிவஞானமுனிவர் அன்மை முதலாயின குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச் சொற்களென்பர்.

உகரு ஆம் நூற்பா : இதுகாறும் உயர்திணை வினைக்குறிப்பு எவ்வெப்பொருள்பற்றி வரும் எனக்கூறிய ஆசிரியர், இந்நூற்பாவில் மாட்டேற்று வகையால் அவ்வினைக்குறிப்பு இவ்விவ்வீறுபற்றிவரும் என்பதனை உணர்த்துகின்றார். உயர்திணையில், தன்மையிலும் படர்க்கையிலும் வரும் தெரிநிலைவினை ஈறுகளுள் குறிப்புவினைக்கேற்பன பன்னிரண்டே என்றும், அவ்வீறுபற்றியே உயர்திணை வினைக்குறிப்பும் வரும் என்றும் சேனாவரையர் கூறுகின்றார்.

உயர்திணை வினைக்குறிப்பு எவ்வெப்பொருள்பற்றி வரும் என்பதைக் கூறவந்த ஆசிரியர் அவற்றை இரு நூற்பாவால் விளக்குகின்றார். முதல் நூற்பாவாகிய 'அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்' என்று தொடங்கும் நூற்பாவில் ஒருபொருட்கண் வரும் பல வாய்பாடுகளைக் கூறுகின்றார். அடுத்த நூற்பாவாகிய 'அன்மை இன்மை' என்ற நூற்பாவில் ஒரு பொருட்கண் வரும் ஒரு வாய்பாடு கூறுகின்றார். இவ்விருதிறனையுமே சேனாவரையர் இந்நூற்பாவில் 'அன்ன மரபின்' என்றதனால் தழுவுகின்றார்.

குறிப்பு வினையிலும், வினையாலணையும் பெயரிலும் பொருள் சிறந்து நிற்குமிடத்தை 'மேலைக் கிளவியோடு வேறுபாடில' என்று தொடங்கும் பத்தியில் ஆராய்கின்றார். 'வந்தனன்' என்னும் தெரிநிலைவினையில் பகுதியில் பொருள் சிறந்தும், விகுதியில் பொருள் சிறவாதும் நிற்பதுபோல, 'உடையன்' என்னும் குறிப்பு வினையிலும் பகுதியில் பொருள் சிறந்தும், விகுதியில் பொருள் சிறவாதும் நிற்கும் என்பதாம். வந்தான், உடையான் என்னும் வினையாலணையும் பெயரிலோ, பகுதி, விகுதி ஆகிய இரண்டிலும் பொருள் சிறந்து நிற்கும் என்பதாம். இங்ஙனம் ஒரு சொல்லில் பொருள் சிறந்து நிற்கும் எழுத்தை எடுத்தும், அயலெழுத்தை நலிந்தும், ஏனை எழுத்துக்களைப் படுத்தும் கூறுக என்பர் சிவஞான முனிவர்.

தொழின்மை மேற்பட-வருதலாகிய தொழில் (பகுதிப்பொருள்) சிறக்க. தொழிலுடைப் பொருள் கீழ்ப்பட - வருதலாகிய தொழிலை உடைய பொருள் (விகுதிப் பொருள்) சிறவாது நிற்க.

உசஎ ஆம் நூற்பா : 'டு' வினைக்குறிப்பிற்கு மட்டுமே வரும். தெரிநிலை வினைக்குரிய ஈறுகள் கூறப்படும் இவ்விடத்தே வினைக்குறிப்பிற்கே உரிய 'டு' என்பதைக் கூறக் காரணம் என்ன? என்பது ஈண்டு ஆராயப்படுகின்றது. தெரிநிலைவினைக்குரிய ஈறுகளை விளக்கிக் கூறுமாறு போல, ஆசிரியர் குறிப்புவினைக்குரிய ஈறுகளை விளக்கிக் கூறவில்லை. தெரிநிலைவினைக்குரிய ஈறுகளைப் போன்றே குறிப்புவினைக்குரிய ஈறுகளும் வரும் என உஎக ஆம் நூற்பாவால் மாட்டெறிகின்றார். தெரிநிலைவினையீறுகளில் 'டு' என்பதொன்றில்லை. அங்ஙனமிருக்க 'டு' என்பதை ஈண்டுக் கூறாது அங்கு மாட்டெறியப்படின், மாட்டேற்றால் இவ்வீறு பெறப்படாது. ஆதலின் மாட்டேற்றிற்கு ஏலாத 'டு' என்பதை மட்டும் ஈண்டுக்கூறி, ஏனையவற்றைப்பின் மாட்டெறிகின்றார் ஆசிரியர் என்றனர் சேனாவரையர்.

இங்குக் கூறும் அமைதி, விளிமரபில் உயர்திணை யதிகாரத்தில் முறைப்பெயர் விளியேற்குமாறு கூறியிருப்பதற்கு, இளம்பூரணர் கூறும் அமைதியைப் போன்றதாம்.

உசகூ ஆம் நூற்பா : எவன் என்பது 'புறத்துறுப்பெல்லாம் எவன் செய்யும்' என்னும் திருக்குறளில் திரியாது வந்தது. 'கற்றதனாலாய பயன்என்கொல்' என்னும் குறளில் என் எனத் திரிந்து வந்தது.

உ௫௦ ஆம் நூற்பா : 'ஈண்டும், கோடின்று, கோடில என உடைமைக்கு மறுதலையாய இன்மையும் கொள்க' என்றதில் உள்ள உம்மை உசகூஆம் நூற்பாவில் கூறப்பட்ட கருத்தைத் தழுவிற்று. 'இன்று, இல' என்புழிப்போல 'உடைத்து, உடைய' என முறையிற் கூறாது மயங்கக் கூறியது, செய்யுளின்பம் நோக்கியாம்.

இந்நூற்பாவில் 'இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, உள' என்ற ஏழும் சொல்பற்றி ஓதப்பட்டன. ஏனைய மூன்றும் பொருள் பற்றி ஓதப்பட்டன. அவ்வேழனையும் பொருள்பற்றி ஓதாமைக்குக் காரணம், சொல்பற்றி ஓதினும் சுருங்கியே வருதலான் எனக் கூறினர். எனவே சொல்பற்றி ஓதின் விரியுமேல் அதனைப் பொருள்பற்றி ஓதுதலும், சொல்பற்றி ஓதின் சுருங்குமேல், அதனைச் சொல்பற்றியே ஓதுதலும் மரபு என்பது பெறப்படும். உயர்திணை வினைக்குறிப்புக் கூறுங்கால் பொருள்பற்றி வரும் வினைக்குறிப்பு முற்றைத் தனித்தும் (உககூ), சொல்பற்றி வருவனவற்றைத் தனித்தும் (உகச) கூறினர் ஆசிரியர்.

உயர்திணை வினைக்குறிப்பு 'அதுச்சொல் வேற்றுமை யுடைமையானும், கண்ணென் வேற்றுமை நிலத்ினானும் வரும்' எனக் கூறியுள்ளார் ஆசிரியர். எனவே உயர்திணை வினைக்குறிப்பு 6, 7ஆம் வேற்றுமைக்குரிய கிழமைப்பொருள் (தற்கிழமை, பிறிதின் கிழமை), இடப்பொருள் பற்றி வரும் என்பது தெரிகிறது. இதைப்போன்றே அஃறிணைவினைக் குறிப்பும் வரும். எனினும் ஆசிரியர் அவ்விரு வேற்றுமைப் பொருளிலும் வரும் என்னாது, 'பண்பினாகிய சினைமுதற்கிளவிபற்றி' வரும் என்றனர். 'நெடுஞ்செவித்து' என்பது பண்பினாகிய சினைமுதற் கிளவியாம். நெடிய காதினை உடையது என்னும் இப்பொருண்மை, ஆறும் வேற்றுமையில் உறுப்பின் கிழமையின் பாற்படும். இங்ஙனம் கூறவே

ஆறாம் வேற்றுமையில் உறுப்புத் தற்கிழமையில் மட்டும் அஃறிணை வினைக்குறிப்பு வரும் எனத் தெரிகிறது. இங்ஙனம் ஆசிரியர் ஓதினா ரேனும் ஏனைய நான்கு தற்கிழமைப் பொருளிலும், பிறிதின் கிழமைப் பொருளிலும், ஏழாம்வேற்றுமை யிடப்பொருளிலும் அஃறிணை வினைக் குறிப்பு வரும் எனச் சேனாவரையர் கூறுகின்றார். எ-டு: அறிந்த மாக்கட்டு ஆகுக - பிறிதின் கிழமை. குறை கூறும் செம்மற்று-பண்புத்தற்கிழமை. அணித்து, சேய்த்து-ஏழாம் வேற்றுமை இடப்பொருள். வடாஅது, தெனாஅது - ஏழாம் வேற்றுமை திசைப்பொருள்.

உஉக ஆம் நூற்பா : சென்ற நூற்பாவில் கூறப்பட்ட பத்தனுள் சொல்பற்றி வந்தன இன்று, இல முதலிய ஏழுமாம். பொருள்பற்றி வந்தன பண்புகொள் கிளவி, பண்பினாகிய சினைமுதற்கிளவி, ஒப்பொடு வருஉம்கிளவி ஆகிய மூன்றுமாம்.

உஉஉ ஆம் நூற்பா : உண்ணுதலைச் செய்தான், நடத்தலைச் செய் தான், வருதலைச் செய்தான் என வருதலின் செய்தல் பொதுவினையும், உண்ணுதல், நடத்தல், வருதல் ஆகிய மூன்றும் சிறப்பு வினையுமாம். ஆதலின் செய்ம்மன, செய்யும், செய்த என்பனவற்றால் உண்பன,உண் ணும், உண்ட என்னும் தொடக்கத்தனவெல்லாம் தழுவப்பட்டன. இப்பொதுவும் சிறப்புமாகிய இயல்புபற்றியே, என்செய்யா நின்றான்? எனக் கேட்டவழி, உண்ணா நின்றான் எனச் செப்புதலும் விடையா யிற்று.

அம்மீறு மூன்று காலத்திற்கும் வரும். அம்மூன்று காலத்திற்கும் ஏற்ப விரிப்புழி உண்டனம், உண்ணா நின்றனம், உண்குவம் எனவரும். இங்ஙனமே அவ்வீறும் மூன்று காலத்திற்கும் ஒப்பவரும். இங்ஙனம் இவற்றை வாய்பாட்டான் ஓதின் பல்குமென்றஞ்சியே ஆசிரியர் ஈற்றா னுணர்த்தினர்.

விரவுவினைக்குரிய இவ்வெட்டுச் சொற்களும் இம்முறையே நிற்ப தற்குரிய காரணத்தைக் கல்லாடரும் கூறுவர். அதனை அவருரை யானறிக. விரவுவினைகள் இருதிணைக்கும் பொதுவேனும் ஒரு திணை யுணர்த்துங்கால் பிறிதொரு திணையை உணர்த்தாது என்பார் 'திரிபு வேறுபடூஉம் செய்தியவாகி' என்றார்.

உஉச ஆம் நூற்பா : முன்னிலைத் தெரிநிலைவினைக்குரிய ஈறுகளை இந்நூற்பாவிலும், இதற்கு முன்னைய நூற்பாவிலும் ஆசிரியர் கூறு கின்றார். ஆனால் முன்னிலை வினைக்குறிப்பிற்குரிய ஈறுகளை ஆசிரியர் கூறவில்லை. அங்ஙனம் கூறாமைக்குக் காரணம் என்ன? என மாணக் கன் கேட்க, முன்னிலைத் தெரிநிலை வினைக்குரிய ஈறுகளே (ஐ, ஆய், இர், ஈர்) முன்னிலை வினைக்குறிப்பிற்கும் வருதலின் ஆசிரியர் கூறாராயினர் என விடையிறுத்தனர் சேனாவரையர். மீண்டும் அம்மாணக்கன், ஒன்றற் குரிய ஈறுகளே பிறிதொன்றற்கும் வருதலின் ஆசிரியர் கூறாராயின், உயர்திணை வினைக்குறிப்பிற்கோதிய ஈறுகளே அஃறிணை வினைக்குறிப் பிற்கும் வருதலின், அஃறிணை வினைக்குறிப்பையும் ஆசிரியர் கூறாராதல் வேண்டும். ஆனால் ஆசிரியரோ உயர்திணை வினைக்குறிப்பிற்குரிய முற்றுக்களை உகஅ, உகசு, உகரு ஆம் நூற்பாக்களிலும், அஃறிணை வினைக்குறிப்பிற்குரிய முற்றுக்களை உஉ௦, உஉகஆம் நூற்பாக்களிலும் கூறியுள்ளார். அங்ஙனமாக முன்னிலை வினைக்குறிப்பிற்குரிய ஈறுகளை மட்டும் கூறாததேன்? என்று கேட்டான். இவ்வினாவிற்கு விடையா

கவே இந்நூற்பாவின் இறுதிப்பகுதி விளங்குகின்றது. இச்சூழ்நிலையை மனத்திற் கொண்டாலன்றி அப்பகுதி விளங்குமாறில்லை. அன்றியும் அஃறிணை வினைக்குறிப்பு உயர்திணை வினைக்குறிப்பில் எவ்வெவ்வாற்றான் அடங்கும் என்பதையும் முதற்கண் தெரிந்துகொள்ளல் வேண்டும். அஃறிணை வினைக்குறிப்பு உஉ௦ஆம் நூற்பாவில் கூறப்படுகின்றது. அவையாவன: இன்று, இல, உடைய, அன்று, உடைத்து, அல்ல, பண்புகொள் கிளவி, உளவென் கிளவி, பண்பினாகிய சினைமுதற்கிளவி, ஒப்பொடுவருஉங் கிளவி என்பன. இவை உயர்திணை வினைக்குறிப்பிற் கூறப்பட்ட உகரு, உகசஆம் நூற்பாக்களில் அடங்குமாறு:— இன்று, இல என்பன இன்மையில் அடங்கும். அன்று, அல்ல என்பன அன்மையில் அடங்கும். உடைய, உடைத்து என்பன அதுச்சொல் வேற்றுமையுடைமையானும் என்பதனுள் அடங்கும். உளவென்கிளவி உண்மையில் அடங்கும். பண்புகொள் கிளவி பண்பினானும் என்பதனுள் அடங்கும். ஒப்பொடு வருஉங் கிளவி என்பது ஒப்பினானும் என்பதன்கண் அடங்கும். இங்ஙனமாகவே அஃறிணை வினைக்குறிப்பில் கூறப்பட்ட பண்பினாகிய சினைமுதற்கிளவி என்பது மட்டும் உயர்திணை வினைக்குறிப்பில் அடங்காமை அறியப்படுகின்றது. இதை வைத்துக்கொண்டே சேனாவரையர் விடையிறுக்க முற்படுகின்றார். (க) அஃறிணை வினைக்குறிப்பாகிய இன்று முதலாயினவெல்லாம் எடுத்தோதிய வழியும் சுருக்கமாகவே இருக்கின்றன. (உ) அஃறிணை வினைக்குறிப்பிற்குரிய பத்தனுள் ஒன்பது முற்றுக்கள் உயர்திணை வினைக்குறிப்பில் அடங்கினும் பண்பினாகிய சினைமுதற்கிளவி மட்டும் உயர்திணைக்குரிய வினைக்குறிப்பில் அடக்க இயலாமற் போகின்றது. எனவே உயர்திணையில் அடக்க இயலாத பண்பினாகிய சினைமுதற் கிளவியைக் கூறுவார், ஏனைய ஒன்பதையும் உடன் கூறினார் என்பது.

ஆனால் ஈண்டோ முன்னிலைத் தெரிநிலைவினைக்குரிய ஈறுகள் காலப் பன்மையால் பல சொற்களாய் வருதல் போலவே, முன்னிலை வினைக்குறிப்பிற்குரிய ஈறுகளும் காலப் பன்மையால் பல்வேறு சொற்களாய் வருதலின் ஆசிரியர் அதனை விதந்து கூறாராயினார் என்பது. இந்நுண்மை பிறருரையில் காணாதது.

இங்ஙனமே ஆசிரியர் தொல்காப்பியர் தன்மை யிடத்திற்குரிய தெரிநிலைவினை ஈறுகளைக் கூறினரே அன்றிக், குறிப்பு வினைக்குரிய ஈறுகளைக் கூறாது விடுத்தனர். ஆனால் சேனாவரையர் அவ்விடத்து இது பற்றி யாதும் கூறிற்றிலர். அவ்விடத்திற்குரிய குறிப்பு வினைமுற்று ஈறுகள் அம், ஆம், எம், ஏம் முதலியனவாம்.

உஉகூ ஆம் நூற்பா: 'வியங்கோள், தன்மை முன்னிலைக்கண் வாராது என்றாரேனும், சிறுபான்மை முன்னிலை, தன்மைக்கண் வரும் என்றனர் சேனாவரையர். அங்ஙனம் கூறியவர் 'தன்மைக்கண்ஏவலில்லை; முன்னிலைக்கண் ஏவல் வருவதுண்டேல் கண்டுகொள்க' எனப் பின்னர் கூறுகின்றார். இங்ஙனம் கூறியதன் கருத்துத் தன்மை, முன்னிலைக்கண் வாழ்த்துதற் பொருளிலும், வேண்டிக் கோடற் பொருளிலும் வியங்கோள் வருதலின்றி, ஏவல் பொருண்மைக்கண் வியங்கோள் வருதலில்லை என்பதாம்.

வியங்கோள் படர்க்கைக்கே வருமென ஆசிரியர் ஓதினும், ஏனைய முன்னிலை, தன்மைக்கண்ணும் சிறுபான்மை வருதலை ஏனைய உரையாசிரியரெல்லாம் கொண்டனர், ஆனால் தெய்வச்சிலையாரோ நூலாசிரியர்

கூறியவாறு படர்க்கைக்கண் வருதலையே கொண்டு, ஏனைய இடங்களில் வருதலை மறுத்தனர். அதனை அவர் உரையானறிக. நன்னூலார் வியங்கோள் மூவிடத்திற்கும் வரும் என்பர்.

வியங்கோளுக்குரிய ஈற்றினை ஆசிரியர் விதந்து கூறினாரல்லர். ஆதலின் உரையாசிரியர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகக் கூறினர். இளம்பூரணர் க என்ற ஓரீற்றை மட்டும் கொண்டனர். சேனாவரையர் க, ய, அல், ஆகிய மூன்று ஈறுகளைக் கொண்டனர். நச்சினார்க்கினியரும், கல்லாடரும் க, ய, அல், ஆல், அர், மார், உம், ஐ ஆகிய எட்டு ஈறுகளைக் கொண்டனர். தெய்வச்சிலையார் க என்ற ஓரீறே கொண்டு அது இ, ய, அர், அல் எனத் திரிந்தும் வருமென்பர். நன்னூலார் க, ய, ர் ஆகிய மூன்று ஈறுகளைக் கொண்டனர்.

௨௨அ ஆம் நூற்பா: ஆகு, போகு முதலியவற்றுட் கடதற என்பன குற்றுகரத்தோடு வருமாறும், உண்டு, நக்கு முதலியவற்றுள் அவை தனிமெய்யாய் வருமாறும் காண்க.

ஓடி, எஞ்சி என்பனவும், ஆய், போய் என்பனவும் உகர ஈற்றின் திரிபென்பர் சேனாவரையர். ஆனால் அவை இகர ஈறாகவும், யகர ஒற்றாகவும் இருக்கின்றன. இவற்றை உகர ஈற்றின் திரிபென்றல் எங்ஙனம்? என்பதைச் சேனாவரையர் மிக நுண்மையாக விளக்குகின்றார். (க) விகுதிகளெல்லாம் எல்லா முதனிலைகளோடும் வருதலே மரபு. அந்நிலையில் ஆய், ஓடி என்பனவற்றில் விகுதியாக வருவன யகர வொற்றும் டகர இகரமுமே யாகும். இவையே இயற்கைச் சொல்லாயின், இவ் விகுதிகள் எல்லா முதனிலைகளோடும் வருதல் வேண்டும். ஆனால் இவ் விகுதிகளோ செலவு, வரவுமுதலிய முதனிலைகளோடு வாரா. இங்ஙனமே உகரமும் விகுதியாக வருமாயின் ஆகு, ஓடு போன்ற முதனிலைகளோடும் வருதல் வேண்டும். ஆகு, ஓடு என்பனவோ ஏற்கனவேயே உகர இறுதியாய்ப் பகுதிகளாக நிற்கின்றன. ஆதலின் அவற்றில் மீண்டும் உகரம் வருதலில்லை. இங்ஙனமாக உகர இறுதியாக வைத்துக்கொள்ளினும் சில சொற்களுக்கு வாராமையின் அதனையே அனைத்திற்கும் உரிய விகுதியாகக் கொள்ளுதல் பொருத்தமில்லாது இருக்கின்றது. ஏனைய இகர, யகர விகுதிகளையே வைத்துக் கொள்ளினும் அவையும் சில சொற்களுக்கு வாராமையின் அவற்றையே அனைத்துச் சொற்களுக்குமுரிய விகுதியாகக் கொள்ளுதல் பொருத்தமில்லாதிருக்கின்றது. இவ்வெல்லா விகுதிகளையுமே கொள்ளலாம் என்றாலோ, அதுவும் அத்துணைப் பொருத்தமுடைத்தாகத் தோன்றவில்லை. எனவே ஆய், ஓடி என்பனவற்றிலுள்ள ஈறுகளை யகர இகர ஈறுகளாகக் கொள்வதா? அல்லது உகர ஈற்றின் திரிபாகக் கொள்வதா என்ற முன்னைய கேள்வியே மீண்டும் வருகின்றது. (உ) உகரம் கடதற என்ற நான்கு மெய்யின்மீதும் இவர்ந்து விதிவினைக்கண் பயின்றுவரும் சிறப்பினதாய் உள்ளது. எதிர்மறை எச்சமாய் வருவனவும், (உண்ணாது, வாராது, தின்னாது எனப்) பெரும்பாலும் உகர ஈறாகவே வருகின்றன. ஆகவே இச்சிறப்பு நோக்கி உகர விகுதியே விகுதியாகக் கொண்டு அது யகர ஒற்றாகவும், இகர இறுதியாகவும் திரிந்து வந்தது எனக் கொள்ளுதலே முறையாம்.

செய்து என்பதை உகர ஈறாகவும், செய என்பதை அகர ஈறாகவும் கொள்வர் சேனாவரையர். அங்ஙனமாக செய்பு, செயற்கு என்பவற்றையும் செய்தென் எச்சத்துளடக்கி உகர ஈறாகவும்; செய்யிய, செய்தென

என்பவற்றையும் செயவெனெச்சத்துளடக்கி அகர ஈருகவும் கொள்ள லாமே, அங்ஙனம் கொள்ளாதது ஏன்? என்ற வினவிற்கு, ஆீற்றில் மாரிறு அடங்காமைக்கு உரைத்தாங்கு உரைக்கஎன விடையிறுத்த னர் சேனவரையர். இங்ஙனம் பொதுவாகச் சேனவரையர் கூறினும், ஆீற்றுள் மாரிறு அடங்காமைக்கு உரைத்த இருகாரணங்களுள், முன்னையதே ஈண்டுக் கொள்ளல் வேண்டும். செய்பு, செயற்கு, செய் தென, செய்யிய என்பனவற்றுள் இறுதி' உகரமாகவும், அகரமாகவும் கொள்ளின் அவ்வுயிரேறிய ப், க், ன், ய் என்பன காலங்காட்ட வேண் டும். ஆனல் இவையோ காலங் காட்டுவன அல்ல. ஆதலின் இவற்றை அம்மெய் ஏறிய உயிரோடு சேர்த்துச் செய்பு, செயற்கு, செய்தென, செய்யிய என்ற வாய்பாடுகளாகக் கொள்ளவேண்டுமேயன்றி உகர ஈருகவும், அகர ஈருகவும் கொள்ளலாகாதென்பதாம்.

உசுகூ ஆம் நூற்பா: கால், வழி, இடத்து என்பனவற்றை நிகழ் கால வாய்பாடு என்பதால், இவற்றையும் முன்பு கூறிய செய்து, செய்பு என்றாற் போன்ற வாய்பாடுகளாகக் கொள்ள வேண்டும் என் பது பெறுதும்.

'கூதிர் போயபின்' என்றவிடத்துப் பின் என்பது காலப் பெய ராம். 'நின்றவிடத்து' என்புழி இடம் என்பது இடப்பெயராம். இவை பெயராதலின் காலங் கண்ணுதாயின.

அற்றேல் முன்னைய நூற்பாவில் வாய்பாடுகளாக ஓதிய ஆசிரியர் ஈண்டு ஈறுபற்றி ஓதியதென்னை?யெனின், இவை வாய்பாடாகக் கூறின், காலந்தோறும் வரும் வாய்பாடுகளையும் வேறுவேறுக எடுத் தோத வேண்டியிருத்தலின் பல்கும். ஆதலின் ஈறுபற்றிக் கூறினர் என்பர். எடுத்துக்காட்டாகப் 'பின்' என்பதை வாய்பாடாகக் கூறின், அது இறப்பு, நிகழ்வு ஆகிய இருகாலமும்பற்றி வருதலின், செய்த பின், செய்கின்றபின் என இருவாய்பாடுகளாகக் கூறவேண்டும். இங்ஙனம் ஒவ்வொரு ஈறுகளும் அவையவை வரும் காலம்பற்றி வாய் பாடுகளாகக் கூறின் பல்கும் என்றஞ்சியே இங்ஙனம் கூறினர் என்பர் சேனவரையர்.

உ௩௦ ஆம் நூற்பா: ஒடித்துண்டல் யானையின் வினை; எஞ்சுதல் யாமரத்தின் வினை; ஆதலின் பிறவினை கொண்டது என்றார். இதனை 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' என்னும் நூற்பாவில் சேன வரையர் பின்னர் அமைப்பர்.

எச்சவியலில் வினையெச்சம், தெரிநிலைவினையையும் குறிப்பு வினையையும் கொண்டு முடியும் எனப் பொதுவகையால் கூறப்படுவ தல்லது, இவ்விவ்வெச்சம் இவ்விவ்வினை கொண்டு முடியும் எனக் கூறிற் றிலர். ஆதலின் எதிரது நோக்கி, ஆசிரியர் இம்மூன்று எச்சங்களும் தத்தம் வினைமுதல் வினையையே கொண்டு முடியும் என்றனர்.

உ௩க ஆம் நூற்பா: சினைவினை, சினையொடும் முதலொடும் முடி யும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். கையிற்று வீழ்ந்தது என் பது சினையொடு முடிந்தது. கையிற்று வீழ்ந்தான் என்பது முதலொடு முடிந்தது.

'உரற்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய யா'என்புழி உண்டு என்னும் செய்தென் எச்சம் வினைமுதல் கொள்ளாது பிறவினை கொண் டதற்கு விதியாக 'வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய' என்ற நூற்

பாவைக் கொள்கின்றார் சேனாவரையர். ஆனால், ஈண்டோ உண்டு என்பதை உண்ணா எனத் திரித்தாற் போலக், கையிற்று என்பதைக் கையிற எனத் திரிக்கலாமே என்ற வினாவை எழுப்பிக் கொண்டு அதற்கு விடையும் கூறுகின்றார். ஆதலின் இது மாறுபாடாக உள்ளது. இவ்வினாவைச் சேனாவரையர் பிறர் கருத்தாகக் கூறினர் என்று கொள்ளின் ஓராற்றான் அமைதி காணலாம்.

௨௩௬ ஆம் நூற்பா: பெயரெச்சமும், வினையெச்சமும் எதிர் மறுத்து மொழியினும் திரியாதென்று கூறிய ஆசிரியர், முற்றிற்கு அங்ஙனம் திரியாதென்று கூறாததேன்? என்ற வினாவை எழுப்பிக் கொண்டு, அதற்கு விடை காணுகின்றார் சேனாவரையர். எச்சச் சொற்களை வாய்பாடுகளாக ஓதியுள்ளார் ஆசிரியர். அவையனைத்தும் உடன்பாட்டுச் சொற்களாகவே இருக்கின்றன. ஆதலின் அவை எதிர்மறுத்து மொழியினும் திரியாதெனக் கூறவேண்டியது இன்றியமையாததாயிற்று. ஆனால் முற்றுக்களையோ உடன்பாடு எதிர்மறை ஆகிய இரண்டிற்கும் பொருந்திய ஈறுபற்றி ஓதியிருத்தலின், அதனை எதிர்மறுத்து மொழியினும் திரியாதெனக் கூறல் வேண்டாதாயிற்று. ஆனால் நச்சினார்க்கினியர் மேல் வேற்றுமை மயங்கியலில் உருபுகளையுடைய சொற்கள் எதிர்மறுத்து மொழியினும் அவ்வவ் வுருபினின்றும் திரியா (௧௦௭) எனக்கூறிய இடத்தேயே முற்றும் அடங்கும் என்றும், எனவே முற்றுச் சொற்கள் எதிர்மறுத்து மொழியினும் தன்னிலை திரியாதென்பது ஆசிரியர் கருத்தாயிற்று என்றும் கூறுவர். நன்னூலார் முற்று, பெயரெச்சம், வினையெச்சம் ஆகிய மூன்றையும் வினையென்ற சொல்லால் அடக்கி மேற்கூறிய உருபையும் சேர்த்து 'உருபும் வினையும் எதிர்மறுத் துரைப்பினுந், திரியா தத்தமீற் றுருபின் என்ப' எனக் கூறினர்.

௨௩௭ ஆம் நூற்பா: இடைநிலை வரையார்-இடைநிற்றலை நீக்கார். எச்சங்களுக்கும் அவை கொண்டு முடியும் பெயர் வினைகளுக்கு மிடையே பொருந்தும் பிற சொற்கள்வரினும் அவற்றை நீக்கார் என்பது கருத்து. இங்ஙனம் இடையே பிற சொற்கள் வருதலைத் தெய்வச் சிலையாரும், கல்லாடரும், 'இடைக்கிடைப்பு' என்பர். நன்னூலார் 'இடைப்பிறவரல்' என்பர்.

௨௩௮ ஆம் நூற்பா: 'செய்யும்' என்னும் பெயரெச்சத்திற்குரிய விதியே நூலில் கூறப்பட்டுள்ளது. அது முற்றாய் நிற்குமிடத்துப் பெறும் விதியினை உரையிலிருந்தே அறியக்கிடக்கின்றது. நன்னூலார் இவையனைத்தையும், ௰௬௨ ஆம் நூற்பாவையும் கருத்திற் கொண்டே, 'செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும், செய்யுளுள் உம்உந் தாகலும் முற்றேல், உயிரும் உயிர்மெய்யும் ஏகலு முளவே' (நன் - ௩௪௧) என்றுரைத்தனர்.

௨௩௯ ஆம் நூற்பா: 'நீ உண்டு வருவாய்' என்பதில் 'உண்டு' என்பது, இறந்த காலத்து வந்த செய்தென் எச்சம். அது அதற்கு முடிபாய் வரும் 'வருவாய்' என்னும் எதிர்காலச் சொல்லோடு மயங்கிற்று. வருதற்கு முன் உண்டல் நிகழ்தலின், 'முடிபாய் வரும் வினைச் சொல்லால் உணர்த்தப்படுந் தொழிற்கு அவ்வெச்சத்தான் உணர்த்த வரும் தொழில் முன்னிகழ்ந்தது' என்றனர்.

'வாராக்காலம்' என்பதற்கு எதிர்காலம் என உரைகண்டனர் சேனாவரையரும், தெய்வச்சிலையாரும். இறந்தகால மொழிந்த ஏனைய

நிகழ்காலமும் எதிர்காலமும் என உரைகண்டனர் இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும், கல்லாடரும்.

'ஒன்றென முடித்தலால்' செய்யூ, செய்பு என்பனவற்றிற்கும் ஒழிந்த எச்சங்கட்கும் கொள்க வென்றனர் நச்சினார்க்கினியரும், கல்லாடரும்.

உ௪௦ ஆம் நூற்பா: 'முக்கா லத்தினும் ஒத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத் தானே' என்ற நன்னூல் சூத்திரம் இதன் பொருளை நன்கு விளக்கும். இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்கள் அனைவரும் இந்நூற்பாவிற்கு இங்ஙனம் உரைகாணத், தெய்வச்சிலையார் மட்டும் வேறுரை காண்பர். அதனை அவர் உரையான்றிக.

உ௪௧ ஆம் நூற்பா: பாணித்தல்-காலம் நீட்டித்தல். ஓராங்கு-ஒருபடித்தாக. ஒரும், ஆங்கும் அசைகள் என்பர் தெய்வச்சிலையார்.

உ௪உ ஆம் நூற்பா: தெய்வம்-ஊழ். 'தெய்வத்தா னாகா தெனினும்' (குறள்-௬உ௯) என்புழியும் இஃது இப்பொருட்டாதலறிக.

இருவினைப் பயன்களைக் குறிப்பிட்ட ஒருவனோடு கூட்டிச் சொல்லாது, பொதுவாக அப்பயன்களின் இயல்பினை விளக்குங்கால் எதிர்காலச் சொல்லால் சொல்லாது, நிகழ்காலச் சொல்லால் சொல்லுக என்பது இந்நூற்பாவின் கருத்தாகும்.

இன்னின்ன பொருள்கள் இவ்விவ்வாறு இருக்குமென அவற்றின் இயல்பினை வழக்காற்றில் அறிந்த ஒருவன், அதன் இயல்பைக் கூறுமிடத்தும்; இவையிவை இங்ஙனம் நிகழின், இவையிவை நிகழும் என் நூல்களால் நன்கு தெளிந்த ஒருவன், அதன் இயல்பைக் கூறுமிடத்தும் எதிர்காலச் சொல்லால் சொல்லாது இறந்த காலத்திலோ, அன்றி நிகழ்காலத்திலோ வைத்துச் சொல்ல வேண்டும் என்பது உ௪௫ ஆம் நூற்பாவின் கருத்தாகும்.

இவையிவை நிகழின், இவையிவை நிகழும் என நூலால் தெளிந்த ஒருவன் அதன் இயல்பு கூறலைத் 'தெளிவு' என்பர். இங்குக் கூறப்படுந் தவஞ்செய்தான் சுவர்க்கம்புகும், தாயைக் கொன்றான் நிரயம் புகும் என்பனவும் நூலால் தெளிந்தனவே. ஆதலின் இதனையும் ஆங்குக்கூறப்படுந் தெளிவின் கண்ணேயே அடக்கிவிடலாமே! வேறு கூறுவானேன்? என்பது வினா. அதற்கு அழகாக விடைகாணுகின்றார் சேனாவரையர். (௧) ஆங்குக் கூறப்படும் இயற்கையும் தெளிவும் திருவருட் சார்பினாலோ, அன்றி இயல்பினாலோ மாறவும் கூடும். ஆனால் இங்குக் கூறப்படும் இருவினைப் பயன்களோ எவ்வாற்றானும் மாறாது. அவை ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணாது. ஆதலின் இதனைத் தெளிவில் அடக்காது வேறு கூறினார். (உ) அங்கு எதிர்காலத்தால் கூறப்படும் இயற்கையும் தெளிவும், ஏனைய இறப்பு, நிகழ்வு ஆகிய இருகாலத்தினும் கூறப்படும். ஆனால் இங்குக் கூறப்படுவதோ எதிர்காலத்தால் சொல்லப்படுவதை நிகழ்காலத்தில் மட்டுமே கூறப்படும். ஆதலின் இதனை ஆண்டடக்கல் பொருந்தாது.

இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் மட்டும் வேறு பொருள் காண்பர். அதனை அவர் உரையான் அறிக.

உ௪௪ ஆம் நூற்பா: 'வைதேனே' என்பதில் உள்ள ஏகாரம் வினாவையும், வைதல் வினையையும் குறித்தலின் இதனை 'வினாவுடை

வினைச்சொல்' என்றனர். கதம்-சினம். 'கதங்காத்துக் கற்றடங்கல்' (குறள்-௱௩௦) என்றவிடத்தும் இஃது இப்பொருளாத லறிக.

'வைதேனே' என்ற சொல்லில் ஏகாரம் எதிர்மறைப் பொருள் உணர்த்தவில்லை. அது எதிர்மறைப் பொருளுணர்த்தும் என்பதற்கு அறிகுறியாகவே வந்துள்ளது. ஆதலின், வினாவையுடைய (வினா வெழுத்தை யுடைய) வினைச்சொல்லே எதிர்மறைப்பொருள் உணர்த் திற்று என்பது கருத்தாம்.

௨௪௫ ஆம் நூற்பா: இதன் கருத்தை ௨௪௨ ஆம் நூற்பாவின் விளக்க உரையில் காண்க. இயற்கை - வழக்காற்றில் இதுவரை நிகழ்ந்த நிகழ்ச்சிபற்றி அறியப்படுவது. தெளிவு-இதுவரை நிகழ்ந்தது பற்றி, இனியும் நிகழும் என நூல்களால் அறியப்படுவது. எனினும் இவை காலப்போக்கால் மாறினும் மாறலாம்.

பெற்றி - இயல்பு. கூறை - ஆடை; 'இம்மையே தரும் சோறும் கூறையும்' (சுந்தரர்-தேவாரம்) என்றவிடத்தும் இஃது இப்பொரு ளாதலறிக. தெற்றி-மேட்டுநிலம். எறும்பு, மழை பெய்யும் அறிகுறி யிருப்பின், தன் முட்டையோடு மேட்டு நிலத்திற்குச் செல்லும் என் பதைப், 'பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி, முட்டை கொண்டு வற்புலம் சேரும், சிறுநுண் எறும்பின் சில்லொழுக்கேய்ப்ப'(புறம்-௱௭௩) என்பதால் அறிக.

௨௪௬ ஆம் நூற்பா: 'திண்ணை மெழுகப்பட்டது' என்புழி, எது மெழுகப்பட்டது? எனில், திண்ணை எனக் கூறப்படும். ஆதலின் அது செயப்படு பொருளாயிற்று. 'திண்ணை மெழுகிற்று' எனில், அது செயப்படுபொருளாதலன்றி வினைமுதல் போலக் கூறப்பட்டிருத்தலின் அது வழுவாம். எனினும் அதனை வழுவமைதியாகக் கொள்க என்றனர் சேனாவரையர். 'அரிசி தானே யட்டது' என்புழி, அரிசி தானே உலையில் ஏறியும், வெந்தும் சோறாதலின்மையின், அது வினைமுதலின் வினையைத் தான செய்தது போலக் கூறப்பட்டதாம். இதனுள், முன்னையது செயப்படுபொருளை வினைமுதல் போலக் கூறப்படுவது. பின்னையது செயப்படுபொருளே வினைமுதலின் வினையைத் தான் செய்தது போலக் கூறப்படுவது. இவ்வேற்றுமை நன்கறிதற்குரியது.

'இதைக் கரும கருத்தன் என்ப' என்ற தொடரில், இது என்ற சுட்டு மேற்கூறியவற்றில்-முன்னையதைக் குறிக்கும். கருமம்-செயப்படு பொருள். கருத்தன் - வினைமுதல். செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்படுதலைக் கருமகருத்தன் என்பர். நன்னூலாரும் 'செயப் படு பொருளைச் செய்தது போலத், தொழிற்படக் கிளத்தலும் வழக் கினு ளுரித்தே' எனக் கூறுதல் காண்க.

## எ. இடையியல்

௨௪௯ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்கு இரு உரை தரப்படு கின்றது. முதல் உரை :- இடைச்சொல் பெயரைச் சார்ந்து பெயர்ப் பொருளையும், வினையைச் சார்ந்து வினைப் பொருளையும் தருவதல்லது, தனக்கெனப் பொருளுடையவல்ல என்பது. இரண்டாம் உரை:- இடைச் சொல் பெயரையும் வினையையும் சார்ந்து வருவதல்லது, தாமாக வாரா என்பது. முதலுரையில் இடைச்சொல் பொருளுணர்த்து

மாறு கூறப்படுகின்றது. இரண்டாம் உரையில் இடைச்சொல், சார்ந்து வருமாறு கூறப்படுகின்றது.

பெயரியலில், 'சொல்லெனப் படுப பெயரே வினையென்று-ஆயி ரண் டென்ப அறிந்திசி னோரே' (௧௫௮), 'இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும் - அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப' (௧௫௯) என்ற நூற்பாக்களில், இடைச்சொல் உரிச்சொல் ஆகிய ஒவ்வொன் றுமே, பெயரையும் வினையையும் சார்ந்து வரும் என்பது பெறப் படுதலின். ஈண்டு இடைச்சொற்கள் பொருளுணர்த்தும் முறைமை யைக் கூறவேண்டும் என்றனர் முதல் உரைகாரர். இந்நூற்பாக்களை நிரனிறையாகக்கொண்டு இடைச்சொல்பெயரையும், உரிச்சொல் வினை யையும் சார்ந்து வரும் என்றும் கருத்துக்கொள்ளலாமாகலின், இடைச் சொல் உரிச்சொல் ஆகிய ஒவ்வொன்றுமே பெயரையும் வினையை யும் சார்ந்து வரும் என்பதை ஈண்டுக் கூறவேண்டும் என்றார் இரண்டாம் உரைகாரர். தெய்வச்சிலையார் இவ்விருரையும் ஏற்பர்.

உண்டனன், உண்டான் என்னும் சொற்களில், இடைநிலையும் விகுதியுமாய் வருவன இடைச்சொற்களே யாகும். இந்நிலைமை நோக் யே, 'இடைச் சொற்கள் சாரப்படும் சொல்லின் வேறாய் வருதலின்றி அவற்றிற்கு உறுப்பாயும் வரும் என்றார்'.

௨௫௦ ஆம் நூற்பா: வினைச்சொல்லில், பகுதி நீங்கலாக, ஏனைய இடைநிலையும், விகுதிகளும் இடைச்சொற்களேயாகவும், இடை நிலையை மட்டும் ஈண்டுக் கூறியதற்குக் காரணம்; வியங்கோள், பெயரெச்ச வினையெச்சங்கள், செய்யுமென்னும் முற்று ஆகிய இவற் றின் விகுதிகள், பாலையோ அல்லது ஒருமை பன்மையையோகூட உணர்த்தாமையேயாகும். ஆனால் வினைச்சொற்களில் இடைநிலைகளாக வருவனவோ, அனைத்தும் காலமுணர்த்தி வரும். ஆதலின் ஆசிரியர் வினைச்சொல்லின் விகுதி முதலியவற்றைக் குறியாது, காலங்காட்டும் இடைநிலைகளை மட்டுமே விதந்து 'வினைசெயல் மருங்கில் காலமொடு வருநவும்' என்றனர்.

'வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்' என்ற தொடர், வேற்றுமைப் பொருட்கண் வரும் உருபுகளைக் குறிக்கும். ஆனால் அதே தொடர் 'வேற்றுமைப் பொருளாகுநவும்', 'வேற்றுமை உருபாகு நவும்' எனப் பிரிக்கப்பட்டு, வேற்றுமைப் பொருளில் வருகின்ற பிற சொற்களையும் (அவையாவன, கண் கால் முதலிய சொற்கள்) வேற் றுமை உருபுகளாய ஐ முதலியவற்றையும் குறிக்கும். இங்ஙனம் ஒரு தொடர் முன்னர்க் கூட்டியும், பின்னர்ப் பிரித்தும் பொருள் செய்யப் படுதலின் யோகவிபாகம் என்னும் நூற்புணர்ப்பாம். முன்னர் 'பயங்கல் கூடாதம மரபினவே' (௧௧ ஆம் நூற்பா) என்றவிடத்தும் இங்ஙனமே கூட்டிப் பிரித்துப் பொருள் செய்தமை காண்க.

வேற்றுமை உருபுகளேயன்றி, அப்பொருளில் வரும் பிறசொற் களையும் உருபு என்று கூறியதற்குக் காரணம், உருபுபுணர்ச்சிக்கு ஓதிய விதியையே அச்சொற்களும் பெறுதல் பற்றியாம். 'நீ' என் பது ஐ முதலிய உருபேற்குங்கால் 'நின்'னென்று ஆதல் போல, உழை, இடம் போன்ற பிறசொற்களை ஏற்கும்போதும் 'நின்'னென் றாதல் காண்க. இதனை ௮௨-ஆம் நூற்பா உரையில் சேனாவரையர் முன்பும் விளக்கியுள்ளார்.

'தத்தம் குறிப்பில் பொருள் செய்குந' – மன், தில் போல்வன. சாரியை, வேற்றுமைஉருபு, உவமஉருபு ஆகியனவும் தத்தம் குறிப்பில் பொருள் செய்வனவாயிருக்க, அவற்றை மட்டும் தனித்தனியே விதந்தும், மன், தில் போன்றவற்றை மட்டும் தத்தம் குறிப்பில் பொருள் செய்குந என ஒன்றாக அடக்கியும் கூறுதற்குக் காரணம், சாரியைகள் புணர்ச்சியில் பொருளுணர்தற்குப் பயன்படுதலும், வேற்றுமை, உவமஉருபுகள் அவ்வத்தொகைகளின் இலக்கணம் கூறுதற்குப் பயன்படுதலும்; இவை அங்ஙனமன்றிப் பொருளுணர்த்துதலையே பயனாகக் கொண்டிருப்பதும் ஆகும்.

௨௭௨ ஆம் நூற்பா: ஏ, குரை ஆகிய இருசொற்களும் ஒவ்வொன்றுமே, இசைநிறையும் அசைநிலையுமாகும் என்பது சேனாவரையர் கருத்தாகும். ஆனால் இளம்பூரணர் இந்நூற்பாவை நிரனிறையாகக் கொண்டு, ஏ இசைநிறைப் பொருளிலும், குரை அசைநிலைப் பொருளிலும் வரும் எனப் பொருள் கொண்டனர். இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (௧) 'மற்றென் கிளவி' (௨௬௨) என்னும் நூற்பாவிலும், 'அந்தில்' (௨௬௭) என்னும் நூற்பாவிலும் 'அப்பாலிரண்'டென்றும், 'ஆயிரண்டாகு'மென்றும் கூறிய தொகையெல்லாம் பொருளைக் குறித்தனவே யன்றிச் சொல்லைக்குறித்தன அல்ல. ஆதலின், ஈண்டும் 'ஆயிரண்டாகும்' என்னும் தொகை ஏ, குரை என்ற இரண்டும் ஒவ்வொன்றுமே இசைநிறையும் அசைநிலையுமாக வரும் என்னும் பொருளைக் குறிக்குமே யன்றிச் சொல்லைக் குறிக்காது என்பதாம். (௨) இளம்பூரணர் கூறுவதுபோல ஏ இசைநிறையும், குரை அசைநிலையுமாக வருமெனின், அவ்விரண்டையும் ஒரு நூற்பாவில் கூறுவது மயங்கக் கூறலாகும். பொருளால் ஒன்றுபடும் சொற்களை ஒருங்கு கூறுவது பொருத்தமும் தெளிவும் ஆகுமேயன்றி, வெவ்வேறு பொருளைக் குறிக்கும் இருசொற்களை ஒருங்கு கூறுவது அத்துணைப் பொருத்தமும் தெளிவுமுடைத்தாகாது என்பதாம்.

இசைநிறையாவது இசைநிறைத்தற் பொருட்டு ஒரு சொல்லொடு ஒட்டிவரும். அசைநிலையாவது தனித்து வரும் என வேற்றுமை காண்பர் தெய்வச்சிலையார்.

௨௭௬ ஆம் நூற்பா: 'அம்ம' என்னும் சொல் அசைச்சொல்லாக வரும் என்றனர் முன்பு (௩௫௩). ஈண்டு அச்சொல், 'கேள்' என்னும் பொருளைக் குறிக்கும் என்றனர். நன்னூலார் இவ்விரிடத்திலும் கூறப்பட்ட கருத்தைத் தொகுத்தே 'அம்ம உரையசை கேண்மின் என்றாகும்' (நன்-இடை-௧௧) என்றனர்.

௨௭௭ ஆம் நூற்பா: உரையசை சிறிது பொருளுணர்த்தும், அசைநிலை பொருளுணர்த்தாது சொற்களை அசைத்து (சார்ந்து) நிற்குமென வேற்றுமை காண்பர் நச்சினார்க்கினியர்.

௨௮௧ ஆம் நூற்பா: நச்சினார்க்கினியர் ஔகாரம் மொழிக்கு ஈறாக வருதலின்மையின் 'கௌ' அல்லது 'வௌ' என்றே எடுத்துக் காட்டுக் காட்ட வேண்டுமென்பர்.

௨௮௫ ஆம் நூற்பா: முற்றும்மைப் பொருளில் வருகின்ற தொகைச்சொல் ஒரோவழி எச்சப்பொருளையும் தரும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். ஆனால் ஆசிரியர் முற்றும்மைப் பொருளில் வரும்

தொகைச்சொல் எதிர்மறைவினையொடு முடியும் பொழுதென்றோ, உடன்பாட்டு வினையொடு முடியும் பொழுதென்றோ விதந்து கூற வில்லை. ஆதலின் இளம்பூரணர் உடன்பாட்டு வினைக்கண் வருதலைக் கொண்டனர். ஆனால் சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலை யார் ஆகியோரெல்லாம் எதிர்மறைவினையோடு முடிகின்ற பொழுதே எச்சப் பொருள்படு மென்றனர்.

உஅஅ ஆம் நூற்பா: எண்ணைக்குறித்து வருகின்ற ஏகாரம் சொல் தொறும் வருதலின்றி இடையிட்டு வரினும், அவை எண்ணுதற் பொரு ளில் வந்ததே ஆகும் என்பது இந்நூற்பாவிற்குச் சேனாவரையர் தரும் கருத்தாகும். தெய்வச்சிலையாரும் இக்கருத்தினரே யாவர்.

உம், ஏ, என, என்று, எனா, என்றா, செவ்வெண், ஒடு என்பன எண்ணைக் குறித்து வரும் இடைச் சொற்களாம். இவற்றுள் ஒரு தொட ரில் ஏதேனுமொன்று தொடங்கி வரும்பொழுது இடையே ஏகார எண் வந்ததாயினும், தொடங்கிய எண் எதுவோ அதனாலேயே அத்தொடர் பெயர் பெறும் என்பது இளம்பூரணர் தரும் கருத்தாகும். 'தோற்றம் இசையே நாற்றம் சுவையே, உறலோடு ஆங்கைம் புலனென மொழிப' என்புழி, இசையே சுவையே என்றவிடத்து ஏகார எண் இடைவந்த தாயினும், தோற்றம் எனத் தொடங்கிய பொழுது செவ்வெண்ணாகத் தொடங்கியிருத்தலின் இத்தொடர் முழுவதும் செவ்வெண்ணே ஆகும் என்பது அவர் கருத்து. இதனைச் சேனாவரையர் இருகாரணங்களால் மறுக்கின்றார். (க) இங்ஙனம் செவ்வெண்ணும் ஏகார எண்ணும் விரவிய ஒருதொடரில் செவ்வெண் என்று பெயர் கொடுப்பது எவ் வளவு பொருத்தமுடையதோ, அவ்வாறே ஏகார எண் என்று கூறினும் பொருத்த முடைத்தே ஆகும். ஆதலின் தொடங்கிய எண்ணாலேயே பெயர் கொடுக்க வேண்டும் என்றல் பொருந்துவதன்றாம். (உ) இங் ஙனம் இரண்டும் விரவிய பொழுது தொடங்கிய எண்ணாலேயே பெயர் கொடுத்தல் வேண்டும் என்பதனால் யாதொரு பயனும இல்லை. ஆத லின் அக்கருத்துப் பொருந்தாதென்றனர்.

எனினும், இடையே பிறஎண் வரினும் தொடங்கிய எண் எதுவோ, அதனால் பெயர் கொடுப்பதே முறையும் தகுதியுமாய் இருத் தலின் இளம்பூரணர் கருத்தும் ஏற்றுக்கொள்ளுதற்குரியதே யாகும்.

எண்ணைக் குறித்து வரும் இடைச் சொற்கள் எட்டனுள் யாதானு மொன்று தொடங்கி வருவழி, இடையே ஏகார எண் வந்ததாயினும் அத்தொடர் முழுதுமே ஏகார எண்ணில் வந்தது என்று கருதப்படும் என இளம்பூரணர் உரைக்கு விளக்கம் காண்டலும் ஒன்று. நச்சினார்க் கினியர் இந்நூற்பாவிற்குப் பொருள் கூறுவதில் இவர்களினும் வேறு படுவர். அதனை அவருரையானறிக.

சொல்தொறும் வாராது இடையிட்டு வருதல், இவ்வேகார எண் ணிற்கே யன்றி என, என்று, ஒடு என்பனவற்றிற்கும் உரியதாகலின், அவற்றை ஆசிரியர் கூறாதது என்னை? யெனின், அவை ஓரிடத்து நின்று ஏனையவற்றோடும் சென்று கூடுதலையே இலக்கணமாக உடையதாத லும் (உகச), இவ்வேகாரமோ சொல்தொறும் வருதலையே இலக்கண மாக உடையதுமாதலின் என்க. ஆதலின் அவை இடையிட்டு வருதலும் உண்டுஎனக்கூறல் இன்றியமையாததாயிற்று.

பிற எண் ஒடாநின்றவழி-செவ்வெண், என, என்று போன்ற பிற எண்ணிடைச் சொற்கள் வல தொடங்குமிடத்து. ஓடா நின்ற பிறவெண் ணேயாம்-தொடங்கிய எண்ணிடைச் சொல் எதுவோ? அதுவேயாகக் கொள்ளப்படும்.

உ௮௯ ஆம் நூற்பா: உம்மை தொக்கு நின்ற 'எனு' என்னும் சொல்லும், ஆகாரத்தை இறுதியாகவுடைய 'என்ரு' என்னும் சொல் லும் ஆகிய இரண்டும் எண்ணுமிடத்து வரும் என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். 'என' 'என்று' என்ற இடைச்சொற்களின் இயல்பை உ௫௮, உ௫௯ ஆம் நூற்பாக்களில் ஆசிரியர் உணர்த்தியுள்ளார் அவற் ரோடு ஒத்ததாகிய இவ்விரு சொற்களையும் அவற்றை அடுத்தே கூறி யிருக்க வேண்டும் அங்ஙனம் கூறாது ஈண்டுக் கூறியதற்குரிய காரணத் தைச்சேனாவரையர் விளக்குகின்றார். (௧) எனு. என்ரு ஆகிய இருசொற் களும் எண்ணுதற் பொருளிலேயே வரும். ஆனால் என, என்று ஆகிய சொற்களோ எண்ணுதற் பொருளிலும் வரும்; பிற பொருளிலும் வரும். ஆதலின் இவற்றை எண்ணிடைச் சொற்கள் கூறும் அதி காரத்தே (உ௮௭ முதல் உ௯௪ முடிய, கூறினர். (உ) இவ்விரு சொற் களையும் ஈண்டுக்கூறின், அடுத்த நூற்பாவில் 'அவற்றின் வருஉம் எண் ணின் இறுதியும்' எனச் சூத்திரத்தைச் சுருங்கக் கூறலாம். அதற்காக ஈண்டுக்கூறினர் என்பது. இந்நுண்மை பிறருரையில் காணாதது.

உ௯௦ ஆம் நூற்பா: பெயர் வினைகளில் எண்ணிடைச் சொல் தொக்கு நிற்பது 'செவ்வெண்ணும்'. அவற்றுள் ஈண்டுக்கூறுவது பெயர்ச் செவ்வெண்ணும். ஆதலின் இதனைப் பெயரியலில் கூறவேண் டும். ஆயினும் ஈண்டுக்கூறியது எண்ணிடைச்சொற் போல அவை எண்ணுதற் பொருளில் வருதலும், தொகை பெற்று வருதலுமாகிய ஒப்புமை பற்றியாம் என்பர் சேனாவரையர்.

உம்மை தொக்கு வந்த பெயர்ச்செவ்வெண்ணிற்கும், உம்மைத் தொகைக்கும் உரிய வேறுபாடு: முன்னையது விட்டிசைத்து வரும்; பின்னயது ஒருசொல் நீர்மைத்தாக வரும்.

உ௯௧ ஆம் நூற்பா: வேற்றுமை உருபு தொக்கு வருதல், உம்மை யெண்ணின்கண்ணும் உண்டு என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். எ-டு: 'பாட்டும் கோட்டியும்' என்ற உம்மைஎண், பட்டையும் கோட்டியையும் என விரியுமாறு காண்க.

'பெறறதன் பெயர்த்துரை' என்பது ஏற்கனவே பெற்றதொரு கருத்தையே மீண்டும் கூறுதலென்னும் பொருள்படும். எனவே, 'கூறி யது கூறல்' என்பது இதன் கருத்தாகும். 'பிறிதுபிறி தேற்றலும் உருபு தொக வருதலும் நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப' (சொல்-௧௦௪) என்றவிடத்து, இன்னவிடத்துத்தான் உருபு தொக்கு வருதல் வேண்டு மென ஆசிரியர் சிறப்பித்துக் கூருமையின், யாண்டும் உருபு தொக்கு வரலாம் என்பது பெறப்படுகின்றது. அங்ஙனமாகவே உம்மை யெண் ணின்கண் உருபு தொக்கு வரலாம் என்பதும் ஆண்டே பெறப்படுதலின் ஈண்டும் கூறியது, கூறியது கூறலாம். 'கூறியது கூறினுங் குற்றமில்லை வேறொரு பொருளை விளக்குமாயின்' என்றதனுன், உம்மை யெண்ணின் கண் உருபு தொகலாம் என்பது 'உருபு தொக வருதலும்' என்னும் பொதுவிதியான் அடங்கினும், அதனையே மீண்டுங் கூறினர்; நியமத் திற்காக. அந்நியமம் யாதோ வெனின். உருபுதொக வருதல் எல்லா இடத்திற்கும் பொருந்தினும், எண்ணிடைச் சொற்களைப் பொறுத்த

மட்டில் உம்மை யெண்ணின்கண்ணல்லது பிற எண்ணின்கண் ஆகாது என்பதற்காம்.

'குன்றி கோபம் கொடிவிடு பவளம் ஒண்செங்காந்தள் ஒக்கும் நின்னிறம்' என்ற தொடர், குன்றியையும் கோபத்தையும் பவளத்தையும் காந்தளையும் ஒக்கும் நின்னிறம் எனப் பொருள் படுகின்றது. இவை செவ்வெண்ணும். எனவே, செவ்வெண்ணின்கண்ணும் உருபுதொக வருதல் இருக்க, உம்மையெண்ணின்கண் மட்டுமே உருபு தொகவரும் என நியமித்தது எங்ஙனம் பொருந்தும்? என்ற வினாவைச் சேனாவரையர் தாமே எழுப்பிக் கொண்டு, அதற்கு விடையும் கூறுகின்றார். அவ்விடை வருமாறு:- செவ்வெண் தொகை பெற்றல்லது நில்லாது என்பது ஆசிரியர் கருத்து (உ௬௦). ஆனால் இச்செவ்வெண்ணிலோ தொகை யில்லை. ஆதலின் இச்செவ்வெண்ணிலும் 'அவற்றை' என ஒருசொல் வருவித்துக், குன்றி கோபம் பவளம் காந்தள் ஆகியவற்றை நின்னிறம் ஒக்கும் எனப் பொருள் கூறவே உருபு தொக்கு வருதல் இல்லாதாய் விடும். எனவே உம்மை எண்ணின்கணன்றி உருபு தொகுதல் இல்லை யென்ற நியதி வழுவாகாதாம் என்பர் சேனாவரையர்.

எனினும், சேனாவரையர் கூறுமாறு, 'அவற்றை' என்னும் ஒரு சொல் வருவிப்பின் குன்றி முதலாயின செயப்படுபொருளாகுமே யன்றி, எழுவாயாகாது. இவை எழுவாயாக வேண்டுமேல், 'அவை' யென்ற வொருசொல் வருவித்தலே பொருத்தமென்பர் திரு. பூவராகம் பிள்ளை அவர்கள். இந்நுண்மை அறிந்து இன்புறுதற்குரியது.

பொதுவாக 'உருபு தொகல் வரையார்' என ஆசிரியர் கூறினும், ஐயும் கண்ணுமே தொகும், அல்லன தொகா எனக் கூறிய நயம் அறிந்து மகிழ்தற்குரியது. நச்சினார்க்கினியர் இக்கருத்தைப் பொன்னே போல் போற்றுவர்.

'யானை தேர் குதிரை காலாள் எறிந்தார்' என்ற தொடர், யானையையும் தேரையும் குதிரையையும் காலாளையும் எறிந்தார் எனப் பொருள்படும். எனவே இத்தொடரில் உம்மையும் தொக்கு நிற்கிறது; உருபும் தொக்கு நிற்கிறது. இவ்விரண்டும் தொக்கு நிற்பதால் இதனை, உம்மைத் தொகை என எண்ணுவதா? அல்லது உருபு தொகை என எண்ணுவதா? எனில், இதனை உருபு தொகையென யெண்ணுக என்பதே இளம்பூரணர் கருத்தாகும். (எனினும் இக்கருத்துத் தற்பொழுதுள்ள இளம்பூரணர் உரையில் இல்லை. சேனாவரையர் காட்டும் எடுத்துக்காட்டு மட்டுமே உளது.), இதனைச் சேனாவரையர் மிக வன்மையாக மறுக்கின்றார். அதனை அவர் உரையில் காண்க.

உ௬உ ஆம் நூற்பா: 'உம்' எனப் பொதுவகையால் கூறினாரேனும், 'செய்யும் என்னும் பெயரெச்சத்து இறுதியில் வரும் உம்' என்பதே ஈண்டுக் கொள்ளப்படும். செய்யுமென்பது முற்றாகவும் வரும்; எச்சமாகவும் வரும். ஈண்டுப் பெயரெச்சமாக வரும் உம்மைக்குறித்தது. 'இடனுமாருண்டே' என்றதனால் இத்திரிபு பெயரெச்சத்திற்கு ஈறாய வழி என்பது கருதிப்போலும் எனச் சேனாவரையர் ஐயுற்றுரைக்க, நச்சினார்க்கினியர் இத்திரிபு பெயரெச்சத்திற்கே கொள்க எனத் தெளிந்துரைத்தனர். நன்னூலாரும் எச்சத்திற்கே இத்திரிபு கூறுவர்.

இடைச் சொற்கள் ஈறு திரிதலுமுண்டு என்பதை, உ௬௩ ஆம் நூற்பாவால் ஆசிரியர் கூறுகின்றார். ஈண்டு உம் உந்தாய்த் திரிதலின், இத

னையும் அந்நூற்பாவின் விதியிலேயே அடக்கிவிடலாம். ஆயினும் இத் திரிபை ஈண்டுத் தனித்துக் கூறுதற்குரிய காரணத்தைச் சேனாவரையர் நன்கு விளக்குகின்றார். உ௬௩ ஆம் நூற்பாவில் கூறப்பட்ட திரிபு முத லிய விதிகள் அசைநிலை, இசைநிறை, தத்தம் குறிப்பில் பொருள்செய் குந ஆகிய மூன்றற்குமேயாம். இதனை உ௫௩ ஆம் நூற்பாவிலும் சேனா வரையர் நன்கு விளக்கியுள்ளார். ஆனால், ஈண்டுக் கூறப்படுந்திரிபோ, அம்மூன்றனுள் ஒன்றல்ல. ஆதலின் வேறு கூறினார். இங்ஙனமே ௧௦௪ ஆம் நூற்பாவில் கூறப்பட்ட உருபின் திரிபுகளும் உ௫௧ ஆம் நூற்பாவில் அடங்காமை பற்றியே, தனித்துக் கூறினார் என்பது.

செய்யுமென்னும் பெயரெச்சத்து ஈறு திரிதலை இந்நூற்பா கூறு தலின், இது வினையியலுள் வைத்தற்கே பொருத்தமுடைத்து; இடை யியலுள் கூறுதல் பொருத்தமில்லை யெனின்; செய்யுமென்பது பெய ரெச்சமாயினும், அதன் இறுதி நிலையாகிய உம் என்பது இடைச்சொல் லாதலின், இங்குக்கூறுதலும் இயைபுடைத்தேயாம்.

உ௮௩ ஆம் நூற்பா: எண்ணிடைச் சொற்கள் பெயரொடு வரு தலேயன்றி, வினையொடு வரினும் தத்தம் நிலையினின்றும் திரியா என ஆசிரியர் பொதுவாகக் கூறியிருப்பினும், உம், என ஆகிய இரண்டுமே வினையொடு வருதற்கு உதாரணம் காட்டி, ஒழிந்த எண்ணோடு வருவன உளவேல் கண்டுகொள்க எனச் சேனாவரையர் கூறினர். இளம்பூரணர் முற்று, செவ்வெண்தொகை பெற்று வந்தமைக்கும் உதாரணம் காட் டினர். சங்கரநமச்சிவாயர் என்று, என என்பனவும் வினையொடு வரு தற்கு உதாரணம் காட்டுவர். இதனை 'வினையொடு வரினும்எண் இனைய ஏற்பன' (நன்-௪௨௦) என்னும் நூற்பாவால் அறியலாம்.

முற்று, செவ்வெண்தொகைபெற்று வந்ததற்கு, 'சாத்தன் வந் தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமை யால் கலியாணம் பொலிந்தது' என்பதை எடுத்துக்காட்டினர் இளம் பூரணர். இதனைச் சேனாவரையர் இருகாரணங்களால் மறுக்கின்றார். (௧) சாத்தன், கொற்றன், வேடன் என்ற மூன்று எழுவாய்களும் பய னிலையோடு தனித்தனியே முடிந்துவிடுதலின் அவை எண்ணுதற்கு ஏலா. (உ) மூவரும் என்னும் தொகை சாத்தன் கொற்றன் வேடன் என்னும் மூன்று பெயர்களின் தொகையைக் குறிக்கின்றதேயன்றி வினையைக் குறிக்கவில்லை. ஆதலின் முற்று, செவ்வெண்தொகை பெற்று வந்ததென்றல் பொருந்தாது.

எனினும், நச்சினார்க்கினியர் இதனை மறுத்து, இளம்பூரணர் கருத்தே வலியுடைத்து என்பர். அதனை அவர் உரையானறிக.

உ௮௪ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்குச் சேனாவரையரால் உரை யாசிரியர் கருத்தெனக் கூறப்படும் உரை இளம்பூரணத்தில் இல்லை. சேனாவரையர் கருத்தின்படி இளம்பூரணர் உரை வருமாறு:- என்று, என, ஒடு ஆகிய மூன்று எண்ணிடைச் சொற்களும் எண்ணுதற்கண் சொற் றோறும் வருதலின்றி, ஓரிடத்து வந்ததேனும், பொருள் செய்யுங்காற் சொற்றோறும் இருப்பதாகவே கருதுக. ஆனால் அவற்றை எண்ணு கின்றபோது, அசைநிலையாக நீக்கிவிடுக என்பதாம். இதனைச் சேனா வரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (௧) இம்மூன்றும் பொருள் செயயுங்கால் பிரிந்தும், எண்ணுதற்கண் அசையாயும் வருத லுடையவாயின், அப்பொருண்மையை ஆசிரியர் விளங்க உணர்த்தி யிருப்பர். அசைநிலையாக வருதலுடைய என்ற பொருண்மையை

உணர்த்துதற்கேற்ற சொற்கள் இச்சூத்திரத்துள் இல்லை. (உ) என்னுதற்கண் அசைநிலையாகக் கொள்ளவேண்டுமெனின், இந்நூற்பாவில் 'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை' என்புழி, 'என' என்பதனை முன்னும் கூட்டி யுரைக்க என விளக்க வேண்டுததில்லை. ஆனல் இளம்பூரணர் அங்ஙனம் காட்டுகிருர். ஆதலின் பொருந்தாதென்றனர்.

## அ. உரியியல்

உ௯எ ஆம் நூற்பா : பெயரினும் வினையினும் மெய்தடுமாறி - உரிச்சொற்களின் பகுதி பெயராயும் வினையாயும் திரிந்து. மெய்தடுமாறி – உரிச் சொற்களின் பகுதிகள் திரிந்து.

உ௯௯ ஆம் நூற்பா : 'உறுதவ நனிஎன வரூஉம் மூன்றும்' என்னும் எழுவாய் 'மிகுதி செய்யும் பொருள என்ப' என்னும் பயனிலையோடு இயைந்து, பின் இவை இரண்டுமே கூடி 'அவைதாம்' என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நின்றது. இங்ஙனமே முடிபுகொள்ளுமாற்றை ௩௨௦, ௩௦௨ ஆம் நூற்பாக்களிலும் காண்க.

௩௦௧ ஆம் நூற்பா : இந்நூற்பாவில் 'கெழு' என்ற உரிச்சொல்லிருப்பினும், உரையாசிரியர்கள் அனைவரும் 'கேழ்' என்பதற்கே எடுத்துக்காட்டுக் காட்டினர். தெய்வச்சிலையார் கெழு என்பது, கேழ் எனவும் வரும் என்றனர். நச்சினர்க்கினியர் இச்சொல்லிற்கும், 'குரு' என்பது 'குருஉ' என வருவதற்கும் இலக்கணம் காட்டுவர். அந்நுண்மை பிறருரையில் காணுதது. அதனை அவருரையானறிக.

௩௦௪ ஆம் நூற்பா: 'பெற்று' என்பதற்குப் 'பெருக்கம்' எனச் சேனவரையரும், 'அடுக்கிய' என இளம்பூரணரும் உரை கண்டனர். நச்சினர்க்கினியர் இருகருத்தையும் தழுவினர். தெய்வச்சிலையார் 'பற்றுதல்' என உரை காண்பர்.

௩௧௫ ஆம் நூற்பா : கதழ், துனை என்னும் உரிச்சொற்களையே இனிது விளக்குதற் பொருட்டு, ஆசிரியர் கதழ்வு, துனைவு எனப் பெயராக்கி ஓதினர் என்பர் தெய்வச்சிலையார்.

௩௧அ ஆம் நூற்பா : 'தீர்தல்' என்பதைத் தன்வினையாகவும், 'தீர்த்தல்' என்பதைப் பிறவினையாகவும் கொண்டு எடுத்துக் காட்டுக் காட்டினர் இளம்பூரணர். இதனையே சேனவரையர் பெயர் கூருது மறுக்கின்ருர். 'தீர்தல்' என்னும் தன்வினைக்குத் 'தீர்த்தல்' என்பதைப் பிறவினையாக இந்நூற்பாவில் ஓதினர் எனில், முன்னர் 'இயைபு' (உரி - ௩௨) எனக் கூறியிருக்கும் தன்வினைக்கும் 'இயைப்பு' என்னும் பிறவினைச் சொல்லைக் கூறியிருக்க வேண்டும். ஆசிரியர் அவ்வாறு ஓதாமையின் தீர்தல், தீர்த்தல் என்னும் இருஉரிச்சொற்களுமே தன்வினைக்கு வரும் எனக் கூறினர் சேனவரையர். எனினும் தெய்வச்சிலையாரும், நச்சினர்க்கினியரும் இளம்பூரணர் கருத்தையே தழுவுவர். இதுவே பொருத்தமுடைத்தாம். 'கங்கையைச் செற்ற தீங்கு தீர்த்து நீர் கொண்மின்' (சிந்தாமணி-௩௨எ௫) என்றவிடத்துத் தீர்த்தல் என்பதும் விடுதற் பொருட்டாய்வருதலைக் காட்டியுள்ளார் நச்சினர்க்கினியர்.

தீர்தல், தீர்த்தல் ஆகிய இருசொற்களும், 'விடற்பொருட்டு' என்னும் ஒருமை வினையால் முடிதல் வழு எனக்கண்ட சேனவரையர், அதற்கு இருவிதமாக அமைதி காண்கின்ருர். (க) தீர்தல், தீர்த்தல் என்

பனவற்றைத் தனித்தனியே விடற்பொருட்டாகும் என்பதனோடு கூட்டிக் கொள்க என்பது. (உ) இன்றேல் பன்மை யொருமை மயக்கமாகக் கொள்க என்பது.

௩௩௦ ஆம் நூற்பா: 'சாய்தல்' என்ற சொல்லே 'சாஅய்' என விகாரப்பட்டது என்பர் நச்சினார்க்கினியர். ஆனால் திரு. பூவராகம் பிள்ளை யவர்கள் 'சா' என்ற சொல்லே 'சாஅயிதல்' என ஆயிற்று என்பர்.

௩௩௭ ஆம் நூற்பா: கொடுமை யேற்றி - கொடுமையை நினைந்து. ஏற்றமில்லாருள் - துணிவில்லாதவர்களுள்.

௩௩௮ ஆம் நூற்பா: 'பெற்றோர் பெட்கும் பிணையை ஆகென' (அகம் - ௮௬) என்றவிடத்துப் பிணை என்பதும், 'அமரர்ப்பேணியும் ஆவுதி யருத்தியும்' (புறம் - ௯௯) என்றவிடத்துப் பேண் என்பதும் விருப்பத்தை உணர்த்திநிற்கும் என்பர் நச்சினார்க்கினியர். 'பெட்பு' என்னும் சொல் 'பெட்டு' என்னும் பகுதிமாத்திரையாகவும் வரும். இதனை ஆசிரியர் தொல்காப்பியனார் 'பெட்டவாயில்பெற்று இரவு வலியுறுப்பினும்' (களவியல் - ௧௧), காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்' (கற்பு - ௬) என்ற விடங்களில் உடம்பொடு புணர்த்துக் கூறியுள்ளதனால் அறிக என்பர் நச்சினார்க்கினியர்.

௩௪௦ ஆம் நூற்பா: 'படர்தல்' என்ற சொல் உள்ளுதல் (நினைத்தல்), செல்லுதல் ஆகிய இருபொருளைக் குறிக்கும் என்பர் ஆசிரியர். நச்சினார்க்கினியர் இன்னும் சிறிது நுணுகி, உள்ளுதல், செல்லுதல் ஆகிய இரண்டும் வருத்தத்துடன் நிகழ்தலும், வருத்தமின்றி நிகழ்தலும் உண்டு எனவும், அவ்விரு பொருண்மையினையும் படர்தல் உணர்த்தும் என்றும் கூறுவர். இந்நுண்மை அறிந்து இன்புறுதற்குரியது. 'வள்ளியோர்ப் படர்ந்து' என்புழி இரவலர்கள் வள்ளியோரைத் தம் வருத்தக்குறிப்பான் நினைந்து செல்லலும், 'கறவை கன்றுவயிற்படர' என்புழிப் பசுக்கள் தம் கன்றுகளை வருத்தமின்றி அன்பால் நினைந்து செல்லலும் காண்க.

௩௪௨ ஆம் நூற்பா: எய்த்தல் - அறிதல். எய்யாமை - அறியாமை. இவை முறையே உடன்பாடும் எதிர்மறையும் ஆயின. எனினும், சேனாவரையர் எய்யாமை எதிர்மறைச் சொல்லன்று என்று கூறி, அறிதற் பொருட்டாய் எய்தல் என்றோ, எய்த்தல் என்றோ சான்றோர் செய்யுட்களில் எடுத்தாளப்படவும் இல்லை என்றார். எனினும், நச்சினார்க்கினியர் அறிதற் பொருட்டாய் எய்த்தல் என்ற சொல் வருதலை, 'எய்த்து நீர்ச்சிலம்பின்குரைமேகலை' (சிந்-௨௪௮௧) என்னும் சான்றோர் செய்யுளுடன் எடுத்துக்காட்டிச் சேனாவரையரை மறுத்தனர். பின்னர் வந்த சிவப்பிரகாச அடிகளும், 'புத்தனிச்சம்' என்று தொடங்கும் பிரபுலிங்கலீலைப் பாடலில் அறிதற் பொருளில் 'எய்த்து' என்ற சொல்லை வைத்து வழங்கியுள்ளார். ஆதலின், சேனாவரையர் கருத்துப் பொருந்துவதன்றாம்.

௩௪௪ ஆம் நூற்பா: இளம்பூரணரும் சேனாவரையரும் 'தா' என்பதே உரிச்சொல் என்றனர். தெய்வச்சிலையார் 'தாவு' எனக் கொண்டனர். நச்சினார்க்கினியர் இவ்விரு திறத்தையும் ஏற்பர்.

௩௫௧ ஆம் நூற்பா: 'கழும்' என்பதே உரிச்சொல்லாகப் பிற உரையாசிரியர்கள் அனைவரும் ஓத, நச்சினார்க்கினியர் 'கழுமு' என்பதே உரிச்சொல்லாகக் கொள்வர்.

௩௬௦ ஆம் நூற்பா : இலம்படு புலவர் - இல்லாமை உண்டாகின்ற புலவர் என அல்வழியில் பொருளுரைப்பர் நச்சினார்க்கினியர். இலத்தாற் பற்றப்பட்ட புலவர் என வேற்றுமைப் பொருளில் உரைப்பர் இளம்பூரணர். நச்சினார்க்கினியர் கருத்தே வலியுடைத்து. இதனை யான் வெளியிட்டுள்ள, தொல் - எழுத்து - நச்சினார்க்கினியர் உரைவிளக்கத்தில் விளக்கியுள்ளேன். ஆண்டுக் காண்க.

௩௬௫ ஆம் நூற்பா : 'நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்' (குறள்-௧௧௪௯) என்றவிடத்து 'நாம்' என்னும் உரிச்சொல், 'நாம' என ஈறுதிரிந்து இப்பொருளுணர்த்தல் காண்க.

௩௭௧ ஆம் நூற்பா : 'வயா' என்னும் சொல், வேட்கை மிகுதியை உணர்த்தும் என இளம்பூரணர் முதலாகிய உரையாசிரியர்கள் அனைவரும் கூற, நச்சினார்க்கினியர் மட்டும் 'ஈண்டு வேட்கை என்றது, கருப்பம் தாங்கி வருத்தமுற்று நுகரப்படும் பொருள்மேல் செல்லும் வேட்கையை' எனச் சிறப்புப் பொருள் கூறுவர்.

௩௭௬ ஆம் நூற்பா : 'அகலம்' என்ற பொருளை இந்நூற்பாவில் கூறப்படும் நனவு என்ற சொல்லே அன்றி, வியல் (௩௬௪) என்ற சொல்லும் தரும்.

௩௭௭ ஆம் நூற்பா : 'வலி' என்ற பொருளை இந்நூற்பாவில் கூறப்படும் மத என்ற சொல்லே அன்றி, வயம் (௩௬௬), எறுழ் (௩௮௮), தா (௩௪௪) என்ற சொற்களும் தரும்.

௩௭௮ ஆம் நூற்பா : உள்ளமிகுதியை உணர்த்துவது மத என்பது. பொருள் மிகுதியை யுணர்த்துவன 'உறு, தவ நனி' (௨௯௬) என்பன.

௩௮௪ ஆம் நூற்பா : கடியென்னும் சொற்குத் தொல்காப்பியர் கூறும் பன்னிரு பொருள்களிலும் ஐயம், முன்தேற்று ஆகிய இரண்டையும் நீக்கி, விரை, ஆர்த்தல், மன்றல் என்ற மூன்றையும் கூட்டிக் கடியென்னுஞ் சொல் பதின்மூன்று பொருளைத்தரும் என்பர் நன்னூலார்.

௩௯௦ ஆம் நூற்பா : ஆசிரியரால் இதுகாறும் கூறப்பட்ட உரிச்சொற்கள், அவர் கூறிய பொருளேயன்றி வேறு பொருள் தருமேனும் அவற்றையும் ஏற்றுக்கொள்க என்பது இந்நூற்பாவின் கருத்தாகும். இது இவ்வியலிற்குப் புறனடை கூறுவதாகும். ௩௯௬ ஆம் நூற்பாவில், இதுகாறும் கூறப்பட்ட உரிச்சொற்களேயன்றி வேறுபிற உரிச்சொற்கள் வரினும் அவற்றையும் ஆசிரியர் கூறிய முறையால் பொருளுணர்ந்து கொள்க என்று கூறிப்படுகின்றது. எனவே அதுவும் புறனடை கூறவந்ததே ஆகும். ஆசிரியரால் கூறப்பட்ட சொற்கள், பிற பொருள் தருமேனும் கொள்க என்பதும், ஆசிரியரால் கூறப்படாத உரிச்சொற்களையும், அவர் கூறியவாறறிந்து பொருள் கொள்க என்பதும் ஒன்றையொன்று அடுத்துள்ள செய்தியாகும். ஆதலின், இந்நூற்பா ௩௯௬ ஆம் நூற்பாவிற்கு முன்பு இருப்பின், மிகவும் பொருத்தமுடையதாகும். இடையியலில் இங்ஙனம கூறப்பட்ட புறனடைச் சூத்திரங்கள் ஒன்றையொன்று அடுத்து (௨௯௫, ௨௯௬) உள்ளமை காண்க.

௩௯௧, ௩௯௨, ௩௯௩ ஆம் நூற்பாக்கள்: உரிச்சொற்களுக்குப் பொருள் உணரும் முறையை இதுகாறும் கூறிய ஆசிரியர், அதன் தொடர்பாகச் சொற்களுக்குப் பொருள் காணும் முறைமையையும் விளக்குகிறார். வழக்கில் பயிலாத ஒரு சொல்லிற்குப் பொருள்

உணர்த்த வேண்டின், பிறிதொரு சொல்லைக்கொண்டே பொருள் உணர்த்தவேண்டும். அங்ஙனம் பொருள் உணர்த்தவந்த சொற்கும் பொருள் தெரியானாயின், மேன்மேலும் அவ்வச் சொல்லையும் விளக்கு வதற்காக சொல்லிக்கொண்டே போதல் தவறாகும். ஆதலின் பொருள் உணர்த்தவந்த சொல்லுக்குப் பொருள் சொல்லவேண்டாம் என ஆசிரியர் ௩௯௩ ஆம் நூற்பாவில் கூறுகிறார். அங்ஙனமாயின், ஒரு சொல்லிற்குப் பொருள் கூறின், அச்சொல்லிற்கும் பொருள் தெரியானாயின், அவனுக்கு எங்ஙனம் விளக்கல் வேண்டும் என்பதைச் சேனா வரையர் மிக அழகாக விளக்குகின்றார். (௧) ஒரு சொல்லிற்குரிய பொருளைப், பிறிதொரு சொல்லால் விளக்குக. (௨) அச்சொல்லிற்கும் பொருள் அறியானாயின், அதனை ஒரு வாக்கியத்திலமைத்துக் காட்டி விளக்குக. (௩) அப்பொழுதும் விளங்கிக்கொள்ளானாயின் அப்பொரு ளையே நேரே காட்டி விளக்குக என முத்திறமாக விளக்குமாறு கூறு கின்றார். இளம்பூரணர் வாக்கியத்திலமைத்துக் காட்டும் முறையைக் கூறாது, ஏனைய இருமுறைகளையும் கூறியுள்ளார். எனினும், சேனா வரையர் கூறும் மும்முறைகளையுமே இக்காலத்தார் பயிற்று முறை யாகப் பெரிதும் கொள்கின்றனர். எனவே பொருளை நேரே காட்டி விளக்கும் முறை, மேனாட்டு முறையன்று என்பதையும், அதனை இளம் பூரணர் உளளிட்ட பெருஞ்சான்றோர்களெல்லாம் தொன்றுதொட்டே கூறியுள்ளனர் என்பதையும் நன்கறியலாம்.

இனி இம்முத்திறமாகவும் பொருளுணர்த்தியும் பொருள் விளங் கானாயின், அவனுக்கு உணர்த்தும் வழியில்லை. ஒன்றை உணர்தற்கும் அவரவர்கட்கு அடிப்படையாக உணர்ச்சி வேண்டுதலின், அஃதின் றேல் உணர்த்தும் வழியில்லை என்றார்.

## ௯. எச்சவியல்

௩௯௭ ஆம் நூற்பா: கிளவியாக்கம் முதல் உரியியல் ஈறாகக் கிடந்த எட்டு இயல்களிலும் உணர்த்தற்கு இடனின்றி எஞ்சியிருந்த இலக்கணங்களை உணர்த்தலின் எச்சவியலாயிற்று. இதுவே இளம்பூர ணர் முதலிய எல்லா உரையாசிரியர்களுக்கும் கருத்தாகும். பத்து வகை எச்சங்களையும் இவ்வியலில் உணர்த்தலின் எச்சவியலாயிற்று என்பாரும் உளர். இவ்வியலில் பத்து வகை எச்சங்களேயன்றிச் செய் யுள், வழக்கிலக்கணத்தது ஒழிபும், தொகைச் சொற்களின் இலக்கணங் களும், சில மரபு வகைகளும் உணர்த்தப்படுகின்றன. இங்ஙனம் பல பொருள்களும் கூறப்படும் இவ்வியலுக்கு, எச்சங்கள் ஒன்றையே நோக்கி எச்சவியல் எனப் பெயர் கொடுத்தார் எனில், அவ்வெச்சங் கட்கு ஏனைய பொருள்களைக் காட்டிலும் தலைமைச் சிறப்போ, அன்றி மிகுதிச்சிறப்போ இருத்தல் வேண்டும். இவ்விரண்டும் அதற்கு இன்மையின் அதுபற்றிப் பெயர் கொடுத்தார் என்றல் பொருந்தாது.

'என்மனார்' என்பதை வினைத்திரிசொல் என்பார், 'என்ப' என்ற தில் பகரம் குறைத்து மன், ஆர் என்னும் இரண்டு இடைச்சொற் பெய்து விரிக்கப்பட்டது என்பர். இது பொருந்தாமையை முதல் நூற்பா உரையில் காண்க.

பெயரொடு தொக்கு—பெயரொடு சேர்ந்து.

௩௯௮ ஆம் நூற்பா: 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' எனப்பாயிரம் கூறினும், பிற்காலத்தே சோழ

நாட்டையே தமிழ் நாடென்பாரும், பாண்டிய நாட்டையே தமிழ் நாடு என்பாருமாகக் கருத்துக் கொண்டனர் சிலர். இவ்விரு நாடுகளில் சோழ நாட்டையே தமிழ் நாடென்பார், ஏனைய பாண்டி நாடு உள்ளிட்ட பன்னிரு நாடுகளையும் கொடுந்தமிழ் நாடென்பர். பாண்டிய நாட்டையே தமிழ்நாடு என்பார், ஏனைய சோழ நாடு உள்ளிட்டவற்றைக் கொடுந்தமிழ் நாடென்பர். சிலப்பதிகாரக் காலத்திலேயே இப்பாகுபாடு இருந்தது வருந்தத்தக்கது. எனினும் இவ்விரு கருத்துக்களும் பொருந்துவதன்றாம். அதனை ஆராய்வோம்.

வையையாற்றின் வடக்கும், மருத யாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் ஆகிய நான்கு எல்லைக்குட்பட்டதைச் சோணாடு என்பர். இதனையே 'செந்தமிழ் நிலம்' எனக் கூறினர் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், மயிலைநாதர், யாப்பருங்கலக்காரிகை உரைகாரர் ஆகிய அனைவரும். செந்தமிழ் நிலம் சோழ நாடே எனக் கூறும் பாடல், யாப்பருங்கலக்காரிகை உரையில் உள்ளது. அது வருமாறு:— 'மன்ற வாணன் மலர்திரு வருளால், தென்றமிழ் மகிமை சிவணிய செய்த, அடியவர் கூட்டமு மாதிச் சங்கமும், படியில் மாப் பெருமை பரவுறு சோழனும், சைவமா தவருந் தழைத்தினி திருக்கும், மையறு சோழ வளநா டென்ப.'

இதனை மறுத்துச் சங்கரநமச்சிவாயர் பாண்டி நாடே 'செந்தமிழ் நில'மெனக் கூறி அதற்கொரு பாடலும் காட்டுவாராயினர். அது வருமாறு:— 'சந்தனப் பொதியச் செந்தமிழ் முனியும், சவுந்தர பாண்டியனெனுந்தமிழ் நாடனும், சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கும், மங்கலப் பாண்டி வளநா டென்ப.'

இவ்விரு கூற்றுமே செந்தமிழ் நிலத்தின் முழு வடிவினை விளக்குவதாக இல்லை. இனித் தெய்வச்சிலையார் உரையில் இக்கருத்துப்பற்றி கூறப்படுவதாவது:— செந்தமிழ் நாடாவது வையை யாற்றின் வடக்கும், மருத யாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாம் என்ப. இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணங் காணாமையானும், வையை யாற்றின் தெற்காகிய கொற்கையும், கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும், மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ் திரிநிலமாதல் வேண்டுமாதலானும், அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு:— 'வடவேங்கடந் தென்குமரி, ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகத்து, வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின் எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடி' என்றமையானும், இதனுள் தமிழ் கூறும் நல்லுலகமென விசேடித்தமையானும், கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்கெல்லை கூறியவதனல் குமரியின் தெற்காகிய நாடுகளையொழித்து வேங்கடமலையின் தெற்கும், குமரியின் வடக்கும், குணகடலின் மேற்கும், குட கடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ் நிலமென்றுரைப்ப'. எனவே இவர் கூறுமாறு 'வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகமே' செந்தமிழ் நிலமென்பது பொருந்துவதாம்.

இனித், திரு. ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களும் பாண்டிநாடே செந்தமிழ் நிலம் என்பர். அவர் கூறுவது வருமாறு:— 'சேனாவரையர் செந்தமிழ் நிலமாகக் கூறியவிடம் பெரும்பாலும் பாண்டிநாட்டிற்குப் பாற்பட்டதாய்ச் சோழநாட்டின் தென்பகுதியாயிருத்தலின் தவறாகும். பாண்டி நாடே தமிழ் நாடென்றும் பாண்டியனே தமிழ் நாடனென்றும்

திகண்டுகள் கூறுநிற்பவும், 'வீயாத் தமிழுடையான் ... பாண்டியன்' என்று ஒரு பழம் புலவரும், 'பாண்டிய நின்னாட்டுடைத்து நல்ல தமிழ்' என்று ஔவையாரும், 'தமிழ் நிலைபெற்ற ... மதுரை' என்று நத்தத்தனாரும், 'கூடலி னாய்ந்த வொண்டீந்தமிழ்' என்று மாணிக்கவாசகரும் பாடியிருப்பவும், முச்சங்கங்களையும் முறையே இரீஇ முத்தமிழ் வளர்த்தவர் பாண்டியராயே யிருப்பவும், இவற்றை எட்டுணையும் நோக்காது மதுரைக்கு வடக்கே செந்தமிழ் நாட்டைச் சேனாவரையர் குறித்தது வியப்பிற்கிடமானது. இன்றும் பாண்டி நாடே தமிழ் வழக்கிற்குச் சிறந்திருப்பது கவனிக்கத்தக்கது'.

திரு. ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் கூறிய மறுப்பினால் சோழநாட்டை மட்டும் செந்தமிழ் நாடென்றல் பொருந்தாது என்பதை ஒத்துக்கொள்ள இயலுமேயன்றி, பாண்டி நாட்டை மட்டுமே செந்தமிழ் நாடென்றலும் பொருந்துவதன்றாம். பாண்டியனைத் தமிழுடையான் என்றும், அந்நாட்டினை நல்ல தமிழ் உடையநாடு என்றும் கூறுவனவெல்லாம் பாண்டி நாட்டில் சங்கமிருந்து தமிழாராய்ந்த நெறிப்பு நோக்கியேயாம் அதுபற்றி அதுவே செந்தமிழ் நிலமெனக் கூறுதற்கியலாது. சேரநாட்டில் பதிற்றுப் பத்தும், சிலம்பும் போன்ற பெருநூல்கள் எழுந்துள்ளமையாலும், சோழநாட்டில் வாழ்ந்த புலவரும் புரவலரும் பல்வேறு நூல்களை யாத்துள்ளமை நன்கு தெரிதலாலும், இந்நாடுகளை யெல்லாம் விடுத்து, பாண்டி நாட்டை மட்டுமே செந்தமிழ் நிலமெனின், சங்கரநமச்சிவாயர், சிவஞான முனிவர் ஆகியோரின் கருத்தின்படி இவையெல்லாம் கொடுந்தமிழ் நிலமாய் அடங்குதலானும், கொடுந்தமிழ் நிலமென்று வழங்குதற்கு எவ்வித இயைபுமின்மையானும், 'வடவேங்கடந் தென்குமரி, ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' எனப் பனம்பாரனாரும், 'வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென், றிந்நான் கெல்லை தமிழது வழக்கே' எனச் சிகண்டியாரும், 'வடக்குந் தெற்குங் குடக்குங் குணக்கும், வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென், றந்நான் கெல்லை யகவயிற் கிடந்த, நூலது முறையே வாலிதின் விரிப்பின்' எனக் காக்கை பாடினியாரும், 'வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத் தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும், வரைமருள் புணரியொடு கரைபொருது கிடந்த, நாட்டியல் வழக்கம்' எனச் சிறுகாக்கை பாடினியாரும் கூறுதலானும் பாண்டி நாடே செந்தமிழ் நிலமென்றல் எவ்வாற்றானும் பொருந்துவதன்றாம்.

நீரம் என்ற வடசொல்லே நீர் எனத் திரிந்தது என்பர் சேனாவரையர். எனினும் இது தமிழ்ச் சொல்லேயாகும். 'நிலம் நீர் தீ வளி விசும்போ டைந்தும் கலந்த மயக்கம் உலகமாதலின்' (தொல்-செய்யு-௮௯) என்ற விடத்தும், 'நீரின்றமையாது' (குறள்-௨௰) என்ற விடத்தும் இச்சொல் வழங்குமாற்றையும், அது தமிழ்ச்சொல்லாமாற்றையும் காண்க.

௩௯௯ ஆம் நூற்பா: இயற்சொல்லினின்றும் சிறிது திரிந்தும் அல்லது முழுவதும் திரிந்தும் வருவதே திரிசொல் என்றனர் தொல்காப்பிய உரையாசிரியர்கள் அனைவரும். ஆனால் சங்கரநமச்சிவாயர் 'ஈண்டு இயற்சொல் திரிசொல் என்றது அவற்றின் எழுத்துக்கள் திரியாமையுந் திரிந்தமையுங் கருதியன்று: வானரத்தின் முகம் தன்னியல்பாய் இருந்ததேனும் நரர்முகச் செவ்விக்கு மறுதலைப்பட்டமை கருதி வலிமுகம் எனப்பட்டது போலக், கல்வி யேதுவானன்றி இயல்

பாகத் தம் பொருளையுணர நிற்றலின் இயற்சொல்லென்றும், அவ்வியல் பிற்கு மறுதலைபட்டுக் கல்வியேதுவால் தம் பொருளையுணர நிற்றலின் திரிசொல் என்றும் கூறப்பட்டதென்க' என்பர்.

கிள்ளை, மஞ்ஞை என்பன, கிளி மயில் என்பனவற்றினின்றும் முதலெழுத்துக்கள் நிற்ப ஏனைய திரிந்தனவாதலின், அவற்றை உறுப்புத் திரிந்தன என்றார். வெற்பு என்பதனின்றும், விலங்கல், விண்டு என்பன முழுவதும் திரிந்துவந்தனவாதலின், அவற்றை முழுவதுந் திரிந்தன என்றார்.

'ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும், வேறு பொருள் குறித்த ஒருசொல் லாகியும்' வருதல் உரிச்சொற்கு இலக்கணமாகக் கூறப்பட்டிருக்க, ஈண்டு அது திரிசொற்கும் இலக்கணமாகக் கூறப்படுவது என்னை? என்னும் வினாவை எழுப்பிக் கொண்ட சேனாவரையர், அவ்வினாவிற்கு உரிய விடையை முற்ற முடிக்காது சிறிதளவே கூறி விட்டுவிடுகின்றார். அவர் கூறும் விடை:— ஒருபொருள் குறித்த வேறு சொல்லாகியும், வேறுபொருள் குறித்த ஒரு சொல்லாகியும் வருதல் உரிச்சொற்கு இலக்கணமாகக் கூறப்பட்டன. திரிசொற்களுக்கோ அதன் வகையாகக் கூறப்பட்டன. ஆதலின் வேற்றுமையுடைத்தென்றார். இதுவும் ஒரு வேறுபடாகத் தோன்றினும், வகை கூறலும் இலக்கணமேயாதலின் இது அத்துணைப் பொருத்தமுடைத்தன்று.

இனி, அதன் வேற்றுமை வருமாறு:— (க) திரிசொல் பெயராகவே வரும். உரிச்சொல் பெயர் போன்றும் வரும்; வினை போன்றும் வரும்; அன்றி அவற்றின் முதனிலைகளாகவும் வரும். (உ) திரிசொல் அனைத்தும் ஒருபொருள் குறித்த பலசொல்லாதலும், பலபொருள் குறித்த ஒரு சொல்லாதலுமாகிய வேறுபாட்டிலேயே வரும். ஆனால் உரிச்சொற்களில் சிலவே இப்பாகுபாட்டில் வரும்; பல இப்பாகுபாட்டில் வாரா. (ங) தெய்வச்சிலையார் உரிச்சொல் குறைச்சொல்லாகியும், திரிசொல் முழுச் சொல்லாகியும் வரும் என்பர்.

அற்றேல் திரிசொல்லின் பாகுபாடு மட்டும் ஈண்டுக் கூறப்பட்டது எனில், அதன் இலக்கணம் யாண்டுணர்த்தினாரோ? எனில், அதனையும் 'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' என்னும் உத்தியால் ஈண்டே கூறினார் என்பர். ஒரு சொல்லைச் சொல்லிய அளவிலேயே, அதன் பொருளும் அதன்கண் விளங்குமாறு சொல்லி விடுதல், 'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' என்னும் உத்தியாம். எனவே, திரிசொல் என்று சொன்ன அளவிலேயே திரிந்து வருதலின் திரிசொல்லாயிற்று என்னும் பொருளும் விளங்கும் என்பதாயிற்று.

கிள்ளை, மஞ்ஞை என்பன கிளி, மயில் என்னும் ஒவ்வொரு பொருளையே உணர்த்தலின், இவை ஒரு பொருள் குறித்த பலசொல்லாதல், பலபொருள் குறித்த ஒருசொல்லாதல் என்ற வரையறையில் வரவில்லையே? என்ற வினாவை எழுப்பிக் கொண்டு அதற்கு நுண்மையாக இருவகையில் அமைதி கூறுகின்றார் சேனாவரையர். (க) கிள்ளை என்ற சொல்லை மட்டும் கண்டு கிளி என உரை காணலாகாது. கிள்ளை என்ற சொல்லுடன் அப்பொருளில் வரும் பிற சொற்களாகிய தத்தை, சுகம், முதலிய சொற்களையும் ஒருங்கு நிறுத்தி இவையனைத்தும் கிளி என்னும் ஒரு பொருளை உணர்த்தலின், இவை ஒரு பொருள் குறித்த பல சொல்லாக வரும் எனக்கூறுக. இங்ஙனமே மஞ்ஞை என்ற சொல்லுடன் பிணிமுகம் போன்ற சொற்களையும் உடன்

திறுத்தி இவ்வாறு அடக்குக என்பது. (உ) இன்றேல் கிள்ளை, மஞ்ஞை என்ற சொற்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருள் படுதலுடன், பிற பொருளும் படும் என்பதைக் கூறி, இவை பலபொருள் குறித்த ஒருசொல்லாக வந்ததென அமைதி கூறுக என்பது. கிள்ளை என்பது கிளி, குதிரை முதலிய பல பொருளையும், மஞ்ஞை என்பது மயில், கோழி முதலிய பல பொருளையும் உணர்த்தும். ஆசிரியர் திரிசொல் இவ்விரு பாகுபாட்டில் வரும்' என்று கூறியிருத்தலின், எத்தகைய திரிசொற்களையும் இவ்வாற்றான் அடக்கிக் கொள்ளுதலே முறை என்பர் சேனாவரையர்.

௪௦௦ ஆம் நூற்பா : நிலம், நீர், தீ போன்ற இயற்சொற்கள் செந்தமிழ் நிலத்திலும் கொடுந்தமிழ் நிலத்திலும் ஒப்பத் தம்பொருளை இனிது விளக்கும். ஆனால் கொடுந்தமிழ் நாட்டில் வழங்கும் சொற்களோ அவ்வந்நாட்டில் தம்பொருளை இனிது விளக்கும் இயற்சொற்களாய்ச் செந்தமிழ் நிலத்தில் தம்பொருளை இனிது விளக்காத திரிசொற்களாய் நிற்கும்.

செந்தமிழ்நிலம் புனல் நாடே (சோழநாடே) என்பது சேனாவரையர் கருத்தாகலின், அதனைச் சேர்ந்த பன்னிரு நிலமாக இவற்றைக் கூறினர். ஆனால் தெய்வச்சிலையாரோ வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறும் நல்லுலகமே செந்தமிழ் நிலம் என்னும் கருத்தினர் ஆதலின், அவரால் செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலமாகக் கூறப்படுவன வேறும். அவையாவன : ' குமரியாற்றின் தென்கரைப்பட்ட பழந்தீபமும் கொல்லமும் கூபகமும் சிங்களமும், சையத்தின் மேற்குப்பட்ட கொங்கணமுந் துளுவமும் குடகமும் குன்றகமும், கிழக்குப்பட்ட கருநடமும் வடுகும் தெலிங்கும் கலிங்கமும்' ஆகும். நச்சினார்க்கினியர் இவ்விரு கருத்தையும் ஏற்பர்.

தனிமொழிக்கே இங்கு இலக்கணம் கூறப்படுகிறது. எனவே தொடர்மொழியெல்லாம், ' தள்ளை வந்தான் ' என்பது போல மாறிவரும் என்று கருதற்க: அவையும் தத்தம் இலக்கணம் கெடாது வரும் என்பதே கருத்தாம். தள்ளை வந்தான் என்பதில், தள்ளை (தாய்) என்னும் பெண்பால், வந்தான் என்னும் ஆண்பாலொடு முடிந்துள்ளது.

௪௦௧ ஆம் நூற்பா : வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் பொதுவாகிய சொற்கள் செய்யுட்கு உரியனவாம். இப்பொதுவாகிய சொற்களை வடசொல் என்பதா? அல்லது தமிழ்ச்சொல் என்பதா? என்பதே உரையாசிரியர்களின் கருத்து வேறுபாட்டிற்கு இடனாக இருக்கிறது. வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுவாகிய சொற்களேனும் அவை வடசொல்லே என்பது சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகிய அனைவர்க்கும் கருத்தாம். இளம்பூரணர் மட்டும் அவை வடசொல்லோடு ஒத்த தமிழ்ச் சொல்லே யெனக் கருதினார். (இக்கருத்துத் தற்பொழுது உள்ள இளம்பூரணர் உரையில் இல்லை ) இதனைச் சேனாவரையர் நான்கு காரணங்களால் மறுக்கின்றார். அவை வருமாறு : (க) ஒன்றையொன்று ஒக்குமெனச் சொல்லின் ஒரு விதத்தில் ஒற்றுமையும், ஒரு விதத்தில் வேற்றுமையும் இருத்தல் வேண்டும். ஆனால் வாரி, மணி என்ற சொற்களோ வடமொழி தென்மொழியாகிய இரு மொழிக்கும் பொதுவாகிய எழுத்துக்களால் இயன்றனவாய் எழுத்து, பொருள் ஆகிய இருவகையிலும் வேற்றுமையிலவாய் உள்ளன. ஆதலின் இவற்றை வடசொல்லோடொக்குந் தமிழ்ச்

சொல் என்றல் பொருந்தாது. (உ) அச்சொற்கள் வடக்கும் தெற்குமாகிய நாடுகளில் பயில்வதுபற்றி ஒரு சொல்லாகக் கொள்ளாது, இடவேற்றுமையான் இரண்டு சொல்லாகக் கொள்ளலாமெனில், சோறு, கூழ் என்னும் சொற்களும் வழக்கும் செய்யுளுமாகிய இடவேற்றுமையான் இரண்டு சொல்லெனக் கூறுதல் வேண்டும். இவற்றை அங்ஙனம் கொள்ளாமையான் அவற்றையும் (வாரிமணி போன்ற சொற்களையும்) வடக்கும் தெற்குமாகிய நாடுகளில் வழங்கும் இடவேற்றுமைபற்றி இரண்டு சொல்லெனக் கொள்ளல் ஆகாது. (௩) வாரி, மணி போன்ற சொற்கள் வடமொழி தென்மொழியாகிய இரு மொழிக்கும் உரிய ஒரு சொல்லாகவே கொள்ளினும், அவை தமிழ் மொழிக்கு உரியதாய் வடசொல்லில் வந்து வழங்கின என்று கொள்ளலாமோ எனில், பேச்சு வழக்கும் ஏட்டு வழக்கும் உடைய ஒருமொழியில் பிறசொற்கள் வந்து கலக்குமேயன்றி, ஏட்டு வழக்குமட்டும் உடைய ஒரு மொழியில் பிற சொற்கள் வந்து கலவாதாம்; அந்நிலையில் ஏட்டு வழக்கு மட்டுமே உடைய வாரி, மணி என்னும் வடசொல்லே ஈண்டு வந்ததெனக் கருத வேண்டுவதாம். (௪) இவை தமிழ்ச் சொல்லேயெனின் 'எழுத்தொடு புணர்ந்த சொல்'லாகுமெனக் கூறியிருப்பர் ஆசிரியர். அங்ஙனமன்றி 'வடவெழுத்து ஒரீஇ எழுத்தோடு புணர்ந்த சொல்' என்று கூறியுள்ளமையான் அவை வடசொல்லேயாம்.

நன்னூலாரும் 'பொதுவெழுத் தானும் சிறப்பெழுத் தானும், ஈரெழுத் தானும் இயைவன வடசொல்' (பெயரி - 17) எனக் கூறுவதால், வடமொழிக்கும் தமிழ் மொழிக்கும் பொதுவாகிய சொற்களை வடசொல் எனக் கருதினர் எனத் தெரிகிறது.

௩௯௨ ஆம் நூற்பா: வடசொற்கள் சிதைந்து வரினும் அவற்றை ஏற்றுக்கொள்க எனவே, அவை சிதையாமல் வருதலும் உள; அவற்றையும் ஏற்றுக்கொள்க என்பதும், அவற்றையே இதற்கு முதல்நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார் என்பதும் தெரிகிறது. எனவே இதற்கு முன்னைய நூற்பாவில் கூறப்பட்டன வடசொல்லே என்பது பெறப்படும். ஆதலின் இளம்பூரணர் வடசொல்லாவது வடசொல்லோடொக்கும் தமிழ்ச்சொல் எனக் கூறுவது, இதனாலும் பொருந்தாதாயிற்று.

௩௯௩ ஆம் நூற்பா: இந்நூற்பாவின் கருத்தை நன்னூலார், 'வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல், விரித்தல் தொகுத்தல் வருஞ்செய்யுள் வேண்டுழி' (நன் - ௩௫௫) எனச் சுருங்கக்கூறுவர்.

௩௯௪ ஆம் நூற்பா: பொருளுக்கேற்பச் சொற்களை முன்னும் பின்னும் மாற்றிக்கொள்வதே மொழி மாற்றாகும். நிரல்நிறைப்பொருள்கோளிலும், சுண்ணப் பொருள்கோளிலும் இங்ஙனமே சொற்களை முன்னும் பின்னும் மாற்றினும், நிரல்நிறையில் நிரலே நிறுத்திச் சொற்களை மாற்றிக் கொள்ளுதலும், சுண்ணப்பொருள்கோளில் நாற்சீராக அமைந்த ஈரடியின் கண்ணேயே சொற்களை மாற்றிக்கொள்ளுதலும் ஆகிய வரையறையுண்டு. ஆனால் இம்மொழிமாற்றிலோ எவ்வரையறையும் இன்று. ஆதலின் அவற்றின் வேறாக இதனைக் கூறினர் என்பர்.

இந்நான்கனுள் சுண்ணப் பொருள்கோளை மொழிமாற்றுப் பொருள்கோள் என்றும், மொழிமாற்றுப் பொருள்கோளைக் கொண்டு கூட்டுப் பொருள்கோள் என்றும் கூறுவர் நன்னூலார். தொல்

காப்பியர் கூறிய நான்கு பொருள்கோளுடன், யாற்றுநீர்ப் பொருள் கோள், பூட்டுவிற் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறிபாப்புப் பொருள்கோள் என்னும் நான்கனையும் கூட்டி எட்டென்பர் அவர். யாப்பருங்கலக் காரிகை உரைகாரர் நன்னூலார் கூறிய மொழிமாற்றுப் பொருள்கோளையே ஓரடியில் மொழி மாற்றி வருவதனை 'சுண்ணமொழிமாற்றென்றும்', ஈரடியில் மொழி மாற்றி வருவதனை 'அடிமொழிமாற்றென்றும்' பெயர் வேறுபாடு தந்து ஏனைய ஏழனையும் கூட்டி ஒன்பதென்பர்.

இங்ஙனம் பொருள்கோள் எட்டென்றும், ஒன்பதென்றும் கூறுவார் உளராகத், தொல்காப்பியர் நான்கென்றற்குக் காரணம், தெய்வச்சிலை யாரும் நச்சினார்க்கினியரும் வேறுவேறாகக் கூறுவர். அவை வருமாறு:- அலைதல் பூட்டுவிற் பொருள்கோள், புனல்யாற்றுப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறி பாப்புப் பொருள்கோள், கொண்டுகூட்டுப்பொருள்கோள் எனவும் ஒருசாராசிரியர் உரைப்ப பவால் எனின், அவற்றுள் யாற்றொழுக்கும், அளைமறிபாப்புப் பொருள் கோளும் திரிபின்றிப் பொருள்படுதலின் இயல்பாம். கொண்டு கூட்டு சுண்ணமொழிமாற்றுள் அடங்கும். பூட்டுவிற்பொருள்கோள் மொழி மாற்றுள் அடங்கும். தாப்பிசைப் பொருள்கோட்கண் முன்னொரு சொல் வருவிக்க வேண்டுதலின் இது 'பிரிநிலைவினை' (சொல்-சாசo) என் னுஞ் சூத்திரத்துள் அடங்கும்' என்பர் தெய்வச்சிலையார். 'பூட்டுவிற் பொருள்கோளும், அளைமறிபாப்புப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், கொண்டுகூட்டுப் பொருள்கோளும் 'மாட்டு' என்னும் உறுப்பின்கண் அடங்குமாறும்; யாற்றொழுக்குப் பொருள் கோள் 'யாப்பு' என்னும் உறுப்பின்கண் அடங்குமாறும் உணர்க என்பர் நச்சினார்க்கினியர்.

சஎரு ஆம் நூற்பா: உடலும்-பகைக்கும். செத்து-கருதி. 'களி றும் கந்தும்' என்று தொடங்கும் பாடலில, களிறு போலும் கலன், கந்து போலும் கூம்பு எனக் கூட்டிப் பொருள் செய்க. கந்து-தறி. கூம்பு-பாய்மரம். கலன்-தோணி.

சஎசு ஆம் நூற்பா: பட்டாங்கமைந்த ஈரடி-இயல்பாக அமைந்த ஈரடி. அடிதோறும் நாற்சீராய், ஈரடியில் எண்சீர்வரின், அது பட் டாங்கமைந்ததாம். இங்ஙனமன்றி முதலடி ஐஞ்சீராய் அடுத்த அடி முச்சீராய்வரின் சீர் எட்டாயினும் அது விகார அடியேயாம்.

சுண்ணம்-பொடி. சிதராய்-துண்டு துண்டாய். பொடி அங்கு மிங்குமாகப் பரந்து கிடப்பது போலச், சொற்களும் பொருட்கியை பின்றி அங்கும் இங்குமாகத் துண்டுதுண்டாய்ப் பரந்து கிடக்க, அவற்றை இயைத்துப் பொருள் கொள்ளுதலின் இது சுண்ணப் பொருள் கோளாயிற்று.

சஎஎ ஆம் நூற்பா: சொல்நிலை திரியாது அடி முழுதும் மாறுத லின் இதனை யாப்பிலக்கணத்தில் கூறவேண்டும். அங்ஙனமாக, ஈண்டுக் கூறக் காரணம், இது தொடர்மொழித் திரிபாதல் பற்றியே யாம் என்பர் தெய்வச்சிலையார். சிவஞான முனிவரும் இதனையேற்பர்.

சஎஅ ஆம் நூற்பா: எருத்துவயின்-ஈற்றயலடியின்கண் எனப் பொருள் காண்பர் சேனாவரையரும் தெய்வச்சிலையாரும். ஈற்றயற்சீர் எனப் பொருள் காண்பர் இளம்பூரணர் ஆயினும், சேனாவரையர், தெய்வச்சிலையார் கருத்தே மிகவும் பொருத்தமுடையதாம்.

௪௦௯ ஆம் நூற்பா: சுண்ணமொழிமாற்று ஈரடி எண்சீரில் மொழி மாற்றிப் பொருள் கொள்வது. அடிமறிமாற்று அடிமுழுவதையுமே மாற்றிப் பொருள் கொள்வது. இம்மொழிமாற்று இரண்டிறந்த பலவடி களிலும் மொழிமாற்றிப் பொருள் கொள்வது.

செவ்வாகாமை - நிறுத்தசொல்லும் குறித்துவரு கிளவியுமாய்ப் பொருள் இயையாமை.

௪௧௦ ஆம் நூற்பா: தமன், எமன் என்பனவற்றைத் தம்+அன், எம்+அன் எனப்பிரிப்பின் முதனிலை பொருளுணர்த்தாது ஆகலானும் தாம்+அன், யாம்+அன் எனப்பிரிப்பின் ஒருமைக்கும், தான்+அன், யான்+அன் எனப் பிரிப்பின் பன்மைக்கும் ஏலா ஆகலானும் கிளை நுதற் பெயர்களைப் 'பிரிப்பப் பிரியா' என்றார் என்பர் சேனாவரையர்.

ஆயினும் நச்சினார்க்கினியர் இக்கருத்தினை மறுத்து இச்சொற்களின் முதனிலைகள் பன்மையே உணர்த்து மென்று கூறி வேறு காரணம் காட்டுவர். அவர் 'தமன், நமன் என்பனவற்றில் தம், நம் என்னும் முதனிலைகளே பொருளுணர்த்தப் பின்வரும 'அன்' என்பது பொரு ளுணர்த்தாது இடைச்சொல்லாய் வருதல் பற்றிப் 'பிரிப்பப் பிரியா' என்றார்' என்பர்.

௪௧௧ ஆம் நூற்பா: பொருள் வேறுபாட்டில் விரைவ, துணிவு, உடம்பாடு ஆகியவற்றிற்கு ஒவ்வொரு எடுத்துக் காட்டேயிருத்தலின், ஒரு தொழில் பலகால் நிகழ்தற்கும் ஒரு எடுத்துக்காட்டே யிருத்தல் வேண்டும் என்றும், அது 'உண்டு உண்டுபோம்' என்றிருக்க வேண்டும் என்றம் கூறுவர் திரு. பூவராகம்பிள்ளை யவர்கள். எனினும், நச்சினார்க் கினியர் ஒரு சொல் பலகால் நிகழ்தற்குப் 'போம்போம்' என்றே காட் டினர். இதை நோக்கச் சேனாவரையா உண்டு உண்டு, போம் போம் என்ற இரு எடுத்துக்காட்டுக்களையுமே காட்டியிருப்பர் என்று கருத இடந்தருகின்றது.

இசைநிறை, அசைநிலை, பொருளொடு புணர்தலாகிய மூன்றும் அடுக்கிவரினும், அவை ஒருசொல்லின் விகாரமாகவே கருதப்படும். ஒரு சொல் இருமுறை வந்திருப்பதுபற்றி இரு சொல்லாகக் கொள்ளின் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்றமையால் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பொருளை உணர்த்த வேண்டும். ஆனால் இவையோ அங்ஙனம் உணர்த்தவில்லை. ஆதலின் இவை ஒரு சொல்லது விகாரமேயாம்.

பொதுவாக 'அடுக்கிவரும்' என்று கூறலின், பெயர், வினை, இடை, உரி ஆகிய நான்கு சொற்களுமே அடுக்கிவரும் என்று கொள்க என்பர் தெய்வச்சிலையார். அடுக்கு நான்கு சொற்களுக்கும் உரித்தாதல் பற் றியே, இதனை ஆசிரியர் எச்சவியலில் கூறுவாராயினர்.

௪௧௨ ஆம் நூற்பா: தொகைச் சொற்குப் பொருள் கொள்வதில் ஆசிரியர் இருதிறத்தர். ஒருசாரார், வேற்றுமையுருபு, உவமஉருபு, உம்மை, வினைச்சொல்லீறு, பண்புச்சொல்லீறு ஆகியன தொக்கு (மறைந்து) வருதலின் தொகை எனப் பெயர்பெற்றதென்பர். இன் னொருசாரார், அறுவகைத் தொகைச் சொற்களும் அவ்வப்பொருள் மேல இரண்டு முதலிய சொற்களாய்ப் பிளவுபடாது தொக்கு (இயைந்து) ஒருமொழிபோல் நிற்றலின் அவை தொகையாயிற்று

என்பர். செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என்பன ஒட்டி ஒரு சொல்போல நிற்கவில்லை. எனினும் இறுதியில் ஐயும் கண்ணுமாகிய உருபுகள் தொக்கு நிற்கின்றன. ஒட்டி ஒரு மொழிபோல் நடப்பதே தொகையென்பாரும் இவற்றைத் தொகையென்றே கூறவேண்டியுள்ளது. இங்ஙனமே வேழக்கரும்பு, கேழற்பன்றி என்பனவற்றிலும், இடையே தொக்கு நிற்கும் சொற்கள் எதுவும் இல்லையேனும், ஒரு மொழிபோல் நிற்றலின், தொகையென்றே கூறவேண்டியுள்ளது. இதனை உருபு முதலியன தொகுதலின் தொகையாயின என்பாரும் மறுத்தற்கில்லை. எனவே இவ்விரு சாராரும் தத்தம் இலக்கணத்தோடு மற்ற இலக்கணத்தையும் ஏற்கவேண்டியுள்ளது. நன்னூலார் இவ்விரண்டையுமே தொகையிலக்கணமாக ஏற்பர். எனினும் சேனாவரையர் இவற்றுள் ஒன்றையே இலக்கணமாக ஏற்றுக்கொள்கின்றார். உருபு முதலாயின தொக்கு வருதலின் தொகையாயிற்று என்னும் இலக்கணம் வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித்தொகை ஆகிய மூன்றற்கும் ஏற்கவில்லை. ஆனால் இரண்டும் பலவுமாகிய சொற்கள் தம்முள் பிளவுபடாது இயைந்து நிற்றலின் தொகையாயிற்றென்ற இலக்கணமோ, அறுவகைத் தொகைக்கும் பொருந்தி வருகிறது. ஆதலின் பின்னையதே தொகையிலக்கணமாகக் கொள்ளற்குரியது என்பர் சேனாவரையர். தெய்வச்சிலையாரும் இக்கருத்தினரே. இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் முன்னையதைக்கொள்வர்.

ஆசிரியர் தொல்காப்பியர் உருபு தொகவருதல், உம்மைதொக்க பெயர், உவமை தொக்கபெயர் என்றெல்லாம் கூறுவதால், உருபு முதலாயின தொகுதலே தொகை என்பது ஆசிரியர் கருத்தெனத் தெரிய, இங்ஙனம் கூறுவது பொருந்துமா? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு, அதற்கு இருவகையில் விடை கூறுகின்றார். சேனாவரையர். (க)'அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின், அதுவென் உருபுகெடக் குகரம் வருமே' என்றவிடத்து, 'அதுவென் உருபு கெடுதல்' என்பதற்கு, அவ்வுருபு ஆண்டு நின்று பின்கெட்டது என்பது கருத்தன்று. அதுவென் உருபு அஃறிணைக்கே யுரியது ஆதலின், நம்பி மகன் என்ற உயர்திணைக்கண் நம்பியது மகன் என முன்விரிக்கப்பட்டுப் பின் கெட்டதாயின், அந்நின்ற காலத்துத் திணைவழுவாம். அங்ஙனம் நின்ற அமையம் திணை வழுவாதல் அமையுமெனின், ஏனைய அமையத்தும் அவ்வுருபையே விரிக்கலாம்; இந் நான்கனுருபே வரவேண்டுவதில்லை. ஆதலின் ஆண்டுக் கெடுதல் என்பதற்கு அவ்வுருபு ஆண்டுவாராமை என்பதே பொருளாகும், ஆதலின் அவ்விடத்து நம்பி, மகன் என்ற இரு சொற்களும் தொக்கு (சேர்ந்து) நிற்பதே தொகையென்பது கருத்தாம். அதனால் உருபும் உம்மையும் உவமையும் தொகுதலாவது, அவ்வப்பொருள்களும் அவ்வவ்விடத்து விளங்குமாறு இரண்டு சொற்களும் ஒட்டி நிற்ப, அவ்வவ்வுருபுகளும் புலப்படாது நிற்றலே தொகை என்பது ஆசிரியர் கருத்தாயிற்று. (உ) அன்றியும் அறுவகைத் தொகைகளுள் வேற்றுமைத்தொகை, உவமைத் தொகை, உம்மைத்தொகை என்பனவற்றிற்கு அவ்வவ்வுருபுகளும் மறைந்துவருவது தொகையெனக் கொள்ளினும், ஏனைய வினைத்தொகை, பண்புத்தொகை, அன்மொழித் தொகைகளில் தொகுதற்காம் சொற்களின்மையின், அவ்விலக்கணம் அவற்றிற்குப் பொருந்தாதாம் என்பது. இக்கருத்தை நச்சினார்க்கினியர் மறுப்பர். அதனை அவருரையானறிக.

௪௧௪ ஆம் நூற்பா: பாய்த்துள் - பாய்ச்சல். புலிப்பாய்த்துளை யொக்கும், மழையையொக்கும் என்ற விடங்களில் உவம உருபும் விரிந் துளது; வேற்றுமை உருபும் விரிந்துளது. ஆதலின் அவற்றை உவமைத் தொகை என்பதா? அன்றி வேற்றுமைத் தொகை என்பதா? என்பது வினா. இவ்வினாவை முதற்கண் எழுப்பியவர் இளம்பூரணரே. அதற்கு அவர், பிறர் கூறுவதாகக் கூறும் விடை ஒன்று. தாம் கூறும் விடை ஒன்று. பிறர்கூறும் விடை:- ஆண்டு, ஐகாரஉருபு உவமஉருபை நோக்கி வந்ததாகலின், உவம உருபே சிறப்புடைத்தாம். ஆதலின் அதனை உவமைத்தொகை எனக்கொள்க என்பது. தாம் கூறும் விடை:- இதற்கு மெய்யுரை வல்லார்வாய்க் கேட்டுணர்க என்பது.

இனி, இவ்வினாவிற்குச் சேனாவரையர் மூன்று விதமாக விடை கூறு கின்றார். (௧) சொல்லுவார்க்கு அது வேற்றுமைத்தொகை என்பது கருத்தாயின், அது வேற்றுமைத் தொகையுமாம்; உவமைத்தொகை என்பது கருத்தாயின் உவமைத் தொகையுமாம் என்பது. (௨) இரண் டாம் உருபை விரிக்காது புலியன்ன பாய்த்துள், மழையன்ன வண்கை என விரிக்கின் உவமைத் தொகையேயாகும் என்பது. (௩) உவமஉருபு வினையும், வினைக்குறிப்பும் பற்றிவரும். இரண்டாம் வேற்றுமையும் வினையும், வினைக்குறிப்பும் பற்றி வரும் செயப்படுபொருளைத் தனக் குரியதாகக் கொண்டு வரும். ஆதலின் அவ்வொப்புமையால் உவமத் தொகையை இரண்டாம் வேற்றுமை உருபில் வைத்து விரிப்பினும் அமைவுடைத்து என்பது.

இம்மூன்றனுள் முதல் அமைதி சிறப்புடைத்தன்று. இரண்டாம் வேற்றுமை உருபை விரிக்காது, உவம உருபை மட்டுமே விரிக்கின் உவ மைத் தொகையே யாகும் என்பது சொல்ல வேண்டுவதின்று. ஈண்டு எடுத்துக்கொண்டது உவம உருபும், இரண்டனுருபும் ஒருங்கு விரிதற் கேற்ற சொற்கள் தொக்குழி எப்பெயர் பெறும்? என்பதே. ஆத லின் இரண்டாவது அமைதியும் அத்துணை அமைவுடைத்தன்று. மூன்றாவதாகக் கூறும் அமைதியே சிறப்பாய் உள்ளது.

நச்சினார்க்கினியரும் இரண்டாவதற்கோதப்பட்ட சொற்களுள் 'ஒப்பின்' என்பதும் ஒன்றாதலைக் காட்டி, இது உவமைத் தொகை என் றலே பொருத்த முடைத்தென்பர். தெய்வச்சிலையாரும், நச்சினார்க் கினியர் கூறுமாறுபோலவே கூறிப், பிறிதொரு காரணமும் காட்டுவர். வேற்றுமைத் தொகை பற்றிய சென்ற நூற்பாவோடு, இவ்வுவமைத் தொகை கூறும் நூற்பாவையும் சேர வைத்திருப்பது, இவ்விரண்டற்கு முள்ள ஒற்றுமைபற்றியாம் என்பர்.

௪௧௫ ஆம் நூற்பா: 'உண்' என்னும் முதனிலையடியாக உண்டல் என்னும் தொழிற்பெயரும், உண்டான் என்னும் வினைச்சொல்லும் பிறத்தலின், உண் என்பதை வினைப்பெயர்க்கும், வினைக்கும் பொது வாய் வந்த முதனிலை (தாது) என்றார்.

'கொல்யானை' என்பதில் கொல் என்பதை நிலைமொழியாகக் கொள்வர் சேனாவரையர். இளம்பூரணர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார் ஆகியமூவரும் கொன்ற, கொல்கின்ற, கொல்லும் என்ற சொற்களே நிலைமொழியாய் நின்று, பின் அவை யானை என்பதனோடு

சேருங்கால், அவ்வக்காலங்காட்டும் ஈற்றெழுத்துக்கள் தொகும் என்று கூறுவர். அவ்வக்கால எழுத்துக்களொடு நின்று, யானை என்பதனோடு சேருங்கால் கொன்ற யானை கொல்லும் யானை, எனப்பெயரெச்சமாய் நிற்கும். அவ்வெழுத்துக்கள் தொக்குழி, வினையெச்சமாகும் என்பது அவர்கள் கருத்து. நன்னூலாரும் 'காலம் கரந்த பெயரெச்சம் வினைத் தொகை' என்பர். இதனைச் சேனாவரையர் இருகாரணங்களால் மறுக்கின்றார். (க) வினைத்தொகை முதலிய அறுவகைத் தொகைகளும் பிரியாதவழி அவ்வப்பொருள் உணர்த்துவதல்லது. பிரிந்தவழி அத்தொகைப் பொருள் உணர்த்தாதாம். ஆகலாற்றான் ஆசிரியர் எழுத்ததிகாரத்து இவற்றைப் 'புணரியல் நிலையிடை உணரத்தோன்றா' என்றார். ஆதலின் வினைத்தொகைகள் முன்னர்ப் பெயரெச்சமாய் நின்று பின் தொக்கன என்றலபொருந்தாது. (உ) அகுபெயர் வகைகளுள் (சொல்-கக௪) 'இருபெயரொட்டு' என்ற ஒன்றும் உள்ளது. அது அறுவகைத் தொகைச் சொற்களையும் குறிக்கும் தொடராகும். எனவே அவற்றுள் ஒன்றாய இவ்வினைத் தொகையும் இருபெயரொட்டே (இருபெயர்கள் சேர்ந்ததே)யாம். ஆதலின் வினைத்தொகைக்கு நிலைமொழி பெயரேயன்றி, வினையென்றலும் பொருத்தமின்றாம். (இது முன்னர் ௬௭-ஆம் நூற்பாவுரையிலும் விளக்கப்பட்டது.)

வினைக்கும், வினைப்பெயர்க்கும் உரிய முதனிலைகளை வினைப்பெயர் என்றல் ஆசிரியர் கருத்தாம். விகுதியொடு சேராது பகுதி மாத்திரையாக நின்று தொழில் உணர்த்துவன வெல்லாம் தொழிற்பெயராம். அதனை 'ஞகாரை ஒற்றிய தொழிற் பெயர்' (எழுத்-உ௬௭) எனக் கூறுமாற்றான் நன்கறியலாம் என்பர் சேனாவரையர். நச்சினார்க்கினியர் இதனை மறுப்பர். அதனை அவருரையானறிக.

௪௬௬ ஆம் நூற்பா: இந்நூற்பாவில் 'குணம்நுதலி' என வருதலின் 'நுதலி' என்பது சினைவினையாம். 'இன்னது இதுவெனவருஉம்' என்பதில் 'வருஉம்' என்பது பண்பும் பண்புடையதுமாய இரண்டிற்கும் உரியதாகலின் அது முதல்வினையாயிற்று. ஆதலின் 'நுதலி' என்னும் சினைவினை, 'வருஉம்' எனனும் முதல்வினையோடு முடிந்தது என்றார். ௨௩௧ ஆம் நூற்பாவால் இங்ஙனம் முடிதல் இலக்கணமாதல் அறிக.

கருங்குதிரை முதலிய பண்புத்தொகைச் சொற்களைப் பிறஉரையாசிரியர்கள் பிரிக்கும் நிலை வேறு; சேனாவரையர் பிரிக்கும் நிலைவேறு. இளம்பூரணர் முதலிய உரையாசிரியர்களனைவரும் கரியது+குதிரை= கருங்குதிரை என்றாயிற்று என்பர். சேனாவரையர் கரு+குதிரை= கருங்குதிரை என்றாயிற்றென்பர். நன்னூலார் கருமை+குதிரை= கருங்குதிரை என்றாயிற்றென்பர்.

அறுவகைத் தொகைச்சொற்களில் வேற்றுமைத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை ஆகிய மூன்றிலும் அவ்வவ்வுருபுகளும், வினைத்தொகையில் காலம் காட்டும் ஈற்றெழுத்துக்களும், பண்புத்தொகையில் 'ஆகிய' என்ற சொல்லும், அன்மொழித்தொகையில் அல்லாதமொழியும் தொக்கு நிற்கும் என்பதுபிறஉரையாசிரியர்கள் கருத்து. இவ்வறுவகைத் தொகைச்சொற்களும் இரண்டும், பலவுமாய சொற்கள் தொக்கு ஒருமொழிபோல் நடத்தலின் தொகையாயிற் றென்பது சேனாவரையர் கருத்து. இது முன்வரும் கூறப்பட்டது.

அங்ஙனமாயின், இக்கருங்குதிரை என்ற பண்புத்தொகையை விரிக்குங்கால் கரிதாகிய குதிரை என விரிதலின், கருங்குதிரை என்ற வழி ஆகிய என்னும் சொல் தொக்கன்றோ நிற்கின்றது. இது முன்னர்க் கூறப்பட்ட கருத்திற்கு முரணன்றோ? எனின், அதற்குச் சேனாவரையர் அமைதி கூறுகின்றார். கருங்குதிரை என்பது கரிதாகிய குதிரை எனப் பிரிவது உண்மையே. ஆயினும் ஆகிய என்ற சொல் இத்தொகைக் குரிய சொல்லன்று; பிறசொல்லே. அதுபற்றிப் பண்புந் தொகையில் ஆகிய என்ற சொல் தொக்கு நிற்குமெனலாமோ, அத்தொகை விரியுங்கால் அச்சொல் விரிதலின் பண்புத்தொகையும் பிரிக்கப்பிரியும் என்றே கொள்ளல் தகாது என்பதாம். இதற்கு மேற்கோளாக 'வட நூலாரும் பிரியாத் தொகையும் பிறசொல்லான் விரிக்கப்படும்' என்று கூறுவதை எடுத்துக் காட்டுகின்றார்.

கரியது + குதிரை = கருங்குதிரை என்றாயிற்றென்பது இளம்பூரணர் கருத்தாகலின், பண்புத்தொகை பிரிப்பப்பிரியும் என்பது அவர் கருத்தாம். அதனைச் சேனாவரையர் மறுக்கின்றார். பண்புத்தொகையும் பிரிப்பப் பிரியுமாயின், எழுத்ததிகாரத்தில் இதற்குரிய நிலைமொழி வருமொழிகளை வைத்துப் புணர்ச்சிவிதி கூறியிருக்க வேண்டும். அங்ஙனம் கூறாததுடன், அவ்வதிகாரத்து இறுதியில் 'புணரியல் நிலையிடை உணரத் தோன்றா' என்பதனால் இத்தொகைச் சொற்களெல்லாம் பிரிப்பப் பிரியா என்றும் கூறியுள்ளார். ஆதலின் அது பொருந்தாது.

பண்புத்தொகையாக வரும் சொற்களெல்லாம் ஒன்றையொன்று விசேடித்து வரவேண்டும் என்பது தொல்காப்பியர் கருத்து. கருங் குதிரை என்பதில், கருமை விசேடிக்கும் (சிறப்பிக்கும்) சொல்லாம்; குதிரை விசேடிக்கப்படும் (சிறப்பிக்கப்படும்) சொல்லாம். பொதுவாகக் குதிரை எனில், எந்த நிறத்தையுடைய குதிரையையும் குறிக்கலாம். அதற்குக் 'கரு' என்னும் பண்புச்சொல் கொடுத்ததால், ஏனைய நிற முடைய குதிரைகளை விலக்கிக், கருமையான குதிரையையே குறித்தது. இதே போன்று குதிரை என்னாது, 'கரு' என்று மட்டுமே கூறின், அது எதன்கண் உள்ள நிறத்தை யுணர்த்துகின்றது என்பது விளங்காது. அதனைக் குதிரை என்பதனோடு புணர்த்துக் கூறியதால் குதிரையிலுள்ள கருமை என்பது விளங்கிற்று. இங்ஙனம் ஒன்றையொன்று விசேடித்து நிற்பதே பண்புத் தொகையாம்.

ஆனால் இதற்கு மாறாக வரும் சாரைப்பாம்பு, வேழக்கரும்பு, கேழற்பன்றி என்பனவற்றையும் 'பண்புத்தொகை (அதாவது இரு பெயரொட்டுப் பண்புத்தொகை) எனக் கூறுகின்றனர். சாரைப் பாம்பு என்றவிடத்துச் சாரை என்ற சொல்லே பாம்பை விசேடிக் கின்றது; பாம்பு என்ற சொல் சாரையை விசேடிக்க வில்லை. ஆனால் கருங்குதிரை என்றவிடத்தோ இருசொற்களும் ஒன்றையொன்று விசேடித்து நிற்கின்றன. இங்ஙனமாக இதனைப் பண்புத்தொகை என்றல் எங்ஙனம் பொருந்தும்? என்ற வினாவை எழுப்பிக்கொண்டு, அதற்கு அமைதி கூறுகின்றார் சேனாவரையர். அது வருமாறு:— ஆசிரியர் தொல்காப்பியர் பண்புத் தொகைக்கண் வரும் இருசொற்களில் முன்னையதை விசேடிப்பதாயும் (சிறப்பிப்பதாயும்), பின்னையதை விசேடிக்கப்படுவதாயுமே (சிறப்பிக்கப்படுவதாயுமே) குறிக்கின்றார். ஆதலின், முன்னுள்ள சொல் பின்னையதைச் சிறப்பிக்கா விட்டால் மட்டுமே குற்றமாம். பின்னையது முன்னைய சொல்லை விசேடிப்

பினும், விசேடிக்காவிடினும் இழுக்கில்லை. ஆதலின் பாம்பு என்பது, சாரையை விசேடிக்காவிடினும் பண்புத் தொகையாதற்கு இழுக்கில்லை என்பது.

ஏனைய பண்புத்தொகைகள் எல்லாம் முன்னையதைப் பின்னையதும், பின்னையதை முன்னையதும் விசேடிப்பதாய் இருக்க, இது மட்டும் முன்னையது பின்னையதை விசேடிக்கப், பின்னையது முன்னையதை விசேடிக்காதிருப்பது அத்துணைச் சிறப்பாகத் தோன்றவில்லை. ஆனால் சேனுவரையர், பிறர் கூற்முக இதற்குக் கூறும் காரணம் பொருத்தமாக இருக்கின்றது. சாரை என்னும் சொல் பாம்பின் ஒரு வகையையும், என்பும் தோலும் உரியாவாகிய வயிற்றையும் குறித்தலின், அந்நிலையில் பாம்பு என்ற சொல்லும் சாரை என்ற சொல்லை விசேடித்து, இது வயிறன்று பாம்பின் ஒருவகையே எனக் குறித்தலின் ஒன்றையொன்று விசேடித்தலாகிய இலக்கணத்தில் பிழையாது வந்ததென்பர். இக்கருத்து யாருடையது எனத் தெரிந்திலது. எனினும் சேனுவரையர் கூறும் அமைதியினும் சிறப்புடையதாயுள்ளது. இங்ஙனமே வேழக்கரும்பு என்பனவும் ஒன்றையொன்று விசேடித்து நிற்றல் உய்த்துணர்வார்க்கு நன்கு விளங்கும்.

சாரைப்பாம்பு என்ற சொல் பண்புத்தொகை யிலக்கணத்தில் பிழைத்து வந்ததா? அன்று? என்பதை ஆராயவந்த சேனுவரையர், அதற்கு இவ்வாறு அமைதிகூறி, இனி அச்சொல்பற்றி ஆராய்கின்றார். அவ்வாராய்ச்சியைத் தாமும் மாணாக்கனும் ஒருவருக்கொருவர் வினுவிடையாகக் கூறிய அமைப்பில் அமைத்துள்ளார். அது வருமாறு:—

(க) 'சாரைப்பாம்பு' என்பதில் சாரை என்பதே பாம்பு என்பதை விளக்கிவிடப், பாம்பு என்பது மிகைபடக் கூறலன்றோ! அச்சொல்லைக் கூறியதேன்? என மாணாக்கன் வினவினன். அதற்குச் சேனுவரையர் கூறிய விடை: சாரைப்பாம்பு என்பது உலகவழக்கில் கூறப்படும் தொடர். வழக்கில் கூறப்படும் சொற்கள் எல்லாம் சூத்திரயாப்புப் போல மிகைபடக்கூறல் இல்லாமல் இருக்க வேண்டுவதின்று. ஆதலின் பாம்பு என்பது மிகைபடக் கூறலேனும் அமைவுடைத்தேயாம். இத்தகைய வழக்கையெல்லாம் மிகைபடக்கூறல் எனக்கொண்டு விலக்கிவிட நினையின், யான் வந்தேன், நீவந்தாய் என்னும் தொடர்களிலும் வந்தேன், வந்தாய் என்ற வினைகளே தன்மை யொருமை, முன்னிலை யொருமை எழுவாய்களைத் தந்துவிடுதலின், யான், நீ என்பனவும் மிகைபடக்கூறல் என விலக்கிவிடவேண்டும். அங்ஙனம் நாம் விலக்காமையின், இச்சாரைப்பாம்பு என்ற தொடரிலும் பாம்பு என்பதை விலக்கவேண்டுவதில்லை என்பது.

(உ) இங்ஙனம் சேனுவரையர் கூறுங்கால் உலக வழக்குச் சொற்கள் எல்லாம் சூத்திரயாப்புப்போல மிகைபடக்கூறல் இல்லாமல் இருக்கவேண்டுவதின்று என்று கூறிய தொடர்மொழியை நன்கு உளங்கொண்ட மாணாக்கன், அதிலிருந்து பிறிதொரு வினுவை எழுப்பினன். சூத்திரயாப்பில் மட்டுமே மிகைபடக்கூறல் இல்லாதிருக்குமெனின், 'வழக்கினுகிய உயர்சொற்கிளவி' (சொல் - உஎ), 'இடைச்சொற்கிளவியும் உரிச்சொற்கிளவியும்' (சொல் - கருகூ) என்பன போன்ற இடங்களில் எல்லாம் உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பதே போதுமானதாயிருக்கக், 'கிளவி' என்றிருப்பது மிகைபடக் கூறலன்றோ? என வினவினன். அதற்குச் சேனுவரையர் கூறிய விடை: சாரைப்பாம்பு

என்பதில் பாம்பு என்ற சொல்லைச் சாரை சிறப்பித்ததுபோல, உயர் சொற்கிளவி, இடைச்சொற்கிளவி, உரிச்சொற்கிளவி என்பனவற்றிலும் 'கிளவி' என்பதை உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பன சிறப்பித்து நிற்கின்றன. ஆதலின் 'கிளவி' என்பது மிகையன்று என்றார். (எனவே உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பனவற்றிற்கு முறையே உயர்வு, இடை, உரி என்ற பொருள்கொண்டு, பின்வரும் 'கிளவி' என்ற சொல்லுக்கே 'சொல்' என்ற பொருள் கொள்ளவேண்டும் என்பது பெறப்படுகின்றது.)

(ங) இங்ஙனம் சேனாவரையர் கூறிய அமைதி மாணாக்கன் மனத்திற்கு அமைதி தந்திலது. ஆதலின் இங்ஙனம் எத்துணை அமைதி கூறினும், இச்சொற்கள் சூத்திரயாப்பில் உள்ளனவாதலின் 'கிளவி' என்பது மிகையேயாகும் என முணுமுணுத்தனன். அதனைக்கேட்ட, சேனாவரையர், நீ கூறுமாறுபோல இக்கிளவி என்னும் சொல் மிகைபடக் கூறலாயினும் ஆசிரியர் இவற்றை அமையுடைய என்று கருதவேண்டும் என்பதற்கே இங்ஙனம் யாத்திருத்தலின் அமைவுடைய என்றே கருதுக என்றனர்.

இவ்வாராய்ச்சி இங்ஙனம் இடையறவின்றி நிகழ்ந்திருக்கவேண்டும். ஆதலின், 'இனி ஒற்றுமை நயத்தால்' என்று தொடங்கும் பிறர் கருத்து, இப்பகுதியின் ஈற்றில் இருப்பதே பொருத்தம் எனக்கொண்டு அங்ஙனம் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

கிளவியாக்கம் ௨௭ ஆம் நூற்பாவில் 'உயர்சொற்கிளவி' என்புழிக் கூறியது கூறலன்மை பண்புத்தொகை யாராய்ச்சிக்கட் சொல்லுதும் என்று கூறினார். ஆதலின் அதனை ஈண்டு விளக்கியுள்ளார். கிளவியாக்கம் ௬௪ ஆம் நூற்பாவில் 'திருவீரவாசிரியன் .....பண்புத்தொகை யாராய்ச்சிக்கட்பெறுதும்' என்றார், ஆனால் அதுபற்றி ஈண்டு யாதும்கூறவில்லை. இதுபற்றி அந்நூற்பா விளக்கவுரையில் எழுதியுள்ளேன். ஆண்டுக் காண்க.

தொல்காப்பியத்தில் 'என்ன கிளவியும்' என்ற மிகையினாலே கொள்ளப்பட்ட 'இருபெயரொட்டுப் பண்புத்தொகையை' நன்னூலார் தம் நூற்பாவிலேயே (நன் - ௩௬௫) அறியுமாறு வைத்துள்ளார்.

௬௭ ஆம் நூற்பா : எண்ணியற்பெயர் - எண்ணொடு பொருளும் குறித்துவரும்; எண்ணின்பெயர் - எண்மட்டும் குறித்துவரும் எனத் தெய்வச்சிலையார் வேறுபாடு காண்பர்.

வேற்றுமைத்தொகை முதலிய ஏனைய தொகைகளும் இருபெயர், பல்பெயர் என்ற இருபாகுபாட்டிலும் வருமேனும், அவை இருபெயரில் வருதல்போலப் பல்பெயரில் பயின்றுவாராமையானும், இவ்வுவமத்தொகையோ இருபெயர் பல்பெயர் என்ற இரண்டிலும் பயின்று வருதலானும், அவற்றை இவ்விருபெயரில் வரும் என விதந்து கூறாது, இதனைமட்டுமே விதந்து கூறினார் என்பது.

கற்சுனைக்குவளையிதழ், பெருந்தோட்பேதை என்பன கற்சுனையின்கண் உள்ள குவளை இதழ் என்றும், பெருந்தோளை உடைய பேதையென்றும் விரிதலின் அவை வேற்றுமைத்தொகையேயாம். இவற்றில் முன்னையதில் நான்கு சொற்களும், பின்னையதில் மூன்று சொற்களும் உள்ளன. எனவே இவ்வேற்றுமைத் தொகையும் பல்

பெயரில் வருதல் வழக்குப்பயிற்சி யுடையதெனத் தெரிகின்றதே? யெனின், அற்றன்று. கல், சுனை என்பன தொக்கு ஒரு சொல்லாக வும், குவளை, இதழ் என்பன தொக்கு ஒருசொல்லாகவும் கொள்ளப்படு தலின் அது இருபெயரான் வந்தவேற்றுமைத்தொகையேயாம். பெருந் தோள்+பேதை=பெருந்தோட்பேதை என இருசொல்லால் வருதலின் அதுவும் இருபெயரான் வந்த தொகையேயாம். ஆதலின் இவை பல்பெயரான் வந்தனவென்றே, அவைபற்றி வழக்குப்பயிற்சியுடைய தென்றே கருதற்க என்பது.

அற்றேல் புலி, வில், கெண்டை என்பவற்றையும் புலி+விற் கெண்டை என்றே, அல்லது புலிவில்+கெண்டை என்றே கொண்டு இதுவும் இருபெயரின்கண் வந்ததென்று கொள்ளலாமே! எனில், கொள்ளலாகாது. (க) புலிவிற்கெண்டை என்பவற்றில், மூன்றும் தனித்தனிப்பெயர்களாகவுள்ளன. அவை புலியும் வில்லும் கெண் டையும் என விரியும். இம்மூன்றிடத்திலும் ஒரே நிலையில் உம்மை விரிகின்றன. ஆதலின் இவற்றைத்தனித் தனியாகவே கொண்டு பல் பெயரில் வந்தது என்றே கொள்ளவேண்டும் என்பது. கற்சுனைக் குவளையிதழ் என்ற விடத்தோ கற்சுனை என்பது ஒன்றாய், அது குவளை யொடு சேரும்பொழுது கற்சுனையின்கண்ணுள்ள என விரிதலின் இயைபு வேறுபடுகின்றது. பெருந்தோள் என்பதும் பேதை என்பத னோடு இயையுங்கால், இயைபு வேறுபாடுண்டு. ஆதலின் இயைபு வேறுபாடில்லாத கற்சுனையைச் சேர்த்து ஒருசொல்லாகவும், அத னுடன் இயைபு வேறுபடும் குவளையிதழைப்பிரித்து, அவ்விரண்டிற் கும் (குவளை+இதழ்) இயைபு வேறுபாடின்மையின் ஒருசொல்லாக வும்கொண்டு இருசொல்லில் வந்ததொகை என்றனர். (உ) புலி விற்கெண்டை என்பது மூன்றுசொல் இரண்டு சந்தியாய் நிற்பது. இரண்டென்பதும் பல என்று கூறப்படுமாதலின், இவ்விருசொல் தொகையையும் பல்பெயரில் வந்ததெனக் கொள்ளலே பொருத்த முடைத்தாம் என்பது.

முன்தொகும் இரண்டென்பது: புலி என்பதை நிலைமொழியாய் நிறுத்தி, ஏனையிரண்டையும் ஒருசொல்லாக வருமொழியாய் நிறுத்து தல் ஒன்று. புலிவில் என்பதை ஒரு சொல்லாக நிலைமொழியாய் நிறுத்திக், கெண்டை என்பதை வருமொழியாய் நிறுத்துதல் ஒன்று.

அளவுப்பெயர், நிறைப்பெயர், எண்ணியற்பெயர், எண்ணின் பெயர் என்பன இருபெயராகவே வருவன. ஆதலின் ஆசிரியர் உம் மைத்தொகை இருபெயர், பல்பெயர் ஆகிய இரண்டிலும் வரும் எனப்பொதுப்பட முன்னர்க்கூறிப், பின் இப்பெயர்களை எடுத்துக்கூறு வாராயினர். கலனே, தூணிப்பதக்கு முதலாயின பார்ப்பதற்கு மூன்று சொல் (பலபெயர்) போலத்தோன்றினும், அவற்றை இரு பெயராகவே கொள்ளவேண்டும். இங்ஙனம் கூறுதற்குக் காரணம், அளவுப்பெயர் முதலாயின இருபெயராயல்லது வாரா என வரை யறுத்தமையே யாகும்.

எண்ணின்கண் வருவன ஏ, என்று, என எனப்பலவுள வெனி னும், தொக்கு நிற்கும் ஆற்றலுடையது உம்மையாதலின் உம்மைத் தொகையாயிற்று.

தெய்வச்சிலையார் 'இருபெயர்' என்பதற்குப் பொருட்பெயர், தொழிற்பெயர் எனக்கொண்டு அவற்றிற்கு முறையே கபிலபரணர்,

ஆடல்பாடல் என்பனவற்றை எடுத்துக் காட்டுவர். 'பல்பெயர்' என்பதற்குப் பன்மைகுறித்த பெயர் எனக்கொண்டு பார்ப்பார், சான்ருேர் என்பதை எடுத்துக்காட்டுவர். 'இருபெயர் பல்பெயர்' என்பதற்குச் சேனுவரையரும் பிறரும் கூறுமாறுபோல உரை வகுத்துக்கொண்டு. கற்சுனைக் குவளையிதழ் என்பதை இருபெயராகவும், புலிவிற்கெண்டை என்பதை மூன்று 'பெயராகவும் வரையறைப்படுத்தி இடர்ப்படுவதைக்காட்டிலும், தெய்வச்சிலையார் கூறும் உரை சிறப்புடையதாகத் தெரிகிறது.

நன்னூலார் இச்சிக்கல் எல்லாம் இருப்பதை நோக்கித்தான் போலும் 'இருபெயர் பல்பெயர்' என்ற தொடரையே விடுத்து, 'எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல், எனுநான் களவையுள் உம்மிலது அத்தொகை' (நன் – ௩௬௮) என யாத்தனரோ என நினையஇடந்தருகின்றது.

௪௧௮ ஆம் நூற்பா : மேல்௪௧௨ ஆம் நூற்பாவில் வேற்றுமைத் தொகை, உவமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை எனக்கூறினர். அவற்றுள் மூன்று தொகையின்மேல் அன்மொழித்தொகை வரும் என ஈண்டுக்கூறுகின்ருர். அங்ஙனம் கூறுகின்றவர் ௪௧௨ ஆம் நூற்பாவில் கூறிய முறையிலேயே (அதாவது வேற்றுமைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை எனக்) கூறியிருக்கவேண்டும். அங்ஙனம் கூருமைக்குரிய காரணத்தை ஆராய்கின்ருர் சேனுவரையர். இம்மூன்று தொகைகளுள் பண்புத்தொகை நிலைக்களத்து அன்மொழித்தொகை பிறத்தல் பெரும்பான்மையாதலால் அதனை முற்கூறினர். அதற்கடுத்தாற்போல் வேற்றுமைத்தொகை நிலைக்களத்து அன்மொழித்தொகை பிறத்தலைக் கூறவேண்டும். எனினும், அதனினும் குறைவாக வரும் உம்மைத் தொகை நிலைக்களத்தை இரண்டாவதாகக் கூறற்குக்காரணம், அன்மொழித்தொகை இங்குக்கூறப்பட்ட மூவகைத் தொகைகளிலேயன்றி, ஏனையிருவகைத் தொகைகளையும் நிலைக்களனுகக்கொண்டு பிறக்கும் என்பதை யறிவித்தற்காம் என்பர். இது இளம்பூரணர் கருத்தைத் தழுவியதாகும். நச்சினர்க்கினியரும் இக்கருத்தினரேயாவர்.

தெய்வச்சிலையார் மட்டும் ஆசிரியர் கூறிய மூவகைத் தொகைகளில் மட்டுமே அன்மொழித்தொகை பிறக்கும் என்றும், ஏனைய இரு தொகைகளிலும் பிறப்பன ஆகுபெயராகுமேயன்றி அன்மொழித் தொகையாகாதென்றும் கூறுவர். எனினும் இவர், இவ்விருதொகை மேலும் அன்மொழித்தொகை வருவனவாகச் சான்ருேர் செய்யுட்கள் உளவாயின், அவற்றை அதிகாரப் புறனடையால் ஏற்றுக்கொள்க என்பர். நன்னூலார் இளம்பூரணர் கருத்தையே தழுவி 'ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி' (நன் - ௩௬௯) என்பர்.

௪௧௯ ஆம் நூற்பா : 'வேங்கைப்பூ' என்புழி வேங்கை முற்படச் சொல்லப்படுவது; பூ பிற்படச் சொல்வது. காலவகையால் வேங்கை முன்மொழியாகும்; பூ பின்மொழியாகும். ஆனல் இதுவே இடவகையான் நோக்கும்பொழுது, பூ என்பது முன்மொழியாகும்; வேங்கை என்பது பின்மொழியாகும். வலதுபுறமிருந்து இடதுபுறமாகக் காலவரையறையையும், இடதுபுறமிருந்து வலதுபுறமாக இடவரையறையையும் கொள்க. இதுபற்றியே சேனுவரையர் 'முன்பின் என்பன காலவகை இடவகையாற் றடுமாறி நிற்கும்' என்றனர்.

அடைகடல் - கடலாகிய கரை என்பது பொருள். அடை - கரை. இது கடலாகிய கரை என விரிந்து கரை கூறுதலே கருத்தாகலின், இது பின்மொழிக்கண் (அதாவது அடை என்பதன் கண்) பொருள் சிறந்ததாயிற்று. இவ்விளக்கம் நச்சினார்க்கினியர் உரையில் கண்டது.

௪௨௦ ஆம் நூற்பா : பெயரொடு பெயரும், பெயரொடு வினையும் தொக்கன தொகை என்பதே தொல்காப்பிய உரையாசிரியர்கள் அனைவர்க்கும் கருத்தாகும். நிலங்கடந்தான், குன்றத்திருந்தான் என்பன பெயரொடு வினைசேர்ந்துழித் தொகையன்றென்பார் யார் எனத் தெரிந்திலது. பிற்காலத்து வந்த சிவஞான முனிவர் இக்கருத்தினராவர்.

பெயரொடு வினைதொக்கதும் தொகையே என்பது ஆசிரியர் கருத்தாதலை, அவர் எழுத்ததிகாரத்தில் கூறிய ௧௩௧ ஆம் நூற்பாவைக் கொண்டே நிறுவுகின்றார் சேனாவரையர்.

‘பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்காது
இடைநின் றியலுஞ் சாரியை இயற்கை
உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்’.

இந்நூற்பா சாரியை எவ்வெப்பொருளில் வரும்? எவ்வெவ்விடத்து வரும்? என விளக்குகின்றது. பெயர்வினைகளுக்கிடையில் வேற்றுமையுருபு விரிந்து நிற்புழி, அவை பிரிந்து தொகாநிலையாய் இசைக்கும். பெயர் வினைகளுக்கிடையில் வேற்றுமை யுருபு மறைந்து நிற்புழி அவை ஒருங்கிசைத்துத் தொகை நிலையாய் நிற்கும். தொகாநிலை, தொகை நிலையாகிய இவ்விரண்டின் இடையிலும், ஒரோவழி இறுதியிலும் சாரியை வரும். ஒடு உருபுவருமிடத்துச் சாரியை வருதலும் உண்டு; வாராதிருத்தலும் உண்டென்பது இந்நூற்பாவிற்குச் சேனாவரையர் தரும் உரையாகும். இங்ஙனம் பொருள் கொள்ளுவதற்காக இந்நூற்பாவின்முதல் மூன்றடிகளைப், பெயரும் தொழிலும் வேற்றுமையுருபு நிலைபெறுவழி பிரிந்திசைப்பப், பெயரும் தொழிலும் தோற்றம் வேண்டாத்தொகுதிக்கண் ஒருங்கிசைப்ப எனக்கொண்டு கூட்டுவர். இந்நூற்பாவில் வேற்றுமையுருபு தொக்கு நிற்கப் பெயரும் வினையும் சேர்ந்திருப்பினும் தொகையென ஆசிரியர் கருதுதலின் நிலங்கடந்தான் என்பதும் தொகையே யாகும் என்றார். பக்கிசைத்தல்—பிரிந்திசைத்தல்.

இந்நூற்பாவின் முதல் மூன்று வரிகளுக்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் வேறுவிதமாகப் பொருள் கூறுவர். அதனை யான் பதிப்பித்துள்ள எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரைவிளக்கத்தில் எழுதியுள்ளேன். ஆண்டுக்காண்க.

௪௨௧ ஆம் நூற்பா: உம்மைத்தொகை இருபெயர், பல்பெயர் ஆகிய இரண்டிலும் வரும். ஈண்டு அவ்விரண்டனுள் ஒன்றை விதந்து கூறாது பொதுவிற் கூறியதாம். ஆதலின் அவ்விரண்டிற்கும் வரும் என்பது கருத்து. மாமூல பெருந்தலைச் சாத்தர் என்பது, மாமூலரும் பெருந்தலைச் சாத்தரும் என விரிதலின் அது இருபெயரில் வந்த உம்மைத் தொகையாம். கபிலபரணநக்கீரர் என்பது பல்பெயரில் வந்

தது. இதனைத் திரு. கணேசையர் அவர்கள் வேறுவிதமாக விளக்குவர். எனினும் இதுவே பொருத்தமுடைத்தாம். 'உயர்திணை உம்மைத் தொகைபலர் ஈறே' (நன்-௩௭௭) என நன்னூலார் இந்நூற்பாவின் கருத்தைச் சுருங்க விளங்குவர்.

௪௨௨ ஆம் நூற்பா: அவல் அவல் என்கின்றன நெல் — நெல் பள்ளம் (தாழ்ந்த பகுதி) வேண்டும், பள்ளம் வேண்டும் என்று கூறுகின்றது. அவல் பள்ளமாதல், 'அவலா கொன்றோ மிசையா கொன்றோ' (புறம்-௧௮௭) என்பதனானும் அறிக. 'வெள்ளமேயானாலும் பள்ளமே பயிர்செய்' என்ற பழமொழியும் ஈண்டு அறியத்தக்கது.

நிலம் வல்லென்றது, நீர் தண்ணென்றது என்பனவற்றிற்கு நிலம் வன்மையாக இருக்கிறது, நீர் குளிர்ச்சியாக இருக்கிறது என்பதே பொருளாதலின் அவை சொலற் பொருளவல்ல என மறுத்தனர் சேனாவரையர்.

௪௨௩, ௪௨௪ ஆம் நூற்பாக்கள்: இந்நூற்பாக்கள் மேற் கூறப் பட்ட ௪௧௧ ஆம் நூற்பாவை யடுத்திருத்தல் வேண்டும். அல்லது அந் நூற்பா, இவ்விரு நூற்பாக்களுக்கும் முன்பு ஈண்டு இருக்க வேண்டும். தெய்வச்சிலையார் உரையில் இங்ஙனமே உள்ளது. ஆனால் தெய்வச் சிலையார், இவ்விரு நூற்பாக்களையும் ௪௧௧-ஆம் நூற்பாவை அடுத்து வைக்காது, ஈண்டுவைத்ததற்குக் காரணம், அடுத்த இரு நூற்பாக்களில் (௪௨௫, ௪௨௬) கூறப்படும் அசைநிலைகளும் அடுக்கி வரும் என்று கோடற்கேயாம் என்பர். நன்னூலார் இம்மூன்று (௪௧௧, ௪௨௩, ௪௨௪) நூற்பாக்களின் கருத்தையும் ஒருங்கு தொகுத்துக் கூறுவர். (நன்-௩௯௫ ஆம் நூற்பா காண்க.)

௪௨௬ ஆம் நூற்பா: 'கண்டீர் கொண்டீர்' முதலியன வினா வெழுத்துக்களாகிய ஆ, ஓ என்பனவற்றை இறுதியில் கொண்டு அடுக்கிவரின் முன்னிலையசைகளாக வரும். 'கேட்டை' முதலியனவோ அடுக்கியும் அடுக்காதும் அசைநிலைகளாகவும் வரும்; முன்னிலை வினைச் சொற்களாகவும் வரும். முன்னிலையல்வழி-முன்னிலை வினைச்சொற் களாக வாராதவழி. எனவே இவை முன்னிலை வினைச்சொல்லாகுங்கால் அசைநிலையாகா; அசைநிலையாகுங்கால் வினைச்சொல்லாகா என்பது சேனாவரையர் கருத்து. இதுவே நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார்க் கும் கருத்தாகும்.

ஆனால் இளம்பூரணர் 'முன்னிலையல்வழி' என்பதற்கு, இதற்கு முன்னைய நூற்பாக்களில் கூறிய அசைச்சொற்கள் போல வினாவொடு பொருந்தி நில்லாதவழி என உரைகூறினர். ஈண்டுக் கூறப்பட்ட கேட்டை முதலிய சொற்கள் வினாவொடு பொருந்தியும் வரும் என ஏற்கனவேயே பெறப்பட்டிருப்பின், ஈண்டு அதனை விலக்கலாம். அவ் விலக்கணம் இதற்குமுன் யாண்டும் பெறப்படவில்லையாதலின், ஈண்டு அதனை விலக்கவும் வேண்டுவதில்லை என்பது சேனாவரையர் கருத்தாகும். இவற்றிற்கு ஒன்றுன் எய்தாமையின் — இச்சொற்களுக்கு வினாவொடு பொருந்திவரும் என யாதேனும் ஓரிடத்திலும் பெறப்படாமையின்.

இடையியலில் கூறப்பட்ட ஆக, ஆகல் என்பனவும் அடுக்கி அசைநிலைகளாக வருகின்றன. இவ்விரு நூற்பாக்களில் கூறப்படும் சொற்களும் அடுக்கி அசைநிலையாக வருகின்றன. ஆயினும் இவற்றிடை வேற்றுமை உண்டு. அவை வருமாறு:—

| இடையியலில் கூறப்பட்ட ஆக, ஆகல் என்பன. | இவ்வியலில் கூறப்படும் கண்டீர் முதலியன. |
|---|---|
| (1) இவை இடைச்சொற்களே. | இவை வினைச்சொற்களே. |
| (2) இவை அடுக்கியே வரும். | இசை நிறைத்தற்கும், பொருள் வேறுபாட்டிற்குமல்லது அடுக்கி வாரா. |
| (3) வினாவொடு சிவணாமலேயே அடுக்கி வரும். | கண்டீர் முதலிய நான்கும் வினாவொடு சிவணியே அடுக்கி வரும். |

௪உ௭ ஆம் நூற்பா: வினைமுற்றுக்கள் திணை, பால், காலம் ஆகிய மூன்றையும் உணர்த்தி வருதலை இலக்கணமாக உடைய வேனும், அவற்றுள் ஒரு சாரனவாகிய யார், எவன், வேறு, இல்லை என்பன இடம் உணர்த்தாமையும், வியங்கோளும், இருவகை எச்சமும், இட மும் பாலும் உணர்த்தாமையும் கண்டு அவற்றை விலக்கி, எல்லா வினைமுற்றுக்களுக்கும் பொருந்திய காலந்தோன்றுதலையே இலக்கண மாகக் கூறினர் ஆசிரியர். அச்சிறப்பு நோக்கியே 'சிறப்புடை மரபின் அம்முக் காலமும்' என்றார் ஆசிரியர்.

இந்நூற்பா எதை உணர்த்த எழுந்தது? என்பதில் இளம்பூரணரும் சேனாவரையரும் கருத்து வேறுபடுகின்றனர். பெயரெச்சம், வினையெச்சம், வினைமுற்று ஆகிய மூன்றனுள், இருவகையெச்சம் நீங்கலாக ஏனைய சொல்லே முற்றுச்சொல்லாக நிற்கும் என்பதையும், அது முத்திணையோடும், முக்காலத்தோடும், மூவிடத்தோடும் பொருவப் பல வகைப்படும் என்பதையும் உணர்த்த வந்தது இந்நூற்பா என்பர் சேனாவரையர். வினையியலில் கூறப்பட்ட வினைச்சொற்களுள் எச்சங்கள் நீங்கலாக, ஏனைய சொற்களெல்லாம் முற்றி நிற்கும். அவற்றிற்கு முற்று எனக் குறியிடுதலை யுணர்த்த வந்தது இந்நூற்பா என்பர் இளம்பூரணர். இதனைச் சேனாவரையர் மூன்று காரணங்களால் மறுக்கின்றார். (க) இந்நூற்பா முற்றுச் சொற்குப் பெயரிடுவதையே கருத்தாகக் கொண்டு எழுந்ததாயின், 'அவ்வா றென்ப முற்றியல் மொழியே' என்னாது, 'முற்றியல்மொழியே அவ்வாறு என்ப' எனல்வேண்டும். ('அவ்வாறென்ப முற்றியல் மொழியே' எனில், வகைக்கு இன்றியமையாமை கொடுத்ததாகுமேயன்றி, முற்று என்னும் பெயர்பெறுதற்கு இன்றியமையாமை கொடுத்ததாகாது. அதனால் மாற்றியுரைக்க வேண்டும் என்றார்.) (உ) சூத்திரயாப்பாதலின் மொழி மாற்றிக் கொண்டு அங்ஙனம் பொருளுரைக்கலாமே எனில், என்றுமே ஒன்றற்குப் பெயரிடுவது (குறியீடுதருவது) அதனை ஆளுதற் பொருட்டேயாதலின், அங்ஙனம் அதனையாளாமையின் மொழிமாற்ற வேண்டாம் என்பது. (ங) மூவகை வினைச்சொற்களுள் முற்று எனக் குறியிடுதற்கு இந்நூற்பா கூறினாரெனின், ஏனையிருவகை எச்சங்கள் ஒவ்வொன்றுக்கும் பெயரிட ஒவ்வொரு நூற்பா கூறவேண்டும். அங்ஙனம் கூறாமையின் அது பொருத்தமின்று. எனினும் நச்சினார்க்கினியர் இளம்பூரணர் கருத்தையேதழுவுவர்.

இந்நூற்பா முதலிய மூன்று நூற்பாக்களும் வினைமுற்றுக்கிலக்கணம் கூறுவன. ஆதலின் இம்மூன்று நூற்பாக்களும் வினையியலில் கூறப்பட்டிருத்தல் வேண்டும் எனக் கருதி தெய்வச்சிலையார் வினையியலில் வைத்துள்ளார். அது மிகவும் பொருத்தமுடைத்தாம்.

சஉஅ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்குச் சேனாவரையர் தரும் ஈருரைகளும், இளம்பூரணரை மறுக்கும் முறையில் தரும் ஒருரையுமாக மூவுரைகள் உள்ளன.

(க) வினைமுற்றுக்கள் மூவிடத்தாலும், முத்திணைதோறும் அறு வகையாக வரும் என மேற்கூறப்பட்டது. இனி இவ்வரையறையிலடங் காது பிறவாறு வரும் வினைமுற்றும், வினைமுற்றென்றே பெயர் பெறும் என்பது முதல் உரை. தெய்வச்சிலையாரும் இக்கருத்தினரேயாவர். இவ்வரையறையிலடங்காது வரும் வினைமுற்றுக்களாவன: யார், எவன், இல்லை, வேறு என்பனவாம். இவற்றுள் யார் என்பது முப்பாற்கும் (உகώ), எவன் என்பது இருபாற்கும் (உக௯), வேறு, இல்லை என்பன ஐம்பாற்கும் உரித்தாதலின் இவை பாலுமுணர்த்தா; இடமும் உணர்த்தா. எனினும், மேல் வினைமுற்றுக்கள் இடம் உணர்த்துதலையே இலக்கணமாகக் கூறியிருத்தலின், அவ்வரையறையுளடங்காது வந்தன எனக் கூறினர். தெரிநிலை வினைக்கே உரியன:- ப, மார், கும், டும், தும், றும், கு, டு, து, று முதலியன. குறிப்பு வினைக்கே உரியது:– டு என்பது. இவை ஒவ்வொன்றுமே தெரிநிலைக்கும், குறிப்பிற்கும் ஈறாய் வரும் என்ற வரையறையில் அடங்காது, வேறுபட வந்தனவாம்.

முன்னிலை, இருதிணைக்கும் பொது. ஆதலின் வினைமுற்றுக்கள் திணை யும் பாலும் உணர்த்த வேண்டுமென்பது கருத்தாயின், ஆசிரியர் முன் னிலையைக் கூறார்.

(உ) மூவிடந்தோறும், முத்திணைதோறும் வரும் என மேற்கூறப் பட்ட வினைமுற்றுக்களின் முதனிலைகளும் (அதாவது தாதுக்களும்) வினை என்றே பெயர்பெறும் என்பது இரண்டாம் உரை. நடந்தான், வந்தனன் என்ற வினைமுற்றுக்கள் வினையென்று பெயர்பெறுதலே யன்றி, அவற்றின் பகுதிகளும் (நட, வா என்பன) வினையென்றே பெயர் பெறும் என்பது கருத்து. இப்பகுதிகள் முற்றாதற்கும், எச்சமாதற் கும் ஏற்புடையன. ஆனால் கச்சினன், கழலினன் என்னும் குறிப்பு வினை முற்றின் பகுதிகள் (கச்சு, கழல் என்பன) பெயராய் இருத்தலின், அப்பகுதிகளினின்றும் எச்சம் பிறத்தல் இயலாது. தெரிநிலை வினை முற்றின் பகுதிகளில் இந்நிலையில்லை. எல்லாம் எச்சமாதற்கு ஏற்கும்.

(ங) மேற்கூறப்பட்ட முற்றுச் சொல்லேயன்றிப் பெயரெச்ச மும், வினையெச்சமும் கூட இடமும் காலமும் உணர்த்தும் எனப் பொருள் காண்பர் இளம்பூரணர். உண்ணும் யான், உண்ணும் நீ, உண்ணும் சாத்தன் எனப்பெயரெச்சமும்; உழுது வந்தேன், உழுது வந்தாய், உழுது வந்தான் என வினையெச்சமும் இடவேறுபாடுணர்த் தாது மூவிடத்திற்கும் பொதுவாய் வருதலின், இப்பெயரெச்ச வினை யெச்சங்கள் இடம் உணர்த்தும் என்பது பொருந்தாது என மறுத் தனர் சேனாவரையர். எனினும், நச்சினார்க்கினியர் இளம்பூரணர் உரையையே தழுவினர்.

சஉகூ ஆம் நூற்பா: உருபுபல அடுக்கலை கώஉ - ஆம் நூற்பா வானும், வினையெச்சம் அடுக்கி வருதலை உருங - ஆம் நூற்பா வானும், முற்றுக்கள் அடுக்கி வருதலை இந்நூற்பாவானும் ஆசிரியர் கூறுகின்றார். பெயரெச்சம் அடுக்கி வருதலை அதன் உரையானறிய லாம். நன்னூலார் இவையனைத்தையும் ஒருங்கு நினைவு கொள்ளுமுக மாக, உருபு பல அடுக்கினும் வினைவே றடுக்கினும், ஒருதம் எச்சம் ஈறுற முடியும்' (நன் - ருடுரு) எனச் சுருங்க யாத்துள்ளார்.

முடிக்கப்படும்பெயர் — எழுவாய். முடிக்கும் சொல் — பயனிலை. சுஅ-ஆம் நூற்பாவில் எழுவாய் வெளிப்பட்டும், வெளிப்படாதும் நிற்கும் என்றார். ஈண்டுப்பயனிலை வெளிப்பட்டும், வெளிப்படாதும் நிற்கும் என்றார். ஆதலின் இக்கருத்து அந்நூற்பாவில் அடங்காது.

செயப்படு பொருளை அறிதற்கு இருக்கும் அவாவினும், வினை முதலை அறிதற்கு இருக்கும் அவா மிகுதியாதலின் 'எத்திறத் தானும் பெயர்முடி பினவே' என முற்றுப் பெயரொடு முடிதலை வற்புறுத்திக் கூறினார் ஆசிரியர்.

சுகூ ஆம் நூற்பா: 'ஆயீரைந்தும் எஞ்சுபொருட் கிளவி' என்னும் தொடரை உள்ளவாறே வைத்துப்பொருள் உரைப்பின் அந்தப் பத்தும் எச்சம் என்று பெயர்பெறும் எனப்பொருள்படும். அங்ஙனமாயின் இப்பத்துவகை எச்சமும் முன்னர்க் கூறப்பட்டிருக்க வேண்டும். இப்பத்தனுள் சொல்லெச்சமும், குறிப்பெச்சமும் முன்னர்க் கூறப்படவில்லை. ஏனைய வினையியலிலும் இடையியலிலும் கூறப்பட்டுள்ளன. ஆதலின் இத்தொடரை மாற்றி எஞ்சுபொருட் கிளவி பத்து வகைப்படும் எனப்பொருள் கூறுக என்றார்.

என்றும், எனவும் முடிவும் பொருளும் ஒத்து வருதலைச் சொல்-உருஅ, உருகூ ஆம் நூற்பாக்களான் அறிக.

சுகூகூ ஆம் நூற்பா: உம்மையொடு தொடர்ந்த சொல் இரண்டாகவே இருக்குமாதலின் தம்வினையென்றல் வேண்டும். அங்ஙனமாகத் 'தன்வினை' என்றதற்குக் காரணம், ஒன்றற்குரிய வினையே பிறிதொன்றற்கும் உரியதாய் இருத்தல் பற்றியாம். எ-டு: சாத்தனும் வந்தான், கொற்றனும் வந்தான் என்பதில் இரண்டிலும் ஒரு வினையே வருதல் காண்க. செஞ்சொல் – உம்மையில்லாத சொல்.

சுசுo ஆம் நூற்பா: சொல்லெச்சம் - யாதானும் ஒருசொல் எஞ்சி நிற்பது. இசையெச்சம் - ஒரு தொடர் எஞ்சி நிற்பது. குறிப்பெச்சம் - ஒரு தொடர்மொழி (வாக்கியம்) எஞ்சி நிற்பது. இவற்றுள் சொல்லெச்சத்தை அடுத்த நூற்பாவில் ஆசிரியர் கூறுகின்றாராதலின், ஏனைய இரண்டுமே ஈண்டு ஆராயப்படும்.

குறிப்பெச்சத்திற்கு எ-டு: 'பசப்பித்துச் சென்றாரை உடையையோ? அன்ன, நிறத்தையோ பீர மலர்' எனவரும். இதன் பொருள்: பீர்க்கமலரே! நீயும் என்னைப்போல் பசக்குமாறு பிரிந்த தலைவரையுடையையோ? அல்லது அப்பசப்பு நிறத்தை இயற்கையாக உடையையோ? எனத் தலைவி கூறுகின்றாள். பீர்க்கமலரைப் பசப்பித்துச் சென்றாரையுடையையோ? என்று கேட்பதிலிருந்து, தான் பசப்பித்துச் சென்றாரையுடையாள் என்பதைக் குறிப்பாகப் பெற வைத்திருப்பதே குறிப்பெச்சம் என்றார் சேனவரையர்.

இசையெச்சத்திற்கு-எ-டு: 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே யுலகு' எனவரும். இதன்கண் 'அதுபோல' என்ற தொடர் எஞ்சி நிற்பது இசையெச்சம் என்றார் சேனவரையர்.

இனிக் குறிப்பெச்சத்திற்கு 'விண்ணென விசைத்தது' என்ற தொடரையும், இசையெச்சத்திற்கு 'ஒல்லென ஒலித்தது' என்ற தொடரையும் உதாரணங் காட்டுவர் இளம்பூரணர். சேனவரையர் இக்கருத்தை மறுக்குங்கால் ஒரு புதிய முறையைக் கையாளுகிறார். தாம்

காட்டிய உதாரணத்தை இளம்பூரணர் காட்ட நினையாமைக்குரிய காரணத்தைத் தாமே கண்டு, அதற்கு முதற்கண் மறுப்புரை வழங்கு வர். அடுத்து அவர் காட்டிய உதாரணங்கள் பொருந்தாமைக்கு மறுப் புரை வழங்குவர். இவ்விருதிறமாக அம்மறுப்புரை செல்லுகின்றது.

(க) 'இனிதாக முள்மரங் கொல்க' என்ற குறட்பா, குறிப்பில் தோன்றலாய் அடங்குதலின் அது குறிப்பெச்சமாகாது. 'அகர முதல வெழுத்தெல்லாம்' என்ற குறட்பாவில் அதுபோல என்றசொல் எஞ்சி நிற்பது தொகுக்கும்வழித் தொகுத்தலாய் அடங்குதலின் அது இசை யெச்சத்திற்கு உதாரணமாகாது. ஆதலின் மேற்காட்டிய இரு உதார ணங்களும் ஈண்டுக் காட்டற்குப் பொருத்தமில்லை என இளம்பூரணர் கருதியதாக நினைந்து அதனைச் சேனாவரையர் மறுக்குமாறு:- சொல் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பொருளுணர்த்தும் முறையில் 'இனிதாக முள்மரங் கொல்க' என்னும் திருக்குறள், குறிப்பில் தோன்றற்கு உதாரணம் ஆகுமேனும், அக்குறிப்புப் பொருளை யுணர்த் தும் எச்சமாதற் பொருண்மை உடைமையின் அதுபற்றி இவ்விடத்தும் உதாரணம் காட்டுதலில் இழுக்கில்லை. இனி 'அகர முதல' என்னும் திருக்குறளில் 'அதுபோல' என்ற தொடர் மறைந்து வருவது தொகுக் கும்வழித் தொகுத்தலாயின், அதனையே சுட்டிக்கூறுவுவமம் எனப் பின்னர் உவமை இயலில் கூறுதற்குக் காரணம் இல்லை. (இக்குறளைச் சுட்டிக்கூறு உவமத்திற்கு உதாரணம் காட்டுவர் இளம்பூரணர்.) அன்றியும் தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பது ஒரு சொல்லே தொகுவதாகும். ஈண்டு 'அதுபோல' என்பதோ ஒரு தொடராகும். இதனாலும் இது தொகுக்கும்வழித் தொகுத்தல் அன்றாம் என்பர்.

(உ) இனி, இளம்பூரணர் இவற்றிற்குக் காட்டியிருக்கும் எடுத்துக் காட்டுக்கள் பொருந்தாமையைக் காண்போம். இளம்பூரணர் குறிப் பெச்சத்திற்கு 'விண்ணென விசைத்தது' என்பதையும், இசையெச்சத் திற்கு 'ஒல்லென ஒலித்தது' என்பதையும் காட்டி, இவை தத்தஞ் சொல்லான் முடிதலின், மேல் வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவி யிலவென்றும் கூறினர். காற்று விண்ணென விசைத்தது என்புழி, விண்ணென்ற குறிப்பையே விசைத்தது என்பது உணர்த்துகின்றது. கடல் ஒல்லென ஒலித்தது என்புழி, ஒல்லென்ற இசையையே ஒலித்தது என்பது உணர்த்துகின்றது. எனவே விண்ணெனலும் விசைத்தலும், ஒல்லெனலும் ஒலித்தலும் ஒன்றாதலின் தத்தம் சொற்கொண்டே முடிந்தது என்றார் இளம்பூரணர். இவை தத்தம் சொல்லால் முடிந் தது என்பதற்கு இளம்பூரணர் கருதிய பொருள் இதுவாகச், சேனாவரை யர் வேறுவிதமாகப் பொருள் கொண்டு, அதுவே இளம்பூரணர் கருத் தாக நினைத்து மறுப்பு வழங்குகின்றார். அம்மறுப்பு வருமாறு:- (1) விண்ணென விசைத்தது, ஒல்லென ஒலித்தது என்பவற்றில். விசைத்தது ஒலித்தது என்பன முறையே விண்ணென்பதற்கும் ஒல் லென்பதற்கும் உரிய சொற்கள் அல்ல. (2) அங்ஙனம் உரிய சொற் களாயினும் 'விண்ணென வீங்கிற்று,' 'ஒல்லென வீழ்ந்தது' எனப்பிற சொல்லானும் அச்சொற்கள் முடியுமாகலின், அவைமேல் வந்து முடிக் கும் எஞ்சு பொருட்கிளவி இல என்றலும் பொருந்தாதாம். (3) அன்றி யும் விசைத்தது ஒலித்தது என்பனவற்றை முறையே குறிப்பெச்சமாக வும், இசையெச்சமாகவும் கொள்ளின் வெள்ளென வெளுத்தது எனப் பண்புபற்றி வருவதையும் பண்பெச்சம் என வேறாகக் கூற வேண்டும். அங்ஙனம் கூறாமையின் அது பொருந்தாது.

எனவே இளம்பூரணர் காட்டிய இரு உதாரணங்களையும் எனவென் எச்சத்தில் அடக்குதலே பொருந்தும்.

'பசப்பித்துச் சென்றாரை யுடையையோ' 'இளைதாக முள்மரங் கொல்க' என்னுந் தொடர்களே தத்தம் குறிப்புப் பொருளை யுணர்த் துவனவாயிருத்தலின், இவற்றிற்கு எஞ்சுபொருள் உணர்த்தும் தொடர் மொழி வேண்டா? வெனில், அற்றன்று. இச்செய்யுள்கட்குரிய குறிப் புப் பொருள்களை அத்தொடர்மொழிகளே வந்து விளக்கவேண்டு மாதலானும், அத்தொடர் மொழிகளே எச்சமாக வரும் என ஈண்டுக் கூறலானும் இவை எஞ்சுபொருட் கிளவியுடையன என்று கூறலே அமையுமென்க.

இம்மூவகை எச்சங்களுள் குறிப்பெச்சம் நீங்கலாக, ஏனையிரண்டும் இசை எச்சம் என்றும், சொல்லெச்சம் என்றும் பெயர் பெறினும், அவ்வவ்வெச்சச் சொற்களும் குறிப்பாகவே பெறப்படுதலின், குறிப் பான் எச்சம் செப்பல் இம்மூன்றற்கும் உரியதாயிற்று.

சசக ஆம் நூற்பா: 'யாதானும் ஒருசொல் எஞ்சி நிற்பது' சொல்லெச்சம் என்றார் சேனாவரையர். இதனை இசையெச்சம் என்பார் யார் எனத் தெரிந்திலது. 'சொல்' என்ற சொல் எஞ்சி நிற்பதையே சொல்லெச்சம் என்பர் இளம்பூரணர். அவர் கருத்தே ஈண்டு மறுக்கப் படுகிறது. பரிமேலழகர் சேனாவரையர் கருத்தினரேயாவர். இந்நூற்பா விற்கு நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் கூறும் பொருள் வேறு வேறாகும். அவற்றை அவரவர் உரைகளான் அறிக.

சசஉ ஆம் நூற்பா: கருமுக மந்தி - பெண்குறி. செம்பினேற்றை- ஆண்குறி. நீரல்லீரம் - மூத்திரம். பீ என்பதை 'ஈகாரபகரம்' என வேறோர் வாய்பாட்டால் கூறியதுபோல, கண் கழுவுதல் முதலிய வற்றை வேறோர் வாய்பாட்டால் கூறாது உள்ளவாறே கூறப்பட்டுளது. எனினும் இதனையும் அவையல் கிளவி என்றது, வேறோர் வாய்பாட் டால் கூறப்படுவதற்கும், இங்ஙனம் உள்ளவாறே கூறுதற்கும் உள்ள பொருள் ஒற்றுமை கருதியேயாம். எனவே கண் கழுவுதல் முதலியன வும் ஈகாரபகரம் என்றாற்போலப் பிறிதோர் வாய்பாட்டால் கூறப் பட்டது போன்றேயாம் என்றார்.

தகுதிக்கும், அவையல் கிளவிக்கும் உள்ள வேற்றுமை :- ஒருவர் இறந்துவிடின் தகுதிநோக்கித் துஞ்சினார் என்றும் கூறலாம். அல்லது உள்ளவாறே செத்தார் என்றும் கூறலாம். ஆனால் அவையல் கிளவி யையோ, பண்டைக்காலந்தொட்டு அறிஞர்களால் மறைத்துச் சொல் லப்பட்டவாறு சொல்லவேண்டுமேயன்றி, உரியசொல்லால் சொல்லு தல் வழுவாம்.

இந்நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் 'தகுதியும் வழக்கும்' என்னும் நூற்பாவிற்குச் சேனாவரையர் கூறிய உரையைக் கூறுவர்.

சசங ஆம் நூற்பா: 'கான்று' என்பதற்குத் தன் பொருள் கக்குதல் என்பது. பிறிதொரு பொருள செய்து என்பது. ஈண்டு அது தன் பொருளில் நில்லாது பிறிதொரு பொருளில் நிற்றலின் மறைக்கப் படாமல் உள்ளவாறே கூறப்பட்டதாம். அணி யிலக்கணம் கூறுவார் இப்பாடலைச் சமாதியணி பற்றி வந்தது என்பர்.

சசச ஆம் நூற்பா: ஈ, தா, கொடு என்பன முறையே ஈ என்னும் பறவை, வலிமை, வளைவு என்னும் பிற பொருள்களையும் உணர்த்தும். எனினும் ஈண்டு இரவின் கிளவியாயவழியது இவ்வாராய்ச்சி யென்பது.

௪௪௬ ஆம் நூற்பா: யாற்றுட் செத்த எருமை ஈர்த்தல் ஊர்க் குயவர்க்குக் கடன் என்பதைக், 'குயவன் சுள்ளையின் எழுந்த புகையான் ஆம் மேகந்தந்த நீரான் எருமை சாதலின், அதனை ஈர்த்தல் ஊர்க் குயவர்க்குக் கடனாயிற்று' என விளக்குவர் நச்சினார்க்கினியர். இதன் கண்ணுள்ள கதை, கழகப் பதிப்பில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. ஆண்டுக் காண்க.

'எழுதுவரிக் கோலத்தார்' என்று தொடங்கும் பாடல் பெண் ணிற்கும புத்தகத்திற்கும் உரியதாம். வரிக்கோலம் - வரிவடிவு. தொழுதி-கூட்டம். தோடு-இதழ்.

'மந்திரப்பொருட்கு' இளம்பூரணர் தீப்பொருள்படும் வடமொழிச் சுலோகத்தைக் காட்டுவர். தெய்வச்சிலையார் திருவைந்தெழுத்தைப் பொருண்மையாகக் காட்டுவர். இத்திறமெல்லாம் அவரவர் உரை நோக்கியறிக.

௪௫௰ ஆம் நூற்பா: உடன்பாட்டில் வரும் செய்யாய் என்னும் வினைமுற்றுச் சொல், ஆய்விகுதி கெட்டுச்செய் என நிற்றலும் உண்டு என்பர் சேனாவரையர். இளம்பூரணர் செய்யாய் என்னும் எதிர்மறைச் சொல் செய்யமாட்டாய் என்னும் எதிர்மறைப் பொருள் தருதலின்றிச் செய்வாயாக என்னும் உடன்பாட்டுப் பொருளையும் தரும் என உரை காண்பர். இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (க) செய்யாய் என்னும் சொல், விதிவினைக்கும் வரும்; எதிர்மறை வினைக்கும் வரும். வரிவடிவில் இரண்டற்கும் வேற்றுமையில்லை யெனி னும் பொருள் கருதிச் சொற்களைப் பிரிக்கும் நிலையில் வேறுபடும். விதி வினையாயின் செய்+ய்+ஆய் எனப் பிரிக்கப்படும். எதிர்மறை வினை யாயின் செய்+ய்+ஆ+ஆய் எனப் பிரிக்கப்படும். பின்னையதில் உள்ள ஆகாரம் எதிர்மறைப் பொருள் உணர்த்த வந்தது. இங்ஙனம் பொருள் படும் நிலையில் வேற்றுமையிருத்தலின் எதிர்மறைச் சொல்லே விதி வினையுமாகும் என்பது பொருந்தாது. (உ) செய்யாய் என்பது எதிர் மறைச் சொல்லேயாயின் ஆசிரியர் அங்ஙனம் விதந்து ஓதியிருப்பர். அங்ஙனம் ஓதாமையானும் அது எதிர்மறைச்சொல் அன்று என்பது பெறுதும்.

எனினும் நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுத்து இளம்பூர ணர் உரையையே தழுவுவர். தெய்வச்சிலையார் இவ்விரு கருத்தையும் ஏற்பர். இத்திறமெல்லாம் அவரவர் உரைநோக்கி யறிக.

௪௫௧ ஆம் நூற்பா: 'இவையிரண்டும் ஈண்டுப் புறத்துறவு பொருள்பட நின்றன' என்பது எடுத்துக்காட்டிலுள்ளஇரு பாடல் களுக்கும் விளக்கமாம். புறத்து+உறவு=புறத்துறவு. புறத்துறவு பொருள்பட நிற்றல்-தலைமகன் வெளியிடத்தே (பரத்தையரிடத்தே) உறவுகொண்டதால் ஏற்பட்ட விளைவினை இவ்விரு பாடல்களும் விளக்கி நிற்றல். 'சென்றீ பெருமநின் தகைக்குநர் யாரோ' என்றது வாயில் வேண்டிச்சென்ற தலைமகற்குத் தோழி வாயில் மறுத்ததாம். 'அட்டில் ஓலை தொட்டனை நின்மே' என்பது பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனால் விடப்பட்ட பாணனைக் காமக்கிழத்திக்குப் பாங்காய விறலி வாயில் மறுத்ததாம்.

திரு. கணேசையர் அவர்கள், 'புறத்துறவு - (புறத்து + துறவு) புறத்தே துறத்தல்; என்றது புறத்தே வெறுப்புக்காட்டுதலை' எனப்

பொருள் கூறுவர். இவ்விரு பாடல்களிலும் தலைவி புறத்தே வெறுப் புடையாள் போலக் காட்டிக் கூறினும், அகத்தே வெறுப்பிலள் என்ப தாம் என்பர்.

௪௫௨ ஆம் நூற்பா : இந்நூற்பாவிற்கு மூன்று உரைகள் தரப்படு கின்றன. அவை வருமாறு :- (௧) தொல்காப்பியர் காலத்தில் வழங் கிய சொற்களேயன்றி, அவ்வக் காலத்துப் புதிய சொற்கள் தோன்றி வழங்கப்படுமாயினும் அவையும் ஏற்றுக்கொளற்கு உரியனவாம். சம்பு, சட்டி முதலிய சொற்கள் தொல்காப்பியனார் காலத்தில் இல்லை; பின்னர்த் தோன்றியனவே. ஆயினும் அவை கடியப்படாவாம். (௨) தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய சொற்களே பிற்காலத்தும் அவ்வப் பொருளின் வழுவாது வழங்குமாயின், அவற்றைப் பழமை கருதி நீக்கவேண்டுவதில்லை என்பது. (௩) தொல்காப்பியர் காலத்தில் வழங்கிப் பிற்காலத்தில் கெட்டுப்போன சொற்களும் உள. அவற்றை மீண்டும் வழக்கில் கொணர முயற்சிக்கவேண்டுவதில்லை. தொல்காப் பியர் காலத்தில் வழங்கிய அழான் புழான் முதலிய சொற்கள் இடை யில் கெட்டுவிட்டன. இத்தகைய சொற்களை மீண்டும் வழக்கில் கொண்டுவர வேண்டாம் என்பதாம்.

இத்தகைய மூவிதக் கருத்துக்களும் அமைய ‘கடிசொல் இல்லைக் காலத்துப் படினே’ என்னும் நூற்பா அமைந்திருப்பது பெரிதும் பாராட்டுதற்கு உரியதாகும். இனி இம்மூவித உரைகளையும் நூற்பா விற்கு இயையப் பொருத்திக் காட்டுவாம். (௧) காலத்துப் படினே-தொல் காப்பியர் காலத்திலே இல்லாது அவ்வக்காலத்துச் சில சொற்கள் தோன்றி வழங்கப்படுமாயின், கடி சொல் இல்லை-அவை நீக்குதற்குரியன வல்ல. இவ்வுரையில் படுதல், தோன்றுதல என்ற பொருளைக் குறிக்கும். (௨) காலத்துப் படினே — தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய சொற் களே அவ்வக் காலத்திற்கும் பொருந்தி வருமாயின், கடிசொல் இல்லை — அவற்றைப் பழமை கருதி நீக்கவேண்டா. இவ்வுரையில் படுதல், பொருந்துதல் என்ற பொருளைக் குறிக்கும். (௩) காலத் துப் படினே — தொல்காப்பியர் காலத்து வழங்கிய அழான் புழான் முதலிய சொற்கள் அவ்வக்காலத்தில் இறந்துபடின், கடிசொல் இல்லை — அவை தொல்காப்பியர் காலத்தன என்பதற்காக மீண்டும் வழக்கில் கொணரவேண்டா. இவ்வுரையில் படுதல், இறந்துபடு தல் என்ற பொருளைக் குறிக்கும்.

இம்மூன்றுரைகளில், முதலாவதும் மூன்றாவதும் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவருக்கும் உடன்பாடாம். தெய்வச்சிலையார் மட்டும் வேறுரை கூறுவர். எனினும், இவர்கள் கருத்தே பொருந்து வதாகும்.

காலப்போக்கில் பழஞ்சொற்களில் சில கழிதலும் உண்டு; புதிய சொற்கள் சில தோன்றுதலும் உண்டு. இங்ஙனம் வரும் காலப்போக்கினை மொழிகள் ஏற்றுக்கோடல் வேண்டும். அப்பொழுது தான் மொழி வளரும். தொல்காப்பியர் நன்கு உணர்ந்த இந்நற் கருத்தினையே தற்போதைய மொழிவல்லுநர் யாவரும் பறைசாற்றி வருகின்றனர். ‘பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல’ என்னும் நன்னூலார் கூற்றும் இதனைத் தழுவியதாகும்.

இவ்வளர்ச்சி மொழிக்கு இன்றியமையாதது போலவே, சமயத் திற்கும் இன்றியமையாததே எனக்கருதிய உமாபதி சிவம்,

'தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினர் நலங்கொள்மணி பொதியும்தன் களங்கம்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாந்
தன்மையினர் பழமையழ(கு) ஆராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந்(து) அறிதல்
இன்மையினர் பலர்புகழில் ஏத்துவர் ஏதிலருற்(று)
இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கென வொன்றிலரே'
(சிவப்பிரகாசம்)

எனக்கூறினர். 'கடிசொல் இல்லைக் காலத்துப் படினே' என்ற நூற்பாவின் பழமையழகு இத்திருப்பாடலில் புதுமை மெருகுடன் தோன்றி விளங்குதல் காண்க.

சடுரு ஆம் நூற்பா: 'அவற்றுள் ஒருசாரன' என்றது வேற்றுமை உருபுகளை. இதுவுமோர் நயம்-பொருள் நயம்.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் நச்சினார்க்கினியர் தெய்வச்சிலை யார் ஆகிய மூவரும் ஒவ்வொரு போக்கில் உரை வகுப்பர். எனினும் சேனாவரையர் உரையே சிறப்புடைத்தாம்.

சடுசூ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்குச் சேனாவரையர் உரையை நச்சினார்க்கினியர் தழுவுவர். இளம்பூரணரும் தெய்வச்சிலையாரும் ஒவ்வொரு விதமாகப் பொருளுரைப்பர். எனினும் சேனாவரையர் உரையே சிறப்புடைத்தாம்.

சடுஎ ஆம் நூற்பா: வினையெச்சம் வினையியலுள் கூறியவாறன்றி, வேறு பல இலக்கணத்தையுடைய வென்பது இந்நூற்பாவின் பொருளாகும். குறி-இலக்கணம்; 'உள்ளுறை...குறியறிந்தோரே' (தொல்-பொருள்: சஎ) என்றவிடத்தும் இஃது இப்பொருளாதல் அறிக. ஆசிரியர் வேறுபல இலக்கணத்தையுடைய எனப்பொதுப்படக் கூறினரே யன்றி அவ்விலக்கணம் இனையவெனக் கூறினர் அல்லர். சேனாவரையர் அதனை விளக்குகிறார்.

(க) செய்தெனெச்சம் தன்வினை முதல்வினைகொள்ளும் என வினையியலுட் கூறப்பட்டது. ஈண்டு அது வினைமுதல் வினையேயன்றிப் பிற வினையும் கொள்ளும் எனக் கூறப்படுகின்றது. (எ-டு) 'உரற்கால் யானை ஒடித்துண்டெஞ்சிய யா' என்புழி உண்டு என்பது யானையின் வினையாம். அச்செய்தெனெச்சம் எஞ்சிய என்னும் யாமரத்தின் வினையைக் கொண்டமை காண்க. 'ஞாயிறுபட்டு வந்தான்' என்புழியும் பட்டு என்னும் செய்தெனெச்சம் வந்தான் எனப் பிறவினை கொண்டமை காண்க.

(உ) செய்தென் எச்சம் உகர ஈறாக வரும் என முன்னர்க் கூறப்பட்டது. அது ஈண்டு ஒடி, எஞ்சி என இகர ஈறாகத் திரிந்தும், ஆய், போய் என யகர வொற்றாகத் திரிந்தும் வரும் எனக் கூறப்படுகின்றது. (இக்கருத்து உஉஅ ஆம் நூற்பாவிலும் கூறப்பட்டது.)

(ங) வினைமுற்று, முற்றுப்பொருளையே தரும் என முன்னர்க் கூறப்பட்டது. ஆனால் அது ஈண்டு எச்சமாகவும் திரிந்து வரும் எனக் கூறப்படுகின்றது. (எ-டு) 'மோயினள்' என்னும் தெரிநிலை வினைமுற்று

போந்து என எச்சப் பொருள் பட்டும், 'கண்ணியன், வில்லன்' என்னும் குறிப்பு வினைமுற்றுக்கள் கண்ணியனாய், வில்லனாய் என எச்சப்பொருள் பட்டும் வந்தமை காண்க.

(௪) வினையெச்சம் வினையைக் கொண்டு முடியும் என முன்னர்க் கூறப்பட்டது. ஈண்டு அவ்வெச்சம் முடிக்குஞ் சொல்லை விசேடித்தும் வரும் எனக்கூறப்படுகிறது. அங்ஙனம் விசேடிக்குங்கால் தொழிலானும், பண்பானும், குறிப்பானும் விசேடிக்கும். (எ-டு) தொழிலான் விசேடித்தல்:- ஓடிவந்தான், விரைந்து போயினான் என்புழி முறையே வருதலையும் போதலையும், ஓடி என்பதும் விரைந்து என்பதும் தொழிலான் விசேடித்து வந்தமை காண்க. பண்பான் விசேடித்தல்:- 'வெய்ய சிறிய மிழற்றும் செவ்வாய்' என்புழி மிழற்றுதலை வெய்ய, சிறிய என்பன பண்பான் விசேடித்து வந்தமை காண்க. விரும்பத்தகாத, சிறியதாகச் (சுருக்கமாகச்) சொல்லும் வாய் என்பது இதன் பொருள். குறிப்பான் விசேடித்தல்:- 'செவ்வன் தெரிகிற்பான்' 'புதுவதன் இயன்ற அணியன்' என்புழித் தெரிகிற்பான், அணியன் என்னும் குறிப்புவினை முற்றுக்களைச் செவ்விதாக (செவ்வன்), புதுவதாக என்னும் எச்சங்கள் குறிப்பான் விசேடித்தவாறு காண்க. செவ்வன் தெரிகிற்பான்-செவ்விதாகச் சொல்லுபவன். புதுவதனியன்ற அணியன்-புதிதாக அமைந்த அணியையுடையவன். ஈண்டு வந்த அன் சாரியை.

'பெயர்த்தனென் முயங்க' என்பதில் பெயர்த்தனென் என்பது பெயர்த்து எனப் பொருள் படுகின்றது. இதில் இளம்பூரணருக்கும் சேனாவரையருக்கும் கருத்து வேற்றுமையில்லை. ஆனால் இவ்விடத்தில் எச்சம் முற்றாய்த் திரிந்ததா? அன்றி முற்று எச்சமாய்த் திரிந்ததா? என்பதிலேயே இருவரும் கருத்து வேறுபடுகின்றனர்.

ஒரு வினையெச்சம் நிற்கவேண்டிய இடத்தில், ஒரு வினைமுற்று நின்றால் அவ்விடத்தில் நிற்கவேண்டியது எச்சமேயாதலின், அவ்வெச்சமே முற்றாய்த் திரிந்தது என்பது இளம்பூரணர் கருத்து எனவே 'பெயர்த்து' என்னும் எச்சமே 'பெயர்த்தனென்' என முற்றாயிற்று என்பது இவர் கருத்தாகின்றது. இதனை 'வினையெச்ச முற்று' என்பர். பதிற்றுப்பத்தின் பழைய உரையாசிரியர் இக்கருத்தினரே. ஒரு வினையெச்சம் நிற்கவேண்டிய இடத்தில் முற்று இருப்பின், அம்முற்றே எச்சமாகத்திரியும் என்பது சேனாவரையர் கருத்து. இதனை 'முற்றெச்சம்' என்பர். நன்னூலார் இக்கருத்தினரே. எனவே 'பெயர்த்தனென்' என்னும் முற்றே 'பெயர்த்து' என எச்சமாயிற்று என்பது இவர் கருத்தாகின்றது. சேனாவரையர் இளம்பூரணர் கருத்தை மூன்று காரணங்களால் மறுக்கின்றார். (௧) வினைமுற்றுக்கள் திணை, பால், இடங்களைக் காட்டுமேயன்றி, எச்சங்கள் அவற்றைக் காட்டா. இதனை ௨௨௫, ௨௨௭ ஆம் நூற்பாக்களால் நன்கறியலாம். ஆனால் ஈண்டுள்ள 'பெயர்த்தனென்' என்பதோ உயர்திணை, பெண்பால், தன்மையிடம் ஆகியவற்றைக் காட்டுகிறது. ஆதலின் பெயர்த்தனென் என்பது முற்றே என்பதையும், அதுவே எச்சப்பொருள் பட்டது என்பதையும் நன்கறியலாம். (௨) முற்றுக்கள் எத்திறத்தானும் பெயரையே கொண்டு முடியும் என்பர் ஆசிரியர். ஆனால் ஈண்டுள்ள பெயர்த்தனென் என்பது 'முயங்க' என்னும் வினையைக்கொண்டு முடிகிறது. எனவே ஈண்டுள்ளது எச்சமேயெனின், அற்றன்று. வினை கொள்வதை மட்டும் கருதி இதனை எச்சம் எனில், மார் என்பதும் வினையொடு முடிதல் பற்றி அதனையும் எச்சம்

என்று கூற வேண்டும். ஆனால் மார் என்பதோ வினையொடு முடிந்தும் முற்றென்றே பெயர் பெறுகிறது. ஆதலின் இதுவும் வினையொடு முடிந்ததாயினும் முற்றென்றே பெயர் பெறும் என்பதாயிற்று. (௩) பெயர்த்தனென் என்பதைப் பெயர்த்து என்பதினின்றும் திரிந்தது எனக்கூறின், கண்ணியன், வில்லன் என்பனவற்றையும் இன்ன எச்சங்களினின்றும் திரிந்தனவெனக் கூறல் வேண்டும். அங்ஙனம் அவற்றைக் கூறுதற்கு இடமின்மையின் இதனையும் எச்சத்தினின்றும் முற்றாய்த்திரிந்தது எனக் கூறுதல் தகாதாம்.

'ஞாயிறுபட்டு வந்தான்' என்பதற்கு இலக்கணம் கூறும் வகையிலும் இளம்பூரணரும் சேனாவரையரும் கருத்து வேறுபடுகின்றனர். ஞாயிறுபட்டு வந்தான் என்பதில், பட்டு என்பது செய்தென் எச்சமாகும். அது தனக்குரிய வினைமுதல் வினையைக் கொண்டு முடியும். ஆனால் ஈண்டோ வந்தான் என்னும் பிறவினை கொண்டு முடிந்துள்ளது. இது முன்னர்க் கூறப்பட்ட இலக்கணத்தில் மாறுபடினும், 'வேறுபல்குறிய' என்னும் இந்நூற்பாவால் அமைத்துக்கொள்ளப்படும் என்றனர் சேனாவரையர். 'ஞாயிறு பட்டுவந்தான்' என்பதில் பட்டு என்பதைச் செய்தெனெச்சமாகக் கொள்ளின் இவ்விடர்ப்பாடு வருகிறது எனக் கருதிய இளம்பூரணர், 'பட' என்னும் செயவெனெச்சமே 'பட்டு' என்னும் செய்தெனெச்சமாய்த் திரிந்தது என இலக்கணம் கூறினர். இதனைச் சேனாவரையர் இரு காரணங்களால் மறுக்கின்றார். (௧) செய்தெனெச்சம் இறந்தகாலத்திற்கே யுரியது. செயவெனெச்சமோ மூன்று காலத்திற்குமுரியது. 'ஞாயிறு பட்டு வந்தான்' என்பதைச் செய்தென் எச்சமாகக் கொள்ளின், ஞாயிறு பட்டபின் வந்தான் என இறந்தகால முணர்த்தும். 'ஞாயிறு படவந்தான்' எனச் செயவென் எச்சமாகக் கொள்ளின், ஞாயிறு படும்பொழுது வந்தான் என நிகழ்காலம் உணர்த்தும். எனவே அவ்விறந்தகாலப் பொருண்மையில் வரும் செய்தென் எச்சத்தை, மூன்று காலத்திற்கும் உரிய செயவெனச்சத்திரிபாகக் கொள்ள இயலாது. (௨) செயவெனெச்சம் மூன்று காலத்திற்கும் உரித்தாதலின், அது செய்தெனெச்சத்திற்குரிய இறந்தகாலத்தையும் உணர்த்தும். அவ்வகையான் இறந்தகாலத்திற்குரிய செயவெனெச்சமே, செய்து எனத்திரிந்தது எனக்கொண்டால் என்னை? யெனில், இவ்வகையிலும் ஒரு இழுக்கு உளது ஆதலின், அங்ஙனம் கொள்ளலாகாது. செயவெனெச்சம் மூன்று காலத்திற்கும் உரித்தேனும், அது இறந்தகாலத்தில் வருங்கால் காரண காரியப்பொருளில் வருதலை மரபாகவுடையது. 'மழைபெய்யக் குளம் நிறைந்தது' என்பதில் குளம் நிறைதற்கு மழை பெய்தல் காரணமாதலையறிக. ஆனால் ஞாயிறு பட்டு வந்தான் என்பதில், அவன் வருதற்கு ஞாயிறு படுதல் (மறைதல்) காரணமாக இல்லாமையின், செயவென் எச்சத்திரிபு என்றல் பொருந்தாதாம்.

'ஒடித்துண்டெஞ்சிய' என்பதையும் இங்ஙனமே கொள்க.

௪௫௮ ஆம் நூற்பா: 'இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது' என்ற வழிச் சிறிதும் பெரிதுமாய சொற்கள் மாறுபாடுடையனவாம். எனினும் அவை ஒருங்கு நின்றவாறும், பொருளில் வழுவின்றி அமையுமாறும் காண்க. இதுவே இளம்பூரணர் சேனாவரையர் ஆகிய இருவர்க்கும் கருத்து. நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் வெவ்வேறாக உரை காண்பர்.

௨௮௯ ஆம் நூற்பா : சேனாவரையர் கருத்தே இளம்பூரணருக்கும் தெய்வச்சிலையாருக்கும் கருத்து ஆகும். நச்சினார்க்கினியர் மட்டும் வேறு பொருள் கூறுவர்.

௨௯௦ ஆம் நூற்பா : ஒரு பொருள் இருசொல்:– ஒரு பொருளைக் குறிக்கும் இரண்டு சொற்கள் பொருள் வேறுபாடின்றித் தொடர்ந்து வரின் அவற்றையும் ஏற்றுக்கொள்க என்பதாம். (எ-டு) 'நிவந்தோங்கு பெருமலை' என்றவழி நிவத்தலும் ஓங்கலும், 'உயர்தல்' என்னும் ஒரே பொருளைக் குறித்தபோதிலும், அவை பிரிப்பின்றி நிற்றலின் போற்றுக என்பதாம். நிவந்து ஓங்கு பெருமலை என்றவழி மிக உயர்ந்த பெருமலை என்று பொருள்படும். இங்ஙனம் உயர்வைச் சிறப்பிக்கவே இருசொற்கள் ஒருங்கு வருதலின் அமைவுடையதாயிற்று. நன்னூலாரும் 'ஒரு பொருட் பன்மொழி சிறப்பி னின்வழாஅ' (நன்-௩௯௮) எனக்கூறுவர்.

இதுவே சேனாவரையருக்கும், தெய்வச்சிலையாருக்கும் கருத்தாம். நச்சினார்க்கினியர் இக்கருத்தினை இரண்டாவதாக ஏற்றுத், தம் கருத்தாகக் கூறுங்கால் வேறு உரை காண்பர். 'இரண்டு பொருளில் வரும் ஒரு சொல் பிரிவிலவாய் நிற்றல் வழுவில்லை' என்பர். இது சிலேடையைக் குறிப்பதாகும். இளம்பூரணரோ ஒரு பொருள்மேல் கிடந்த இரு சொற்கள் பிரிவின்றி வரின் அவை நீக்கப்படாது என்பர். 'பிரிவின்றி' என்பது, பொருளால் பிரிவின்றி எனப்பொருள் கொள்ளுதல் இவர் கருத்தாதல் அறியலாம்.

'வையைக் கிழவன்' என்று தொடங்கும் பாடலில், 'வையைக் கிழவன்' 'கூடலார்கோ' எனனுஞ் சொற்கள் பிரிந்து நிற்பினும், பொருளால் இருவரும் ஒருவரே எனத் தெளிவாகத் தெரிதலின் இவை அமையும் என்றும், 'கொய்தளிர்' என்று தொங்கும் பாடலில் 'கூத்தப்பெருஞ்சேந்தன்' 'காலேக வண்ணன்' என வரும் இரு பெயர்களும் ஒருவரையே குறித்தது என்பது தெளிவாக அறிய முடியாமையின் இதுவழுவென்றும் கூறினர் இளம்பூரணர். காலேக வண்ணம் — கலவைச் சாந்து. அதனைப் பூசியவன் காலேகவண்ணன். எனவே இப்பெயர் கலவைச் சந்தனம் பூசிய அனைவரையும் குறித்தலின், கூத்தப்பெருஞ்சேந்தனையே குறிப்பிட்டு உணர்த்தாது என்றவர் இளம்பூரணர். இதனைத்தக்க இலக்கியம் கொண்டு மறுக்கும் சேனாவரையரின் இலக்கியப் புலமை மிகவும் பாராட்டுதற்குரியதாம். அதனை ஆண்டுக்காண்க.

புறப்பொருள் வெண்பாமாலை உரையாசிரியர் சாமுண்டிதேவருக்கும் இளம்பூரணர் கருத்தே கருத்ாதலைப் 'படைவழக்கு' என்ற துறையில் அவர் உரைக்கும் உரையானறிக.

௨௯௧ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்கு ஈருரை தரப்படுகின்றது. (1) ஒருமையைக் குறித்துவருஞ் சொற்கள் பன்மைப்பொருள்பட நிற்பதும் உண்டு என்பது. (எ-டு) 'ஏவ லிளையர் தாய்வயிறு கரிப்ப' என்புழித் தாய் என்னும் ஒருமைச்சொல், இளையர் (வீரர்) என்ற பன்மைகேற்பத் தாயர் எனப் பொருள்படுதல் காண்க. (2) ஒருமைச் சொல் பன்மையொடு தொடர்ந்து வருதலும் உண்டு என்பது. (எ-டு) 'அந்தை தந்தை, அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்' என்புழித் தந்தை என்னும் ஒருமைச்சொல், சோழர் என்ற பன்மையோடு தொடர்தல் காண்க.

இவற்றுள் முன்னையதை இளம்பூரணரும் தெய்வச்சிலையாரும் ஏற்பர். நச்சினார்க்கினியர் இவ்விருவுரையையும் ஏற்பர்.

'ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவி' என்றதனை உயர்த்துக்கூறற் கண், ஒருமையைப் பன்மையாகக் கூறுவதாம். 'இவ்வொருமை சுட்டிய பெயர்' பிறிதொரு பன்மைச் சொல்லை நோக்கித்தானும் பன்மையாதலும், ஒருமைப்பெயர் பன்மைப்பெயரோடு தொடர்தலும் ஆகிய வேற்றுமை யுடையதாதலின் வேறு கூறினர்.

௪௫௨ ஆம் நூற்பா: முன்னைய நூற்பாவில் கூறப்பட்ட பொருளும், இந்நூற்பாவிற் கூறப்பட்ட பொருளும் ஒருமைக்கிளவி பன்மையொடு முடிந்து வருதலாகிய ஓரிலக்கணத்தையே உணர்த்தலின், அதனொடு இதனிடைவேற்றுமை யென்னை? என வினவிக்கொண்டு சேனாவரையர் அழகாக விடைகூறுகின்றார். (௧) முன்னைய நூற்பாவில் கூறப்பட்ட ஒருமைக்கிளவி பன்மைப்பொருள் படலும், ஒருமைக் கிளவி பன்மைச் சொல்லொடு தொடர்தலுமாகிய இரு நிலைமையையும் உடையதெனக் கூறப்பட்டது. ஆனால் இந்நூற்பாவில் முன்னிலைக்குரிய ஒருமைப் பன்மைச் சொல்லொடு தொடர்தலாகிய ஒரு நிலைமையே கூறப்படுகின்றது. (௨) முன்னைய நூற்பாவில் இன்ன இடத்திற்குரிய ஒருமைச்சொல் என்றில்லை. இந்நூற்பாவில் முன்னிலையிடத்திற்குரிய ஒருமைச்சொல் என இடவரையறை கூறப்படுகின்றது. (௩) முன்னைய நூற்பாவில் கூறப்பட்ட பொருண்மை, வழக்குச் செய்யுள் இரண்டிற்கும் உரித்து இது செய்யுட்கே யுரித்து.

அடுத்துப் 'பால்மயக்குற்ற ஐயக்கிளவிக்கும்' இவ்விரு நூற்பாக்களில் கூறப்படும் பொருண்மைக்கும் வேறுபாடு கூறுகின்றார். பால்மயக்குற்ற ஐயக்கிளவியும் இவையும் ஒருமைக்கிளவி பன்மைக்காதலில் ஒப்புமையுடைய வெனினும், அது இலக்கண வழக்குப்போல எண்ணப்பட்டு பெரும்பன்மையாய் வருதலும், இவை அங்ஙனமின்றிச் சிறுபான்மையதாய் வருதலுமாகிய வேற்றுமையுடைத்து என்றனர்.

௪௫௩ ஆம் நூற்பா: இந்நூற்பாவிற்கு ஈருரைகள் தரப்படுகின்றன. (1) இவ்வதிகாரத்தில் வழக்கு செய்யுள் ஆகிய இரண்டிற்குமாகக் கூறப்பட்ட சொற்கள் பலவுள. அவற்றுள் பல விரிவாகக் கூறப்பட்டுள்ளன. சில நுண்ணுணர்வுடையோர் உய்த்துணருமாறு கூறப்பட்டுள்ளன. அவற்றை அகத்தியம் போன்ற தொன்னூல்களின் துணை கொண்டு ஆராய்ந்தறிக என்பது. (2) வழக்குச் செய்யுள் ஆகிய இரண்டிலும், என்னால் சொல்லப்படாத சொல்லிலக்கணங்களைப், பிறதொன்னூல் ஆசிரியர்களால் சொல்லப்பட்ட இலக்கண நெறி கொண்டு ஆராய்ந்தறிக என்பது.

இவற்றுள் முதலுரையே இளம்பூரணர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகியோர்க்கு உடன்பாடாகும். இரண்டாம் உரையை ஆசிரியர் கருத்தாகக் கொள்ளின் குன்றக்கூறல் என்னும் குற்றம் இந்நூற்குத் தங்குமாகலின், அது பொருந்தாதென்பர் நச்சினார்க்கினியர்.

சேனாவரையம் விளக்கவுரை முற்றும்.

## வினாக்கள்

### க. கிளவியாக்கம்

1. சொல் எத்தனை வகைப்படும்? அவற்றை விளக்குக.
2. அதிகாரம் என்னும் சொற்குப் பொருள் தந்து, சொல்லதிகாரம் எத்தன்மையது? என்பதை விளக்குக.
3. கிளவியாக்கம் (1952), எச்சவியல்-இவற்றிற்குப் பெயர்க் காரணம் தருக.
4. சேனாவரையர் கூறும் இலக்கணத்தை ஆராய்க. (நான்கிற்கு மட்டும்) தனிமொழி, தொடர்மொழி, எழுவாய், செயப்படு பொருள், வினைமுதல், கருவி. (1951)
5. 'உயர்திணை யென்மனார்' என்று தொடங்கும் சூத்திரத்திற்குச் சொல் வரையறுத்தலே கருத்தெனலை விளக்குக. (1954,57)
6. 'மக்கட் சுட்டு' என்பதற்குச் சேனாவரையர் கூறும்பொருளும், அவர் அதற்கேற்பக் கொள்ளும் தொடரிலக்கணமும், அதனால் போந்த பயனும் தோன்ற விளக்குக. (1958)
7. 'என்மனார்' என்ற சொல் முடிபு பற்றி இளம்பூரணரும் சேனாவரையரும் கூறும் கருத்துக்கள் யாவை? எது வலியுடையது? ஏன்?
8. 'ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே' - இத்தொடருக்கு இளம்பூரணரும் சேனாவரையரும் பொருள் விரிக்கும் முறையில் எங்ஙனம் வேறுபடுகின்றனர்? சேனாவரையர் தம் கருத்து வலியுடைத்தாதலை எங்ஙனம் விளக்குகின்றார்?
9. 'ஆடூஉ அறிசொல்............உயர்திணை யவ்வே' - இச்சூத்திரத்தில் செவ்வெண் என்னும் எச்சம் முடியுமாற்றை ஆராய்க. (B. O. L. 1948)
10. 'அ ஆ வ என வரூஉ மிறுதி.........சொல்லே' - இங்குச் சேனாவரையர் கூறும் தடை விடைகளை எழுதுக. (1956)
11. தொல்காப்பியர் மாரைக்கிளவியை ரகரான் ஒற்றில் அடக்காமையின் காரணத்தைப் புலப்படுத்துக. (1955)
12. 'இருதிணை மருங்கின் ஐம்பாலறிய ஈற்றில் நின்றிசைக்கும் பதினோரெழுத்துக்கள்' யாவை? இத்தொடரில் 'ஈற்றில் நின்றிசைக்கும்' என்றது எவ்வெவற்றிற்கு அநுவாதம்? எவ்வெவற்றிற்கு ஞாபகம்? விள்க்குக.
13. 'வினையில் தோன்றும் பாலறி கிளவியும்..........மயங்கல் கூடா தம்மர பினவே' -இச்சூத்திரத்தால் காக்கப்பட்ட வழுக்கள் யாவை? அவை எவ்வாறு காக்கப்பட்டன? விளக்குக. (1962)
14. எடுத்துக்காட்டுடன் பொருள்கூறி விளக்குக. (மூன்றிற்கு மட்டும்) (1) அதிகாரம் (2) யோக விபாகம் (3) ஞாபகம் (4) அநுவாதம்.
15. 'ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி, ஆண்மை யறிசொற்கு ஆகிட னின்றே'-இவ்விலக்கணத்தை யாங்குக்கூறல்வேண்டும்? கிளவியாக்கத்தில் கூறக் காரணம் யாது?
16. செப்பும் வினவும் பற்றிச் சேனாவரையர் கருத்தைத் தொகுத்து எழுதுக. (1955)

17. செப்பும் வினாவும் பற்றிய வழாநிலை, வழுவமைதிகளைத் தொகுத்துரைக்க. (1966)
18. 'செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே, அப்பொருள் புணர்ந்த கிளவியான' - இதன் பொருளை எடுத்துக்காட்டால் விளக்குக. (1959)
19. சொல், செப்பு, பெயர், வினை—இவற்றில் இரண்டிற்கு இலக்கணங்கூறி, அவ்விலக்கணப் பொருத்தத்தை ஆராய்க. (1950)
20. 'செப்பினும் வினாவினும்..............உறழ்துணைப் பொருளே' — தெளிவான உரை தருக.
21. 'ஒத்த பண்பு பற்றிய பொருவுதற்கண்ணது இவ் வாராய்ச்சி' என்று உரைகாரர் கூறியவற்றை விளக்கி எழுதுக. (1956)
22. தகுதி, வழக்கு இவற்றில் இளம்பூரணர் எவ்வெவற்றை அடக்கிக் காட்டுகிறார்? அவை பொருந்துமா?
23. திணை, பால்கள்பற்றி ஐயம் தோன்றிய போது அவற்றை வினவுதற்கும், ஐயம் நீங்கித் துணிந்தபோது விடையிறுத்தற்கும் கூறப்பட்டுள்ள விதிகள் என்ன? (1959)
24. பால் மயக்குற்ற ஐயக்கிளவி பற்றிக் கூறப்பட்டுள்ள விதியைச் சேனாவரையர் கருத்தின்படி எடுத்துக் காட்டுத் தந்து விளக்குக. (1960)
25. கீழ் வருவனவற்றை விளக்குக :-
    (1) ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி. (1962)
    (2) வேறுவினைப் பொதுச்சொல். (1962)
    (3) இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்.
    (4) வண்ணச் சினைச்சொல்.
    (5) இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவி.
    (6) பொருளொடு புணராச் சுட்டுப்பெயர். (1952)
    (7) சுட்டு முதலாகிய காரணக் கிளவி. (1952, 62)
    (8) ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி. (1960)
    (9) ஒருமையெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்.
    (10) ஒரு பெயர்ப் பொதுச்சொல். (1960, 62)
    (11) பன்மை சுட்டிய சினைநிலைக்கிளவி.
    (12) இயற்கைப்பொருள், செயற்கைப்பொருள்.
26. பெருங்கொற்றன் முதலிய் இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர் வழக்காற்றில் வந்ததற்குக் காட்டாகாமைக்குக் காரணமென்ன? (அண்-1950)
27. வண்ணச் சினைச்சொல் வழக்கிலும் செய்யுளிலும் எவ்வாறு வரும்? உதாரணம் தந்து விளக்குக.
28. வண்ணச் சினைச்சொல் செய்யுளுள் மயங்கி வந்ததற்கு உரையாசிரியர் கூறும் எடுத்துக்காட்டு யாது? அதனைச் சேனாவரையர் எவ்வாறு மறுக்கின்றார்? (B. O. L. 1948)
29. 'நுண்ணுணர்வுடையார்க்கன்றி ஏனையுணர்வினோரும் உணர வேண்டி விரித்துக்கூறும் இயல்பினர் தொல்காப்பியர்' என்பதைச் சேனாவரையர் எவ்வாறு காட்டுகின்றார்? (1956)
30. 'இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல' - எவையென விளக்குக. (1954)
31. இடஞ்சுட்டும் முதனிலைகள் யாவை? இவை பற்றி ஆசிரியர் கூறும் விதிகள் யாவை?

32. பகுதியும் இடஞ்சுட்டுதல் எங்ஙனம்? ஆராய்க. (அல்லது) 'செலவினும் வரவினும்...........' என்னும் சூத்திரவுரையிற் காணப்படுந் தடைவிடைகளை வரைக. (அண்-1941)

33. 'பன்னிரு கையும் பாற்பட இயற்றி' என இனத்தென அறிந்த சினைமுதற்கிளவி உம்மை பெற்றும், 'ஐந்தலை நாகம் உடன்றது' என்றவிடத்து உம்மை பெறாதும் வருகின்றமை எதனால்? ஆராய்க. (1958)

34. எடுத்துக்காட்டுடன் விளக்குக:
(1) 'மன்னாப் பொருளும் அன்ன இயற்றே' (அண்-1949)
(2) 'எண்ணுங் காலும் அதுவதன் மரபே.'
(3) 'குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.' (அண்-1949)
(4) 'நின்றாங்கு இசைத்தல் இவணியல் பின்றே.' (1961)
(5) 'இசைத்தலும் உரிய வேறிடத் தான' (1961)

35. அகலவுரை தருக: (இரண்டிற்கு) (1) 'நின்றாங் கிசைத்தல் இவணியல் பின்றே' (2) 'எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே' (3) 'எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல்பின்றே' (4) 'சிதைந்தன வரினு மியைந்தன வரையார்' (1959)

36. ஆசிரியன் பேரூர்கிழான் சாத்தன் வந்தான் - இத்தொடர் இவ்வாறு வருதற்கு விதிகூறும் நூற்பாக்களை எடுத்துக்காட்டி விளக்குக. (1959)

37. 'எப்பொருளாயினும்...........பிறிது பொருள் கூறல்.' (அண்-1939, 43) 'வியங்கோள் எண்ணுப்பெயர் ........வரையார்' — இந்நூற்பாக்களுக்கு உரையாசிரியரும், சேனாவரையரும் தரும் கருத்துக்கள் யாவை? உரையாசிரியர் கருத்தைச் சேனா வரையர் எங்ஙனம் மறுக்கின்றார்?

38. 'ஆவும் ஆயனுஞ் செல்க' என்பது குறித்துச் சேனாவரையருக்கும் உரையாசிரியருக்குமுள்ள கருத்து வேறுபாட்டை ஆராய்க. (1945, 50)

39. வினைவேறுபடூஉம் பலபொருளொருசொல், வினைவேறுபடாஅப் பலபொருளொருசொல் — இவற்றின் இயல்பை விளக்குக. (1953)

40. 'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்' என்னும் பகுதியைத் தனிச்சூத்திரமாகக் கொள்வதால்வருங் குறைபாடுகள் என்ன? (அண்-1943)

41. இனத்திற்கும் சார்பிற்கும் உள்ள வேறுபாட்டினை எடுத்துக் காட்டுடன் விளக்குக. (1955)

42. 'ஒல்லேங் குவளைப் புலால்........நறிது' — என்புழிக் குவளைப் புலால் நாறுதற்கும், எருக்கங்கண்ணி நறிதாதற்கும் காரணம் கூறுமை வழுவா? அல்லவா? ஆராய்க. (1952)

43. 'உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும், அஃறிணை மருங்கின் கிளந்தாங்கு இயலு'வன யாவை?

44. குடிமை ஆண்மை முதலான சொற்களுக்கும், காலம் உலகம் முதலான சொற்களுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவு படுத்துக. (1966)

45. 'காலம் உலகம் உயிரே உடம்பே......' என்புழி இவ்வுயிரும் உடம்பும் மக்களுடையன என்பது பற்றி எழுந்த தடை விடைகளை யெழுதுக. (அண்-1939)

46. 'திங்களஞ் செல்வன் யாண்டுளன்,' 'இவரே......பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்' — இவற்றில் 'திங்களஞ் செல்வன்,' 'இவர்' என்பவற்றிற்குரிய இலக்கண அமைதிகளை யெழுதுக. (1593)

47. 'எடுத்த மொழிஇனஞ் செப்பலும் உரித்தே' — இதற்குச் சேனு வரையர் உரையையும், பிறருரை மறுப்பையுங் கூறுக. (B. O. L. 1946)

48. (1) ஒன்றென முடித்தல் (2) சிறப்புடைப் பொருளைத் தானி னிது கிளத்தல் (4) நியமச் சூத்திரம் (4) பிறிது மொழிதல் — (இரண்டை) உதாரணங்காட்டி விளக்குக. (1952)

49. 'கண்ணும் தோளும்.........கடையே' — இந்நூற்பாவில் திணை யோடு கூடிய பால்வழு அமைக்கப்பட்டது என்றல் எங்ஙனம்?

## உ. வேற்றுமையியல்

50. கிளவியாக்கத்தின்பின் வேற்றுமையியல் வைத்தமைக்கு உரை யாசிரியர்கள் காட்டும் இயைபு என்ன? அவற்றுள் பொருத்த மின்றெனத் தோன்றுவதைக் காரணம் காட்டி எழுதுக. (1959,60)

51. வேற்றுமை யீயலில் பெயரிலக்கணமாக நாம் அறிவன யாவை? அவை ஆண்டுக் கூறப்படுவதேன்?

52. (1) 'பெரியனுகிய தொகையு ......அப்பாலான' (அண்-1943,50) (2) 'எவ்வயிற் பெயரும்.........செவ்வி தென்ப' — இந்நூற்பாக் களுக்கு உரையாசிரியரும் சேனுவரையரும் தரும் கருத்துக்களைத் தந்து, சேனுவரையர் உரையாசிரியரை மறுக்கு மாற்றையும் விளக்குக.

53. 'நும்மின் திரிபெயர்' என்பது பற்றி விளக்கந் தருக. (1956)

54. செயப்படு பொருள் எத்தனை வகைப்படும்? அவை ஒவ்வொன் றற்கும் உரிய வாய்பாடுகள் எவை?

55. ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமை யாகாமைக்குச் சேனு வரையர் கூறும் காரணங்கள் என்ன? (1959)

56. மூன்றும் வேற்றுமையின் பொருளாகிய 'இன்னுன்ஏது? என்பதற் குக் கூறிய உரையாசிரியர் உரையைச், சேனுவரையர் எவ்வாறு மறுக்கின்றார் ?

57. கிழமைப் பொருள் எத்தனை வகைப்படும்? அவற்றிற்குரிய வாய் பாடுகளை முறைப்படுத்தி எழுதுக.

58. பால்வரை தெய்வம், பால்வரை கிளவி, ஒற்றிக்கலம், விலைத் தீட்டு, தெரிந்து மொழிச்செய்தி — இவற்றின் பொருளை விளக் குக. (அண்-1957)

59. கண் கால் முதலாயினவெல்லாம் வேற்றுமையுருபு என்று கொள்ளும் உரையாசிரியர் உரை எங்ஙனம் மறுக்கப்படுகின் றது? (1958, 59, 62, 66)

60. 'வேற்றுமைப் பொருளை .........உரிய வென்ப' — இந்நூற்பா விற்குத் தெளிவான உரை தருக.

## ௬. வேற்றுமை மயங்கியல்

61. வேற்றுமை மயக்கம் எத்தனை வகைப்படும்? உதாரணத்துடன் விளக்குக. (1952)

62. வேறுபாடு தருக:— (1) கருமச் சார்பு × கருமம் அல்லாச் சார்பு; (2) நோக்கிய நோக்கம் × நோக்கல் நோக்கம்.

63. இரண்டாம் வேற்றுமைக்குக் கூறப்பட்ட பொருள்களிலிருந்து வேற்றுமை மயங்கியலில் எடுத்தாளப் பெற்றன இன்னின்ன வெனக் காட்டி, அவற்றுள் எவையேனும் இரண்டனை எடுத்துக் காட்டுத் தந்து விளக்குக. (1960)

64. 'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும், வினைநிலை யொக்கும் என்மனார் புலவர்' - இப்பொருளைப் பின் எவ்வெச்சூத்திரங் களால் நியமிக்கின்றார்? (1961)

65. ஒருவினை யொடுச்சொல், ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி இவற்றை விளக்குக. (1954, 57)

66. மூன்றற்கும் ஐந்தற்கும் 'ஏதுக்கிளவி' உரியது என வேற்றுமை இயலில் கூறியிருக்க, அதனையே வேற்றுமை மயங்கியலுள்ளும் கூறியது பொருந்துமா? ஆய்க.

67. விளக்குக:— (1) நடுமாறு தொழிற் பெயர் (2) மெய்யறி பனுவல் (3) குத்தொக வருஉம் கொடையெதிர் கிளவி.

68. 'ஓம்படைக் கிளவி எது? எவ்வேற்றுமைகட்கு ஓம்படைப் பொருண்மை யெய்தும்? ஐந்தாவதற்கெய்தும் எனின், தவ றென்னை? (1954)

69. வாளேக்கி வாழும், நாகர்பலி, புலிகொல் யானை, காட்டு யானை-இத்தொகைகளில் மறைந்துள்ள உருபுகளை விரித்துக் காட்டுக. (1966, B. O. L. 53)

70 'பிறிதுபிறி தேற்றலும் உருபுதொக வருதலும், நெறிபட வழங் கிய வழிமருங் கென்ப'-உரையும் விளக்கமும் தருக. (1966)

71. எவ்வெவ் வுருபுகள் நான்கனுருபில், தொன்னெறி மரபின வாய்த் தோன்றுதற் குரியன?

72. தொழில் முதனிலைகள் இவை யெனக்காட்டி. அவை வேற்றுமை யுள் அடங்குமாறும், அவற்றை மீட்டும் எடுத்துக் கூறியதற்கு ஏதுவும் வரைக. (1953, 59)

73. ஆகுபெயர் வகைகள் எவ்வியலில் எக்காரணம்பற்றிக் கூறப்பட் டுள்ளன? அவற்றுள் நான்கினை ஏடுத்துக்காட்டுக்கள் தந்து விளக்குக. (1951, 62)

74. அன்மொழித் தொகையும் ஆகுபெயரும் ஒன்றுதலை உரையினின் றும் விளக்குக. (1951, 61)

75. தொல்காப்பியம் கபிலம் என்பனவற்றை வினைமுதலுரைக்கும் கிளவி என்றல் பொருந்துமா? ஆய்க.

76. ஆகுபெயர் இலக்கணத்தை வேற்றுமை மயங்கியலுள் கூறியிருப் பது பற்றியுள்ள கருத்து வேற்றுமையையும், சேனாவரையர் மறுப்பையும் தருக.

77. 'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்'-எவற்றின் வேற் றுமை? இவ்வரியைத் தனித்த நூற்பாவாகக் கோடல் பொருந் தாது-ஏன்?

## ௪. விளிமரபு

78. 'அவ்வே, இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப' - இதன் கண்ணுள்ள 'அவ்' என்னுஞ் சுட்டின் கருத்தைத் தெளிவுற எழுதுக. (அண்-1943)
79. ஆசிரியர் உயர்திணை விரவுப்பெயரை உயர்திணைக்கண் அடக்கினார் என்பதைச் சேனாவரையர் எங்ஙனம் நிறுவுகிறார்?
80. விளிமரபில் உயர்திணை அதிகாரத்து முறைப்பெயர் கூறியிருப்பது ஏன்? இது பற்றிய தடை விடைகளை ஆராய்க.
81. விளியேலாப் பெயர்கள் யாவை?
82. விளிமரபு என்ற இயலில் கூறியுள்ளவற்றைத் தொகுத்து எழுதுக. (1962)

## ரு. பெயரியல்

83. பெயரியலுள் நால்வகைச் சொற்களுக்கும் பொது இலக்கணமாகக் கூறப்படுவன யாவை?
84. பெயரியலுள் கூறப்படும் முதல் ஐந்து சூத்திரங்களும் பொதுவிலக்கணமாதலின் கிளவியாக்கத்துள் கூறல் வேண்டும். பெயரியலிற் கூறக் காரணம் யாது? (1958, 61)
85. சொல், பொருள் குறித்து வருதலை 'ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே' என்று உணர்த்தி இருப்பவும், மீண்டும் 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' என்றது எதுபற்றி? (1958)
86. 'பொருண்மை தெரிதலும் ......... புலவர்' - என்ற நூற்பாவை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (1966)
87. அணியிலக்கணங் கூறுவார் இன்னோரன்னவற்றைப் பிறிது மொழிதலணி என்று எவற்றைக் கூறுவார்? (1957)
88. 'இருதிணைப் பிரிந்த ...பெயர்வயி னான'-இதற்கு உரையாசிரியர் சேனாவரையர் இவர்களுடைய கருத்துக்களை எழுதுக. (1953, 57)
89. 'நம்மூர்ந்து வரூஉம் இகரவை காரம்', 'முறைமை சுட்டா மகனும் மகளும்', 'ஒப்பொடு வரூஉங் கிளவி,' 'நிகழூஉ நின்ற பால் வரை கிளவி'-இவற்றுள் மூன்றினை விளக்கி எடுத்துக்காட்டுக்கள் தருக. (1962)
90. உயர்திணைப்பால் தோன்றல் வேறுபிறவாற்றானும் பெறுவதாயிருக்க, நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியை மட்டும் வரைந்து கூறியதேன்?
91. பன்மைக்கேயன்றி ஒருமைக்கும் உரியவாய் வருவனவற்றைப் பன்மை விரவுப்பெயர் என்றது பொருந்துமா? ஆராய்க. (1952, 56, 60)
92. 'தன்னு ளுறுத்த பன்மைக் கல்லது......ஆக்கமில்லை' - இந்நூற்பாவிற்கு உரையாசிரியரும், சேனாவரையரும் தரும் கருத்துக்கள் யாவை? சேனாவரையர் உரையாசிரியர் கருத்தை எங்ஙனம் மறுக்கின்றார்?
93. 'ஒருவ ரென்னும் பெயர்நிலைக் கிளவி.....தெரியுங் காலை' - இந்நூற்பா எங்குள்ளது? ஏன்?
94. (1) 'இறைச்சிப் பொருள்வயின்.......தோன்ற லான' (2) 'திணையொடு பழகிய..... கடையே' - இந்நூற்பாக்கள் கூறும் கருத்தைத் தெளிவாக எழுதுக.

95. 'கடுவன் முதுமகன் கல்லா மூலன்' - எனவரும் கடுவன் முதலிய பெயர்க்கும், அலவன், கள்வன் முதலிய பெயர்க்குமுள்ள வேறுபாடு என்ன? (1958)

## ௬. வினையியல்

96. நிகழ்காலம் பற்றிச் சேனாவரையர் கூறுவன யாவை? (1953, 57)
97. பால்காட்டும் ஈறுகளைத் தெய்யாக்கம், வினையியல் என்னும் இரண்டு இயல்களிலும் கூறியதனாற் போந்த பயனென்னை? (B. O. L. 1950)
98. தன்மையொருமை வினைமுற்றில் குற்றுகரத்தை 'அல்'லின் பின் வையாது, 'உம்'மீற்றோடு இயையவைத்தது ஏன்?
99. 'செய்கு என் கிளவி வினையொடு முடியினும், அவ்வியல்திரியாது' என்பதன் பொருத்தத்தை ஆராய்க. (1954, 58)
100. 'பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே' என மாரீற்று வினைமுற்று பெயர்கொண்டு முடியவும், 'மார் வினையொடு முடியும்' என்றல் எங்ஙனம் பொருந்தும்? ஆராய்க. (1960)
101. இன்மையும், அன்மையும், உண்மையும், வன்மையும் பண்பில் அடங்காமையை விளக்குக. (1950, 58)
102. 'இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய'வாய சொற்கள் யாவை? (1961, 66) அவை அம்முறையில் வைத்தற்குக் காரணம் என்ன? (அண்-1942)
103. ஈற்றான் உணர்த்துதல், வாய்பாட்டான் உணர்த்துதல் என்பவற்றை விளக்கி, இவ்விரு முறைகளையும் ஆசிரியர் மேற்கொண்ட காரணத்தையும் எழுதுக. (1953)
104. உயர்திணை, அஃறிணைக்குத் தனித்தனியே வினைக் குறிப்புக் கூறிய ஆசிரியர், விரவு வினைக்குக் கூறாதது ஏன்?
105. வியங்கோள் ஈறு கூறாமைக்குச் சேனாவரையர் கூறுங்காரணம் என்னை? (அண்-1949)
106. 'அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி' - இவை காலங் காட்டும் முறையை விளக்குக. (1941)
107. 'செய்து' என்னும் வாய்பாட்டில் அடங்கும் பிற ஈறுகள் யாவை? அவை அப்படி அடங்கக் காரணம் என்ன? (1953)
108. ஓடி, போய் என்னும் இகர, யகர வீற்று வினையெச்சங்களைச் செய்து என்னும் வாய்பாட்டில் அடக்கிக் கூறக்காரணம் என்ன? (1953, 56, 59)
109. 'களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி, உருவச்செந்தினை குருதியொடு தூஉய்' - இப்பகுதியில் உள்ள வினையெச்சங்கள் எவ்வாய்ப்பாட்டில் அடங்கும்? அங்ஙனம் ஒரே வாய்பாட்டில் அடங்குமென்றல் பொருந்துமா? ஆராய்க. (1960)
110. 'பின்முன் கால்கடை.........அவற்றியல் பினவே' - இதன்கண் 'அன்ன மரபிற் காலங் கண்ணிய என்ன கிளவியும்' என்றதனால் பெறப்படுவது யாது? (1962)
111. நூலாக் கலிங்கம், நின்முகங்காணும் மருந்தினேன் என்பனவற்றைச் சேனாவரையர் எதன் பொருட்டு எடுத்தாண்டுள்ளார்? ஆராய்க. (1960)
112. முற்றுக்கும் எச்சத்துக்கும் உள்ள வேறுபாடு யாது? தடைவிடை காட்டி எழுதுக. (1958, 59)

113. 'மிக்கதன் மருங்கின்............பொருட்டா கும்மே' - இந்நூற்பாவிற்குத் தெளிவான உரை தந்து விளக்குக.

114. 'வன்புற வரூஉம்..........உரிமையுமுடைத்தே'-இதன் பொருளை உதாரணம் ,காட்டி விளக்குக.(1961)

## எ. இடையியல்

115. 'இடையெனப் படுவ ............தமக்கியல் பிலவே'-இந்நூற்பாவிற்குச் சேனுவரையர் கூறும் ஈருரைகளையும் தருக.

116. ஏழியல்பை யுடைய இடைச்சொற்களை எடுத்துக்காட்டுக்கள் தந்து விளங்கச் செய்வதோடு, அவை இவ்விவ்வியல்களில் உணர்த்தப்பட்டுள்ளன என்பதையும் காட்டுக. (B.O.L.1948)

117. இடையியலில் கூறப்படும் இலக்கணங்கள் இசைநிறை, அசைநிலை, தத்தம் குறிப்பிற் பொருள் செய்குந என்னும் மூன்றற்குமே என்பது எவ்வாற்ருன் புலனுகின்றது? (1960)

118. மன், தில், கொன், உம் இவற்றில் எவையேனும் இரண்டை உதாரணத்துடன் எப்பொருளில் வரும் என்பதை விளக்குக. (1958)

119. 'இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி' - என்றவிடத்து இயற்பெயர் என்றது எவற்றை? அவை எவ்வாறு முடியும்? (1959)

120. 'ஈரள பிசைக்கும் இறுதியில் உயிர்' - எவ்வெப்பொருளில் எவ்வெவ்விதமாகவரும்? விளக்குக. (1955)

121. (1) 'ஏயும் குரையும்....... ...வென்ப' (2) 'எண்ணே காரம் ...............புலவர்'(3) 'உம்மை எண்ணின்.............வரையார்' (1959, 60) (4) வினையொடு நிலையினும்...............இயல்பே' (5) என்றும் எனவும்........... பிரிந்தே' —இந்நூற்பாக்களுக்கு இளம்பூரணரும், சேனுவரையரும் தரும் உரைகளைத் தருக. சேனுவரையர், இளம்பூரணரது உரைகளை எவ்வாறு மறுக்கின்ருர்?

122. இடைச்சொல்லுக்கும் உரிச்சொல்லுக்கும் தொல்காப்பியர் கூறும் இலக்கணம் யாது? இவை இரண்டிற்கும் உள்ள வேறுபாடு என்ன? (1953, 54, 56, 60, 62)

## அ. உரியியல்

123. தொல்காப்பியர் கூறும் உரிச்சொல்லின் இலக்கணத்தைக் காட்டுக்கள் தந்து விளக்குக. (1966) அதற்கும் திரிசொல்லிற்கும் உரிய வேற்றுமை என்ன?

124. குரு, மழ, கதழ்வு, தட, கய-இவ்வுரிச் சொற்கள் எப்பொருட்டாய் வரும்? (1952)

125. உகப்பு, உவப்பு, பயப்பு, பசப்பு, உயா, உசா, துயவு, தெவு, தெவ்வு - இவ்வுரிச் சொற்களுக்குப் பொருள் தருக.

126. உள்ளதன் நுணுக்கத்தையும், உள்ளது சிறத்தலையும் உணர்த்தும் உரிச்சொற்கள் யாவை? (1959)

127. அகலம், வலி-என்ற பொருளில் வரும் உரிச்சொற்கள் இவையிவையென எழுதுக. (1960)

128. தீர்த்தல், எய்யாமை — இச்சொற்கள் பற்றிச் சேனுவரையர் தரும் கருத்துக்கள் யாவை? அவை பொருந்துமா? ஆய்க.

129. யாணர் — யாணு இவ்விரண்டனுக்குமுரிய வேறுபாடு யாது? விதிகொண்டு விளக்குக. (1957)

130. விளக்கம் தருக:— (1) 'உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே' (2) 'மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா'.
131. 'எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல்பு இன்றே' — இந் நூற்பா எங்குள்ளது? விளக்குக.

## ௯. எச்சவியல்

132. 'நிலம் நீர்' என்றவற்றுள் நீர் என்ற சொல்பற்றிச் சேனா வரையர் கூறுவது யாது? (1957)
133. திரிசொல்லைப் பற்றித் தொல்காப்பியனார் கூறியது அதன் இலக்கணமா? ஆராய்க. (B. O. L. 1947)
134. வடசொற் கிளவியின் பொருள் குறித்து உரையாசிரியர்க்கும், சேனாவரையர்க்குமுள்ள கருத்து வேறுபாடு யாது? (1956)
135. நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என்னும் நான்கனுள் இரண்டிற்கு இலக்கணங்கூறி எடுத்துக்காட்டுத் தருக. (1962)
136. கிளைநுதல் பெயர்கள் பிரிப்பப்பிரியா என்றதேன்?
137. உருபு முதலாயின தொகுதல், ஒட்டி ஒருசொல் நீர் மைப்படுதல் — இவற்றுள் தொகையிலக்கணமாவது எது? சேனாவரையர் கருத்து யாது? (1951, 53, 54, 58, 66)
138. பிரிவில் ஒட்டு என்பன இன்னவென்று விளக்குக. (1958)
139. பெயரெச்சம் நின்று தொக்கதே வினைத்தொகை — என்றல் பொருந்தாது, ஏன்?
140. பண்புத்தொகை பிரிக்கப்படா தென்பதற்குச் சேனாவரையர் கூறும் காரணத்தைத் தருக. (1955)
141. பண்புத்தொகையின் இலக்கணம் இன்னதெனக்கூறிச், சாரைப் பாம்பு என்பதை அவ்விலக்கணத்தில் அடக்கிக் காட்டுக. (1960)
142. அன்மொழித்தொகை எங்ஙனம் வரும் என்று தொல்காப் பியர் கூறுகின்றார்? அச்சூத்திரவுரையுள் சேனாவரையர் கொள்ளும் அன்மொழித் தொகையின் வகைகள் யாவை? (1962)
143. நிலங்கடந்தான், குன்றத்திருந்தான் என்பன ஒருசொல் நீர்மையிலவாதலின் தொகையெனப்படா என்பார் கூற்றுப் பொருந்தாமை யாங்ஙனம்? (1958, 61)
144. 'ஆக ஆகல்' என்பனவற்றிற்கும், 'சுண்டீர்' என்றல் தொடக்கத் தனவற்றிற்கும் உரிய வேற்றுமை என்ன?
145. 'இறப்பின் நிகழ்வின்' என்று தொடங்கும் நூற்பா எக் கருத்தை உணர்த்தி எழுந்தது? இதுபற்றியுள்ள கருத்து வேற்றுமையைத் தருக.
146. 'எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்' — இதற்குச் சேனா வரையர் தரும் இருவகை உரைகள் எவை? (1958)
147. 'எத்திறத் தானும் பெயர்முடி பினவே' — பெயரொடு முடிபவை யாவை? எடுத்துக்காட்டுக. (1957)
148. முற்றுச்சொல் 'எத்திறத் தானும் பெயர் முடியின' என்று கூறுதல் 'முற்றுச்சொல் என்ற பெயர்க்கு முரணாகாதா? விளக்குக. (1957, 61)

149. வினையியலுள் வினையெச்சத்திற்கு முடிபு கூறிவிட்ட பிற்பாடு, எச்சவியலுள் ''வினையும் குறிப்பும் நினையத் தோன்றிய முடிபாகும்மே' என்பது ஏன்? ஆராய்க. (1958)

150. இசையெச்சம், குறிப்பெச்சம் இவற்றிற்கு உரையாசிரியரும், சேனாவரையரும் தரும் எடுத்துக்காட்டுக்கள் எவை? சேனாவரையர் காட்டும் எடுத்துக்காட்டுக்களை உரையாசிரியர் காட்டாதது ஏன்? அதனையும், உரையாசிரியர் தரும் எடுத்துக்காட்டுக்கள் பொருந்தாமையையும் சேனாவரையர் எங்ஙனம் விளக்குகின்றார்?

151. இசையெச்சம், குறிப்பெச்சம், சொல்லெச்சம் — இம்மூன்றற்கும் உரிய வேற்றுமையை விளக்குக

152. அவையல் கிளவிக்கும், தகுதிக்கும் உரிய வேற்றுமை என்ன?

153. 'தொன்னெறி மொழிவயி னாஅ குநவும்', 'மந்திரப் பொருள்வயி னாஅ குநவும்' — இவற்றை எடுத்துக்காட்டுடன் விளக்குக. (1957)

154. 'செய்யாய் என்னும் ..........ஆகிட னுடைத்தே'-இந்நூற்பாவிற்குக் கூறப்படும் உரைகளை எழுதி ஆராய்க. (1952, 59, 60, 62)

155. 'கடிசொல் இல்லைக் காலத்துப் படினே' — இதற்குக் கூறப்படும் மூவகை உரைகளையும் தருக.

156. (1) 'இடைச்சொல் எல்லாம்............சொல்லே' (2) 'உரிச்சொல் மருங்கினும்......உரிய' (3) 'வினையெஞ்சு கிளவியும்......குறிய' (1952, 55, 62)—இந்நூற்பாக்களுக்குத் தெளிவான உரையும் காட்டும் தருக. இவை எங்கெங்குள்ளன? ஏன்?

157. 'உரற்கால் யானை யொடித்துண்டெஞ்சிய யா'—சேனாவரையர் இத்தொடரை எங்கெங்கே ஆண்டு, எவ்வெவ்வாறு இலக்கணங் கூறுகின்றனர்? (1957)

158. 'பெயர்த்தனென் முயங்க', 'ஒடித்துண்டெஞ்சிய' — இத்தொடர்கள்பற்றி உரையாசிரியரும் சேனாவரையரும் தரும் கருத்துக்கள் யாவை? சேனாவரையர் உரையாசிரியர் கருத்தை எங்ஙனம் மறுக்கின்றார்?

159. முற்று எச்சமாதல், எச்சம் முற்றாதல் என்ற கொள்கைகளில் சேனாவரையர் கருத்தை வரைக. (1953)

160. எடுத்துக் காட்டுடன் விளக்குக:— (1) 'உரையிடத்தியலும் உடனிலை அறிதல்' (1955), (2) 'ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்'.

161. 'ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி', 'ஒருமை சுட்டிய பெயர்நிலைக்கிளவி புன்மைக்காதல்' — இவற்றின் இயல்புகள் யாவை? (1953, 57)

162. எச்சவியலில் கூறப்படும் இலக்கணங்களைத் தொகுத்து எழுதுக. (1961)

பொது

163. 'தொல்காப்பியர் கூற்றில் சேனாவரையர் மிக்க உறுதிப்பாடு உடையவர்' — இதனை விளக்க இரண்டு மேற்கோள் காட்டுக. (1953)

164. தொல்காப்பியர் சூத்திரம் பல்காவாறு விதியமைத்திருத்தலைச் சேனாவரையர் புலப்படுத்தியுள்ள இரண்டிடங் காட்டுக. (அண்-1949)

165. தொல்காப்பியர் கருத்தறிந்து சேனாவரையர் பொருள் கூறுந் திறனை விளக்க இரண்டு மேற்கோள்கள் காட்டுக. (1956)

166. சேனாவரையரது வடமொழிப் புலமையை அவரது உரைப் பகுதி கொண்டு விளக்குக. (1955, 56, 60, 62)

167. சேனாவரையர் எவ்வெத்துறையில் வல்லுநர்? ஆதாரத்தோடு தருக. (1957)

168. சேனாவரையர் கண்ட புதுப்பொருள்களிற் சிறந்தன என்று நீங்கள் கருதுவனவற்றைப் பற்றிச் சிறியதொரு கட்டுரை வரைக. (அண்-1941, 51)

169. சேனாவரையருக்கு அணியிலக்கணம் உடன்பாடா? விளக்குக.

170. சேனாவரையரைப்பற்றி அவருரையாலறிவன யாவை? (1950, 57)

171. சொல்லதிகாரத்துள் இன்று வழக்கிழந்தனவாக நாம் கருதக் கூடிய இலக்கணக் கூறுகள் யாவை? (1966)




